

# பசும்பொன்
# முத்துராமலிங்கத் தேவர்
# நூற்றாண்டு விழா
# சிறப்பு மலர்



विशेष कार्य अधिकारी (पी. आर.)
*Officer on Special Duty (P.R.)*



राष्ट्रपति सचिवालय
राष्ट्रपति भवन
नई दिल्ली -110004
*President's Secretariat*
*Rashtrapati Bhavan*
*New Delhi - 110004*

## MESSAGE

The President of India, Smt. Pratibha Devisingh Patil is happy to know that a Souvenir is being released on the occasion of the birth centenary celebrations of Shri Muthuramalinga Thevar at District Ramanathapuram.

The President wishes all success to the organisers on their launch of the Souvenir as part of the centenary celebrations programme.

Officer on Special Duty (PR)






प्रधान मंत्री

Prime Minister

**MESSAGE**

I am glad to know that the Government of Tamil Nadu is celebrating the birth centenary of the eminent freedom fighter Thiru Pasumpon Muthuramalinga Thevar on 30st October, 2007.

Thiru Muthuramalinga Thevar was a product of our freedom movement. Deeply influenced by Mahatma Gandhi, he strove to promote prohibition and popularize khadi. His commitment to eradicate untouchability was best demonstrated when he led a movement to secure access for Dalits to the Meenakshi Temple in Madurai. It was a historic movement which was a landmark in our quest for establishing equality. The abolition of the Zamindari system and the Criminal Tribe Act owed a lot to his tireless efforts. A person with a progressive outlook, he left behind a rich legacy of service and sacrifice for the cause of our nation. I am sure that the centenary celebrations of his birth will motivate our people to carry forward his mission and perpetuate his memory.

I have great pleasure in paying my tribute to the memory of Thiru Thevar and wishing the centenary celebrations all success.

Manmohan Singh

(Manmohan Singh)






# *Surjit Singh Barnala*

GOVERNOR

September 22, 2007

## MESSAGE

I am pleased to learn that Pasumpon Muthuramalinga Thevar Birth Centenary Celebrations is to be held at Pasumpon Village, Ramanathapuram District on 30th October 2007 and a souvenir is being brought out in commemoration of it.

Pasumpon Muthuramalinga Thevar was known for his courage, boldness and simplicity. He fought for the cause of our Nation's freedom and was an ardent follower of Netaji Subash Chandra Bose. Muthuramalinga Thevar's words ignited the spirit of patriotism in the minds of the youth especially those in Madurai, Tirunelveli and Ramanathapuram Districts. Thevar won the hearts of the youth by his eloquent and touching speeches.

On the Birth centenary celebrations of Pasumpon Muthuramalinga Thevar, let us all pledge to promote unity, brotherhood and communal harmony.

I convey my warm felicitations to all the officers and wish the centenary celebrations all success.

Surjit Singh Barnala

**(SURJIT SINGH BARNALA)**

மு. கருணாநிதி
முதலமைச்சர்






## வாழ்த்துச் செய்தி

'பத்தரை மாற்றுத் தங்கம்! பசும்பொன் சிங்கம்!' என்று செந்தமிழ் நாட்டு மக்களால் இன்றும் சீராட்டப்படும் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்கள் பிறந்த நாள் நூற்றாண்டுத் திருவிழா 30.10.2007 அன்று, இராமநாதபுரம் மாவட்டம் பசும்பொன் கிராமத்தில் அரசு சார்பில் மிகுந்த எழுச்சியுடனும், நிறைந்த மகிழ்ச்சியுடனும் கொண்டாடப்படுவது அனைவரும் நினைந்து இன்புறத்தக்க இனிய நிகழ்வாகும்.

"மக்களுக்கு என்னென்ன தேவையோ அவற்றையெல்லாம் வீரத்தோடும், அஞ்சா நெஞ்சத்தோடும் எடுத்துச் சொல்லிவந்தவர் திரு. முத்துராமலிங்கனார். தென்பாண்டி நாட்டு மக்களின் உள்ளத்தைக் கவர்ந்தவர் அவர்" என்று தேவரைப் புகழ்கிறார் பேரறிஞர் அண்ணா.

33 கிராமங்களைக் கொண்டு, பெருநிலக்கிழாராய் விளங்கிய தேவர் திருமகன், விவசாயிகள் துயர்துடைத்திட, 'தமிழ்நாடு விவசாயிகள் சங்கம்' அமைத்துப் பாடுபட்ட பெருமகன்.

மதுரையில், 'பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம்' நிறுவி, ஆலைத் தொழிலாளர் நலனுக்காகப் போராடிச் சிறைசென்ற செம்மல்! மறவர் குல மக்களை மனங்குமுற வைத்த குற்றப் பரம்பரைச் சட்டத்தின் கொட்டமடக்கிய வெற்றித் திருமகன்! ஆதிதிராவிட சமுதாய மக்களின் ஆலயப் பிரவேசத்திற்கு அரணாகத் திகழ்ந்த அரிமா! வீரக்கனல் தெறிக்க விடுதலை முழக்கமிட்டு வெள்ளையரிட்ட வாய்ப் பூட்டுச் சட்டத்தால் வரலாற்றில் இடம் பெற்ற சேது வேங்கை! நாட்டு விடுதலைக்காக நேதாஜியோடு போர்க்கோலம் பூண்ட மாவீரர்! சட்டமன்ற உறுப்பினர், நாடாளுமன்ற உறுப்பினர் என விளங்கி, ஆன்றோரும் சான்றோரும் போற்ற, நாடு நலம் பெற, நாட்டு மக்கள் வளம் பெற வாழுங்காலம் முழுதும் தொண்டறம் புரிந்த தீரரில் தீரர்! தியாகத் திருச்சுடர் ! நெற்றி நிறைந்த நீறு, நிமிர்ந்த நன்னடை, நேர்கொண்ட பார்வை, குன்றனைய தோற்றம், எதிரியையும் ஈர்க்கும் வசீகரம் இவற்றுடன் அன்பு, அஞ்சாமை, நேர்மை, நாணயம், உழைப்பு என அனைத்திற்கும் வழிகாட்டியாய் மக்கள் நெஞ்சில் நிறைந்து வாழ்பவர் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர்!

அவர் புகழ் போற்றாதார் இல்லை; அவர் பெருமை பேசாதார் இல்லை; அவர் தொண்டு கண்டு மகிழாதார் இல்லை; மனங்குளிராதார் இல்லை.

அவர்தம் புகழும் பெருமையும் இம்மண்ணில் என்றும் நின்று நிலவும்வண்ணம் அவருக்குத் தமிழக அரசு செய்து வரும் சிறப்புகள் பல.

தேவர் திருமகனார் தோன்றிய பசும்பொன் மண்ணில் அவருக்கு நினைவில்லம்; நெல்லை மாவட்டம் மேல்நீலிதநல்லூர், இராமநாதபுரம் மாவட்டம் கமுதி, மதுரை மாவட்டம் உசிலம்பட்டி ஆகிய இடங்களில் அவர் பெயரில் மூன்று கல்லூரிகள்; மதுரை மாநகரில் கண்டோர் வியக்கும் மிக உயர வெண்கலச்சிலை; மதுரை ஆண்டாள்புரம் அருகே அவர் பெயரில் மேம்பாலம்; காரைக்குடி அழகப்பா பல்கலைக் கழகத்தில் தேவர்தம் திருப்பெயரில் மாணவச் செல்வங்களுக்கு உதவித் தொகை வழங்கிடும் கல்வி அறக்கட்டளை என்பனவாய் இந்த அரசு தேவர் அவர்களைத் தொடர்ந்து பெருமைப்படுத்தி வருகிறது. அந்த நிரலில், பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்களின் நூற்றாண்டு விழாவை 30.10.2007 அன்று தமிழக அரசின் சார்பில் மிகச் சிறப்பாகக் கொண்டாட முடிவு செய்து, பசும்பொன் கிராமத்தில் உள்ள அவர்தம் நினைவில்லத்தைப் பழைமை மாறாமல் புதுப்பித்திடவும், நூற்றாண்டு விழா தோரண வாயில், அணையா விளக்கு ஆகியவை அமைக்கப்படவும், அவரது நினைவிடத்தை வழிபடவரும் பொதுமக்களுக்குத் தேவையான அடிப்படை வசதிகள் அனைத்தையும் மேம்படுத்திடவும் 50 இலட்ச ரூபாய் அனுமதித்து ஆணையிட்டுப் பணிகளை மேற்கொண்டு, அவர் புகழ்பாடும் தொண்டுகளைத் தொடர்கிறது இந்த அரசு.

1907 அக்டோபர் 30இல் தோன்றி, வாழ்ந்து வரலாறு படைத்து, 1963 அக்டோபர் 29இல் மறைந்தாலும், என்றும் மறையாத – மறக்கவியலாத மகத்தான மாமனிதராய் - மறவர் குல மாணிக்கமாய்ப் புகழ் குவித்துள்ள பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் திருமகனின் பெருமைகள் போற்றி வெளியிடப்படும் நூற்றாண்டு விழா சிறப்பு மலர் அக்கோமகனின் திருப்புகழ்ப் பேழையாய்த் திகழ என் உளமார்ந்த நல்வாழ்த்துகள் உரித்தாகுக !

வாழ்க பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் திருமகன் !

(மு.கருணாநிதி)




# ALL INDIA CONGRESS COMMITTEE

24, AKBAR ROAD, NEW DELHI - 110 011

Sonia Gandhi
President



## MESSAGE

I am glad to learn that the Tamil Nadu government is commemorating the birth centenary of Thiru Pasumpon Muthuramalinga Thevar, a brave freedom fighter who devoted his life not only to fighting colonial rule but also social injustice and inequality in our society.

A living symbol of true Gandhian values, Thiru Muthuramalinga Thevar's historic achievements include his leading Dalits into the Meenakshi Temple at Madurai, his tireless crusade on behalf of poor peasants which culminated in the 'Zamindari Abolition Act', and his efforts for the abolition of the colonial government's unjust and discriminatory 'Criminal Tribes Act'.

His birth centenary on October 30 is a fitting occasion for the nation to remember and pay homage to this great son of India, and to draw inspiration from his life's work




वित्त मंत्री
भारत
नई दिल्ली - 110001
FINANCE MINISTER
INDIA
NEW DELHI-110001



## MESSAGE

I am delighted to know that the Government of Tamil Nadu will celebrate the birth centenary of the great freedom fighter Thiru. Pasumpon Muthuramalinga Thevar. Thiru Thevar, a devout follower of Gandhiji, not only contributed significantly to the freedom movement in Tamil Nadu but was also in the forefront of social reform. He led the historic entry of Harijans into the Meenakshi Temple in Madurai. He also fought against the feudal forces and defeated, on the Congress ticket, the Rajah of Ramanathapuram representing the Justice Party in the general elections held in 1937. Because of his relentless efforts, the Criminal Tribe Act, branding the 'Mukkulathor' community as a Criminal Tribe, was repealed in May 1948. Thiru Thevar also worked ceaselessly for the uplift of the peasant class and fought to abolish the Zamindari System.

I commend the Government of Tamil Nadu for celebrating the birth centenary of Thiru Muthuramalinga Thevar and wish the function a grand success.

(P. Chidambaram)




टी. आर. बालु

டி. ஆர். பாலு

T. R. BAALU

मंत्री

पोत परिवहन, सड़क परिवहन और राजमार्ग

भारत सरकार

नई दिल्ली–110 001

MINISTER

SHIPPING, ROAD TRANSPORT & HIGHWAYS

GOVERNMENT OF INDIA

NEW DELHI-110 001




## வாழ்த்துச் செய்தி

பசும்பொன் தேவர் திருமகனாரின் நூறாவது பிறந்த நாள் விழாவினைச் சிறப்பிக்கும் வகையில் தமிழக அரசு மலர் வெளியிடுவது குறித்து மகிழ்ச்சியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பசும்பொன் தேவர் திருமகனார் நெஞ்சுறுதி மிக்க தலைவராக விளங்கியவர். தமிழிலும், ஆங்கிலத்திலும் புலமைமிக்க சொற்பொழிவாளராகத் திகழ்ந்தவர். தமிழகத்தின் தென்மாவட்டங்களில் உள்ள உழைக்கும் மக்களின் நன்மைக்கெனப் பல வழிகளிலும் போராடியவர்.

சென்னை மாகாணத்தில் தேவரின மக்களுக்கு எதிராக அக்காலத்தில் பயன்படுத்தப்பட்டு வந்த "குற்ற பரம்பரைச்" சட்டம் ஒழிக்கப்படவேண்டும் என்று தொடர்ந்து போராடி வெற்றியும் கண்டவர் தேவர் திருமகனார்.

மதுரை மீனாட்சியம்மன் கோவிலில் தாழ்த்தப்பட்ட மக்கள் நுழையக்கூடாது என்கிற தடை இருந்து வந்தது. அதனை எதிர்த்துக் கோவில் நுழைவுப் போராட்டம் நடைபெற்றதுபோது பெருவாரியாக மக்களைத் திரட்டி அந்தப் போராட்டத்தில் கலந்துகொள்ளச் செய்தவர் தேவர் திருமகனார்.

இஸ்லாமியர்களையும், தாழ்த்தப்பட்ட மக்களையும் மதித்துப் போற்றியவர் தேவர் திருமகனார். அவரே ஒரு இஸ்லாமியக் குழந்தையை தத்தெடுத்து வளர்த்தார்.

ஆங்கிலேய ஆதிக்கத்துக்கு எதிரான போரில் உத்தமர் காந்தியார் மேற்கொண்ட சாத்வீக முறையை ஏற்காது நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் அவர்கள் "இந்திய தேசிய இராணுவம்" என்ற பெயரில் பெரும்படை திரட்டிய போது அந்தப் படையில் தென்தமிழ் நாட்டு இளைஞர்கள் ஆயிரக்கணக்கானவர்களை சேர்த்தவர் தேவர் திருமகனார்.

அவர் மீது தென் தமிழகத்து மக்கள் வைத்திருந்த அன்பு அளவுடற்கரியது. அவர் நாடாளுமன்றத் தேர்தலில் போட்டியிட்ட போது தொகுதி மக்களிடம் வாக்குகள் கேட்கச் செல்லாமலேயே பெரும் வெற்றி பெற்றார்.

நேதாஜியின் பார்வர்ட் பிளாக் கட்சியின் தமிழகத் தலைவராக விளங்கிய தேவர் திருமகனார் தமிழக அரசியலில் தனி முத்திரை படைத்த தலைவராவார்.

அவருடைய நூறாவது பிறந்த நாளில் அவருடைய வீரத்தையும், நெஞ்சுறுதியையும், அறிவாற்றலையும் போற்றிப் பாராட்டும் பல இலட்சக்கணக்கானவர்களுடன் நானும் இணைந்து கொள்வதில் பெருமையடைகிறேன்.

தங்கள் அன்புள்ள

டி. ஆர். பாலு

(டி. ஆர். பாலு)

மத்திய சுகாதாரம் மற்றும் குடும்ப
நலத் துறை அமைச்சர்.
நிர்மான் பவன், புதுடெல்லி -110011





மருத்துவர் அன்புமணி இராமதாஸ்

**Dr. Anbumani Ramadoss**

**Minister of Health & Family Welfare**
**Government of India**
**Nirman Bhavan, New Delhi – 110 011**

## MESSAGE

I am pleased to learn that the Government of Tamil Nadu is bringing out a Special Souvenir on the occasion of birth centenary celebrations of the freedom fighter Thiru. Pasumpon Muthuramalinga Thevar.

The entire life of Thiru Pasumpon Muthuramalinga Thevar was devoted in serving the down trodden and under-privileged sections of the society. He was a true son of the soil who devoted his entire life to the ideals of nationalism and spiritual discipline. A true follower of Mahatma Gandhi, he practiced the ideals of Gandhiji in form and spirit. He fought relentlessly for promoting prohibition and removal of untouchability. It was under his leadership that the historic entry of harijans took place in the Meenakshi Temple of Madurai. He firmly believed in the spirit of equality and considered service to mankind as the core responsibility of each individual.

He played a critical role in the National Movement and taught practitioners the art of real politik. There was hardly a social movement in which he was not associated. Thiru Pasumpon Muthuramalinga Thevar was a visionary whose vision remains a guiding principle for all walks of life even today.

As we enter the twenty first century, it is our responsibility to remember the role played by such historic personalities.

**(Dr. Anbumani Ramadoss)**

ஜி. கே. வாசன்
जी. के. वासन
**G. K. VASAN**






राज्य मंत्री (स्वतंत्र प्रभार)
सांख्यिकी और कार्यक्रम कार्यान्वयन
भारत सरकार
नई दिल्ली

MINISTER OF STATE (INDEPENDENT CHARGE)
STATISTICS AND PROGRAMME IMPLEMENTATION
GOVERNMENT OF INDIA
NEW DELHI

## பன்முகத்திறன் கொண்ட பசும்பொன் தேவர்

விடுதலைப் போராட்ட வரலாற்றில் பசும்பொன் திரு.முத்துராமலிங்கத் தேவருக்கு ஓர் தனியான, சிறப்பான இடம் என்றும் உண்டு. 55 ஆண்டுகளே வாழ்ந்து மறைந்து விட்டாலும், மக்களின் நெஞ்சத்தில் ஒரு நீங்காத இடத்தைப் பெற்றிருப்பவர் அவர்.

தென் தமிழ்நாட்டில் விடுதலைப் போரை முன் நின்று நடத்திய திரு.முத்துராமலிங்கத் தேவரை, தெய்வீக உடலில் தேசியப் புள்ளி கொண்ட எங்கள் சேது வேங்கை எனப் புகழ்ந்தார் காங்கிரஸ் தலைவர் எஸ்.சீனிவாச அய்யங்கார். விடுதலைப் போரில் தென்புலத்திற்கு நான் பார்த்தன் என்றால், பசும்பொன் தேவர் தான் சாரதி என்றார் மூதறிஞர் இராஜாஜி.

இராமநாதபுரம் மாவட்டம் கானாடுகாத்தான் பகுதியில் காங்கிரசுக்கு எதிராக அச்சுறுத்தலும், அராஜகமும் தூண்டப்பட்ட போது, அதனை அடக்கி காங்கிரசின் வெற்றிக்குக் காரணமாக அமைந்த தேவரை காங்கிரசைக்காத்தான் - என்ற சிறப்புப் பெயர் சூட்டி மகிழ்ந்தார் தீரர் எஸ்.சத்திய மூர்த்தி.

தென்னாட்டில் தேசியமும், தேசிய இயக்கமும் வளர அயராது உழைத்தவர் ; தூய எண்ணமும் துணிச்சலும் கொண்ட மரியாதக்குரிய தேசியத் தலைவர் தேவர் என்றார் கர்மவீரர் காமராஜர்.

தென்னாட்டு போஸ் என்று தென்னகத்து மக்களுக்கு தேவரை அடையாளம் காட்டினார் நேதாஜி சுபாஷ் சந்திர போஸ்.

தனது 19வது வயதிலேயே காங்கிரஸ் பேரியிக்கத்தில் சேர்ந்தார் அவர். 1927-ஆம் ஆண்டில் சென்னையில் டாக்டர் அன்சார் தலைமையில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் பங்கேற்றார் அந்த மாநாட்டில் தான் எங்கள் இலட்சியம் பரிபூரண சுயராஜ்யம் என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

அண்ணல் காந்தியடிகளின் வழியைப் பின்பற்றி கதர் வளர்ச்சி, கள்ளுக்கடை மறியல், தீண்டாமை ஒழிப்பு போன்ற மக்கள் நலம் சார்ந்த நிர்மாணத் திட்டங்களில் தீவிரப் பங்கேற்றார். 33 கிராமங்களுக்குச் செந்தக்காரராக, பெரும் நிலச்சுவாந்தாரராக விளங்கிய அவர், விவசாயிகளின் துயர் துடைப்பதற்காக, தமிழ்நாடு ஜமீன் விவசாயிகள் சங்கத்தை அமைத்தார். அதன் மூலம் ஜமீந்தாரி ஒழிப்புச் சட்டம் (Zamindari Abolition Act) நிறைவேற வழிவகுத்தார்.

முக்குலத்தோர் சமுதாயத்தின் ஒரு பகுதியினரை குற்றப்பரம்பரையினர் (Criminal Tribe) என்று ஆங்கிலேய அரசு அறிவித்து, அம்மக்கள் கொடுமைக்கு உள்ளாக்கப் பட்டபோது அச்சட்டத்தை எதிர்த்துப் போராடினார்; அதன் பயனாக அச்சட்டம் 1948-ல் நீக்கப்பட வழிவகுத்தார்.

மதுரையில் அன்னை மீனாட்சியின் ஆலயத்திற்குள் அரிஜன ஆலயப் பிரவேசத்திற்கு, மதுரை வைத்தியநாத அய்யரும், எம்.என்.சுப்பராமனும், ராஜாஜியும் ஏற்பாடு செய்த போது பழமைவாதிகளின் எதிர்ப்பு கிளம்பியது. அந்த எதிர்ப்பை முடியடித்து, அரிஜனங்கள் ஆலயப்பிரவேசம் அமைதியாக நடைப்பெற வழிவகுத்தவர் பசும் பொன் தேவர்.

அண்ணல் காந்தியடிகள் அஹிம்சை வழியில் சத்தியத்தின் பாதையில் விடுதலை பெறுவோம் என்றபோது, நேதாஜி ஆயுதம் ஏந்தி வெள்ளையர்களை விரட்டுவோம் என்றார். அக்கால கட்டத்தில் பசும்பொன் தேவர், நேதாஜி காட்டிய பாதையில் வழி நடக்கத் தொடங்கினார்.

அவர் வாழ்ந்தது 55 ஆண்டுகள்; சிறைவாசம் அனுபவித்ததோ 11 ஆண்டுகள். அவரது பேச்சாற்றலைக் கண்டு பிரிட்டன் அரசு பயந்தது. ஆகவேதான் ஆங்கிலேய ஆட்சி வடக்கே திலகருக்கும் தெற்கே தேவருக்கும் வாய்ப்பூட்டு சட்டம் போட்டுக் கொடுமைப் படுத்தியது. 1937, 1946, 1957, 1962 ஆகிய ஐந்து பொதுத் தேர்தல்களிலும் தொடர்ந்து போட்டியிட்டு வெற்றி பெற்றது அவர் செல்வாக்கு மிக்க மக்கள் தலைவர் என்பதற்குச் சான்றாகும்.

விடுதலைப் போராட்ட வீரராக, தியாகியாக, தேசபக்தராக, ஆங்கிலத்திலும் தமிழிலும் அனைவரையும் மயக்கும் மேடைப் பேச்சாளராக, ஆழ்ந்த தெய்வ பக்தராக, அனைவரும் போற்றத்தக்க ஆன்மிகவாதியாக பல பரிமாணங்களில் பிரகாசிப்பவர் பசும் பொன் தேவர். தேவரின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடும் இந்நாளில், அவரது தியாக உணர்வை, தேசபக்தியை நாமும் வளர்த்துக்கொள்ள முயசிக்க வேண்டும்! அது தான் தேச முன்னேற்றத்திற்குரிய முதன்மையான வழி!!

(G. K. Vasan)



R. VELU

रेल राज्य मंत्री
भारत सरकार
नई दिल्ली-110 001

*Minister of State for Railways*
*Government of India*
*New Delhi-110 001*



**MESSAGE**

I am very happy to know that the Government of Tamil Nadu is celebrating the birth centenary of freedom fighter Thiru Pasumpon Muthuramalinga Thevar on 30th October, 2007 and also bringing out a special Souvenir to commemorate the occasion.

Thiru Pasumpon Muthuramalinga Thevar was a great patriot and leader of the masses. He spent his entire life for upliftment of the downtrodden. I appreciate the decision of the Tamil Nadu Government to hold the Centenary Function at his birthplace Pasumpon village as a State function to honour this great son of India.

I wish the Centenary function and releasing of the special Souvenir a grand success.

(R. Velu)



பசும்பொன் உ. முத்துராமலிங்கத் தேவர் (1908 – 1963)

सुब्बुलक्ष्मी जगदीशन
SUBBULAKSHMI JAGADEESAN
सामाजिक न्याय और
अधिकारिता राज्य मंत्री
भारत सरकार
MINISTER OF STATE FOR
SOCIAL JUSTICE & EMPOWERMENT
GOVERNMENT OF INDIA






## MESSAGE

I am extremely happy to learn that the Birth Centenary of Thiru Muthuramalinga Thevar is being celebrated this year.

Pasumpon Thevar is fondly remembered for his contributions to India's struggle for freedom, leading a simple Gandhian way of life and ushering in social reforms to help the upliftment of the downtrodden, particularly the harijans. His struggle for the peasants led to abolition of Zamindari system and the Criminal Tribe Act. His close association with Netaji Subhash Chandra Bose, as well as his dynamic role in pre and post independence politics resulted in the formation of the Forward Block unit in Tamil Nadu. He was a fierce nationalist with strong spiritual discipline, courage and compassion. His contribution to the country, particularly Tamil Nadu, is noteworthy.

On the occasion of his birth centenary, I pay my tributes to this illustrious son of the soil and wish the Government of Tamil Nadu and other organizers the very best for the centenary celebrations.

(Subbulakshmi Jagadeesan)

ई.वी.के.एस. ईलंगोवन

**E.V.K.S. ELANGOVAN**

MINISTER OF STATE FOR TEXTILES
GOVERNMENT OF INDIA
UDYOG BHAWAN, NEW DELHI.



वस्त्र राज्य मंत्री
भारत सरकार
उद्योग भवन, नई दिल्ली



## நல்வாழ்த்துச்செய்தி

மறைந்த தலைவர் திரு முத்துராமலிங்க தேவர் பாமர மக்கள் மற்றும் விவசாயிகளின் மேம்பாடு மற்றும் நாட்டின் நலத்திற்காக தன்னை அர்ப்பணித்த ஒப்பற்ற தலைவர்.

திரு பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் அவர்களின் நூற்றாண்டு விழாவினை ஒட்டி தமிழ்நாடு அரசு சிறப்பு மலர் வெளியிடுவது குறித்து மிக்க மகிழ்ச்சி. இந்த சிறப்பு மலர் இன்றைய இளம் சந்ததியர் திரு முத்துராமலிங்கதேவரின் சிறப்புகளை அறிந்து அவரது பண்புகளை கடைபிடித்து இந்தியநாடு சிறக்க வழிகோலும் என்பதில் எனக்கு ஐயமில்லை. எனது நல்வாழ்த்துக்கள்.

(ஈ.வெ.கி.ச. இளங்கோவன்)

10/10/2007

திருமதி. வெ. ராதிகா செல்வி
**Tmt. V. RADHIKA SELVI**
Tel. : 011-23092722 (O)
Fax : 011-23093285






மத்திய உள்துறை இணை அமைச்சர்
இந்திய அரசு
நார்த் ப்ளாக். புதுதில்லி-110001
MINISTER OF STATE FOR HOME AFFAIRS
Government of India
North Block, New Delhi-110001

## MESSAGE

I am very happy to know about release of special savounier on the occasion of birth cenetenary of Thiru Muthuramalinga Thevar of Pasumpon Village, Ramanathapuram Distt, Tamil Nadu.

Thevar Ayya worked and lived for Gandhian ideals in promoting prohibition and removal of untouchability. He dedicated his entire life for upliftment of the down trodden people. He was a spiritual leader and stood for nationalism, courage and compassion.

On this special occasion I wish his ideals are to be cherished and flourished. I also extend my sincere greetings and felicitations for the same.

Yours Sincerely,

08/10/07

**(V. Radhika Selvi)**

இரா. ஆவுடையப்பன்,
பி.ஏ., பி.எல்.,
பேரவைத் தலைவர்
தமிழ்நாடு சட்டமன்றப் பேரவை





## பசும்பொன் உ. முத்துராமலிங்கத் தேவர் அவர்களின் நூற்றாண்டு விழா சிறப்பு மலர் வெளியீடு – வாழ்த்து

தென் தமிழ்நாட்டில் பசும்பொன் கிராமத்தில் தோன்றிய "பசும்பொன் சிங்கம்" என்று தேசியவாதிகளால் பாராட்டப் பெற்றவரும், "பத்தரை மாற்றுத் தங்கம்" என்று படித்தவர்களாலும், பாமர மக்களாலும் துதிக்கப்பட்டவர்தான் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்கள். பாரதத்தின் விடுதலைக்காக தென் தமிழ்நாட்டில் விடுதலைப்போரை முன்னின்று நடத்தியவரும், நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் அவர்களால் "தென்னாட்டு போஸ்" என்று மக்களுக்கு அடையாளம் காட்டப்பட்ட சிறப்புக்குரியவர்தான் திரு. பசும்பொன் உ. முத்துராமலிங்கத்தேவர் அவர்கள். அரசியல் வாழ்வில் தன்னிகரற்ற தலைவராக திகழ்ந்ததின் காரணமாக "தூய எண்ணமும், துணிச்சலும் கொண்ட மரியாதைக்குரிய தலைவர்" என்று கர்மவீரர் காமராஜர் அவர்களால் போற்றப்பட்டவர்.

உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற வேறுபாடின்றி சாதி சமயத்திற்கு அப்பாற்பட்டு **"ஒன்றே குலம் ஒருவனே தேவன்"** என்ற திருமூலரின் கூற்றுக்கு உயிரூட்டும் வகையில் தென்னகத்தின் அனைத்துத் தரப்பு மக்களின் உள்ளங்களில் குடிகொண்டவராகத் திகழ்ந்தவர்தான் பசும்பொன் தேவர் அவர்கள்.

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்களின் சீரிய அரசியல் மற்றும் பொது வாழ்வை அங்கீகரித்து பெருமை சேர்க்கும் வகையில் மதுரை மாவட்டம் உசிலம்பட்டியில் பேரறிஞர் அண்ணா அவர்கள் முதல்வராக இருந்தபொழுது பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் அவர்கள் பெயரில் ஒரு கல்லூரி கழக அரசால் நிறுவப்பட்டது. அதன்பின்னர், இராமநாதபுரம் மாவட்டம் கமுதி மற்றும் திருநெல்வேலி மாவட்டம் மேலநீலிதநல்லூர் ஆகிய இடங்களில் தேவர் அவர்கள் பெயரில் இரண்டு கல்லூரிகளை நிறுவிய பெருமை மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களையேச் சாரும்.

மேலும், மதுரை மாநகரில் முதன் முதலில் தேவர் அவர்களுக்கு சிலை நிறுவப்பட்டதும் மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் ஆட்சிக் காலத்தில்தான். தேவர் அவர்களின் வாழ்க்கை வரலாறு தமிழக அரசு உயர்நிலைப் பள்ளி பாடத்திட்டத்தில் சேர்க்கப்பட்டதும், பசும்பொன் தேவர் அவர்களின் சமாதியை தமிழக அரசால் அதிகாரபூர்வமான நினைவிடமாக மாற்றப்பட்டதும் மாண்புமிகு முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களையேச் சாரும்.

திரு. பசும்பொன் உ. முத்துராமலிங்கத்தேவர் அவர்களின் நூற்றாண்டுவிழா சிறப்புற நடைபெறுவதற்கு மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் **ரூபாய் ஐம்பது இலட்சம்** ஒதுக்கீடு செய்து ஆணையிட்டுள்ளது மாண்புமிகு முதல்வர் அவர்கள், தேவர் அவர்கள்மீது கொண்டுள்ள அளப்பறிய மரியாதையைக் காட்டுகிறது. தேவர் அவர்களின் நூற்றாண்டு விழா சிறப்பாக நடைபெறவும், அவர்களின் புகழ் உலகெங்கும் நிலைத்து நிற்கவும் வேண்டுவதோடு சிறப்பு மலர் சிறக்கவும் உளம் கனிந்த நல்வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்கின்றேன்.

அன்புடன்,

**க. அன்பழகன்**
நிதித் துறை அமைச்சர்






## வாழ்த்துச் செய்தி

தென்பாண்டி மண்டலத்தின் பசும்பொன்னில் பிறந்து, இந்தியத் திருநாட்டின் விடுதலைப் போரில் சிறப்புமிகு வீரராய்த் திகழ்ந்து மக்களின் மனங்கவர்ந்தவர் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர். அவர், விடுதலைப் போரில் ஒரு தனி வழியாகப் புரட்சிப்பாதை வகுத்து, இந்திய தேசிய ராணுவம் அமைத்துப் போர் முழக்கம் செய்த வங்கத்துச் சிங்கம் நேத்தாஜிக்குத் துணை நின்ற தமிழகத்து வேங்கை.

தாய்த் திருநாட்டைத் தன் உயிரினும் மேலாக நேசித்தவர். கலங்காத நெஞ்சத் துணிவுடன் ஏற்றுக்கொண்ட தியாகத் தழும்புகள் ஏராளம். அவர் ஒரு சிறைப் பறவை. தமது வாழ்நாளில் 4000 நாட்களுக்குமேல் சிறையில் அடைபட்டுக் கிடந்தவர். எந்தப் பலனையும் எதிர்பார்க்காமல், தேசத்திற்காக தமக்குரிய அனைத்தையும் இழந்தவர்.

தேர்தல் களத்தில் தோல்வியே காணாதவர். தொகுதிக்குச் செல்லாமலேகூட வெற்றி வாகை சூடியவர். 1937–ஆம் ஆண்டு முதல் சட்டப்பேரவை உறுப்பினராகவும், 1952–57 ஆம் ஆண்டுகளில் நாடாளுமன்ற உறுப்பினராகவும் இருந்து அயராது பணியாற்றிய தலைவர்.

தமிழ்ப்பற்று அவருக்கு உயிர்மூச்சு முதுமொழியாகிய தமிழ் மொழியின் சிறப்பினையும், தமிழர் பண்பாட்டினையும் மேடைகள்தோறும் முழங்கியவர். மேடை முழக்கம் அவருக்குக் கைவந்த கலை. தமிழ், ஆங்கிலம் இரு மொழிகளிலும் சிறப்பாகப் பேசும் ஆற்றல் பெற்றவர். அவரது பேச்சாற்றலால் ஆயிரமாயிரம் தேச பக்தர்களும், தியாகிகளும் உருவாக்கப்பட்டனர்.

அவர் தமிழக மக்களுக்கும், இந்திய தேசத்துக்கும் செய்த சேவையைப் போற்றிக் கொண்டாடும்வகையில் அவரது நூற்றாண்டு விழாவைபொட்டி மலர் வெளியிடப்படுவது கண்டு மகிழ்கிறேன். எனது வாழ்த்துக்கள் உரியவாம்.

அன்பன்,

(க. அன்பழகன்)

மு.க. ஸ்டாலின்
ஊரக வளர்ச்சி மற்றும்
உள்ளாட்சித் துறை அமைச்சர்






## வாழ்த்துச் செய்தி

"தென்பாண்டிச் சிங்கம்", "தேவர் குல திலகம்", "தென்னாட்டுப் போஸ்" என்றெல்லாம் பெருமையுடன் போற்றப்பட்ட, இன்றும் போற்றப்படும் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்கள் பிறந்த நாள் நூற்றாண்டுவிழா, பசும்பொன் கிராமத்தில் 30.10.2007 அன்று அரசு சார்பில் நிகழ்வது அறிந்து மகிழ்கிறேன்.

பசும்பொன் தேவர் திருமகன் அவர்கள் மிகப்பெரிய நிலச் சுவான்தாரராக விளங்கிய போதிலும், ஏழை விவசாயிகளுக்காகச் சங்கம் அமைத்துப் பாடுபட்ட பாட்டாளியின் தோழராகவும் திகழ்ந்தவர்; நமது நாட்டு விடுதலைப்போரில் நேதாஜி சுபாஷ்சந்திர போஸ் அவர்களைப் பின்பற்றிச் சுதந்திர உணர்வை வளர்த்தவர்; ஆதிதிராவிடர்களின் ஆலய நுழைவுக்கு ஆதரவு தந்து துணை நின்று, அவர்களின் சமுதாய விடுதலைக்குப் பாடுபட்டவர்.

1952–இல் நாடாளுமன்றம், தமிழக சட்டமன்றம் இரண்டிற்கும் தேர்ந்தெடுக்கப்பட்டு, நாடாளுமன்ற உறுப்பினர் பதவியைத் துறந்தவர்; அதுபோல, 1957 இல் இரண்டிற்கும் தேர்ந்தெடுக்கப்பட்டபோது, சட்டப்பேரவை உறுப்பினர் பதவியைத் துறந்தவர்; 1962–இல் நாடாளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர். இப்படிப் போட்டியிட்ட அத்தனை இடங்களிலும் வெற்றிபெற்று, மக்களிடம் மகத்தான ஆதரவு கொண்ட மாபெரும் தலைவராகத் திகழ்ந்தவர் தேவர் திருமகன் அவர்கள்.

தமிழகத்தின் தனிப்பெரும் தலைவராக, அஞ்சா நெஞ்சம்படைத்த ஆற்றல் மிகுந்த மாவீரராக விளங்கிய பசும்பொன் தேவர் அவர்களைப் பெருமைப்படுத்தி, அவர்தம் திருப்பெயரில் மூன்று கல்லூரிகளையும், மதுரை மாநகரில் கம்பீரமான தோற்றத்துடன் அவரது திருவுருவச் சிலையையும், காரைக்குடி அழகப்பா பல்கலைக் கழகத்தில் 25 இலட்ச ரூபாய் அறக்கட்டளையையும் அமைத்துள்ள மாண்புமிகு முதலமைச்சர் முத்தமிழறிஞர் கலைஞர் அவர்களின் அரசு இன்று தேவர் திருமகனாரின் நூற்றாண்டு விழாவை அரசு சார்பில் அவர் பிறந்த பசும்பொன் கிராமத்திலேயே கொண்டாடுவது நினைந்து மகிழத்தக்கது. தேவர் பெருந்தகை அவர்களின் நூற்றாண்டு விழா சிறப்புடன் நிகழ, விழாமலர் தேவர்தம் திருப்புகழைப் பாட உளமார வாழ்த்துகிறேன்.

(மு.க.ஸ்டாலின்)

**கோ.சி. மணி**
கூட்டுறவுத் துறை அமைச்சர்






## வாழ்த்துச் செய்தி

இந்திய நாட்டின் விடுதலைக்காக அதிக நாட்கள் சிறையிலிருந்தவர் என்ற பெருமையுடன் அரசியலையும், ஆன்மீகத்தையும் இணைத்து மக்கள் பணியாற்றிய மாபெரும் தலைவர் பசும்பொன் தேவர் திருமகனாரின் 100வது ஜெயந்தி விழாவை முன்னிட்டுச் சிறப்பு மலர் வெளியிடுவது குறித்து மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். ''வீரமற்ற விவேகம் கோழைத்தனமானது ; விவேகமற்ற வீரம் முரட்டுத்தனமானது'' என்று கூறி வீரமும் விவேகமும் இணைந்திருக்க வேண்டும் என்று வலியுறுத்தி வந்த அந்தத் தலைவரின் நினைவு போற்றி தென் மாவட்டங்களும், தமிழகமும் வளர்ந்திட நாம் அனைவரும் பாடுபட அவரின் 100வது பிறந்த நாளில் உறுதி பூணுவோமாக.

(கோ.சி. மணி)

**வீரபாண்டி எஸ். ஆறுமுகம்**
வேளாண்மைத் துறை அமைச்சர்






## <u>வாழ்த்துச் செய்தி</u>

இராமநாதபுரம் மாவட்டம், கமுதி வட்டம், பசும்பொன் கிராமத்தில் 30.10.2007 அன்று அரசின் சார்பில் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்களின் 100–வது ஜெயந்தி விழா நடைபெற உள்ளது அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்.

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்கள் சமுதாய மேம்பாட்டிற்காகவும், அடித்தள மக்களின் வாழ்க்கை முன்னேற்றத்திற்காகவும், அரும்பாடுபட்டவர் என்பதை இத்தருணத்தில் நினைவுகூர்ந்து அவர் வழிகாட்டிய நெறிமுறைகளை கடைபிடித்து, சமுதாய ஒற்றுமைக்கும், நல்லிணக்கத்திற்கும் அனைவரும் பாடுபட வேண்டும் என இம்மலரின் வாயிலாக அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்களின் 100–வது ஜெயந்தி விழா சிறப்பாக நடைபெறவும், விழா மலர் சிறப்புற அமையவும் எனது வாழ்த்துக்களையும், பாராட்டுதலையும் அன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புடன்,

19.9.07

**இ. பெரியசாமி**

வருவாய் மற்றும் சிறைத் துறை
அமைச்சர்






## வாழ்த்துச் செய்தி

அன்புடையீர்,

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்களின் 100–வது ஜெயந்தி விழா 30–10–2007 அன்று பசும்பொன் கிராமத்தில் அரசு சார்பில் நடைபெறவுள்ளது அறிந்து மகிழ்ந்தேன். மேலும், பசும்பொன் தேவர் அவர்களின் வாழ்க்கை வரலாறு குறித்த நூற்றாண்டு விழா சிறப்பு மலர் வெளியிட ஏற்பாடு செய்துள்ளது மிகவும் மகிழ்ச்சியளிக்கிறது.

பசும்பொன் தேவர் அவர்கள் நாட்டு விடுதலைக்காக பாடுபட்டு உழைத்த உத்தமர் ஆவார். இவருக்கு நூற்றாண்டு விழா நடத்துவது பெருமையாக உள்ளது. இவ்விழா சிறக்க எனது உளமார்ந்த வாழ்த்துக்களை தெரிவித்துக்கொள்கிறேன்.

அன்புடன்,

21.9.07

(இ.பெரியசாமி)

**பரிதி இளம்வழுதி**
செய்தித் துறை அமைச்சர்






## வாழ்த்துச் செய்தி

''தேசீயமும் தெய்வீகமும் இரு கண்கள்'' என்ற நமது கொள்கையை தன் வாழ்நாள் முழுவதும் போற்றிப் பாதுகாத்த பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் அவர்களின் நூற்றாண்டு விழாத் தொடர்பாக சிறப்பு மலர் வெளியிடுவதை அறிந்து மகிழ்ச்சியடைகிறேன். சிறந்த சட்டமன்ற உறுப்பினராகவும், நாடாளுமன்றவாதியாகவும் திகழ்ந்த தேவர் திருமகன் அனைத்து பிற்படுத்தப்பட்ட, ஒதுக்கப்பட்ட மக்களின் உயர்ந்த வாழ்விற்காக இடையறாமல் குரல் கொடுத்தவர் ஆவார். மேலும், ஆங்கில ஏகாதிபத்தியம் நம் மீது பிணைத்த அடிமைச் சங்கிலியை அறுத்தெறிய தமிழகமெங்கும் இவர் ஏற்று நடத்திய கூட்டங்களும், நிகழ்ச்சிகளும், அவற்றின் வாயிலாக வீறிட்டெழுந்த மக்கள் கூட்டம் ஆங்கிலேயர்களை அஞ்சப்பட வைத்தன.

ஆங்கிலேயர்களுக்குச் சிம்ம சொப்பனமாக விளங்கிய தேவர் திருமகன் வாழ்நாளில் பெரும்பகுதியை விடுதலைப் போராட்ட உணர்வோடு சிறையிலேயே கழித்தவர். தியாக உணர்வுடைய கொள்கைக்காக எதையும் சந்திக்கும் மனவலிமை, மக்களுக்கு ஆற்றிய எண்ணற்ற சேவை போன்றவை இன்று, நேற்றல்ல, என்றென்றும் மக்களிடையே நிலைத்து நிற்பவை.

பெருமதிப்புடன் போற்றத்தக்க பசும்பொன் முத்துராமிலிங்கத்தேவர் நூற்றாண்டை ஒட்டித் தயாரிக்கப்படும் சிறப்பு மலர் அவரின் புகழ் மகுடத்திற்கு ஓர் நல்வைரமாகத் திகழ வாழ்த்துகிறேன்.

அன்புடன்,

இளம்வழுதி
20/7/07

**பரிதி இளம்வழுதி.**

**சுப தங்கவேலன்**
குடிசை மாற்று மற்றும்
இடவசதிக் கட்டுப்பாட்டுத் துறை அமைச்சர்






## வாழ்த்துச் செய்தி

தென் தமிழகத்தின் புகழ்வேந்தர் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்கள் பிறந்த திருநாள் நூற்றாண்டு விழா முத்தமிழறிஞர் மாண்புமிகு தமிழக முதலமைச்சர் கலைஞர் அவர்களின் சீரிய அறிவுரைகளின்படி தமிழக அரசின் சார்பில், பசும்பொன் கிராமத்தில் மிகந்த எழுச்சியோடு 30.10.2007 அன்று நிகழ்வதில் நிறைந்த மகிழ்ச்சி அடைகிறேன்.

நெற்றி நிறைய நீரணிந்த கம்பீரமான தோற்றம், கர்ச்சிக்கும் சிம்மக்குரல், நெஞ்சத்தில் நேர்மை, நிகரிலாத் துணிவு, ஏழை எளியவர்பால் கனிவு, கருணை இவையனைத்தும் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்களை நினைக்கும் அனைவர்க்கும் தோன்றும்.

தேவர் திருமகனார் நமது நாட்டு விடுதலைப் போரில் நேதாஜி வழிநடந்த தியாகசீலர்; ஆதிதிராவிட சமுதாயத் தோழர்களின் ஆலய வழிபாட்டிற்கு ஆதரவு தந்த மிகச்சிறந்த சமதர்மச் சிந்தனையாளர்; மதுரையில் பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம் நிறுவித் தொழிலாளர் நலம் காத்த செம்மல், பெருநிலக்கிழார் எனும் பெருமைக்குரிய குடும்பத்தில் பிறந்தவர்; எனினும், விவசாயத் தொழிலாளர்களின் உரிமைகளுக்காக போராடிய உத்தமத் தலைவர் எனப் பல்வேறு சிறப்புகள் கொண்ட பெருந்தகை ஆவார். இம்மாவட்டத்திலுள்ள பேரையூர் என்ற கிராமத்தில் முதன் முதலாக தன்னுடைய நிலத்தில் விளைந்த நெல்லைக் கொண்டு சமபந்தி போஜனம் நடத்திய பெருமைக்குரியவர்.

இந்நூற்றாண்டு விழா நடைபெறும் இத்தருணத்தில் ஒரு சில நிகழ்வுகளை நினைவு கூற விரும்புகிறேன்; சிறுகதை மன்னன் திரு.எஸ்.எஸ்.தென்னரசு அவர்களின் மண விழாவை நடத்தி வைக்க பேரறிஞர் அண்ணா அவர்கள் மதுரைக்கு வந்தார்கள். அப்பொழுது தேவர் திருமகனார் காலமாகிவிட்டார் என்ற செய்தி காட்டுத் தீ போன்று பரவியது. காலை நடைபெறவேண்டிய திருமணத்தை மாலை நடக்கும் என அறிவித்துவிட்டு, கொடும் பெருமழையையும் பொருட்படுத்தாமல், பேரறிஞர் அண்ணா அவர்களும் அவருடன் அண்ணன் மதுரை எஸ்.முத்து அவர்களும், அண்ணன் மன்னை அவர்களும், அண்ணன் அன்பில் அவர்களும் உடன் செல்ல, பசும்பொன் வந்து மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார்கள். அதன் பிறகு ஆட்சி பொறுப்புக்கு வந்த தலைவர் கலைஞர் அவர்கள், தேவர் திருமகனார் நினைவாலயம் எழுப்பியது, மதுரையில் பிரமாண்ட சிலை வைத்தது, தேவர் திருமகனார் பெயரிலேயே மூன்று கல்லூரிகள் உருவாக்கியது போன்ற எண்ணற்ற திட்டங்களை செய்தார்கள்.

மகத்தான தலைவர், மாமனித புனிதர் என இன்றும் போற்றப்படும் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்களின் நூற்றாண்டு விழாசிறப்புடன் நிகழ, விழா மலர், தேவர் பெருமகனாரின் புகழ் மணம் வீசும் பொன்மலராய்த் திகழ என் இதயம் கனிந்து வாழ்த்துகிறேன்.

29/8/2007

(சுப.தங்கவேலன்)

**தங்கம் தென்னரசு**
பள்ளிக் கல்வித் துறை அமைச்சர்






## வாழ்த்துச் செய்தி

**அன்புடையீர், வணக்கம்.**

**"பசும்பொன் தேவர் திருமகன்" எனத் தமிழக மக்களால், பாசத்தோடு அழைக்கப்படும் தேவர்திருமகனின் 100வது பிறந்தநாள் கொண்டாட்டம்பற்றியும், அதனையொட்டி விழாமலர் வெளியிடவிருப்பது குறித்தும் மிகவும் மகிழ்ச்சி. பிறந்தநாள் விழா நிகழ்வுகள்யாவும் அன்னாருக்குப் பெருமை சேர்ப்பனவாகவும் விழாமலர் மணம்பரப்பவும் என் உளங்கனிந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.**

**தேவர் திருமகனார் அவர்கள் தம்முடைய தமிழ் மற்றும் ஆங்கிலப் பேச்சாற்றலால் நாட்டுமக்களின் நன்மனங்களைக் கவர்ந்தவர்; இவர் தம் மூச்செல்லாம் விடுதலை வேட்கை; பேச்செல்லாம் சுதந்தரமுழக்கம் என வாழ்ந்த பெருமகனார். அதனால் "அடிமை இருள் போக்க எழுந்த ஆதவன்" என்று போற்றப்பட்டவர்.**

**அப்பெருமகனார் காணவிரும்பிய சமுதாய நலத்திட்டங்கள் பலவற்றை நிறைவேற்றிவரும் நம், மாண்புமிகு முதல்வர் தலைவர் கலைஞர் அவர்களின் பொற்கால ஆட்சியைப் புகழ் உடலால், பூரித்து நின்று வாழ்த்திக் கொண்டிருக்கும், பசும்பொன் தேவர் திருமகன் அவர்களின் 100வது பிறந்தநாளில், அன்னாரின் திசைநோக்கி என் வணக்கத்தை பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.**

**இவ்விழாசிறப்புற என் நெஞ்சார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.**

**நன்றி**

**அன்புடன்,**

**(தங்கம் தென்னரசு)**
**பள்ளிக் கல்வித்துறை அமைச்சர்**

கம்பம் பெ. செல்வேந்திரன்
தமிழக அரசின் சிறப்புப் பிரதிநிதி
(இ) புதுடில்லி

தமிழ்நாடு இல்லம்
சாணக்கியபுரி
புதுடில்லி – 110 021
☎ 011-2301 4652, 2301 5480
அலுவலகம் : 2301 0035 நீட்சி : 401
இல்லம் : 2301 0035 நீட்சி : 501

தலைமைச் செயலகம், சென்னை - 600 009
✆ 2567 3034 துணை இணைப்பு : 5790







## வாழ்த்துச் செய்தி

தேவர் திருமகன் பசும் பொன் முத்துராமலிங்கத்தேவர் அவர்களின் பிறந்த நாள் நூற்றாண்டு விழா சிறப்புமலர் வெளியிடுவது மிகுந்த மகிழ்ச்சிக்குரியது.

தேவர் அவர்கள் இந்திய சுதந்திரத்திற்காக பல முறை சிறை வாசம் கொண்டவர். நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் அவர்களுக்கு தமிழ் நாட்டில் கிடைத்த தள நாயகர். நேதாஜியை தமிழர்களின் நெஞ்சங்களில் பதியச் செய்தவர். தெய்வீக உணர்வையும், தேசப் பற்றையும் தன் இரு கண்ணாகக் கொண்டவர். விவசாயிகள், தொழிலாளர்கள், ஒடுக்கப்பட்டவர்களின் நலனுக்காக உழைத்தவர். மண், பெண், பொன், இம்மூன்றுக்கும் அடிமையாகாதவர். இறுதிக் காலம் வரை இல்லற வாழ்வை ஏற்றுக் கொள்ளாது தூய நெறியை கடைப் பிடித்து வாழ்ந்தவர்.

ஒரு தலைவர் வாழ் காலத்தில் பெற்ற புகழ் பொதுவாக அவரது மரணத்திற்குப் பிறகு தேய் பிறையாகி விடுகிறது.

ஆனால் தேவர் திருமகனின் புகழ் அவரது மரணத்திற்குப் பிறகு வளர் பிறையாக வளர்ந்து கொண்டிருக்கிறது.

அவரது நூறாவது பிறந்த நாளில் வெளியிடப் படும் நூற்றாண்டு பிறந்த நாள் விழா மலருக்கு எனது வாழ்த்துக்களையும், தேவர் திருமகனின் நினைவுகளுக்கு எனது வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்கள் அன்புள்ள,

பெ. செல்வேந்திரன்

20/10/07

**Prof. K.M.Kader Mohideen, M.A., M.P.**
MEMBER OF PARLIAMENT
(LOK SABHA)
Vellore Parliamentary Constituency, Tamilnadu.






## வாழ்த்துச் செய்தி

பேரன்புக்குரியீர், இதயம் நிறைந்த இனிய நல்வாழ்த்துக்கள்.
தங்களின் அன்பான கடிதம் கிடைத்தது. மிகவும் நன்றி.

இராமநாதபுரம் மாவட்டம், கமுதி வட்டம், பசும்பொன் கிராமத்தில் தமிழக அரசின் சார்பில் 30-10-2007 ஆம் நாளில் பசும்பொன் முத்துராமலிங்கம் தேவர் அவர்களின் 100வது ஜெயந்தி விழா நடைபெற இருப்பது அறிந்து பெரிதும் மகிழ்ந்தோம். விழாவைத் தொடர்ந்து, தேவர் அவர்களின் வாழ்க்கை வரலாறு குறித்த நூற்றாண்டு விழா மலரும் வெளியிடப் படுவது இரட்டிப்பு மகிழ்ச்சியைத் தருவதாகும்.

இந்தியத் திருநாட்டில் காந்தி ஜெயந்தி, மகாவீரர் ஜெயந்தி என்னும் வரிசையில் தேவர் ஜெயந்தியும் இடம் பெற்றிருக்கிறது. தேவர் திருமகன் ஒரு சமுதாயத்துக்கோ, ஒரு மொழிக்கோ உரியவர் அல்லர். தேவர் இந்து குடும்பத்தில் உதித்தவர்; இஸ்லாமிய மாதாவால் பாலமுது ஊட்டப் பெற்றவர்; பல வகுப்பினராக உள்ள ஆசிரியர்களால் உருவாக்கப் பெற்றவர்; அனைத்து சமுதாய மக்களால் நாடாளுமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப் பெற்றவர்; அழகு தமிழிலும் அருமையான ஆங்கிலத்திலும் அரசியல், பொருளாதாரம், சமூகம் என்பவை மட்டுமின்றி, ஆன்மாவுக்கு ஒளியூட்டும் அற்புத உரைகளை வழங்கிய பெருமகன் அவர். நேதாஜி அவர்கள் மீது தேவர் திருமகன் கொண்டிருந்த அப்பழுக்கற்ற பாசமும் நேசமும், இந்திய தேசத்தின் மீது அவருக்கிருந்த ஆழ்ந்த பற்றின் - பக்தியின் வெளிப்பாடுகளே ஆகும். அவரின் நினைவைப் போற்றுவது, தாயக மக்களின் மனதில் மறைந்து போன பாரம்பரியத்தையும் பண்பாட்டையும் நினைவூட்டுவதாக அமையும். புதியதோர் உலகம் செய்யப் புறப்படுவோர், தேவர் திருமகன் போன்ற அறிஞர் திலகங்களை முன்மாதிரியாகக் கொள்ளுதல் வேண்டும்.

தேவர் அவர்களின் நேர்மையால் தமிழகத்தில் பரவிய ஆன்மீகத் தமிழ்த் தென்றல் எங்கும் செல்லுக! இதயங்களை எல்லாம் வெல்லுக! என வாழ்த்துவோம். வாழ்க தேவர் அவர்களின் திருப்பெயர்!

அன்புடன்
[signature] 6/9/07
(கே.எம். காதர் மொகிதீன்)

Note: This has been sent on 6/9/07 by Professional Couriers.

**எல்.கே. திரிபாதி,** இ.ஆ.ப.
தலைமைச் செயலாளர்.






## வாழ்த்துச் செய்தி

தென்தமிழ்நாட்டு மக்களின் நெஞ்சங்களில் நீங்காது இடம் பெற்றுள்ள போற்றுதலுக்குரிய மாமனிதர், திரு.பசும்பொன் உ.முத்துராமலிங்கத் தேவர் அவர்களின் நூற்றாண்டு விழாவையொட்டி ஒரு சிறந்த மலர் வெளியிடுவது குறித்து மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன்.

ஜாதி, மத பேதங்களைக் கடந்து அனைத்து மக்களின் மீதும் அன்பு செலுத்தியவர் தேவர் திருமகனார் ஆவார். அதனால் தான் அம் மக்கள் அனைவருமே அவரைத் தாய் தந்தையாகவே கருதி தமது உள்ளங்களில் அவருக்கு ஓர் உயர்ந்த இடத்தைக் கொடுத்துள்ளனர். தனக்குப்பின் தனது சொத்துக்களை இனாம் சாசனமாக எழுதும் போது தனது உறவு முறையினருக்கு மட்டுமில்லாமல், தனது அன்புக்கு உரியவர்களையும் அதில் இணைத்துக் கொண்டார். அவர்களில் தாழ்த்தப்பட்ட சாதியினரும் பங்கு பெற்றனர் என்பதை எண்ணும் போது அவரது உயரிய பண்பாட்டை நாம் அறிய முடிகிறது.

"தெய்வீகம் எனது உயிர்; தேசியம் எனது உடல்" – என வாழ்ந்து இறைப்பணிக்கு இணையாக நாட்டுப்பணியையும் மேற்கொண்டவர் முத்துராமலிங்கத் தேவர் என்பதை அவரது வரலாற்றுப் பக்கங்கள் நமக்கு உணர்த்துகின்றன.

உடலால் மறைந்த பின்பும் மக்கள் மனங்களில் மங்காத புகழோடு வாழ்ந்து வரும் மாமனிதர் பசும்பொன்தேவர் அவர்களின் நினைவைப் போற்றி, மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின் தலைமையிலான தமிழக அரசு கொண்டாடும் இந்த மலர் சிறக்க எனது மனம் நிறைந்த வாழ்த்துக்களை தெரிவித்துக்கொள்கிறேன்.

எல்.கே. திரிபாதி
23.10.2007

(எல்.கே.திரிபாதி)

**து.இராசேந்திரன், இ.ஆ.ப.,**
அரசுச் செயலாளர்,
தமிழ் வளர்ச்சி, அறநிலையங்கள்
மற்றும் செய்தித்துறை.






## வாழ்த்துச் செய்தி

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்களின் பிறந்த நாள் நூற்றாண்டு விழா 30.10.2007 அன்று அரசு கொண்டாடுவது போற்றுதற்குரிய நிகழ்வாகும். தமிழ்நாட்டில், இராமநாதபுரம் மாவட்டத்தில், கமுதிக்கு அருகே உள்ள பசும்பொன் என்ற கிராமத்தில் 1908ஆம் ஆண்டு பிறந்து நாட்டிற்காக தனது உடல், பொருள், ஆவி அனைத்தையும் தந்த புகழ்பெற்ற தலைவர் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் என்பது அனைவரும் அறிந்த ஒன்றாகும்.

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்கள் 1948ஆம் ஆண்டு குற்றப் பரம்பரையினர் சட்டத்தை ஒழிப்பதற்கு முக்கிய கருவியாக இருந்து தென் தமிழகத்தில் குறிப்பாக இச்சட்டத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு காவல் துறையின் பிடியிலிருந்து விடுதலை பெற்றுத் தந்தவர் என்பதனை அப்பகுதிவாழ் மக்கள் இன்றும் நன்றியோடு நினைவு கூறுகின்றனர். ஏழை விவசாயப் பெருங்குடி மக்களின் இன்னல் அகற்றுகின்ற வகையில் ஜமீன்தாரி ஒழிப்புச் சட்டம் இயற்றப்படுவதற்கு மூலகாரணமாக இருந்து இச்சட்டம் இயற்றுவதற்கு பரிந்துரை செய்ய திரு.ஸ்ரீ பிரகாசம் குழுவை அமைப்பதற்கு அரும்பாடுபட்டவர் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் தான் என்பது ஒவ்வொரு விவசாயத் தொழிலாளியின் மனத்திலும் இன்றும் நிலைத்து நிற்கின்ற நிகழ்வாகும். அனைத்து சாதியினரும் திருக்கோயில்களில் நுழைவதை ஆதரித்து அவ்வண்ணமே, மதுரை அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயிலுக்கு ஆதி திராவிட மக்களை தனது தலைமையில் அழைத்துச் சென்று சமூக நீதி காக்க வழிவகுத்தவர்களில் இவரின் பங்கு இன்றியமையாத ஒன்றாகும்.

நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் அவர்களுடன் இணைந்து துப்பாக்கி ஏந்தினால்தான் விடுதலை கிடைக்குமென்ற தீவிர கோட்பாட்டிற்குத் தன்னை உட்படுத்திக்கொண்டு தமிழ்நாட்டில் "பார்வர்டு பிளாக்" என்ற தேசியக் கட்சி வளர்வதற்கு மூல காரணமாக இவர் இருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

அனைவருக்கும் சம வாய்ப்பளிக்க வேண்டுமென்ற பொதுவுடைமை நோக்கத்துடன் தனது சொத்துக்கள் முழுவதையும், உழுபவனுக்கே நிலம் சொந்தம் என்ற கொள்கையில் தளராத நம்பிக்கை கொண்டு தனது நிலங்களை உழுத விவசாயத் தொழிலாளர்கள் அனைவருக்கும் பகிர்ந்தளித்த மாமனிதர் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் என்பது அனைவரும் பாராட்டிப் புகழ வேண்டிய ஒன்றாகும்.

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்களின் நினைவினைப் போற்றி தேவர் நினைவு இல்லத்தை புதுப்பித்தல், நூற்றாண்டு விழா வளைவு அமைத்தல், புதிய கண்காட்சிக் கூடம் அமைத்தல், அணையா விளக்கு ஏற்படுத்துதல், நூலகக் கட்டிடம் கட்டுதல், முடியிறக்கும் கூடம் கட்டுதல், முளைப்பாரி மண்டபம் கட்டுதல், பால்குட மண்டபம் கட்டுதல், கழிப்பிட வசதிகள் ஏற்படுத்துதல் போன்ற கட்டுமானப் பணிகளோடு, பசும்பொன் கிராமத்திற்கு முதுகுளத்தூர்–கமுதி பிரதான சாலையிலிருந்து பசும்பொன்னுக்கு இணைப்புச் சாலை ஏற்படுத்துதல் ஆகிய பணிகளை செய்து முடிக்க ரூபாய் 1 கோடி மதிப்பில் அரசு நிதி ஒதுக்கீடு செய்து பணிகள் முழுவீச்சில் அனைவரும் பாராட்டும் வகையில் இராமநாதபுரம் மாவட்ட ஆட்சித்தலைவர் சீரிய தலைமையில் நடைபெற்று வருகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

இளம்தலை முறையினர் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்களின் நாட்டுப்பற்று, பொதுவுடைமைக் கொள்கை, சமூக நீதி, சகோதரத்துவம் மற்றும் மனித நேயம் ஆகிய நற்பண்புகளை நேரில் அறிந்து அவற்றை தத்தம் வாழ்வில் கடைபிடிக்க, பசும்பொன்னில் உள்ள நினைவு மண்டபமும் மற்றும் அதில் அமைந்துள்ள நூலகம், கண்காட்சிக் கூடம் போன்றவைகள் தூண்டுகோலாக அமைந்து நிலைத்தப் பயனை அளிக்க வேண்டுமென்பதே அரசின் நோக்கமும் செயலும் ஆகும்.

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்களின் நூற்றாண்டு விழா நிகழ்ச்சிகள் இனிதே நடைபெற தமிழ் வளர்ச்சி, அறநிலையங்கள் மற்றும் செய்தித் துறையின் சார்பில் எனது மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

1/10/2001.

செயலாளர்,
தமிழ் வளர்ச்சி, அறநிலையங்கள்
மற்றும் செய்தித் துறை,
தலைமைச் செயலகம்,
சென்னை–600 009.

முனைவர் **ஆ.சி. மோகன்தாஸ்,** இ.ஆ.ப.
இயக்குநர்,
செய்தி மக்கள் தொடர்புத்துறை,
தமிழ்நாடு அரசு.






## வாழ்த்துச் செய்தி

இந்திய சுதந்திரப் போராட்டத்தில்
பங்கு கொண்ட தமிழகத் தியாகிகள் பலரில்
மதிப்புக்குரிய பசும்பொன் தேவர் அவர்கள்
மாபெரும் தியாகியாவார்.

வீரத்தின் விளைநிலமான
தென்பாண்டிச் சீமையிலே தோன்றி
விவேகத்துடன் மக்கள் தொண்டாற்றியவர்
பசும்பொன் தேவர் அவர்கள் ஆவார்.

இத்தகைய உயர் குணங்கள்
படைத்த பசும்பொன் தேவர் அவர்களுக்கு
மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின்
தலைமையிலான தமிழக அரசு
நூற்றாண்டு விழாவை சீரும் சிறப்புமாக கொண்டாடுகிறது.
இந்த இனிய தருணத்தில் நிலைத்து நிற்கும் பல
செயல்களுல் ஒன்றான
மலர் தொகுப்புப்பணி என்பது சிறப்புக்குரியதாகும்.

மலர்களை வண்டுகள் மொய்த்து
தேனை அள்ளிப் பருகுவது போல,
இந்த மலரையும் வாசகர்கள்
வாசித்து தேனினும் இனிய செய்திகளை
எடுத்துக்கொள்வார்கள் என்பது உறுதி.

மலர் சிறக்க மனம் நிறைந்த
வாழ்த்துக்கள் உரித்தாகுக.

அன்புடன்

(முனைவர் ஆ.சி.மோகன்தாஸ்)

**கிர்லோஷ் குமார், இ.ஆ.ப.,**
மாவட்ட ஆட்சியர் மற்றும் நீதிபதி,
இராமநாதபுரம்.






## வாழ்த்துச் செய்தி

பாண்டிய நாட்டை ஆண்ட கடைச் சங்க காலத்துப் பேரரசர்களில் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் குறிப்பிடத்தக்கவன். பாவலர்கள் போற்றும் இம்மன்னன் பிறந்த ஊர் "பசும்பூன்". "பசும்பொன்" என மருவி அழைக்கப்படும் இந்தச் சிற்றூரில்தான் திரு. உ. முத்துராமலிங்கத் தேவர் பிறந்தார். இவரது பிறப்பால் புகழடைந்துள்ள இந்த சிற்றூர் அமைந்திருப்பது இராமநாதபுரம் மாவட்டத்திற்குப் பெருமை சேர்ப்பதாக உள்ளது.

பசும்பொன் தேவர் இப்பூவுலகில் வாழ்ந்த நாட்கள் 20075. சிறையில் இருந்து நாட்கள் 4000. வாழ்நாளில் ஐந்தில் ஒரு பகுதியை நாட்டிற்காக சிறையில் கழித்த உத்தமர். அறத்திற்கும், மறத்திற்கும் உரியவர். தேசியத்தையும், தெய்வீகத்தையும் தம் இரு கண்களாகப் பாவித்தவர். விடுதலை வேட்கையை கொழுந்துவிட்டு எரியச் செய்து பல்லாயிரக்கணக்கான இளைஞர்களை தன் பேச்சாற்றலால் கட்டுறச் செய்தவர்.

தன்னுடைய தொண்டுகளால் மக்களின் மனதில் நீங்கா இடம் பெற்றவர். தனது பலவித இன்னல்களையும் பொருட்படுத்தாது நாட்டின் நலனில் அக்கறை கொண்டவர். முக்கியமான பிரச்சனைகளை எதிர்கொண்டு சமாளிப்பதில் துணிச்சலுடன் செயல்பட்ட தீர்க்கதர்சி. அரசியல் விவகாரங்களைக் கையாளுவதில் தனித்திறன் பெற்றவர். எளிமையும் தூய்மையும் வாய்ந்தவர். மேற்கண்ட அத்தனை புகழுக்கும் உரியவராய் வீரமும், விவேகமும் தெய்வீகமும் ஒருங்கே அமைந்த இந்த பன்முகத் தலைவருக்கு நூற்றாண்டு விழா அரசின் சார்பில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளதில் மகிழ்ச்சியடைகிறேன். இந்தச் சிறப்பு மலருக்கு எனது வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

கிர்லோஷ் குமார்

இரா. கிர்லோஷ் குமார்,இ.ஆ.ப.,
மாவட்ட ஆட்சித் தலைவர்.

இரா. திருஞானம், இ.கா.ப.,
காவல் கண்காணிப்பாளர்,
இராமநாதபுரம்.






## வாழ்த்துச் செய்தி

பசும்பொன்னில் பெரும் செல்வந்தராக பிறந்து பொதுவுடமை வாதியாக வாழ்ந்து அனைத்து சமூக மக்களும் ஏற்றுக் கொள்ளக் கூடிய உத்தமத் தலைவராக விளங்கியவர் பசும்பொன் தேவர் அவர்கள். எளிமை, தன்னடக்கம், விவேகம், வீரம், தொண்டு, தியாகம் ஆகியவற்றின் இலக்கணமாக விளங்கியவர். தனது ஆன்மீகச்சிந்தனைகளாலும், பேச்சாற்றலாலும் மக்களை பெரிதும் கவர்ந்தவராக வாழ்ந்து காட்டினார்.

நீதி வழுவா நெறியாளராகவும், திட வைராக்கியமுள்ள ஞானியாகவும், எளிமையில் துறவியாகவும் விளங்கிய தேவர் அவர்களிடம் ஆளுமை திறமை இருந்தும் அதிகாரப்பற்று இல்லாமல் வாழ்ந்தார்.

பசும்பொன் தேவர் இவ்வுலகில் வாழ்ந்தது 55 ஆண்டுகள் என்றாலும் எளிமையாக வாழ்ந்து அளப்பரிய சாதனைகளை நிகழ்த்திக் காட்டிய பசும்பொன் திருமகனார் அவர்களுக்கு தமிழ்நாடு அரசின் சார்பில் நூற்றாண்டு விழா எடுக்கப்பட்டு வெளியிடப்பட உள்ள சிறப்பு மலருக்கு எனது வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

காவல் கண்காணிப்பாளர்,
இராமநாதபுரம்.

**எம். கிருஷ்ணசாமி,** B.A., B.L., Ex. M.P.
தலைவர்



## வாழ்த்து

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்களின் 100 ஆவது ஜெயந்தி விழாவையொட்டி சிறப்புமலர் ஒன்று வெளியிடப்படுவதை அறிந்து பெரிதும் மகிழ்ச்சியடைந்தேன்.

தேசீயத்தையும், ஆன்மீகத்தையும் இரு கண்களாகப் போற்றி தனது இறுதிகாலம் வரை கொள்கை உறுதியோடு வாழ்ந்து சிறந்தவர்தான் தேவர் மகான். அழுத்தப்பட்ட மக்களின் வாழ்வு மேம்பட அரும்பாடுபட்டவர் அவர். தாழ்த்தப்பட்ட மற்றும் பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு தனது சொந்த நிலத்தை தானமாக ஈந்து மகிழ்ந்தவர்.

சமூகத் தொண்டில் தீரமிக்க போராளி. சுயவாழ்விலும், பொதுவாழ்விலும் தூய்மைக்கு இலக்கணமாய் வாழ்ந்து வரலாறு படைத்தவர்.

அவ்வாறு புகழ் பெற்றப் பெருமகனார் தேவர் மகானின் பிறந்தநாள் சிறப்புமலர் அவரது அனைத்து அருமை பெருமைகளையும் அனைவரும் படித்தறியும் வண்ணம் எழுத்தோவியங்கள் இடம் பெற்று மிளிர நான் உளமார்ந்து வாழ்த்துகிறேன்.

இப்படிக்கு,

(எம். கிருஷ்ணசாமி)

மருத்துவர் **ச.இராமதாசு,** எம்.பி.பி.எஸ்.,
நிறுவனர்,
**பாட்டாளி மக்கள் கட்சி**
10, காமாட்சியம்மன் கோவில் வீதி,
திண்டிவனம் - 604 001.
விழுப்புரம் மாவட்டம்.



## வாழ்த்துச் செய்தி

ஆன்மிகம், அரசியல், பொது வாழ்வு ஆகியவற்றில் ஈடு இணையில்லாத தலைவராக விளங்கியவர் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர். அவரது நூற்றாண்டு விழாவை தமிழக அரசு கொண்டாடுவது பெருமகிழ்ச்சி அளிக்கிறது. நூற்றாண்டு விழா, சிறப்புடன் நடைபெற என்னுடைய வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழகத்தில் மிகவும் பிற்படுத்தப்பட்ட பகுதியில் பிறந்த முத்துராமலிங்கத் தேவர், பிற்படுத்தப்பட்ட – ஒடுக்கப்பட்ட மக்களின் முன்னேற்றத்திற்காகவும், அவர்களின்நலனுக்காவும், ஒற்றுமைக்காகவும், அயராது உழைத்தவர். இளம் வயதிலேயே பொதுவாழ்வில் ஈடுபட்டு, விடுதலைப் போராட்டக் காலத்தில், தலைவர்களின் அன்புக் கட்டளையை ஏற்றுப் போராட்டங்களில் பங்கேற்றுச் சிறை புகுந்த சிறைப் பறவை அவர்.

நாட்டு விடுதலையில் இருந்த ஆர்வம் காரணமாகப் பின்னர் இந்திய தேசியப் போர்ப்படையில் இணைந்து நேதாஜி சுபாசு சந்திரபோசின் தளபதியாக விளங்கியவர். நாட்டு விடுதலைக்குப் பிறகு ஒரே சமயத்தில் இரண்டு தொகுதிகளில் போட்டியிட்டு இரண்டு தொகுதிகளிலும் இருமுறை வெற்றி பெற்ற வரலாற்றுக்குச் சொந்தக்காரர். மூன்றாவது முறை பிரச்சாரத்திற்குச் செல்ல அவரது உடல்நிலை இடம் அளிக்காத நிலையில், தேர்தலில் மகத்தான வெற்றி பெற்றவர். இதன் மூலம் மக்களின் ஆதரவையும் அன்பையும் அவர் எந்த அளவுக்குப் பெற்றிருந்தார் என்பதை அனைவரும் புரிந்து கொள்ள முடியும். அவரது நூற்றாண்டு விழாவை அரசு சிறப்புடன் கொண்டாடுவதன் மூலம், நமது இளைய தலைமுறையினர் அவரை நினைவு கூர்வதுடன், அவரது பண்புகளையும், சேவை மனப்பான்மையையும் தங்களுக்கு வழிகாட்டியாக எடுத்துக் கொண்டு வாழ்வதற்கு வழி ஏற்படும். அதற்காகத் தமிழக அரசைப் பாராட்டுவதுடன் முத்துராமலிங்கத் தேவரின் நூற்றாண்டு விழா சிறப்புடன் நடைபெற மீண்டும் என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புடன்

(மருத்துவர் ச.இராமதாசு)
நிறுவனர், பா.ம.க

## என். வரதராஜன்
மாநிலச் செயலாளர்,
இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)




## வாழ்த்துச் செய்தி

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்களின் பிறந்த நாள் நூற்றாண்டினை, தமிழக அரசே விழா எடுத்துக் கொண்டாடுவது பெரும் மகிழ்ச்சியைத் தருகிறது. தேச விடுதலைப் போராட்டத்திலும், சமூக விழிப்புணர்வு இயக்கத்திலும் அரிய பங்களிப்பினை வழங்கியவர் பசும்பொன் தேவர் அவர்கள்.

நமது நாட்டை பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் அடிமைப்படுத்திச் சுரண்டிக் கொண்டிருந்ததை எதிர்த்து நடந்த விடுதலைப் போராட்ட இயக்கத்திற்கு தமது இளமைக் காலத்தை அர்ப்பணித்தவர் அவர். ஏகாதிபத்தியங்களால் திணிக்கப்பட்ட இரண்டாம் உலக யுத்தத்திற்கு எதிரான கருத்துக்களைக் கூறியதற்காக, 1940 ஆம் ஆண்டில் ஆங்கிலேய அரசால் கைது செய்யப்பட்டு நான்காண்டுகள் சிறையில் அடைக்கப்பட்டார் அவர். நாட்டின் சுதந்திரத்தையும் இறையாண்மையையும் பாதுகாக்க இன்று நடைபெறுகிற போராட்டங்களில் பங்கேற்க இந்தச் செய்தி ஒரு தூண்டுதலாக அமையும்.

சமூக விடுதலைக்காகவும் போராடியவர் அவர்; தமிழகத்தின் ஒரு பகுதி மக்களைக் குற்றப்பரம்பரையினர் என்று பிரிட்டிஷ் அரசு அறிவித்து, ஒரு சமூகத்தையே அவமதித்தது. அந்த சமூகத்தின் ஆண்கள் அடையாள வில்லை வைத்துக் கொள்ள வேண்டும், குறிப்பாக இளைஞர்கள் இரவுப் பொழுதுகளில் காவல் நிலையங்களின் வாசலில்தான் உறங்க வேண்டும், இல்லையேல் சிறைத் தண்டனையை அனுபவிக்க வேண்டும் என்றெல்லாம் கட்டாயப்படுத்தியது. அந்தக் காட்டுமிராண்டிச் சட்டத்தை ஒழித்துக்கட்டப் போராடினார் தேவர். வீரமிக்க அந்தப் போராட்டம் வெற்றி பெற்றது. அந்த அநாகரிகச் சட்டத்தை பிரிட்டிஷ் அரசாங்கம் விலக்கிக் கொள்ளவேண்டியதாயிற்று. அந்த மக்கள் தலைநிமிர்ந்து நடக்க வழிவகுத்த அவரது சமூக எழுச்சிப் போராட்டத்திற்கு கம்யூனிஸ்ட் இயக்கமும் தோள் கொடுத்தது என்பதைப் பெருமையுடன் நினைவு கூர்கிறேன்.

சாதிய ஒடுக்குமுறையின் கோர வடிவமாக, அனைவருக்கும் உரியவனாகக் கருதப்படும் ஆண்டவனை ஆலயத்தில் நுழைந்து வழிபடும் உரிமை தாழ்த்தப்பட்ட மக்களுக்கு மறுக்கப்பட்டது. அடிமைப்படுத்துதல் என்பதன் இந்திய வடிவமான தீண்டாமைக் கொடுமையின் மூலமாகிய ஆலய நுழைவுரிமை மறுப்பை எதிர்த்து நாடு தழுவிய போராட்டத்திற்கு மகாத்மா காந்தி அறைகூவல் விடுத்த போது, தமிழகத்தில் அதற்குத் தலைமை தாங்கியவர்களில் ஒருவர் பசும்பொன் அவர்கள். மதுரையில் தாழ்த்தப்பட்ட மக்களைத் திரட்டி மீனாட்சியம்மன் கோவிலுக்குள் நுழையும் போராட்டத்தை மேற்கொண்ட திரு. வைத்தியநாத அய்யர் அவர்களுடன் தேவர் அவர்களும் இணைந்து நின்றது, அப் போராட்டத்திற்கு மிகப் பெரிய வலிமையைச் சேர்த்தது என்றால் அது மிகையல்ல.

நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் அவர்களின் சொல்லாலும் – செயலாலும் ஈர்க்கப்பட்டவராக, பார்வர்ட் பிளாக் இயக்கத்தில் தம்மை இணைத்துக் கொண்டார் அவர். அப்போது, நேதாஜி அவர்களை மதுரைக்கு அழைத்து வந்து, மக்கள் கடல் முன் அவரைப் பேசச் செய்தார் தேவர்.

1937ஆம் ஆண்டு மாகாண சட்டமன்றத் தேர்தல் நடைபெற்றபோது நீதிக்கட்சியின் சார்பில் செல்வாக்கு மிக்க இராமநாதபுரம் ராஜா நிறுத்தப்பட்டார். அரண்மனைப் பின்னணி, பணபலம் என யாராலும் அவரை எதிர்க்க முடியாது என்ற சூழல் ஏற்படுத்தப்பட்டிருந்தது. அந்தச் சவால்மிக்க சூழலைச் சந்திக்க முடிவுசெய்த பசும்பொன் அவர்கள், தேர்தலில் தாமே போட்டியிட்டு, அரச குடும்ப வாரிசைத் தோற்கடித்தார். அவரது அரசியல் வரலாற்றின் கம்பீரமான பக்கங்களில் ஒன்று இது.

சாமான்ய மக்களுக்கு நம்பிக்கையளித்த இந்தப் பங்களிப்பின் தொடர்ச்சியாக, தமிழகத் தொழிலாளர் இயக்கத்திலும் தம்மை அடையாளப்படுத்திக் கொண்டார் அவர். தோழர் பி. ராமமூர்த்தி, தோழர் ப. ஜீவானந்தம் ஆகிய கம்யூனிஸ்ட் கட்சி தலைவர்களுடன் இணைந்து நின்று பஞ்சாலைத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தப் போராட்டத்திலும் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். 1940ஆம் ஆண்டு, உலகத் உழைப்பாளர்களுக்கான மே தின விழா மதுரையில் கொண்டாடப்பட்டபோது, கம்யூனிஸ்ட் இயக்கத் தோழர்கள் கே. பி. ஜானகி அம்மாள், என். சங்கரய்யா ஆகியோருடன் பசும்பொன் அவர்களும் பங்கேற்று, மேடையேறிப் பேசி தொழிலாளர்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் ஊட்டினார்.

தேச விடுதலைப் போராட்டத்தில் மகத்தான பங்கினை ஆற்றிய பசும்பொன் தேவர் அவர்களின் நூற்றாண்டு விழாவினை அரசு கொண்டாடுவது சிறப்பானதாகும்.

விழா சிறக்க வாழ்த்துகிறேன்.

**என். வரதராஜன்**

மாநிலச் செயலாளர்

தா. பாண்டியன்
தமிழ்நாடு மாநிலச் செயலாளர்,
இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி.



## வாழ்த்துச் செய்தி

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவரின் நூற்றாண்டு விழாவினைத் தமிழ்நாட்டு மக்கள் சிறப்பாகக் கொண்டாட வேண்டும்.

அடிமைப்பட்டுக்கிடந்த இந்திய நாட்டின் விடுதலைக்காகப் போராடிய தலைவர்களில், முதல் வரிசையில் வைத்துப் போற்றப்படுகிறவர் பசும்பொன்தேவர் அவர்கள்.

தமிழ் நாட்டு மக்களை, சுதந்திரப் போராட்டத்தில் பெருமளவில் பங்கு பெற வைப்பதில், அவரது பங்கு மகத்தானதாக இருந்தது.

அவர் அடிமைப்பட்டுக்கிடந்த இந்திய நாட்டில் பிறந்த, சுதந்திர உணர்வுடைய மாவீரர். சுதந்திரம் பெற்ற பின்னரும், நல்லாட்சி, நாட்டின் முன்னேற்றத்திற்காகப் போராடிவந்தவர்.

இன்றைய சந்ததிக்கு அவரைப் பார்க்கவும், அவரது சீரிய உரைகளைக் கேட்கவும் வாய்ப்பு இல்லாது போய்விட்டது.

இந்திய நாட்டின் விடுதலைப் போராட்டத்தில், வெள்ளையர் ஆட்சியால் 6 ஆண்டுகளுக்கு மேலாகச் சிறையில் அடைக்கப்பட்டிருந்தவர்.

விடுதலையாகி வெளிவந்த பின்னரும், வாய்ப்பூட்டுச் சட்டம் போட்டு, அவரை மக்களிடம் பேச விடாமலும் தடைசெய்து வந்தனர்.

தேசிய இயக்கத்தில் பல நோக்குடைய, பலவகைத் திறமைகளை உடைய தலைவர்கள் இருந்தனர்.

மகாத்மா காந்தியடிகளுக்கும் சுபாஷ்சந்திரபோசுக்கும், வெள்ளையரை எதிர்த்துப் போராடுகிற முறை பற்றிய கருத்து வேறுபாடு இருந்தது. பண்டித நேருவும், காந்தியடிகளின் பொருளாதாரக் கொள்கைகளை ஏற்றுக் கொண்டது இல்லை.

தந்தை பெரியாரும் காங்கிரசில் இருந்தவர் தான். பின்னர், சாதி வேறுபாடுகளைக் களையக் காங்கிரஸ்காரரான வ.வே.சு. அய்யர் மறுத்ததால், காங்கிரசை விட்டே பெரியார் விலகினார். அதே போன்று ஜெயப்பிரகாசரும், சோஷலிஸ்டுகளும் வெளியேறினர் தோழர் எஸ்.ஏ.டாங்கேயும், கம்யூனிஸ்டுகளும் வெளியேறினர்.

அதே போன்று சுபாஷ்போஸ் காங்கிரசின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு இருந்தும், காந்தியடிகளின் ஆதரவாளர்கள் ஒத்துழைக்காது எதிர்ப்பைக் காட்டியதால், சுபாஷ்பாபு காங்கிரசை விட்டு வெளியேறி, பார்வர்ட் பிளாக் அல்லது முன்னேற்றக் கட்சி என்ற ஒன்றை அமைத்தார். அதன் தென்னாட்டுத் தளபதியாகத் திகழ்ந்தார் தேவர் அவர்கள்.

இரண்டாம் உலகப் போரின் போது சுபாஷ்சந்திரபோஸ், இந்திய தேசிய ராணுவத் தலைமைப் பொறுப்பை ஏற்று, படை கொண்டு வெள்ளையரைத் தாக்கி முன்னேறி வந்தார். ஆனால், உலகப் போரின் போக்கு மாறி, போசுக்கு ஆதரவு தந்த ஜப்பான், அமெரிக்கா, இங்கிலாந்து, ரஷ்யப் படைகளிடம் தோற்றதால், நேதாஜி போரைக் கைவிட்டு, வேறு வழிபற்றி சிந்திக்க முயன்றார். இறுதி விமானப் பயணத்தின் போது மர்மமான முறையில் மறைந்தார் என்பது செய்தி. இதைப் பலர் நம்பவில்லை. பசும்பொன்தேவரும் நம்பவில்லை. நேதாஜி தப்பியிருக்கலாம். திரும்பிவரக் கூடும் என நம்பினார்.

இந்த இறுதிக் கால நம்பிக்கை நிறைவேறாத நிலையில்தான் தேவர் காலமானார்.

நேதாஜியின் படை வென்று, டில்லிக் கோட்டை வரை வந்து இருந்ததால்... என ஒரு கற்பனை செய்து பாருங்கள்.

இந்திய வரலாறே மாறிப் போய் இருந்திருக்கும். தேவரின் சரித்திரமும் மாறி இருக்கும். அவ்வாறு நடந்திருந்தால், இந்த நாடே அவரது விழாவைக் கொண்டாடி இருக்கும்.

அரசியலில் எதிர்பாராததும் நடக்கும். எதிர்பார்ப்பது நடக்காமலும் போகலாம். வீரத்துடன் போராடிய தளபதியின் ஆசைப்படி இந்தியா விடுதலை பெற்றது. ஆனால் அவர் விரும்பிய ஆட்சி முறை, அவர் போற்றிய தலைவர் தலைமையில் அமையவில்லை. போரில் வெற்றி. ஆனால் தளபதி களத்தில் காயம்பட்டு பீஷ்மர் போல் மறைந்தார் என்பது தேவருக்கும் பொருந்தும்.

அரசியல் பகைமை, அறியாமை, விவரம் தெரியாது வெளியிடப்படும் கருத்துக்கள்-காரணமாக தேவரின் தியாக வாழ்க்கைக்குக் களங்கம் ஏற்பட்டுள்ளது.

அவருடன் பழகிய, அவருடன் சிறையில் உடன் இருந்த தியாகிகள் நல்ல வேளையாக இன்றும் உயிருடன் உள்ளனர்.

நானும் அவருடன் சில நேரங்களில் சந்தித்துப் பேசும் வாய்ப்பைப் பெற்றவன். அவரது உரையைப் பல முறை கேட்டவன்.

அப்பழுக்கற்ற தேசியத் தலைவர் அவர். மாசுமறுவற்ற ஆன்மீகவாதி அவர். ஆன்மீகத்தில் அவர் ஒரு விவேகானந்தர். அரசியலில் நேதாஜி. நானறிந்த சிறந்த அரசியல் தலைவர். செந்தமிழ் செல்வர். சிங்கக் குரலோன். சிந்தை தெளிந்தவர். நெஞ்சில் வீரம் நிறைந்தவர். தனக்கென வாழாது பிறர்க்கென வாழ்ந்த மாமனிதர். அவரது தியாக வாழ்வைப் போற்றுவோம்.

அன்புடன்
தா. பாண்டியன்

**தா. பாண்டியன்**
தமிழ்நாடு மாநிலச் செயலாளர்,
இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி.

# பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| 1. | பசும்பொன் முத்துராமலிங்கத் தேவரின் வாழ்க்கை வரலாற்றுச் சுவடுகள் | 1 |
| 2. | பசும்பொன் முத்துராமலிங்கத் தேவரின் பிறப்பும் அதன் சிறப்பும் | 3 |
| 3. | சுதந்திரப் போராட்டத்தில் தேவர் | 9 |
| 4. | முக்குலத்தின் முகவரி | 13 |
| 5. | ஆங்கிலேயரின் ஆதிக்கமும், தேவரும் | 14 |
| 6. | தேவரின் தமிழ் மொழி ஆளுமை | 18 |
| 7. | தேவரும் தொழிலாளர் சங்கமும் | 21 |
| 8. | உழைக்கும் மக்களின் உரிமைப் போரில் தேவர் | 27 |
| 9. | ஆப்ப நாட்டில் பூத்த புது நிலவு | 30 |
| 10. | விவசாயிகளின் பிரச்சனைகளில் தேவரின் பங்கு | 31 |
| 11. | தேவரும் சமூக சீர்திருத்தமும் | 36 |
| 12. | அவர் ஒரு வினைச் சொல் | 39 |
| 13. | பசும்பொன் தேவர் ஒரு சமுதாய சிற்பி | 41 |
| 14. | மண்ணை மாண்புறச் செய்த மகான் தேவர் | 48 |
| 15. | தேவரும் டாக்டர் கலைஞரும் | 52 |
| 16. | தேவரும் காங்கிரஸ் பேரியக்கமும் | 55 |
| 17. | தேவர் புகழ்வாழி | 60 |
| 18. | தேவரின் அரசியல் வாழ்வு | 63 |
| 19. | தேவரும் அரசியல் சிந்தனைகளும் | 67 |
| 20. | ஸ்ரீ தேவர் மஹா மந்திரம் | 70 |
| 21. | தேவரும் அரசியல் சாணக்கியமும் | 72 |
| 22. | இராஜாஜியின் குலக்கல்வித் திட்டமும் தேவரும் | 75 |
| 23. | குற்றப்பரம்பரைச் சட்டத்தை நீக்குவதில் தேவரின் பங்கு | 80 |
| 24. | தெய்வீகத் திருக்கோயில் தேவர் ! | 83 |
| 25. | தாழ்த்தப்பட்ட மக்களின் முன்னேற்றத்தில் தேவர் | 84 |
| 26. | தேவரும் சமூக சம நீதியும் | 89 |
| 27. | ஆற்றுவோம் தேவர் பணி | 91 |
| 28. | மத நல்லிணக்கத்தில் தேவர் | 94 |
| 29. | தேவரும் பர்மா பயணங்களும் | 97 |
| 30. | சுபாஷ் சந்திரபோஸ் பற்றிய தேவரின் கருத்துக்கள் | 100 |
| 31. | பசும்பொன் தேவரும் பார்வர்ட் பிளாக்கும் | 104 |

32. நாடாளுமன்றத்தில் தேவர் 112
33. பன்னாட்டு அரசியலும், பசும்பொன்னாரின் பார்வையும் 116
34. பசும்பொன் தேவரின் தேசீயச் சிந்தனைகள் 120
35. தேவரும் இராஜாஜியும் 124
36. வடலூர் வள்ளலாரும் பசும்பொன் தேவரும் 129
37. தேவரின் ஆன்மீகச் சிந்தனைகள் 134
38. சிந்தாந்தச் செம்மல் தேவர் 139
39. வீரமும் விவேகமும் கொண்ட தலைவர் ! 142
40. ''மனித இனத்திற்கு மாமேதை தேவரின் சிந்தனைகள்'' 144
41. பசும்பொன் தேவர் வாழ்வில் எனது பங்கு 150
42. விடுதலை போரில் தேவர்பிரான் 153
43. பசும்பொன் தேவரும் . . . நானும் 155
44. சரித்திர நாயகர் தேவர் 159
45. அமைதி தவழ்கின்ற மாமனிதர் 161
46. தெய்வப் பிறவி தேவர் 164
47. மக்கள் மனங்களில் வாழும் தேவர் 167
48. தேசீயத்தையும் தெய்வீகத்தையும் போற்றிய தேவர் 170
49. தேவருடன் நீங்காத நினைவுகள் 173
50. தெய்வீகத் திருமகன் பசும்பொன் தேவர் கண்டதும் – கேட்டதும் 176
51. சுதந்திர இந்தியாவில் தேவர் 183
52. Pasumpon Muthuramalinga Thevar, The South Indian Netaji 189
53. ஒடுக்கப்பட்ட மக்களின் காவலர் – பசும்பொன் தேவர் 192
54. சமரச சன்மார்க்க நெறி பரப்பியவர் – பசும்பொன் தேவர் 194
55. அருள் பெற்ற மாமனிதர் – தேவர் 195
56. பசும்பொன் தேவர் என்ற மகா நாமம் . . . ! 196
57. தேசீய லட்சியவாதி – தேவர் 197
58. அனைத்தும் நிறைவாகட்டும் 198
59. தேவர் மறைவின் போது மறையாப் புகழ் சூடிய பத்திரிக்கைகளின் தொகுப்பு 199
60. மறைந்தும் வாழும் மனிதக் கடவுள் பசும்பொன் தேவர் 204
61. பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் நூற்றாண்டு விழாக்குழு 207
62. பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் நூற்றாண்டு விழா மலர் வெளியீட்டுக்குழு 210
63. பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் நூற்றாண்டு விழா மலர் வெளியீட்டு பொறுப்புக்குழு 212

## பசும்பொன் முத்துராமலிங்கத் தேவரின் வாழ்க்கை வரலாற்றுச் சுவடுகள்

| | | |
|---|---|---|
| தந்தை | : | உக்கிரபாண்டியத் தேவர் |
| தாய் | : | இந்திராணி அம்மையார் |
| பிறந்த நாள் | : | 30.10.1908 |
| குடும்பம் | : | இராமநாதபுரம் சேதுபதி மன்னர் ஆளுகைக்குட்பட்ட ஜமீன் குடும்பம் |
| கல்வி | : | ஆறாம் படிவம் (இன்றைய பள்ளி இறுதித் தேர்வு) |
| இளமையில் பயின்றவை | : | சிலம்பம், மற்போர், குதிரையேற்றம், துப்பாக்கி சுடுதல், வர்மக்கலை |
| அரசியல் பிரவேசம் | : | 1927 சென்னையில் சீனிவாச ஐயங்காருடன் நேதாஜியை சந்தித்த பின். |
| முதல் மேடைப் பேச்சு | : | 23.06.1933 சாயல்குடி – விவேகாநந்தர் வாசகர் சாலை திறப்பு விழாவில். |
| சுதந்திரத்திற்கு முன்னர் சந்தித்த தேர்தல் களம் | : | 1937ல் சென்னை மாகாண சபை தேர்தலில் சேதுபதி மன்னரை எதிர்த்து. |
| சுதந்திரப் போராட்டம் மற்றும் சமூகப் போராட்டங்கள் | : | 1. குற்றம் பரம்பரைச் சட்டம் எதிர்ப்பு போராட்டம்<br>2. தொழிற் சங்க போராட்டங்கள்<br>3. ஜமீன்தாரி முறை ஒழிப்பு போராட்டம்<br>4. அரிஜன மக்களுக்கான ஆலய நுழைவுப் போராட்டம் |
| பணியாற்றிய அரசியல் கட்சிகள் | : | 1. 1939 வரை இந்திய தேசீய காங்கிரஸ்<br>2. 1939ற்குபின் பார்வர்டு பிளாக் |
| சுதந்திர இந்தியாவில் மக்கள் பிரதிநிதித்துவம் | : | 1. 1952 – முதுகுளத்தூர் சட்டமன்றத் தொகுதி உறுப்பினர்<br>2. 1957 – ஸ்ரீவில்லிபுத்தூர் பாராளுமன்றத் தொகுதி உறுப்பினர்<br>3. 1962 – அருப்புக்கோட்டை பாராளுமன்றத் தொகுதி உறுப்பினர். |
| ஆற்றிய பிற பணிகள் | : | 1949ல் ''நேதாஜி'' பத்திரிக்கையின் ஆசிரியர் |
| வாழ்ந்த நாட்கள் | : | 20, 075 |
| சிறையிலிருந்த நாட்கள் | : | 4,000 |
| மறைவு | : | 30.10.1963 |

# பசும்பொன் முத்துராமலிங்கத் தேவரின் பிறப்பும் அதன் சிறப்பும்

பேரா. முனைவர். **கே. செல்வராஜ்,**
தேவர் நினைவுக் கல்லூரி, கமுதி.

**வ**ரலாற்றில் நிலைத்து நிற்கும் வரலாற்று நாயகர்களின் வரலாறுகளில் அவர்களின் பிறப்பிடமும், பிறப்பின் சூழலும் முக்கிய பங்காற்றுகிறது. அதுபோல முத்துராமலிங்கத் தேவரின் பிறப்பிடமும் பல்வேறு வரலாற்று இடங்களைப் போல மக்களிடம் நிலைத்து நிற்கும் பெயராக மாறிய பசும்பொன் தான் தாங்கி நிற்கும் பெயரிலேயே அதனுடைய சிறப்பு தகுதியையும் பெருமையையும் எடுத்துரைக்கிறது. தமிழகத்தில் உள்ள வரலாற்று பெருமைமிகு மாவட்டங்களில் இராமநாதபுரம் மாவட்டமும் ஒன்றாகும். ராமபிரானால் ''சேது'' பாலத்திற்கு காவலர்களாக (பதிகளாக) நியமிக்கப்பட்ட சேதுபதிகளின் ஆட்சிப் பெருமைக்குட்பட்டிருந்த இராமநாதபுர மாவட்டத்தில் தான் இக்கிராமம் அமைந்துள்ளது. வங்களா விரிகுடாவில் இருந்து சுமார் முப்பது கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ள இக்கிராமம் 1799 – 1801 ஆண்டுகளில் நிகழ்ந்த தென்னிந்திய புரட்சியில் முக்கிய பங்காற்றிய பெருமையோடு நிமிர்ந்து நிற்கும் இன்றைய கமுதி தாலுகாவில், கமுதி நகரில் இருந்து சுமார் நான்கு கிலோ மீட்டர் தொலைவில் இச்சின்னஞ் சிறிய கிராமம் அமைந்துள்ளது.

ஐரோப்பிய கண்டத்தில் மிகச்சிறிய குட்டித்தீவான ''கார்சிகா'' வைப் பார்த்த ரூசோ என்ற பேரறிஞன், நெப்போலியன் என்ற மாவீரனின் எழுச்சிக்கு முன்பே இச்சின்னஞ்சிறிய தீவு ஒரு நாள் உலகை ஆளப்போகிறது என்றான். அது போல நெப்போலியன் என்ற மாவீரன் அந்தச் சிறிய தீவில் பிறந்து, உலகையே ஆட்சி செய்தான். அது போல இந்த சின்னஞ்சிறிய கிராமமான பசும்பொன்னிற்கும் சில வரலாற்றுப் பின்னணிகளும் சிறப்புகளும் உள்ளன.

தவசிக்குறிச்சியில் தவசிகள் பலர் இருந்து தர்மகாரியங்கள் நடைபெற்றதால் தவசிக்குறிச்சி எனப் பெயர் ஏற்பட்டது. தவசிக்குறிச்சிக்கு பழம்பூதி என்றும் பசும்பொன் என்ற பெயரும் இருந்துள்ளது. தலையாலம்கானத்து செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் பற்றி புலவர்கள் எழுதும் பொழுது ''பசும்பூன் பாண்டியன் என்றும், வில்கெழுதானைப் பகும்பூன் பாண்டியன் என்று பரணர் அகநானூறு 162வது பாடலிலும்'' விசும்பு இவர் வெண்குடைப் பசும்பூன் பாண்டியன் என்று ஈழத்து பூதன் தேவனார் அகநானூற்றில் 231வது பாடலிலும், நாடு பல தந்த பசும்பூன் பாண்டியன் என்று நக்கீரர் அகநானூறில் 253வது பாடலிலும், பலர் புகழ் திருவிற் பசும்பூன் பாண்டியன் என்று மதுரை கணக்காயனார் அகநானூற்றில் 338ம் பாடலிலும் பாடியிருப்பதன் அடிப்படையில் மதுரையை ஆண்ட சங்க கால பாண்டியன் நெடுஞ்செழியன் இந்த மண்ணில் பிறந்தவன் என்று செய்தியுமுள்ளது.

தமிழக வரலாறும் பஞ்சமும் இரண்டற கலந்த ஒன்றாகவே உள்ளது. தமிழகத்தில் வறட்சி என்றால் அதில் மிகவும் மோசமாக பாதிப்பிற்குள்ளாகும் மாவட்டமாக இராமநாத புரம் மாவட்டமே இருந்து வந்துள்ளது. எனவே வறட்சி இராமநாதபுர மாவட்டத்திற்கு புதிய செய்தியல்ல. நாட்டில் ஏற்பட்ட வறட்சி நிலையை ஆய்வு செய்வதற்காக அரசர் உடையான் சேதுபதி (1605 – 1621). சேது நாட்டை வலம் வந்தார். அப்பொழுது மற்ற பகுதிகளெல்லாம் வறட்சியின் கோரப்பிடியில் சிக்கி சீரழிந்து கொண்டிருந்தது. ஆனால் தவசிக்குறிச்சி கிராமம் மட்டும் பசுமை மாறாமல் இருந்ததை கண்டார். இதனால் அதிசயமும் ஆச்சரியமும் அடைந்த உடையான் சேதுபதி இந்த மண்

இவ்வளவு வறட்சியிலும் ''பசும்பொன்னாக'' விளக்குகிறதே எனக்கூறி மகிழ்ந்தார். இச்சிறிய தவசிக்குறிச்சி கிராமம் பசும்பொன்னாக பெயர் மாற்றம் பெற்றது. இன்றும் இந்தப்பூமியில் அதே போன்ற உன்னத நிலையே நீடிக்கிறது என்பதும் உண்மை தான். இந்த சீர்மிகு சிறப்புமிகு கிராமத்தில் தான் முத்துராமலிங்கத்தேவர் என்ற மாமனிதரின் பிறப்பு நிகழ்ந்தது. முத்துராமலிங்கத் தேவரும் சிறப்புப் பெற்றார். பசும்பொன்னும் சிறப்பு பெற்றது. பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவதரித்தார்.

தேவர் அவர்களின் குடும்ப பின்னணியும், பிறப்பின் அம்சங்களும் தேவரை மிகச்சிறந்த தேசீயவாதியாகவும், தெய்வீகவாதியாகவும், மாற்றுவதற்கு வாய்ப்பாக அமைந்தது. இராமநாதபுரம் பகுதி மறவர் நாடு என்றே வரலாற்றில் அழைக்கப்படுகிறது. மறவர் இனத்தில் இருக்கும் பிரிவுகளில் ஒன்றான கொண்டயம் கோட்டை மறவர் பிரிவை சேர்ந்தவர் தேவர். சங்க இலக்கியங்களில் புறநானூறு இலக்கியத்தில் 43 மற்றும் 63வது பாடல்கள் மறவர்கள் போர் வீரர்களாகவும், போர்ப்படைத் தளபதிகளாவும் பணியாற்றிய செய்தியினை தருகிறது. தென்னிந்திய இனங்களை ஆய்வு செய்த எட்கர் தர்ஸ்டன் என்ற ஐரோப்பிய அறிஞன் தேவர் பிறந்த குலமான மறவர்களைப் பற்றி குறிப்பிடும் பொழுது ''போர்களங்களில் மிகவும் வீரத்துடன் பங்காற்றக்கூடிய இனம்'' என குறிப்பிட்டுள்ளார்.

தன்னுடைய இறுதிக்காலம் வரை எந்நிலையிலும் வளைந்து கொடுக்காத போர்க்குணம் தேவர் அவர்களிடம் நிறைந்து இருந்ததற்கு அவர் பிறந்த இனத்தின் தன்மையும் ஒரு காரணம் எனக் கூறினால் அது மிகையாகாது. மறவர் இனத்தை ஆய்வு செய்த டாக்டர். கதிர்வேல் அவர்கள் குறிப்பிட்டது போல இராமபிரானின் காவலர்களாக விளங்கிய சேதுபதிகள் மறவர் இனத்தை சேர்ந்தவர்களாக இருந்ததோடு இந்து சமயத்தின் காவலர்களாகவும் விளங்கியுள்ளனர். இந்திய சமய வரலாற்றில் சுவாமி விவேகானந் தருக்குரிய பெருமை அனைவரும் அறிந்தது தான். அனைத்து சமய மாநாட்டில் கலந்து கொள்ள தங்களுக்கு வந்த வாய்ப்பை விவேகாநந்தருக்கு வழங்கி அனுப்பியவர்கள் சேதுபதிகள் தான், மீண்டும் விவேகாநந்தர் இந்திய மண்ணை தொட்ட பொழுது தன் சிரசில் கால் வைக்க செய்து வரவேற்றவர்களும் சேதுபதிகள் தான். இந்த மரபு வழியில் வந்த தேவர் அவர்கள் மனதில் ஆன்மீகம் ஆழமாக பதிந்து போக இந்த வரலாற்று நிகழ்வுகளெல்லாம் பின்னணிகளாக இருந்தன.

பெருந்தன்மையும், தாராளகுணமும் மற்றவர்களுக்கு கொடுத்து இன்புறும் குணமும் தேவர் அவர்களுக்கு அவர் குடும்பம் கொடுத்தப் பின்னணியாகும். தேவரின் முப்பாட்டரான ஆதி முத்துராமலிங்கத் தேவர் சேதுபதி அரசவையில் ஆலோசகராக பணியாற்றினார். சேதுபதிகள் பாதுகாப்பிற்காக கமுதிப் பகுதியில் அரசப்ப கோட்டையை கட்டிய பொழுது அக்கோட்டையின் காவலர்களாக ஆதிமுத்துராமலிங்கத் தேவர் குடும்பத்தினர் நியமிக்கப்பட்டதோடு அப்பணிக்காக முப்பத்திரண்டரை கிராமங்கள் அவர்களுக்கு பணிக்கொடையாக வழங்கப்பட்டது.

முத்துராமலிங்கத் தேவர் முன்னோடிகளில் ஆதி சிறை மீட்டாத் தேவர் கருப்பாயி என்ற பூரணியம்மாளை திருமணம் செய்தார். இவர்களுக்கு நான்கு மகன்களில் ஒருவர் தான் ஆதி முத்துராமலிங்க தேவர். ஆதி முத்துராமலிங்கத் தேவரின் புத்திக் கூர்மையால் சேதுபதி மன்னர்களின் அந்தரங்க ஆலோசகராக நியமிக்கப்பட்டார். ஆதி முத்துராமலிங்கத் தேவர் அருளாயி அம்மாளை திருமணம் செய்தார். இந்தத் தம்பதியினருக்கு இரண்டு மகள்களும் ஒரு மகனும் இருந்தனர். அந்த ஆண் மகன் தான் வெள்ளைச்சாமி தேவர் என்று அழைக்கப்பட்டவர். இவர் பொன்னம்மாள் என்ற பெண்ணை திருமணம் செய்தார். இந்த தம்பதியினருக்கு ஒரு மகனும்,

ஒரு மகளும் இருந்தனர். அந்த மகன் தான் தேவரின் தந்தையான உக்கிரபாண்டியத் தேவர் ஆவார். மகள் பெயர் மீனாள்.

உக்கிரபாண்டிய தேவர் 31.08.1906 அன்று ஒரே திருமண மேடையில் சொந்தங்களுக்குள் பிரச்சனையை தவிர்க்கும் பொருட்டு காசிலட்சுமி அம்மாளையும், இந்துராணி அம்மாளையும் திருமணம் செய்தார். இதில் மிகச் சிறந்த பக்தையான இந்துராணி அம்மாளுக்கு வாழ்நாள் முழுவதும் முருக பக்தராக விளங்கிய தேவரவர்கள் முருகக் கடவுளுக்கு சிறப்புறு நாளாக நிகழக்கூடிய கந்த ஷஷ்டி திருநாளன்று கீழக வருடம் ஐப்பசி மாதம் வெள்ளிக்கிழமை 30.10.1908 அன்று மகனாக பிறந்தார். தன் தாயின் வயிற்றிலேயே ஊட்டப்பட்ட ஒழுக்கமும், பக்தியும் தேவரின் இறுதி நாட்கள் வரை நீடித்தது.

தேவர் ஆறுமாத குழந்தையாக இருந்த பொழுது 29.04.1909ல் தன் தாயை இழந்தார். இந்த இழப்பு அவர் வாழ்வில் தாயன்பிற்கு ஏங்குபவராக மாற்றியது. பின்னாளில் அவர் பேசிய பொது மேடைகள் எல்லாவற்றிலும் பெண்களை கடவுளின் பிரதிநிதியாக பார்க்க வைத்தது, பேச வைத்தது, உணர வைத்தது. தனது சித்தியையும் சில காலங்களிலேயே இழந்த தேவர் தன் தாய் வழி பாட்டி ராணி அம்மாளின் அரவணைப்பில் பசும்பொன்னிற்கு அருகில் உள்ள கல்லுப்பட்டி என்ற கிராமத்தில் வளரத்துவங்கினார்.

சிறுவயதில் குடும்ப வாழ்வில் சமூக வாழ்வில் ஏற்படும் காயங்களை, வடுக்களை படிக்கல்லாக மாற்றிக் கொண்டவர்கள்தான் இந்த சமூகத்தின் நாயகர்களாக மாறி புதிய வரலாற்றைப் படைத்துள்ளனர். நபிகள் நாயகம் வயிற்றில் இருக்கும் பொழுதே தன் தந்தையை இழந்தவர். பின்பு தன் தாயையும் இழந்து அவர்களுக்கு ஏற்பட்ட சோதனைகள், வேதனைகளை வென்றெடுத்ததால்தான் ''இஸ்லாம்'' சமயம் என்ற மிகப் பெரிய சாம்ராஜ்யத்தை உருவாக்க முடிந்தது. அவர்களுக்கு ஏற்பட்ட போராட்டங்களைப் போலவே பால்குணம் மாறாமல் இருந்த பொழுதே தாயை இழந்த தேவர் அவர்கள் ''இஸ்லாமியத் தாயால்'' பாலூட்டப்பட்டார். தந்தை இருந்தும் அரவணைப்பின்றி தன் தாய் வழிப்பாட்டியால் வளர்க்கப்பட்டார். தாயின்றி, தந்தையின் அரவணைப்பின்றி தேவர் அவர்களின் இளமைக்கால வாழ்க்கை துவங்கினாலும் அந்த வயதிலேயே கற்க வேண்டிய சிலம்பம், நீச்சல், குதிரையேற்றம், கத்திச்சண்டை, மல்யுத்தம் அத்தனையும் கற்று தேர்ந்தார். இது யாருக்கும் அஞ்சா மனநிலையையும், திடமான உடல் வாகுவையும் தேவருக்கு கொடுத்தது. நேதாஜி போன்றவர்களை தலைவர்களாக ஏற்று நடக்கவும், இந்திய தேசீய இராணுவம் போன்றவற்றிற்கு ஆதரவு அளிக்கவும் துவக்க கால பயிற்சிகள் பயனுள்ளவைகளாக இருந்தன.

தேவரின் குடும்பத்தில் கணக்குப் பிள்ளையாக இருந்த குழந்தைச்சாமி பிள்ளை தேவருடைய துவக்ககால வளர்ச்சியில் மிகவும் அக்கறை கொண்டவராக விளங்கியுள்ளார்.

1914ஆம் ஆண்டு விஜயதசமி நாளன்று தேவரின் கல்வி வாழ்வு துவங்கியது. அவர் வளர்ந்த கல்லுப்பட்டி கிராமத்தில் அன்றைய நிலையில் பள்ளி வசதியில்லாததால் அருகில் இருந்த வல்லந்தை கிராமத்தில் உள்ள பள்ளிக்கு தன்னுடைய தமையனார் வெள்ளைப் பாண்டியனுடன் சென்று வந்தார். மூன்றாம் வகுப்பு வரை இப்பள்ளியில் படித்த தேவர், கமுதியில் உள்ள அமெரிக்கன் மிஷன் பள்ளியில் ஆரம்பக் கல்வியை தொடர்ந்தார். இதனால் இளம் வயதிலேயே மற்ற மதங்களில் உள்ள செய்திகளை அறிந்து கொள்வதற்கும் தெரிந்து கொள்வதற்குமான வாய்ப்புக்கள் அமைந்தன. இதற்குப் பின்பு தன்னுடைய உயர்நிலைப் பள்ளிக் கல்வியை பசுமலையில் உள்ள அமெரிக்கன் மிஷன் பள்ளியில் தொடர்ந்தார்.

பள்ளியிறுதியாண்டு கல்வியை 1924ல் யூனியன் கிறிஸ்தவ மிஷன் பள்ளியில் தொடர்ந்தார். இப்படி தொடர்ச்சியான கிறிஸ்தவ சமய பள்ளிகளின் கல்விச்சூழல்

கிறிஸ்தவ சமயத்தைப் பற்றிய செய்திகளை முழுமையாக அறிந்து கொள்ளவும், தெரிந்து கொள்ளவும், தெளிவாகக் கொள்ளவும் வாய்ப்பாக அமைந்தது. அதே நேரத்தில் கிறிஸ்தவ சமயத்தின் போதகர்களின் கருத்துக்களில் வேறுபட்ட பொழுது அவர்களை நேருக்கு நேராக கருத்து முரண்பாடுகளை தெரிவிக்கும் ஆன்மிக பலமும் தேவருக்கு உருவாக இந்தச்சூழல்கள் வாய்ப்புகளை ஏற்படுத்திக் கொடுத்தன.

குழந்தைச்சாமி பிள்ளையின் ஆலோசனையின் பெயரில் தேவர் மதுரையை விட்டு இராமநாதபுரத்தில் இருந்த சேதுபதிகளுக்கு சொந்தமான பள்ளிக்கு மாற்றப்பட்டார். அப்பொழுது காலரா நோய் இராமநாதபுரத்தில் பரவிக் கொண்டிருந்ததால் தேவரின் மீது அபரிதமான அன்பு வைத்திருந்த பாட்டி ராணி அம்மாள் தேவரை பொதுத் தேர்வைக் கூட எழுதவிடாமல் வீட்டிற்கு அழைத்து வந்து விட்டார். தேவருடைய கல்விக் கூட கல்வி இடையிலேயே முறிவுற்றது என்றாலும் கூட உலகியல் கல்வியில் உன்னத நிலையைத் தொட்டார் தேவர். பின்னாட்களில் அவர் பேசாத, எழுதாத, சிந்திக்காத துறைகளே இல்லையென்றே சொல்லலாம்.

ஆன்மிக சொற்பொழிவுகளின் போது சமஸ்கிருதம் பேசியிருக்கிறார். காசி பல்கலைக்கழகத்தில் அங்குள்ள துணை வேந்தரே அசந்து போகுமளவிற்கு ஆங்கிலத்தில் பேசியிருக்கிறார். சௌராஷ்ரா பள்ளியில் திருக்குறளைப் பற்றிய இலக்கியம் பேசியிருக்கிறார். சட்டசபையிலும், பாராளுமன்றத்திலும் உள்நாட்டு அரசியல் மட்டுமல்லாது பன்னாட்டு அரசியலும் பேசியிருக்கிறார். வெறும் ஏட்டுக்கல்வியை விட அனுபவக்கல்வி பெரிதென தேவருடைய வாழ்நாளில் ஒவ்வொரு மேடைகளிலும் அவரே நிரூபணம் செய்திருக்கிறார். வாழ்வின் துவக்கால போராட்டங்கள் பிற்கால வாழ்வினை செம்மைப்படுத்துகிறது என்பதற்கு தேவரின் வாழ்வும் எடுத்துக்காட்டாகும். தேவரின் தாய் இந்துராணி அம்மாளின் இறப்பும் அதன் சிறிது காலத்திலேயே காசிலட்சுமி அம்மாளின் மறைவும் தேவரின் தந்தையான உக்கிரப்பாண்டியத் தேவரின் வாழ்வை திசை தெரியா படகாக மாற்றியது.

இரண்டு துணைவியார்களின் இறப்பு தேவரின் தந்தை உக்கிரபாண்டியத் தேவரின் வாழ்வின் வழியை தடுமாறச் செய்தது. மனம் போன போக்கில் வாழ்வை தொடர்ந்த பொழுது அது சொந்த வாழ்வின் அழிவாகவும், சொத்துக்களின் அழிவாகவும் மாறியது. சொத்துக்களின் அழிவை தடுக்கும் முயற்சியில் அவரிடம் கணக்குப் பிள்ளையாக இருந்த குழந்தைச்சாமிபிள்ளை எடுத்த முயற்சியில் தந்தையையும், மகனையும் நீதி மன்றங்களின் படிக்கற்களை மிதிக்க வைத்தது. குழந்தைப் பருவத்தில் தாயை இழந்த தேவரை இளம் வயதில் தந்தையின் பாசத்தையும் இழக்கச் செய்தது. தனி மனித போராட்டமாக வாழ்க்கை மாறியது பொழுது வாழ்நாள் முழுவதும் போராட்டங்களையும் பிரச்சனைகளையும், சந்திக்க கூடிய மன தைரியத்தை அந்த அனுபவ வாழ்வு தேவருக்கு வழங்கியது.

காலம் உக்கிரபாண்டியத்தேவரை கட்டுப்பட மறுத்தவராக மாற்றிய பொழுது தன் மகன் தேவரையே எதிர்க்க வேண்டிய கட்டாயச் சூழல் தேவரின் இளம் மனதில் ஆறாத காயங்களை ஏற்படுத்தி விடுகிறது. அந்தவடுக்கள் தேவரை அவருடைய வாழ்வில் ஒரு பெண் துணையை தேடவோ திருமண வாழ்வில் தன்னை ஐக்கியப்படுத்திக் கொள்ளவோ எண்ணம் இல்லாமல் செய்து அப்பழுக்கற்ற பிரம்மச்சரியத்தை தன் வாழ்நாள் முழுவதும் கடைப்பிடிக்கச் செய்தது. ஆடம்பரத்தின் சின்னமாக தந்தை உக்கிரபாண்டியத்தேவர் விளங்கியதால் தன் வாழ்நாளில் ஆடம்பரத்தையே வெறுத்து மிக எளிமையான மனிதராக மாறினார். தன் வாழ்நாள் முழுவதும் எளிமையாகவே வாழ்ந்தார்.

துரைசிங்கத்தேவர், தங்கவேலு தேவர் என்ற தேவரின் உறவினர்கள் தேவருக்கு

ஆதரவாக தந்தை உக்கிரபாண்டியத் தேவரிடம் இருந்து சொத்துக்களை பாதுகாக்க தேவருக்கு ஆதரவாக இருந்தனர். ஒரு சந்தர்ப்பத்தில் நரிக்குடிக்கு அருகிலுள்ள புளிச்சகுளம் வீட்டில் இருந்து விலை உயர்ந்த பொருள்களையும், சொத்துப் பத்திரங்களையும் எடுத்துக் கொண்டு தன்னுடைய ஆடம்பரங்களுக்காக உக்கிரபாண்டியத் தேவர் மதுரையை நோக்கிச் சென்ற பொழுது நல்லூர் என்ற இடத்தில் தேவருடைய ஆதரவாளர்கள் மறித்து தகராறில் ஈடுபட்டு சொத்துக்களை மீட்டனர். இந்த சம்பவம் தந்தைக்கும் மகனுக்குமிடையே வாழ்நாள் முழுவதும் தீராத பகைமை வளர்வதற்கு காரணமாக அமைந்தது.

தேவரைப்பற்றி நிலவும் சில செய்திகளும் அவருடைய எதிர்கால நடவடிக்கைகளை தீர்மானிப்பவைகளாக இருந்தன. இந்துராணி அம்மையார் கருவுற்றிருந்த பொழுது முத்துவயல் முத்துராமலிங்க சுவாமிகள் தெய்வீகப் புதல்வன் பிறப்பான் என அருளிச் சென்றுள்ளார்கள். கவிஞர் கண்ணதாசன் சொல்லியது போல் அவர் வாழ்க்கையில் சிறந்த அப்பழுக்கற்ற பிரம்மச்சரியத்தை கடைபிடித்தவர் தேவர். ரிஷிகள் பெரும்பாலான செய்திகளை தங்கள் உள்ளுணர்வு மூலமாகவே உணர்கிறார்கள். அது போல தேவருக்கு பதினொரு வயதிருக்கும் பொழுது மதுரை உணவகத்தில் உணவருந்தி கொண்ருந்தார். அப்பொழுது அங்கிருந்த விவேகானந்தர் படம் தன்னை விடாமல் உற்று நோக்குவது போல் உணர்கிறார். அந்த உள்ளுணர்வு அவரை பிரமச்சரியம் பக்கமும் ஆன்மீகத்தின் பக்கமும் ஈர்த்துச் சென்றது.

கரிசல்காட்டுப் பூமியான பசும்பொன் பகுதியில் பறவையினங்களான மயில்களும் அதிகமாக வாழ்கின்றன. முருகனின் வாகனமாகப் போற்றப்படும் மயில்களில் அவர் முருகனைப் பார்த்தார். வீட்டில் போற்றி வளர்க்க ஆரம்பித்தார். பதினைந்து வயதாக இருந்த பொழுது தன் பாட்டியுடன் மீனாட்சியம்மன் கோவிலில் உள்ள தண்டாயுதபாணி சிலையை வணங்கிய பொழுது தண்டாயுதபாணிக்குள் தான் ஐக்கியமாவதைப் போல் உணர்ந்தார். தேவர் இந்த உணர்வு வெப்பம் தாங்காமல் தன் பாட்டியை அழைத்துக் கொண்டு கோவிலை விட்டு வெளியே வந்தார். இந்த உள்ளுணர்வு அனுபவங்கள் பின்னாற்களில் பிரம்மச்சரியம் மிக்கவராகவும், முருக பக்தராகவும் செல்லும் பழக்கம் வாழ்நாள் முழுவதும் தொடர்ந்தது. மேலும் அரசியலில், ஆன்மீகமும் இணைய வேண்டும் என்ற அரசியல் தத்துவார்த்தம் அமைவதற்கும் இதுவே காரணமாக அமைந்தது.

இவருடைய சமய தத்துவார்த்த ஈடுபாட்டிற்காக ரிஷிகேஷ் ஸ்ரீ சிவாநந்த சரஸ்வதி சுவாமிகள் ''வித்தியார்த்த பாஸ்கர கேசரி'' என்ற பட்டத்தை பின்னாளில் அளிப்பதற்கு தேவருடைய துவக்க கால உள்ளுணர்வு தூண்டுதல்கள் காரணமாக இருந்துள்ளன. இந்து சமயத்தில் மட்டுமல்லாது தேவர் பன்முக சமய அறிவு கொண்டவராகவும் விளங்கினார் என்பதற்கு சாட்சியாக பின்னாளில் அவர் பர்மாவில் ஆற்றிய புத்தமத ஆன்மீகச் சொற்பொழிவும் எடுத்துக்காட்டாக விளங்கியது.

எனவே, தேவர் பெருமகனாரின் பிறப்பும், பிறப்பின் பின்னணியும், இளமைக்கால அனுபவங்களும் எதிர்கால வாழ்வை, திட்டங்களை தீர்மானிப்பவைகளாக அமைந்தன என்றால் அது மிகையாகாது.



**வீரமற்ற விவேகம் கோழைத்தனம்.**
**விவேகமற்ற வீரம் முரட்டுத்தனம்.**

# சுதந்திரப் போராட்டத்தில் தேவர்

பேராசிரியர் டாக்டர் **மு.செ. பழனிச்சாமி,**
துணை வேந்தர்,
தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைகழகம்,
சென்னை – 25.

''தேசீயம் எனது உயிர்
தெய்வீகம் எனது உடல்''

என்று அடிக்கடி முழக்கமிடுவார் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர். தேவரின் ஆளுமை என்பது ஆன்மீகத்திலும், தேசிய அரசியலிலும் ஆழப்பதிந்தது. தேவரின் சிந்தனையும் செயலும் உயர்ந்த லட்சியத்திற்காகவும் மக்களின் பண்பாட்டு வளர்ச்சிக்கானதுமாகும். சமூக விடுதலையின் மூலமே தேசீய விடுதலையைத் தேடிக்கொள்ள முடியும் என்ற லட்சியம் கொண்டவர். ஆன்மீகத்தைச் சரியான தளத்தில் புரிந்து கொண்டு தன் ஆற்றலையும் அளப்பரிய சக்தியையும் பயன்படுத்தியவர்.

தேவர் ஒரு சகாப்தம். ஆன்மீக நெறியின் மூலம் மனித ஆற்றலை வளப்படுத்தி அதன் மூலம் தேச விடுதலையைக்காணத் துடித்தவர். உலகப் பார்வையும், தேசியக் கண்ணோட்டமும் உள்ளூர் சமூகச் சிந்தனையும் கொண்டவர். அடித்தட்டு மக்களைச் சாதி வேறுபாடின்றி ஒருங்கிணைத்துப் போராடியவர். தொழிற்சங்கத் தொழிலாளர்களின் நலனுக்காக, அவர்களை ஒருங்கிணைத்து ஆக்கப்பூர்வமான மகாசக்தியை உருவாக்கியவர். தொழிலாளர்கள், விவசாயிகள், ஏழை எளிய கிராமத்து மக்கள், தாழ்த்தப்பட்டோர் என்று அடித்தட்டு மக்களிடம் சுதந்திர தாகத்தை ஏற்படுத்தி அவர்களை விடுதலைப் போரில் பங்கேற்கச் செய்த பெருமை இந்தியாவிலேயே பசும்பொன் தேவரையே சாரும் என்று வரலாற்றறிஞர் கூறுவர்.

**தமிழகத்திற்குக் கிடைத்த தவப்புதல்வர்**

வரலாற்றுச் சிறப்பும் பல தனிச் சிறப்புகளையும் கொண்ட பசும்பொன் கிராமத்தில் 1908 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 30ஆம் நாள் உ. முத்துராமலிங்கத் தேவர் இந்த மண்ணில் அவதரித்தார். இயல்பாக அமைந்துவிட்ட ஓர் ஒற்றுமையை நாம் நினைத்துப் பார்க்க வேண்டும். தேவர் சிறந்த முருக பக்தர், ''முருகக் கடவுள் சூரபத்மனை வதம் செய்து சூரசம்ஹாரம் நடத்தி தேவர்களை மீட்ட தினமாகிய கந்த சஷ்டி நாளன்று தான் தேவர் பிறந்தார். அதாவது இந்த பூமியில் அவதரித்தார். இந்த ஒற்றுமையை ஆன்மீகவாதிகள் போற்றுகின்றனர். அவருடைய பிறப்பே தெய்வாம்சம் பொருந்தியது என்று நம்புகின்றனர். அவருடைய எண்ணங்களும் செயலும் அது போலவே அமைந்திருந்ததால் நாமும் அதை நம்புகிறோம் ; ஆனால் மதம் கடந்து அவர் ஆற்றிய பணிகள் அவரை தேசத் தலைவராக உயர்த்திக் காட்டுகிறது. இந்த வரலாற்று உண்மையை நாம் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும்.''

**இந்திய தேச விடுதலைப் போரில் தேவர்**

1927 ஆம் ஆண்டு, அதாவது தனது 19வது வயதில் தமிழகத்தின் வீர நிலமான இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள ''பசும்பொன்'' கிராமத்தில் இருந்து சென்னைக்குச் செல்கிறார் தேவர். அங்கு காங்கிரஸ் முன்னணித் தலைவரான எஸ். சீனிவாச ஐயங்காரைச் சந்திக்கிறார். ஆங்கிலேயருக்கு எதிரான தனது கோபத்தையும் விடுதலைக்கான வேட்கையையும் வெளிப்படுத்துகிறார். தேவரின் தெளிவான சிந்தனையையும், ஆங்கிலப் புலமையையும் கண்டு சீனிவாச ஐயங்கார் வியந்து போகிறார். தேவரின் மனதில் கனலென்று எரியும் விடுதலை வேள்வியை அணைந்து விடாமல்

காத்துக்கொள்ள வேண்டும் என்று சீனிவாச ஐயங்கார் எண்ணுகிறார். அவரது விவாதமும் உரையாடலும் தொடர்கிறது. தேவர் காங்கிரஸ் பேரியக்கத்தில் தன்னை இணைத்துக் கொள்கிறார்.

உயிரைப் பணயம் வைத்துச் சுதந்திரப் போராட்ட வேள்வியில் இறங்குகிறார். அன்று மூண்ட கனல் இந்தியா விடுதலை அடையும் வரை அவர் மனதில் அணையாது இருந்து வந்தது. 1927 இல் சென்னையில் காங்கிரஸ் மாநாடு நடைபெற்றது. டாக்டர் அன்சாரி தலைமை தாங்கினார். பசும்பொன் தேவர் சிறப்புப் பிரதிநிதியாக அந்த மாநாட்டில் கலந்து கொள்கிறார். ''எங்கள் லட்சியம் பரிபூரண சுயராஜ்ஜியமே'' என்ற தீர்மானம் இங்கே தான் நிறைவேற்றப்பட்டது. இந்த மாநாட்டில் தான் ஆங்கிலேயரின் சிம்ம சொப்பனமாகத் திகழும் நேதாஜியைச் சந்திக்கிறார். இருவருக்குமான பல்வேறு ஒற்றுமையின் காரணமாக ஈர்க்கப்படுகின்றனர். பசும்பொன் தேவர் சீனிவாச ஐயங்காரை வழிகாட்டியாகவும் நேதாஜியைத் தலைவராகவும் நெஞ்சார ஏற்றுக் கொண்டு விடுதலைப் போராட்ட களத்தில் இறங்குகிறார்.

**விடுதலைக் களத்தில் தேவரின் வீர முழக்கம்**

காங்கிரஸ் மாநாடு முடிந்ததும் தென் தமிழகம் முழுவதும் சுற்றுப் பயணம் செய்து ஆங்கிலேயர்களுக்கு எதிராக ஒரு மாபெரும் மக்கள் சக்தியை திரட்டத் தொடங்கினார். பட்டி, தொட்டிகளிலெல்லம் ''சுதந்திரம் நம் பிறப்புரிமை'' என்று வீர முழக்கமிட்டார். தேவரின் பேச்சில் மண்ணின் மணம் இருந்தது. மக்களின் நலன் தெரிந்தது, அறிவின் ஒளி மிளிர்ந்தது, வீரத்தின் வீச்சு தெரிந்தது, உண்மையின் ஒளி ததும்பியது. இந்தத் தனித்தன்மை கொண்ட பேச்சாற்றலால் மக்கள் கவரப் பட்டனர். அவரது பேச்சாற்றலால் கதர் ஆடைக்கு மாறியோர் எண்ணற்றோர். அவரின் பின்னால் ஓர் மாபெரும் சக்தி உருவாகத் தொடங்குகிறது. இது ஆங்கிலேயருக்கு நடுக்கத்தையும், அச்சத்தையும் கொடுத்தது ; தேவர் ஆங்கிலேயருக்குச் சிம்ம சொப்பணமாகத் திகழ்ந்தார்.

**விடுதலை நோக்கில் ரேகைச் சட்டம் (சி.டி.ஆக்ட்)**

குற்றப்பரம்பரைச் சட்டம் – என்பது கொடுமையான ஓர் சட்டம். ஒரு குறிப்பிட்ட இன மக்களின் வாழ்வுரிமையை அவர்களின் சுதந்திரத்தை இழக்கக் கொண்டு வரப்பட்ட சட்டமாகும். ''குற்றப் பரம்பரை'' சட்டத்திற்கு இலக்கானவர்கள் பொழுது சாய்ந்ததும் சரக போலீஸ் ஸ்டேசனுக்குப் போய் ரேகை வைத்து விட்டு இரவு முழுவதும் போலீஸ் ஸ்டேசனிலேயே போலீஸ் பார்வையில் தங்க வேண்டும். இதை மீறினால் சிறைச்சாலை போக வேண்டும். இந்த அநியாயச் சட்டத்தை எதிர்த்து போராட வேண்டிய அவசியம் தேவருக்கு ஏற்பட்டது. எனவே ரேகைச் சட்டத்தை எதிர்த்து ஊர் ஊராகச் சென்று போராடினார். ''கட்டை விரலை வெட்டிக் கொள் அல்லது சிறைக்குப் போ. ரேகை வைக்காதே'' என்று முழங்கினார்.

**அகில இந்திய ரேகைச் சட்ட எதிர்ப்பு மாநாடு**

ரேகைச் சட்டத்தை எதிர்த்து முன்பு (பிரிக்கப்படாத மதுரை மாவட்டம்) பிரமலை நாட்டில் பல்வேறு முக்கிய ஊர்களில் தேவர் வீராவேசமாகப் பேசினார். விளைவு பிரமலை நாட்டு மக்கள் ரேகைச் சட்டத்தை எதிர்த்து ஒரு பெரும் புரட்சிக்குத் தயாரானார்கள். ரேகைச் சட்ட எதிர்ப்பை அகில இந்திய பிரச்சனையாக முன் நிறுத்திய தேவர் திரிபூராவில் அகில இந்திய காங்கிரஸ் மாநாடு கூடிய நேரத்தில் எம்.எல். ஆனே தலைமையில் அகில இந்திய ''சி.டி.ஆக்ட்'' எதிர்ப்பு மாநாட்டிற்கும் ஏற்பாடு செய்தார்.

**வாய்ப்பூட்டுச் சட்டம்**

பர்மாவில் இருந்து தேவர் திரும்பியதும் தென்பாண்டி மண்டலத்தில் மதுரை, இராமநாதபுரம், நெல்லை மாவட்டங்களில் சூறாவளிச் சுற்றுப் பயணம் செய்தார். பிரிட்டீஷ்

ஏகாதிபத்தியத்திற்கு எதிராக மக்களைத் திரட்டினார். தேவருடைய ஒவ்வொரு கூட்டம் முடிந்ததும் நூற்றுக்கணக்கான பக்தர்கள் உருவாகிக் கொண்டிருந்தனர். அவர்கள் எந்த விதத் தியாகத்தையும் தேசத்திற்குச் செய்யத் தயாரானார்கள். தேவருடைய தீரமிக்க சொற்பொழிவுகள் உணர்ச்சிப் பிழம்பாக மாறி ஒவ்வொருவர் உடம்பிலும் புதிய இரத்தமே உற்பத்தியாகி ஓடுவது போல இருந்தது.

அது கண்ட ஆங்கிலேய அரசு, தேவருடைய சொற்பொழிவுகள் நமது அரசுக்கு விரோதமாக மக்களைத் தயாரிக்கின்றபடியால், அவரது அரசியல் பேச்சை எப்படியும் தடுத்தே ஆக வேண்டும் என்ற முடிவு செய்தது. அந்த முடிவின் அடிப்படையில், அரசியலைப் பற்றி தேவர் பேசக்கூடாது. மீறிப் பேசினால் பேசிய இடத்திலேயே தேவரைக் கைது செய்து சிறையில் அடைக்கப்படுவார் என்று ஒரு சட்டத்தை (வாய்ப்பூட்டுச் சட்டம்) போட்டது ஆங்கில அரசு.

**மகாத்மா காந்தி – சுபாஷ் பாபு கருத்து வேறுபாடு**

1939 செப்டம்பர் 10ம் தேதி அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி வார்தாவில் கூடியது. 1936 முதல் காங்கிரஸ் கட்சிக்குள்ளே இயக்கி வந்த சோசலிஸ்டுகள் 1939 முதல் சோசலிஸ்ட் கட்சி என்ற பெயரில் தனியாக இயங்க ஆரம்பித்தனர். 1939 செப்டம்பர் 3ம் தேதி ஜெர்மனி மீது பிரிட்டன் யுத்தம் தொடுத்த போது இந்தியாவும் ஜெர்மனி மீது யுத்தம் தொடுத்திருப்பதாக வைஸ்ராய் லார்டு லின்தோ அறிக்கை வெளியிட்டிருந்தார். அதை மறுத்தும் கண்டித்தும் காங்கிரஸ் கட்சி அறிக்கை வெளியிட்டிருந்தது. மறுநாளே வைஸ்ராய் லின்தோ காந்தி அடிகளுக்கு சிம்லாவில் தம்மைச் சந்திக்கும் படி தந்தி அனுப்பினார். காந்தியும் சந்திக்க புறப்பட்டபோது பல்லாயிரக்கணக்கான மக்கள் டில்லி ரயில் நிலையத்தில் கூடி வைஸ்ராயோடு சமரசம் பேச வேண்டாம் என்று ஆத்திரத்தோடு முழக்கமிட்டனர்.

காந்தியும் உணர்வுகளைப் பரிந்து கொண்டவராக கையை ஆட்டி புன்முறுவல் பூத்தவாறே விடை பெற்று சிம்லாவுக்குப் புறப்பட்டார். அவருடன் நடத்திய பேச்சுவார்த்தை குறித்து சிம்லாவில் இருந்து திரும்பியதும் காந்தி அடிகள் ஓர் அறிக்கையாக வெளியிட்டார். காந்தி அடிகளின் இந்த அறிக்கை இந்தியாவின் இடது சாரி இளைஞர்களுக்கு கடுங்கோபத்தை உண்டாக்கியது. பார்வர்ட் பிளாக் இயக்கம் 1942 ஜூன் 22ந் தேதி பிரிட்டிஷ் அரசால் தடை செய்யப்பட்டது. நாடு முழுவதும் பார்வர்ட் பிளாக் இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் இரவோடு இரவாகக் கைது செய்யப்பட்டனர்.

தேவர் திருமகன் தடையை மீறியதற்கான தண்டனை ஒன்றரை வருடத்தைச் சிறையில் கழித்து விட்டு விடுதலை செய்யப்பட்டார். திருச்சி சிறையில் இருந்து சிறைவாசலுக்கு வந்ததும் பாதுகாப்பு சட்டப்படி கைது செய்யப்பட்டார். மீண்டும் சிறையில் அடைக்கப்பட்டார். ஆனாலும் மனம் தளராது மக்கள் நலனுக்காகப் பாடுபடத் தொடங்கினார். இந்திய விடுதலைக்காக தான் தேர்ந்தெடுத்த கொள்கைப் படி போராடத் தொடங்கினார்.

முத்துராமலிங்கத் தேவரின் ஆளுமையை அரசியல் சித்தாந்தத்தை தொலை நோக்குப் பார்வையை நாம் சரியான தளத்தில் புரிந்து கொள்ள வேண்டும். அவர் சிந்தனை ஓட்டமும் செயல்பாடும் தேசீய சித்தாந்தத்தை அடிப்படையாகவே கொண்டது. அமெரிக்க ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் பேசியவர், ''ஆசியாவே ஒன்றுதிரள வேண்டும்'' என்று வீர முழக்கமிட்டார்.

மேலும் அவருடைய சிந்தனை என்பது வளமான இந்தியாவை உருவாக்குவதாகும். இந்தியாவை ஒரு வல்லரசாகக் காணத்துடித்தது அவரது அடிமனம். இதை அவரது தொலைநோக்குச் சிந்தனையிலிருந்தே புரியலாம். இந்தியா காமன்வெல்த்திலே இடம் பெறக்கூடாது என்று தொடர்ந்து வலியுறுத்தி வந்தார். அவருடைய இந்தச் சிந்தனையை இந்தியத் தலைவர்கள் பலரும் ஏற்றுக் கொண்டனர். தமிழகத்தின் தென் பகுதியில் ஓர்

எளிய கிராமத்தில் தோன்றி, தேசத்திற்கே வழிகாட்டியாகத் திகழ்ந்து ஒப்பற்ற தியாகியாகச் சுடர் விட்டவர் தேவர். தேவர் ஓர் சகாப்தம். தேவர் நூறாவது ஜெயந்தி விழாவின் போது, அவருடைய தியாகச் சுவடுகளை நாம் போற்ற வேண்டும் ; பாதுகாக்க வேண்டும் ; அவர் பிறந்த மண்ணில் பிறந்ததற்காக நாம் பெருமை கொள்ள வேண்டும் ; என்றும் அவர் சிந்தனையை, சித்தாந்தத்தை கைவிட்டுவிடாதபடிக்கு நாமும் நம்முடைய தலைமுறையினரும் காக்க வேண்டும். மாபெரும் தேசத் தலைவரின் தீரத்தையும், தியாகத்தையும் என்றென்றும் நம் நெஞ்சில் நிறைப்போம் ; தேவர் திருமகனைப் போற்றுவோம் !



**தேசத்திற்கு கொடுப்பவன் தேசியவாதி**
**தேசத்திலிருந்து எடுப்பவன் அரசியல்வாதி.**

# முக்குலத்தின் முகவரி

பத்மஸ்ரீ
கவிப்பேரரசு **வைரமுத்து**

மலையைப்போல் நிமிர்ந்த தோற்றம்
வானம்போல் விரிந்த நெற்றி
சிலையைப்போல் உயர்ந்த தேகம்
சிந்தனை தேங்கும் கண்கள்
உலையைப்போல் கொதிக்கும் நெஞ்சம்
உளிபோன்ற சொற்கள் – எந்த
வலையிலும் வீழ்ந்திடாத
வாலிபச் சிங்கம் தேவர்

மூவேந்தர் வீர மெல்லாம்
மொத்தமாய்ச் சேர்ந்த உள்ளம்
நாவேந்தும் சொற்கள் எல்லாம்
நதிபோல விரைந்து செல்லும்
பாவேந்தர் உலக மெல்லாம்
பசும்பொன்னைப் பாடிச் செல்லும்
பூவேந்தி வாழ்த்துகின்றோம்
புகழ்மைந்தன் பாதம் தொட்டு

தான்பெற்ற ஞானமெல்லாம்
தம்மக்கள் வாழத் தந்தார்
ஊன்பெற்ற சக்தி யெல்லாம்
ஊர்மக்கள் வாழத் தந்தார்
வான்பெற்ற மேக மெல்லாம்
மண்ணுக்கே பொழிதல் போல
தான்பெற்ற நிலங்கள் எல்லாம்
தமிழர்க்கே பகிர்ந்து தந்தார்

எக்குலம் எதிர்த்த போதும்
எமன்வந்து தடுத்த போதும்
சிக்கலில் இருந்த போதும்
சிறையிலே கிடந்த போதும்
வக்கிரப் பகைவர் வந்து
வாசலை மறித்த போதும்
முக்குலம் வாழ வைத்த
மூலவர் எங்கள் தேவர்

கைரேகைச் சட்டமென்று
கயவர்கள் இட்டு வைத்த
பொய்ரேகைச் சட்டம் தன்னைப்
புரட்சியால் உடைத் தெறிந்தார்
கைரேகை மாற்றி எம்மைக்
கையெழுத்தாக்கி வைக்க
மெய்ரேகை யாக வந்த
மேதையே பசும்பொன் தேவர்

சாதிக்கப் பிறந்த எங்கள்
தங்கத்தை முக்குலத்தின்
சாதிக்கே உரிமை யாக்கித்
தனிமையே படுத்த வேண்டாம்
போதிக்கப் பிறந்து ; ஊரின்
புத்தியைத் திறந்து – தீய
ஆதிக்கம் ஒழித்த தேவர்
அனைவர்க்கும் சொந்தம் தானே ?

**பாடுபடத்தெரியும் பாராட்டு பெறத்தெரியாது**

# ஆங்கிலேயரின் ஆதிக்கமும், தேவரும்

முனைவர். **என். இராஜேந்திரன்,**
பேராசிரியர் மற்றும் தலைவர்,
வரலாற்றுத்துறை, பாரதிதாசன் பல்கலைக்கழகம்,
திருச்சிராப்பள்ளி.

**42**வது காங்கிரஸ் மாநாடு நவம்பர் 2ம் நாள் 1927 ஆம் ஆண்டு சென்னை மாகாணத்தில் ஆவடி என்னுமிடத்தில் டாக்டர் அன்சாரியின் தலைமையில் நடைபெற்றது. இந்த மாநாட்டில் ஷாகிப், கியூரெஷி, ஜவஹர்லால் நேரு மற்றும் சுபாஸ் சந்திரபோஸ் ஆகியோர் பொதுச்செயலாளர்களாக இருந்தனர். இதில் சுமார் 2,694 பிரதிநிதிகள் கலந்து கொண்டனர். சீனிவாச ஐயங்கார் அளித்த ஊக்கத்தின் காரணமாக இந்த மாநாட்டின் முத்துராமலிங்கத்தேவரும் ஒரு பிரதிநிதியாகக் கலந்து கொண்டார். அப்போது முத்துராமலிங்கத் தேவருக்கு சுபாஷ்சந்திரபோசை சந்திக்கும் வாய்ப்பு கிட்டியது.

முத்துராமலிங்கத் தேவர் ஆங்கிலேய காலனி ஆதிக்கத்திலிருந்து இந்தியா விடுதலை பெறுவதற்கான போராட்டத்தில் சிறப்பான பங்கினை ஆற்றியுள்ளார். எஸ். சீனிவாச ஐயங்கார் 1927 ஆம் ஆண்டு சென்னை மாகாணத்தில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் முத்துராமலிங்க தேவரை ''இராமநாதபுரத்தின் இளம் சிங்கம்'' என்று காங்கிரஸ் பிரதிநிதிகளிடம் அறிமுகப்படுத்தினார். 1927 ஆம் ஆண்டிலிருந்து தேவர் இந்திய தேசீய காங்கிரசின் உறுப்பினராகவும், 1930லிருந்து செயல் துடிப்புடன் ஆர்வலராகவும் மாறினார். 1930லிருந்து காங்கிரஸ் குழு காங்கிரஸ் இயக்கத்தின் முன்னேற்ற செயல்பாட்டிற்கான முழுப்பொறுப்பையும் தேவரிடம் அளித்தது.

1935 ஆம் ஆண்டு ஆங்கில அரசு தேர்தலை அறிவித்தது. காங்கிரஸ் கட்சி அந்த தேர்தலில் போட்டியிட முடிவு செய்தது. முத்துராமலிங்கத் தேவர் முதுகுளத்தூர் தொகுதியில் காங்கிரஸ் வேட்பாளராக நிறுத்தப்பட்டார். இவர் ஆங்கிலேய ஏகாதிபத்தியத்திற்கு எதிரான தனது கருத்துக்களை பொதுக்கூட்டங்களின் மூலம் தொடர்ந்து எடுத்துரைத்ததால் குற்றவியல் சட்டம், பிரிவு 144ன் கீழ் ஆங்கில அரசு தேவர் எந்த மாநாட்டிலும் கலந்து கொண்டு பேசக்கூடாது என அக்டோபர் 28ஆம் நாள், 1936ஆம் ஆண்டு ஆணை பிறப்பித்தது.

ஆனால் தேவர் சட்டத்தை மீறி பொதுக்கூட்டங்களில் கலந்து கொண்டு ஆங்கில அரசுக்கு எதிராக பேசியதால், பிரிட்டிஷ் அரசு இந்திய தண்டனைச் சட்டம் பிரிவு 124(எ) மற்றும் 153(எ), குற்றவியல் தண்டனைச் சட்டம் பிரிவு 117(3)இன் கீழ் ரூபாய் ஆயிரத்தை அபராதமாக விசாரணை முடிவதற்குள் அளிக்குமாறு உத்தரவிட்டது. அனைத்திந்திய காங்கிரஸ் குழு இந்த சட்டம் பேச்சுரிமை மற்றும் சுதந்திரமாக குழு அமைக்கும் அடிப்படை உரிமைக்கு எதிரான முறையற்ற ஒன்றாகும் எனக்கூறி பிரிட்டிஷ் அரசின் இந்த ஆணையை எதிர்த்தது.

இந்த சட்டம் தேவரின் செயல்பாடுகளை தடை செய்யும் பொருட்டு இயற்றப்பட்ட போதிலும், தேவர் இதைப் பொருட்படுத்தாமல் ஆங்கிலேய ஏகாதிபத்தியம் மற்றும் தேசீய ஒருமைப்பாடு குறித்த தனது பேச்சின் மூலம் பொதுமக்களிடையே தேசீய உணர்வை வளர்த்தார். இந்தியச் சட்டம் 1935இன்படி சென்னை மாகாண சட்டசபைக்கான முதல் தேர்தல் 1937 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் நடைபெற்றது. இந்தச் சட்டம் தேர்தல் முறைகளில் மாற்றங்களை ஏற்படுத்தியதோடு மட்டுமல்லாமல் சராசரியாக வாக்களிப்போரின் எண்ணிக்கையை இருமடங்காக உயர்த்தியது.

வல்லபாய் பட்டேல் தலைமையில் இராஜகோபாலாச்சாரியார் மற்றும் சத்தியமூர்த்தி ஆகியோர்களை உள்ளடக்கிய அனைத்திந்திய பாராளுமன்ற குழு இராமநாதபுரம் தொகுதியில் தேவரை காங்கிரஸ் வேட்பாளராக நிறுத்தியது. இவர் நீதிக்கட்சியை சேர்ந்த இராமநாதபுரம் அரசர் ஆர். சண்முகராஜேஸ்வர சேதுபதியை எதிர்த்து காங்கிரஸ் வேட்பாளராக நின்று வெற்றி பெற்றார். எனினும் 1938இல் ஏற்பட்ட இரண்டாம் உலகப்போரின் காரணமாக காங்கிரஸ் அமைச்சரவை சுதந்திரமாகச் செயல்பட முடியவில்லை.

இவர் காந்தியின் அகிம்சை கொள்கைகளிலிருந்து மாறுபட்டு விளங்கினார். இரண்டாம் உலகப் போரில் ஆங்கிலேயருக்கு ஆதரவாக இந்திய இராணுவம் செயல்படக் கூடாது என்று தனது கருத்தினை தெரிவித்தார். ஆனால் காந்தியடிகள் இதனை ஏற்றுக் கொள்ளவில்லை. காந்தி இரண்டாம் உலகப் போரில் பிரிட்டனுக்கு ஆதரவாக இந்திய மக்கள் இருக்க வேண்டும் என வலியுறுத்தினார். இரண்டாம் உலகப்போரில், ஆங்கிலேயருக்கு ஆதரவாக செயல்படாமல் இந்தியர்கள் தங்களது சுதந்திரத்திற்காக போராட இதுவே சரியான தருணம் என காந்தியிடம் தேவர் எடுத்துரைத்தார்.

சுபாஷ் சந்திரபோஸ் 1938ஆம் ஆண்டு ஹரிபுரா இந்திய தேசீய காங்கிரஸ் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார். 1939ஆம் ஆண்டு திரிபுராவில் நடந்த இந்திய தேசீய காங்கிரஸ் மாநாட்டில் காந்தியின் ஆதரவில் பட்டாபி சீத்தாராமையாவும், தேவரின் ஆதரவில் சுபாஷ் சந்திரபோஸும் தலைமைப் பதவிக்காகப் போட்டியிட்டனர். அதில் சுபாஷ் சந்திர போஸ் வெற்றி பெற்றார். இந்த தேர்தல் தேசீய அளவில் தேவரின் அரசியல் ஆளுமைக்கு உதாரணமாக விளங்கியது.

1939 ஆம் ஆண்டு தேவர் அனைத்திந்திய பார்வர்டு பிளாக் இயக்கத்தில் உறுப்பினராக சேர்ந்து, இந்தியாவிற்கு முழுமையான சுதந்திரம் கிடைக்கும் பொருட்டு புரட்சிகரமான செயல்பாடுகளில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். அதே வருடம் தேவர் மதுரையில் ''போஸ் சங்கம்'' என்ற வாசகர் சாலையை நிறுவினார். மதுரை அமெரிக்கன் கல்லூரி முதல்வர் ரஞ்சிதம் மற்றும் டி.எல். சசிவர்ணத் தேவர் இந்த சங்கத்தின் செயல்பாடுகளில் கலந்து கொண்டார்கள்.

1939ஆம் ஆண்டில் ஆங்கில அரசு தேர்ந்தெடுக்கப்பட்ட காங்கிரஸ் அமைச்சரவையை கலந்தாலோசிக்காமல் இந்தியர்களை இரண்டாம் உலகப்போரில் ஈடுபடுத்தியதால் இதற்கு எதிர்ப்புத் தெரிவித்து காங்கிரஸ் அரசுகள் ராஜினாமா செய்தன. ஆங்கில அரசு, இந்திய விடுதலை குறித்து திட்டவட்டமாக முடிவு தெரிவிக்காமல், தங்களது பிரித்தாளும் கொள்கைகளை தொடர்ந்து செயல்படுத்தியதால் ஆங்கிலேயருக்கு எதிரான போராட்டத்தை தேவர் தொடர்ந்தார்.

சுபாஷ் சந்திரபோஸ் இரண்டாம் உலகப் போர் காலத்தில் ஆங்கிலேயர்களுக்கு எதிராக ''போர் குழு'' ஒன்றை ஆரம்பித்தார். இதில் சுபாஷ் சந்திரபோஸ், சரத் சந்திரபோஸ், முத்துராமலிங்கத் தேவர், சீனிவாச ஐயங்கார், லாலா சங்கர்லால் ஆகியோர் உறுப்பினராக இருந்தனர். இந்த கவுன்சில் புரட்சி செயல்பாடுகளுக்கான இரகசிய திட்டங்களை தீட்டியது. மேலும் தேவர் நேதாஜியின் கொள்கையை பரப்புவதற்காக ''நேதாஜி'' என்ற தமிழ் வாரப்பத்திரிக்கையை ஆரம்பித்தார். இது 1942ல் தேவர் கைது செய்யப்படும் வரை சிறப்பாக செயல்பட்டு வந்தது.

1939ஆம் ஆண்டு பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் தேவர் கைது செய்யப்பட்டு பல்வேறு சிறைகளில் அடைக்கப்பட்டார். இரண்டாம் உலகப்போர் முடிந்த பின்னர், 1945 ஆம் ஆண்டு செப்டம்பர் 5ஆம் நாள் தேவர் விடுதலை செய்யப்பட்டார். பின்னர் 1946ஆம் ஆண்டு நடந்த பொதுத்தேர்தலில் இவர் ஆற்றிய பணியின் காரணமாக முதுகுளத்தூர்

தொகுதியில் காங்கிரஸ் வேட்பாளராக போட்டியின்றி மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்தியா விடுதலை பெற்ற பிறகும் தனது பணியினைத் தொடர்ந்தார்.



**மனித ஆசையில் ஆபாசமானது பெண்ணாசை**
**அபாயமானது அதிகார ஆசை.**

# தேவரின் தமிழ் மொழி ஆளுமை

**மா. திரவிய பாண்டியன்**
பொதுச் செயலாளர்,
தமிழ் தாங்கிச் சங்கம், மதுரை.

ஓம் சரவணபவ ! முருகு என்றால் தமிழ் என்று தான் பொருள். முருகு என்றால் அறிவு. முருகு என்றால் அழகு. முருகு என்றால் ஆற்றல் என்பதால் முருகு என்றாலே முத்தமிழ் என்றே பொருள்படும். முத்தமிழ்க் கடவுள் முருகனை எண்ணி உருகாத நாள் இல்லை என்பதால் தேவரின் திருநாவில் தேன் தமிழ் தேர்வடம் பிடித்தது. ஆகையால் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் என்றால் பைந்தமிழ் ஆகும்.

ஏசுபிரான் பேசிய எபிரேய மொழியும், புத்தபிரான் பேசிய பாலிமொழியும், தத்துவ மேதை அரிஸ்டாட்டில் பேசிய கிரேக்க மொழியும், வால்மீகி, காளிதாசன் பேசிய சமஸ்கிருதமும் பெற்றிருந்த உயர் நிலையை தமிழ் மொழி இன்று அடைந்துள்ளது.

இன்றும் பாமரமக்களால் தமிழ் மொழி சிரஞ்சீவியாக வளர்ந்து உயர்ந்துள்ளது. உலக மக்களால் தமிழ் செம்மொழி என்று பாராட்டப்படுகிறது. பாமரமக்களின் நாவில் தமிழ் மொழி தவழ்ந்து விளையாட காரண கர்த்தாக்கள் திருவள்ளுவரும், பசும்பொன் முத்துராமலிங்கத்தேவரும்.

தேவரின் சொற்பொழிவு என்றால் தமிழன்பர்கள் லட்சங்களில் கூடுவார்கள். அந்நாட்களில், புது மழையில் பொங்கி வரும் புதுப் புனலாய் பொதுமக்கள் புறப்பட்டு வருவார்கள். கொட்டும் குற்றாலம் அருவி போல் சொந்த தமிழிலும் பேசுவார். சீறி வரும் சிங்கம் என சண்ட மாருதம் புரிவார். கடல் மடை திறந்த வெள்ளமென தமிழ் மழை மொழிவார். வெங்கலக் குரலில் வீர முழக்கம் இடுவார். அவர் வேகப் பேச்சில் வேங்கை வந்து கர்ச்சிக்கும். சீறி வரும் சிங்கமென சங்கத் தமிழில் முழங்குவார். பாய்ந்து வரும் புலியெனப் பொறி பறக்கும் அனல் பேச்சு, ஆடாது, அசையாது ஆறுமணி நேரம் கூட நின்று கேட்க வைக்கும். தேவர் மேடை என்றால் மணிக்கணக்கில் நடக்கும். குறைந்த நேரம் 3 மணி. 6 மணி நேரம் கூட அயராது பேசுவார். இடையில் இறங்கமாட்டார். எதையும் அருந்த மாட்டார். சிறிதும் களைப்படையமாட்டார். குரல் சிறிதும் கம்மாமலும், கரகரக்காமலும், தும்மாமலும், இருமாமலும் கோவில் மணி போல் கணீர் கணீர் என மணிக் கணக்கில் பேசக் கூடிய ஒரே தலைவர் தமிழகத்தில் தேவர் மட்டுமே. இந்தியாவில் இவரோடு சேர்ந்து திலகரும் இருந்தார். இந்த இருவரின் பேச்சைக் கண்டுதான் பிரிட்டன் அரசு பீதியடைந்து, இருவருக்கும் வாய்ப்பூட்டுச் சட்டம் போட்டது என்றால் தேவரின் வாய்ப்பாட்டின் சக்தி எத்தகையது என்பதை ஓரளவு யூகிக்கலாம்.

அன்பொழுகும் பேச்சின் அதிபதியான தேவரின் அழகு தமிழ் ஆன்மீகப் பேச்சில் தெய்வ மணம் கமலும். தேன் தமிழ் துள்ளி விளையாடும். புதுப் புனல் பொங்கி வரும். பூங்காற்று புறப்பட்டு வரும். தேவாதி தேவர்களெல்லாம் பூமாரி மொழிவதைப் போல் பெருமகிழ்ச்சி பெருகி வரும். அனல் பறக்கும் தேவரின் வெடிப்பேச்சின் வார்த்தைக்கு வீரம் விளையாடும். வேகக் கனல் வீசும். புயல் புறப்பட்டு வரும். புரட்சிப் பொறி பறக்கும். எழுச்சி மலை எழுந்து வரும். இமயம் குலுங்கும். கருத்துக்கள் கனல் தெரிக்கும். ரேகைச்சட்டத்தை எதிர்த்து அவரவர் ''கட்டை விரலை வெட்டிக் கொள், கைரேகை வைக்காதே'' என்று இரு வரிகளில் சொல்லிய சொல் தாரக மந்திரமாக சமூகம் ஏற்றுக் கொண்டது.

என்னை விட உயர்ந்தவன் எவனும் இல்லை என்று சொல்லும் போது எவ்வளவு மகிழ்ச்சி அடைகிறாயோ, அதே மகிழ்ச்சியை உன்னை விட தாழ்ந்தவன் எவனும் இல்லை எனும் போது

அடைந்திடு ! என்ற அவரது அறிவுரையை விட ''சமத்துவத்தை நிலைநாட்டும் வேறு வரிகள் இருக்க முடியுமா ? '

தேவர் வாய் திறந்தால் தமிழ் மடை திறக்கும். வெள்ளமென பொழியும் சொல் மழையில் தடையின்றி திருக்குறளும் தாளமிடும். தேவரின் வள்ளுவம் வான்மழையில் இதோ ஒரு சிறு துளி.

கவிப் புலமை, கலைப் புலமை, தவப்புலமை என்பர். இம்மூன்று புலமையிலும் தேர்ந்து தெளிந்து நிலைபெற்ற புலவரே திருக்குறளை செய்தவர், . . . . . சாதாரண மனிதன் சில பெரியோர் வாக்கைக் ''கவியின் பெருமை'' என்று காண்கிறான். தெய்வீகம் உணர்ந்த ஒருவன் தெய்வம் தன் வாக்கை மனிதன் ரூபமாக உலகிற்கு தருகிறது என்பதை காண்கிறான். அவ்வாக்கே இத்திருவள்ளுவர் வாக்கு.

சாயல்குடி விவேகானந்தர் வாசக சாலையில் முதலாமாண்டு விழா 1933 இல் நடைபெற்றது. விவேகானந்தரை வங்க துறவியென்று விபரம் தெரியாதவர்கள் நினைத்து வந்த காலம். சிறப்பு பேச்சாளர்கள் வராததால் சிறிதே பேசச் சொன்னார்கள் தேவரை. அது தான் அவரது முதல் கன்னிப் பேச்சு. அதாவது முதல் மேடைப் பேச்சு. மூன்று மணி நேர முழக்கத்தில் மூக்கில் விரல் வைக்காதவர்கள் யாரும் இல்லை. விவேகானந்தரின் வீரமும், விவேகமும், தேவரின் திருநாவில் தேர் வடம் பிடித்தன. தேவரின் தேனொழுகும் தெய்வீக உரையைக் கேட்ட பின்னரே விவேகானந்தரை வங்காளியாய்ப் பார்ப்பதை விடுத்து தமிழினத்தின் பங்காளியாய்ப் பார்க்கத் தொடங்கினர் தமிழ் மக்கள். இராமநாதபுர சேதுபதி இராஜாவின் தியாகத்தாலும், பாசத்தாலும் அமெரிக்கா வரை புகழ் பெற்ற விவேகானந்தரை தவசிக்குறிச்சியின் தவப் புதல்வரான தேவர் அவர்கள் தரணி போற்ற எடுத்தரைத்தார்.

வாய்ப்பூட்டுச் சட்டம் போட்டதால் தேர்தல் மேடைகளில் தேவருக்கு சில வரிகள் மட்டுமே பேச அனுமதி. அப்போது மேடையில் என்ன பேசுவார் தெரியுமா ? நான் ஆதியிலும் ஊமையல்ல, வியாதியிலும் ஊமையல்ல, பாதியிலே ஊமையானேன் சர்க்கார் சட்டத்தால், எனக்கும் போட்டிருக்கிறார்கள் வாய்ப்பூட்டு. அதனைத் திறக்கும் சாவிதான் உங்கள் கையில் இருக்கும் ஓட்டு என்று கூறி விட்டு இறங்கி விடுவார். மக்களின் கரவொலி நிற்க வெகுநேரம் ஆகும். இவ்வாறு தேவரின் மேடைத் தமிழில் எதுகையும், மோனையும் எங்கெங்கும் எதிரொலிக்கும்.

இவ்வாறு தமிழ் உரையில் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத ஒரே தமிழ் தலைவர் தேவர். தேசப்பற்று, தெய்வபக்தி, தியாகவாழ்வு, தென் மக்கள் நலன், தமிழ் வளர்ச்சி இவை அத்தனையின் ஒட்டு மொத்த உருவே தேவர் ஆவார்.

தெய்வத் திருமகன் தேவரை வணங்கி நூற்றாண்டு கொண்டாடும் இந்த நேரத்தில் தமிழ் மொழியின் ஒலியாக விளங்கக்கூடிய தமிழ் கடவுள் முருகப் பெருமானின் பக்தராக விளங்கிய, தேவர் அவர்கள் மறையும் போது, முருகக் கடவுளின் வாகனமாகிய மயிலும் தன்னை மாய்த்துக் கொண்டது. மனிதன் தற்கொலை செய்வதை நாம் பார்த்திருக்கின்றோம். முருகக் கடவுளின் வாகனம் மாய்த்துக் கொண்ட நிகழ்வு தேவரின் தமிழ்ப்பற்றையும், தெய்வ பக்தியையும் வெளிப்படுத்தியதாக அமைந்தது.



**இந்து மதம் பெண்களை பராசக்தியின் மறுவடிவமாக பார்க்கிறது.**



சாயல்குடி விவேகானந்தர் வாசகசாலை ஆண்டு விழாவில் தேவர்.



அரசியல் குரு சீனிவாச ஐயங்காருடன் தேவர்.

# தேவரும் தொழிலாளர் சங்கமும்

முனைவர் **அ. அழகுமலை,**
பேராசிரியர், பசும்பொன் முத்துராமலிங்கத்
தேவர் நிலைவுக் கல்லூரி, கமுதி.

அரசியல் தலைவராக விளங்கிய தேவரின் பார்வையில் சமுதாயத்தின் ஒட்டு மொத்த அவலக்குரல்களும் அவரை சமூக அநீதிகளுக்கு எதிராக போராட வைத்தன. ''தென்னகத்தின் ஏதென்ஸ்'' என்று அழைக்கப்பட்ட மதுரையில் பல்வேறு தொழிற்சாலைகள் உருவாகின. மதுரையை சுற்றி விவசாயிகள் அதிக அளவிலான பருத்தி உற்பத்தி செய்து வந்ததால் பருத்தியை கச்சாப் பொருட்களாக கொண்ட தொழிற்சாலைகள் மதுரையில் வளரத் துவங்கின. 1892ல் ஏற்படுத்தப்பட்ட ஹார்வி மில், 1921ல் ஏற்படுத்தப்பட்ட மீனாட்சி மில், 1928ல் ஏற்படுத்தப்பட்ட மஹாலட்சுமி மில் மற்றும் 1926ல் ஏற்படுத்தப்பட்ட மதுரை நிட்டிங் கம்பெனி போன்றவை இதில் குறிப்பிடத் தகுந்தவைகளாகும். பெரும்பாலும் இந்தச் தொழிற்சாலைகளில் பணி புரிந்தவர்கள் மதுரையை சுற்றியுள்ள கிராமப்புற மக்களே ஆகும். வானம் பார்த்த பூமி பொய்த்துப் போன பொழுதும், விவசாய வேலை ஓய்ந்து ஓய்வு கிடைக்கும் பொழுதும் கிராமப்புற விவசாயிகள் மில் தொழிலாளர்களாக மாறினார்கள். தேவர் அவர்கள் கூறியது போல கிராமப் புற விவசாயிகள், ஜமீன்தார்கள் தங்கள் உழைப்பை சுரண்டுகிறார்கள் என்று அஞ்சி மில் தொழிலாளர்களாக மாறிய பொழுது ஆலை முதலாளிகள் அவர்களின் உழைப்பை சுரண்டினார்கள். அதனால் ஜமீன்தார்களை விட மில் முதலாளிகள் மோசமானவர்களாகவே இருந்தனர்.

1929 நவம்பர் 17ம் நாள் பி. சிவராவ் என்பவரை தலைவராகவும், எஸ்.ஆர். வரதராஜுலு நாயுடு என்பவரை செயலாளராகவும் கொண்டு மதுரை தொழிலாளர் சங்கம் நிறுவப்பட்டது. 1937ம் ஆண்டு தேர்தலின் போது தொழிலாளர்களின் கண்ணீரைத் துடைக்க காங்கிரஸ் கட்சி பாடுபடுமென தேர்தல் அறிக்கைகள் வெளியிடப்பட்டன. ஆனால் காங்கிரஸ் கட்சி ஆட்சியமைத்த பின் தொழிலாளர்களின் பிரச்சனைகளில் எந்த அக்கறையும் எடுத்துக் கொள்ளாத போக்கையே கடைப்பிடித்து வந்தது. இதனால் தேவர் பெரும் அதிருப்திக்கு உள்ளாகியிருந்தார். இந்நிலையில் ஜெயபிரகாஷ் நாராயணன் சோஷலிச கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு சோசலிச காங்கிரஸை ஆரம்பித்த பொழுது தேவரின் கவனம் அதன் மேல் திரும்பியது. மதுரை வந்த ஜெயப்பிரகாஷ் நாராயணனை வரவேற்க காங்கிரஸ்காரர்களே பயந்த பொழுது தேவர் வரவேற்று சோஷலிச கருத்துக்களை பரப்பச் செய்தார். இந்தச் செயல் தொழிலாளர் வர்க்கத்தின் பார்வையினை தேவர் மீது விழச் செய்தது.

1938ல் மீண்டும் வரதராஜுலு நாயுடு தொழிற்சங்க தலைவராக தேர்தெடுக்கப்பட்டார். இது மதுரை மில் தொழிலாளர் சங்க வரலாற்றில் திருப்பு முனையாக அமைந்தது. தொழிலாளர்களின் தோழனாக போராடி வந்த வரதராஜுலு நாயுடு நிர்வாகத்தினரின் தோழனாக மாறத் தொடங்கினார். தென்னகத்திலேயே அதிகமான தொழிலாளர் எண்ணிக்கையை கொண்ட சங்கத்திற்கு தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டதால் தன்னுடைய செயல்பாடுகளில் மாறுதல்களை காட்டத் துவங்கினார். மதுரை ஹார்வி மில் நிர்வாகத்தினருடன் மிக நெருங்கிய உறவினை ஏற்படுத்திக் கொண்டார்.

மேலும் தனது சமுதாயத்தைச் சேர்ந்த தொழிலாளர்களுக்கு மட்டும் சலுகைகளை பெற்றுக் கொடுத்தார். இதர சமுதாயத்தை

சேர்ந்த தொழிலாளர்கள் வேண்டுகோளை ஏற்று தேவர் தொழிலாளர்களின் தலைவராக செயலாற்றத் துவங்கினார்.

**மஹாலட்சுமி மில் வேலை நிறுத்தம் 1938**

சங்க அமைப்பு ஏதுமின்றி இருந்த மஹாலட்சுமி மில் தொழிலாளர்கள் தங்கள் பிரச்சனைகளை தீர்த்துக் கொள்ள வரதராஜுலு நாயுடுவை அணுகினர். ஆனால் அங்கு அவர்களுக்கு சாதகமாக தீர்வு கிடைக்காததால் தேவரை அணுகினர். பிரச்சனைகளை தாங்களே தீர்த்துக் கொள்ள முடிவு செய்தார்கள். தங்களின் மீட்பரைத் தேடத் தொடங்கினார்கள். அவர்களுக்கு தேவர் மீட்பராக தென்பட்டார். 1938லிருந்து சோஷலிச காங்கிரஸ் கட்சியினால் தேவர் ஈடுபாட்டுடன் செயல்பட்டதால் தொழிலாளர்களின் பிரச்சனைகளை எடுத்துச் செல்லக்கூடிய சரியான தேர்வாக தேவரை நம்பினார்கள். இடது சாரி எண்ணம் கொண்ட கம்யூனிஸ்ட்காரர்களும் தேவரின் தலைமையை அங்கீகரிக்க துவங்கினார்கள். இதனால் மதுரை தொழிற்சங்க வரலாற்றில் முதல் முறையாக வரதராஜுலு நாயுடுவிற்கு மாறாக கம்யூனிஸ்டுகளின் ஆதரவுடன் புதிய தொழிலாளர் சங்கம் முத்துராமலிங்கத் தேவரை தலைவராகவும், பி. ஜீவானந்தத்தை துணைத் தலைவராகவும் கொண்டு அமைக்கப்பட்டது. இது மதுரையில் சோசலிஸ வாதிகளுக்குக் கிடைத்த முதல் வெற்றியாகும்.

1938 செப் 5ல் புதிய இடதுசாரி சங்க தலைமையின் கீழ் தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தை அறிவித்தனர். ஆனால் அன்றைய தொழிலாளர் துறை அமைச்சரான வி.வி.கிரியின் வேண்டுகோளின்படி மறுநாளே தொழிலாளர்கள் வேலைக்கு திரும்பினார். தொழிலாளர் துறை கமிஷனர் நடத்திய ஆய்வில் வரதராஜுலு நாயுடு சங்க கணக்குகளை முறைப்படுத்தவும், ஜனநாயக ரீதியாக சங்கத்தை நடத்தவும், தேவரின் தலைமையிலான சங்கத்தை வரதராஜுலு நாயுடுவின் சங்கத்தோடு இணைக்கவும் பரிந்துரை செய்தார். அதோடு வேலை நீக்கம் செய்யப்பட்டவர்களை மீண்டும் வேலைக்கு அமர்த்தச் சொல்வது நியாமில்லையெனவும் கருதினார். இதனால் கமிஷனர் நடத்திய விசாரணையில் நியாயமில்லையென்றும் தொழிலாளர்கள் தங்களது கோரிக்கைகளை வென்றெடுக்க வேலை நிறுத்தத்தில் ஈடுபடவும் தேவர் கேட்டுக் கொண்டார். அதன் அடிப்படையில் 1938 அக்டோபர் 13ம் நாள் நள்ளிரவு முதல் தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டார்கள். இந்த வேலை நிறுத்தத்தை உடைக்கும் முயற்சியில் வரதராஜுலு நாயுடு முழுமையாக நிர்வாகத்தினருடன் இணைந்து செயல்பட்டார். மறுநாள் அக்டோபர் 14, 1938 அன்றிலிருந்தே தொழிற்சாலையை இயங்க செய்ய புதியவர்களை வரதராஜுலு அழைத்து வந்தார். அவர் அழைத்து வந்த வாகனங்களை போராடிக் கொண்டிருக்கும் தொழிலாளர்கள் தடுத்து நிறுத்தினர். மறியலில் ஈடுபட்ட 150 தொழிலாளர்களையும் போலீஸ் கைது செய்தது. அதில் 88 பேர் மட்டும் மாலையில் விடுதலை செய்யப்பட்டனர். மீதியுள்ளவர்கள் மீது வழக்குகள் பதிவு செய்யப்பட்டன.

வேலை நிறுத்தத்தின் மறுநாளான 1938 அக்டோபர் 15 அன்றும் வரதராஜுலு அனுப்பி வைத்த புதியவர்களுக்கு எதிராக மறியல் போராட்டம் நடத்தப்பட்டது. போலீஸ் போராடும் தொழிலாளர்கள் மீது தடியடி நடத்தியது. ப. ஜீவானந்தம் தாக்கப்பட்டார். இந்நிலையில் 1938 அக்டோபர் 31ம் நாள் வரதராஜுலுவின் ஆட்களை தொழிற்சாலைக்குள் அனுமதிப்ப தில்லை என்ற மறியல் போராட்டம் மேலும் வலுத்தது. இதற்கு ஜீவா தலைமை தாங்கி நடத்தினார். ஆனால் போலீஸ் போராட்டக்காரர்கள் மீது தடியடி நடத்தியதோடு ஜீவாவையும் கைது செய்தது. தேவர் கைதாகி சிறையில் இருந்ததால் இடதுசாரி தலைவரான பி. ராமமூர்த்தி போராட்டத்தை தொடர்ந்து நடத்தி தொழிலாளர்களுக்கும், நிர்வாகத்தினருக்கு மிடையே இணக்கமான முடிவை கொண்டு வந்தார்.

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் சார்பாக லட்சுமணன் செட்டியார், கே.எஸ். முத்துச்சாமி, வல்லத்தரசு போன்றவர்களும், தொழிலாளர்களின் சார்பில் ஜீவாவும் கலந்து கொண்டார்கள். ஒப்பந்தத்தில் கையெழுத்திட தலைவர் தேவர் வரவேண்டும். ஆனால் தேவர் ஜாமீனில் வர மறுத்து விட்டார். ஒப்பந்தமானால்தான் தொழிலாளர்களை விடுதலை செய்ய முடியும். எனவே தேவர் தொழிலாளர் சங்கத் துணைத் தலைவர் ஜீவானந்தத்தை ஒப்பந்தத்தில் கையெழுத்திட பணித்தார். ஒப்பந்தம் கையெழுத்தானது. சிறையிருந்த தொழிலாளர்களுடன் தேவரும் விடுதலை செய்யப்பட்டார். அதன் அடிப்படையில் வேலை நீக்கம் செய்யப்பட்ட 14 தொழிலாளர்களும் மீண்டும் வேலையில் அமர்த்தப்பட்டனர். எந்த எதிர்பார்ப்பும் இல்லாத எதற்கும் அஞ்சாத தேவரின் தொழிலாளர் நல ஈடுபாட்டிற்கும், தியாகத்திற்கும் கிடைத்த இப்போராட்டம் முதல் வெற்றியாகும்.

**மீனாட்சி மில் தொழிலாளர்கள் பிரச்சனை**

தேவர் கண்மூடித்தனமாக தொழிலாளர்களை வேலைநிறுத்தத்திற்கு தூண்டுபவராக, ஆதரிப்பவராக இருந்ததில்லை. எங்கெல்லாம் நிர்வாகம் சிறப்பாக தொழிலாளர் நலன் நாடுவதாக இருக்கிறதோ அந்த நிர்வாகத்தை தேவர் ஆதரித்தும் வந்துள்ளார். மீனாட்சி மில் தொழிலாளர்களின் சம்பளம் மற்றும் வேலை பார்க்கும் சூழல் மதுரையிலிருந்த மற்ற தொழிற்சாலைகளை விட சிறப்பாக இருந்தது. இதனுடைய அதிபராக இருந்த தியாகராஜ செட்டியார் தொழிலாளர்களின் நலனில் அக்கறை செலுத்தி வந்தார். இதனால் வரதராஜுலு நாயுடுவின் மதுரை தொழிலாளர் சங்கத்திற்கு அங்கீகாரம் அளிக்காமல் இருந்தார். தொழிலாளர்களுக்கு தேவையேற்படாததால் சங்க நடவடிக்கைகளில் அக்கறை காட்டாமல் இருந்தனர்.

இந்நிலையில் தேவரின் தலைமையிலான இடது சாரி தொழிலாளர் சங்கம் வளர்ந்து வந்தது. அதனால் இடதுசாரி சங்கம் மீனாட்சி மில் நுழைவிற்கு முன் தான் முந்திக் கொள்ள வரதராஜுலு முயன்றார். இந்த முயற்சியின் விளைவாக இரண்டு சங்கங்களுக்குமிடையே மோதல்கள் உருவாகின. 1938ம் ஆண்டு ஜனவரி மாதம் தனது சங்கத்தை அங்கீகரிக்க வேண்டுமென தியாகராஜ செட்டியாரை வரதராஜுலு வற்புறுத்த ஆரம்பித்தார். ஆனால் தியாகராஜ செட்டியார் இதனை கடுமையாக மறுத்தார். இதனை கண்டித்து 1938 நவம்பர் 12ம் நாள் வரதராஜுலு நாயுடு தனது ஆதரவாளர்களை திரட்டிக் கொண்டு மில் அருகில் பொதுக்கூட்டம் நடத்தினார். தியாகராஜ செட்டியார் வரதராஜுலு நாயுடுவின் அத்துமீறலை தடுக்க தேவரின் உதவியை நாடினார்.

1939 மார்ச் 12ம் நாள் தேவரின் தலைமையிலான சோஷலிச தொழிலாளர் போராட்டம் உச்சக்கட்டத்தை அடைந்த நிலையில் தேவரும், முத்துச்சாமி மற்றும் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் பொதுச் செயலாளர்களில் ஒருவரான வல்லத்தரசு ஆகியோர்கள் தொழிலாளர்கள் சார்பாக மீனாட்சி மில் நிர்வாகத்திடம் பேசினர். தொழிலாளர் கோரிக்கைகளை நிர்வாகம் ஏற்றது. தொழிற்சாலையை செயல்படச்செய்வதன் மூலம் தங்கள் செல்வாக்கினை நிலைநாட்ட முயற்சி செய்தனர்.

வரதராஜுலு நாயுடுவின் வேலை நிறுத்த நடவடிக்கையினை முறியடிப்பதற்காக இடது சாரி சங்கத்தினர் புதிய தொழிலாளர்களை தொழிற்சாலைக்கு அனுப்பினார்கள். அரசும் வரதராஜுலு நாயுடுக்கு ஆதரவாக செயல்பட்டது. ஆனால் இந்த ஆணையை தியாகராச செட்டியார் செயல்படுத்த மறுத்து விட்டார். இதனால் மீனாட்சி மில் தொழிலாளர் சங்கத்தை தன் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வர வரதராஜுலு மேற்கொண்ட முயற்சி தோல்வியில் முடிந்தது. மதுரையில் இடது சாரிகளின் சங்கம் வலுப்பெறத்துவங்கியது. தியாகராஜ செட்டியாரும் கொள்கை அளவிலும் இடது

சாரிகளுடன் இணைந்து போனார். 1939ல் நேதாஜி தமுக்கத்தில் கலந்து கொண்ட கூட்டத்திற்கு தியாகராஜ செட்டியாரே தலைமை தாங்கினார் என்பதே இதற்கு சிறந்த சான்றாகும்.

**மதுரை நிட்டிங் கம்பெனி தொழிலாளர் பிரச்சனை**

கைத்தறி நெசவுத் தொழிலை நம்பியிருந்த சௌராஷ்ட்ர இனமக்கள் அந்த தொழில் வீழ்ச்சியை சந்தித்தபின் மில் கூலித் தொழிலாளிகளாக மாறினர். அதே இனத்தைச் சார்ந்த என்.எம்.ஆர். சுப்பராமனும், எம்.கே. இராமசாமி ஐய்யரும், மதுரை நிட்டிங் கம்பெனி முதலாளிகளாக இருந்தனர். மதுரையில் செயல்பட்டு வந்த மற்ற தொழிற்சாலையை விட இங்கு சம்பளமும், வேலைச் சூழலும் மிகவும் மோசமாக இருந்தது. மிகக் குறைந்த சம்பளமே கொடுக்கப்பட்டது. பெண் தொழிலாளர்கள் பல துன்பங்களை அனுபவிக்க வேண்டிய கட்டாயம் இருந்தது. பெண் தொழிலாளர்களுக்கு மகப்பேறு விடுப்புகள் வழங்கப்படவில்லை.

கருவுற்ற பெண்கள் ஏழாவது மாதம் முதலே வேலை நீக்கம் செய்யப்பட்டார்கள். குழந்தை காப்பக வசதிகள் இல்லாததால் பாலூட்டும் தாய்மார்கள் தங்கள் குழந்தைகளை சுற்றுச் சுவருக்கு வெளியில் இருந்து மறைமுகமாக பெற்று, பாலூட்டி திருப்பிக் கொடுக்க கூடிய பரிதாபகரமான நிலையில் இருந்தனர். தங்களுடைய இதுபோன்ற பிரச்சனைகளுக்கு தேவரின் மூலம் தான் தீர்வுகாண இயலுமென தொழிலாளர்கள் நம்பினர்.

1938 பிப்ரவரி 13ம் தேதி தொழிலாளர்கள் தேவரின் தலைமையின் கீழ் மதுரை நிட்டிங் கம்பெனி தொழிலாளர் சங்கம் துவங்கப்பட்டது. அதன்படி 6.3.1938 அன்று தேவரை தலைவராகவும், ஆர்.வி. சித்தா என்ற இடதுசாரி சிந்தனையாளரை பொதுச் செயலாளராகவும் கொண்ட மதுரை நிட்டிங் கம்பெனி தொழிலாளர் சங்கம் துவங்கப்பட்டது. இதில் 691 தொழிலாளர்கள் உறுப்பினர்களாக சேர்ந்தார்கள்.

இடதுசாரிகள், தேவரின் தலைமையின் கீழ் செயல்படும் சங்க நடவடிக்கைகள், நிர்வாகத்தினருக்கு எதிராக போய்விடும் என நிர்வாகம் அச்சம் கொண்டது. அதனால் நிர்வாகம் ஜாதீய உணர்வுகளை தொழிலாளர்கள் மத்தியில் தூண்டுவதற்காக தன்னுடைய நிர்வாகத்தினருடைய ஜாதியைச் சேர்ந்த ஒ.கே.என். ராஜகோபால ஐயர் என்பவர் தலைமையின் கீழ் மதுரை நிட்டிங் கம்பெனி லேபர் யூனியன் என்ற மாற்று சங்கம் 1939 ஜூலை 16ம் நாள் துவங்கப்பட்டது. இந்தத் தொழிற்சாலையில் வேலைபார்த்தவர்களில் அறுபது சதவீதத்திற்கும் அதிகமானவர்கள் சௌராஷ்ட்ரா இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பதால் இச்சங்கம் செல்வாக்கான சங்கமாக உருவானது. சௌராஷ்ட்ரா இனத்தைச் சேர்ந்தவர்கள் தங்களுக்கென தனிச் சங்கத்தை உருவாக்கி கொண்ட போது மற்ற இனத்தொழிலாளர்களின் அடைக்கலமாக தேவரின் தலைமையிலான சங்கம் விளங்கியது. சௌராஷ்ட்ரா இனத்தை சேர்ந்த சங்கம் முதலாளிகளின் ஆதரவாக போன போது தேவரின் தலைமையிலான சங்கம் தொழிலாளர்களின் ஆதரவு சங்கமாகத் திகழ்ந்தது.

1938 செப்டம்பர் 7ம் நாள் தேவரின் தலைமையின் கீழான தொழிலாளர் சங்கம் மதுரையில் உள்ள பாளையம்பட்டி ஜமீன் மாளிகையில் கூடிப் பேசினர். அக்கூட்டத்தில் எடுத்த தீர்மானத்தின்படி கோயம்புத்தூரில் உள்ள தொழிலாளர்களுக்கு இணையான சம்பளம் வழங்க வேண்டும் என்ற கோரிக்கையை வைத்தனர். ஆனால் வேலை நீக்கம் செய்யப்பட்ட மூன்று தொழிலாளர்களையும் மீண்டும் வேலையில் அமர்த்த நிர்வாகம் மறுத்துவிட்டது.

இரண்டாம் உலகப் போரின் தாக்கத்தை காரணம் காட்டி தேவரின் தலைமையிலான தொழிலாளர்களை வெளியேற்றுவதற்கான ஏற்பாடுகளை நிர்வாகம் எடுக்கத் துவங்கியது. 1939 ஜூன் முதல் நாளன்று சுமார் 500 தொழிலாளர்களை வேலையிலிருந்து நீக்குவதாக நிர்வாகம் அறிவித்தது. அதற்கு

இரண்டாம் உலகப்போரின் காரணமாக வணிகம் ஸ்தம்பித்து நிற்பதாக நிர்வாகம் தெரிவித்தது. தேவர் இதற்கு எதிர்ப்பு தெரிவித்ததோடு, ஒரு வேலை தவிர்க்க இயலாத சூழ்நிலை ஏற்பட்டால் அனைத்து தொழிலாளர்களுக்கும் இருக்கின்ற வேலைகளை சமமாக பங்கீடு செய்வதன் மூலம் அனைத்து தொழிலாளர் குடும்பங்களும் பாதுகாக்கப்படும் என அறிவித்தார். நிர்வாகம் தேவரின் வேண்டுகோளின் அடிப்படையில் வேலை நீக்கம் செய்யப்பட்ட தொழிலாளர்களின் எண்ணிக்கையை 500லிருந்து 310 ஆகக் குறைத்தது.

தொழிற்சங்கவாதி என்றாலே கண்முடித்தனமாக முதலாளிகள் வர்க்கத்தை எதிர்க்க வேண்டும் என்ற கொள்கைகளில் இருந்தும் தேவர் வேறுபட்டு இருந்துள்ளார். மீனாட்சி மில் அதிபர் தியாகராஜ செட்டியார் தொழிலாளர் நலனில் இயற்கையாகவே அக்கறை கொண்டவராக விளங்கியிருக்கிறார். அவரை வரதராஜுலு நாயுடு தேவையில்லாமல் தொந்தரவு செய்ய முயன்ற போது நிர்வாகத்திற்கு ஆதரவாக தேவர் இருந்துள்ளார். ஆனால் தேவர் காவல் துறையின் மிரட்டல்கள், தொழிலாளர் விரோத நிர்வாகத்தின் மிரட்டல்களுக்கு சிறிதும் அஞ்சாமல் தன் கொள்கையில் விடாப்பிடியாக இருந்து, சிறைவாசங்களை அனுபவித்து பல்வேறு தொழிலாளர்களின் கண்ணீரை துடைத்துள்ளார்.

1937ம் ஆண்டில் தேர்தல் சமயத்தில் தொழிலாளர்களின் நலனுக்காக கொடுத்த வாக்குறுதிகளை காப்பாற்ற ராஜாஜி தவறிய பொழுது அவரை கடுமையாக விமர்சிக்க தேவர் தயங்கவில்லை. மானாமதுரையில் நடந்த பொதுக்கூட்டத்தில் பேசிய தேவர் ராஜாஜியின் தொழிலாளர் விரோத போக்கை கண்டித்து பேசினார்.

டி.வி.எஸ். தொழிற்சாலை வரலாற்றில் முதன் முதலாக தொழிற்சங்கம் அமைத்த பெருமை தேவரையே சாரும். 1945ல் தேவரை தலைவராகக் கொண்டு டி.வி.எஸ். தொழிலாளர் சங்கம் அமைக்கப்பட்டது. பொம்மையா, தொழிற்சங்க செயலாளராக இருந்தார். தேவர் இறுதி நாள் வரை அச்சங்கத்தின் தலைவராக இருந்தார். தேவரின் மறைவுக்கு பின் பொம்மையா தலைவராகவும் மூக்கையாத் தேவர் கௌரவத் தலைவராகவும் இருந்தனர். 1952 மற்றும் 1957ல் பொதுத்தேர்தல்கள் நடந்த பொழுது பார்வர்டு பிளாக் கட்சியின் தேர்தல் அறிக்கையில் தேவரின் சிந்தனையின்படி தொழிலாளர்களின் பிரச்சனைகளுக்கு அதற்கான தீர்வுகளும் இடம் பெற்றிருந்தன. முதலாளித்துவ குடும்ப பின்னணியில் பிறந்த தேவர் தன் வாழ்நாளின் பெரும்பகுதியை முதலாளித்துவத்திற்கு, முதலாளித்துவ எதிர்ப்பு போராட்டத்தில் தன்னை அர்பணித்துக் கொண்டது, உழைக்கும் வர்க்கத்தின் மீது தேவருக்கு இருந்த அளவில்லா ஈடுபாட்டினையும், தொழிலாளர்கள் மீது கொண்டிருந்த நம்பிக்கைக்கு உகந்தவராக இருந்தார் என்பதும் பெருமை கொள்ளத்தக்க அம்சங்களாகும்.



**மங்கை சூதகமானால் கங்கையில் மூழ்கலாம்**
**கங்கையே சூதகமானால் எங்கே மூழ்குவது.**



வ.உ.சி. மற்றும் காமராஜருடன் தேவர்.



1937ல் மதுரை காங்கிரஸ் மாநாட்டில் தேவர் திருமகனார்

# உழைக்கும் மக்களின் உரிமைப் போரில் தேவர்

**என். சிங்கராஜ்,**
உடற்கல்வி ஆசிரியர்,
மதுரை கல்லூரி மேல் நிலைப்பள்ளி, மதுரை.

தொழிற்சங்கப் போராட்டம் என்பது வெறும் கூலி உயர்வுக்காகவும், பஞ்சப்படிககாகவும் மட்டும் அல்லாமல் தொழிலாளர்களின் உணர்வுகளையும் போராட்டக் குணங்களையும் இந்திய சுதந்திர போராட்டத்துடன் இணைத்து அரசியல் போராட்டமாகக் கொண்டு சென்றவர் பசும்பொன் தேவர். அவருடைய அனல் தெறிக்கும் பேச்சாற்றலைக் கண்டு நடு நடுங்கிய வெள்ளையர் ஆட்சி அவருக்கு வாய்ப்பூட்டு சட்டம் போட்டது. மேடையில் பேசத் தடைவிதித்தது. இந்திய விடுதலைக்காகவும், ஏழை, எளிய உழைப்பாளி மக்களின் சம உரிமைக்காகவும், தன் வாழ்நாளில் நான்காயிரம் நாட்களைச் சிறையிலேயே கழித்த விடுதலைப் போராளி தேவர்.

### தேவர் தலைமையிலான தொழிற்சங்கங்கள்

1937 களில் மதுரை மாநகரில் இருந்த சவரத் தொழிலாளர்கள் சங்கம், சலவைத் தொழிலாளர்கள் சங்கம், நகர சுத்தித் தொழிலாளர்கள் சங்கம். தையற் தொழிலாளர்கள் சங்கம், வர்த்தக தொழிலாளர்கள் சங்கம், காபி ஹோட்டல் தொழிலாளர் சங்கம், கை வண்டி தொழிலாளர் சங்கம், அரசு பைண்டிங் தொழிலாளர் சங்கம், மகாலெட்சுமி மில்ஸ் தொழிலாளர் சங்கம், மதுரை நிட்டிங் கம்பெனி தொழிலாளர்கள் சங்கம், மதுரை மாவட்ட இரயில்வே தொழிலாளர் சங்கம் உள்ளிட்ட 23 தொழிற்சங்கங்களின் தலைவராக பசும்பொன் தேவர் இருந்து செயலாற்றினார். மதுரை T.V.S. கம்பெனியில் முதல் முதலில் மோட்டார் தொழிலாளர் சங்கத்தை ஏற்படுத்தியவர் தேவர் தான். இந்த தொழிலாளர் சங்கங்களின் தலைவராக தேவரும், துணைத் தலைவராக ஜீவானந்தமும் செயலாளராக சசிவர்ணத்தேவரும் இருந்து தொழிலாளர் வர்க்கத்தைப் பாதுகாக்கப் பல்வேறு தொடர் நடவடிக்கைகளில் ஈடுபட்டு வந்தனர்.

### முதலாளிகள் சங்கம்

1934 ஆம் ஆண்டு சர் H.P. மோடி என்பவர் பம்பாய் மில் முதலாளிகள் சங்கத்தின் செயலாளராக இருந்தார். அவர் மத்திய சட்டசபையில் நியமன உறுப்பினராக இருந்தார். இவர் இந்திய தொழிற்சங்க சட்டத்தில் ஒரு திருத்தம் கொண்டு வந்தார். எந்த தொழிற்சாலையிலாவது 7க்கு மேற்பட்ட தொழிலாளர்கள் ஒன்று சேர்ந்து பொருளாதார கோரிக்கைகளுக்காகவும் அல்லது வேறு எந்த கோரிக்கைகளுக்காகவும் வேலை நிறுத்தம் செய்தால் அவர்களுடைய 8 நாள் சம்பளத்தை பிடித்தம் செய்து கொள்ள முதலாளிகளுக்கு உரிமை உண்டு, என்பது தான் அந்த திருத்தம். அன்றைய முதலாளிகளாக இருந்த காங்கிரஸ் உறுப்பினர்களின் .ஆதரவையும் இத்திருத்தம் பெற்றது.

### வேலைநிறுத்தம் ஏன் ?

சென்னை ராஜதானியின் முதல் மந்திரி சபை 1937 ஆம் ஆண்டு இராஜாஜி தலைமையில் அமைந்தது. தமிழ்நாடு எங்கும் வேலை நிறுத்தங்கள் வெடித்தன. இதற்கு காரணம் காங்கிரஸ் தேர்தல் அறிக்கையில் விவரிக்கப்பட்டிருந்த தொழிலாளர் நலன் சார்ந்த கோரிக்கைகள் பரிசீலிக்கப்படவில்லை. வாக்களித்த தொழிலாளர்களை இது ஆத்திரம் ஊட்டியது. ஆட்சியில் அமர்ந்த காங்கிரஸ் மந்திரிகள் முதலாளிகளுக்கு ஆதரவு தந்தார்கள். எனவே தொழிலாளர்கள் போராட

வேண்டிய கட்டாயத்திற்கு தள்ளப்பட்டனர்.

அன்றைய சூழலில் தொழிலாளர்கள் சில சிறிய கோரிக்கைகளை பெறுவதற்குக் கூட பெரிய போராட்டம் நடத்த வேண்டியிருந்தது. 1934ல் கோயம்புத்தூர் காளீஸ்வரி மில்ஸ், சோமசுந்தரா மில்ஸ், ஸ்டேட் பார்ம் ஸ்பின்னிங் மில்ஸ் போன்றவற்றில் ஊதிய உயர்வு கோரி தொழிலாளர்கள் போராடினார்கள். 1935ல் பாண்டிச்சேரி சவானா மில்ஸ், கோவை லெட்சுமி மில்ஸ் போன்றவற்றில் போராட்டம் நடைபெற்றது. 1938ல் கோவை மில் தொழிலாளர் சங்கங்களின் அறைகூவலை ஏற்று கோவை மாவட்ட அனைத்து தொழிலாளர்களும் போராட்டத்தில் ஈடுபட்டனர். கோவை மாவட்டமே ஸ்தம்பித்தது. 1937ல் மதுரையில் உள்ள ஹார்வி மில்ஸில் வேலை நிறுத்தம் நடைபெற்றது. இதனை தொடர்ந்து பசுமலை ஸ்ரீ மகாலெட்சுமி மில்ஸ், மீனாட்சி மில்ஸ் மற்றும் நிட்டிங் கம்பெனிகளிலும் வேலை நிறுத்தப் போராட்டம் தொடர்ந்து நடத்தப்பட்டன.

தொழிலாளர் நலம் காக்க, அவர் தம் உரிமை காக்க, உழைத்த, உண்மையான தொழிற்சங்கத் தலைவராகத் திகழ்ந்தவர் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் என்பதை இந்த ஆய்வில் இருந்து தெளிவாக தெரிந்து கொள்ள முடிகிறது.



**எம்மதத்தினருக்கும், எக்குலத்தினருக்கும், எந்நாட்டவருக்கும் நீதிகளை தரும் பெருமை பெற்ற நூல் குறளாகும்.**



சென்னை மாகாண தொழில் அமைச்சர் வி.வி.கிரி அவர்களுடன் தேவர்.



சுபாஷ் சந்திர போஸுடன் தேவர் திருமகனார் 5.9.1939

# ஆப்ப நாட்டில் பூத்த புது நிலவு

**கு. பாலசுப்பிரமணியன்**
மேலச்சாக்குளம் (இருப்பு) முதுகுளத்தூர்.

ஆப்ப நாட்டில் 1908ல் பூத்த நிலவே
அன்னை இந்திராணிக்கும் அய்யன்
உக்கிர பாண்டியருக்கும்
பூத்த புதுமை நிலவே

பசும்பொன் நகரில் பிறந்திட்ட நிலவே
பாரோர் போற்றும் புது நிலவே
இளமையில் கல் என்பதற்கிணங்க
இனிய தமிழ் அறிந்திட்ட நிலவே

அன்னிய மொழியாம் ஆங்கிலத்தை
அறிந்து பேசிய நிலவே
தென்னாட்டின் கலையில் சிறந்த
சிலம்பம் கற்ற சீர் நிலவே

அன்னியரை எதிர்க்க அழகிய
குதிரையேற்றம் அறிந்திட்ட நிலவே
துள்ளிய வாள் பயிற்சியும்
அறிந்திட்ட புதுமை நிலவே

அன்னியரை எதிர்த்து விரட்ட
துப்பாக்கிச் சுடுதலில் தேர்ந்திட்ட
துச்சமென எதிர்த்திட்ட
தூய பூ நிலவே

இந்து மத நூல்களை இடை
விடாமல் கற்று தேர்ந்த
எந்த பெண்ணையும் ஏறெடுத்து
பார்க்காத இறையருள் நிலவே

முப்பத்திரண்டரை கிராமமிருந்தும்
மூவாசை மறந்திட்ட பூவே
பர்மா நாட்டில் ஆங்கிலத்திலும்
தமிழிலும் சொற்பொழிவாற்றிய நிலவே

வாக்கு கேட்காமலே மக்களவைக்கும்
சட்டப் பேரவைக்கும் இருபத்தைந்து
ஆண்டுகள் தன்னிகரில்லா
வெற்றி கண்ட நிலவே

பட்டம் பதவி துறந்திட்ட சீமான்
வாழ்நாளில் ஐந்தில் ஒரு பங்கை
சிறையில் கழித்திட்ட சிங்கம்
ஒழுக்கத்தை உயிராகக் கொண்ட நிலவே

கைரேகைச் சட்டத்தை நீக்க
போராடி வெற்ற பெற்ற நிலவே
அன்னிய ஏகாதி பத்தியத்தை
விரட்ட விடுதலைக்கு வித்திட்ட நிலவே

உலகின் பெரும்பகுதியை ஆள்கிற
ஆங்கிலத்தில் தென்னாட்டு சிங்கம்
காசிப் பல்கலை கழகத்தில் மூன்று
மணி நேரம் ஆங்கிலத்தை அடக்கி ஆண்டநிலவே

தன்னலங்கருதாத தியாக செம்மலே
தென்னாட்டு மறவர் குலத்தவர் போற்றும்
தெய்வீகமும் தேசீயமும் காத்திட்ட
செம்மல் புகழ் நிலவே வாழிய வாழியவே.

**விவசாயம் தெரியும் வியாபாரம் தெரியாது**

# விவசாயிகளின் பிரச்சனைகளில் தேவரின் பங்கு

முனைவர். **ப. கலா,**
விரிவுரையாளர், சுற்றுலாத் துறை,
தொலைதூரக் கல்வி இயக்ககம்,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்,
மதுரை.

இருபதாம் நூற்றாண்டில் மனித குலம் பெற்ற மாமனிதர்களுள் ஒருவர் முத்துராமலிங்கத் தேவர். நான், என், எனக்கு என்று தன்னை பற்றியே எண்ணிக் கொண்டிருக்கும் மனிதர்கள் நிறைந்த நம் சமூகத்தில் பொது உடைமை கருத்துக்களை எல்லோருக்கும் எடுத்துக்கூறிய தலைவராகத் திகழ்ந்தவர்தான் முத்துராமலிங்கத் தேவர் அவர்கள். ''நான் எனக்காக வாழ்கிறவன் அல்ல, எனக்காக எதிர்பார்த்து எதையும் சொல்லுவதோ, எழுதுவதோ, பேசுவதோ இல்லை. குறிப்பாக அடியேனுடைய சிந்தனை, சேவை, செயல் எல்லாமே மக்கள் சக்தியின் பிரதிமைகளான சமூகத்திற்காகவும், தேசத்திற்காகவும், தெய்வீகத்திற்காகவுமேயின்றி எனக்காக அல்ல'' என்பதை வாழ்க்கைக் குறிக்கோளாக கொண்டு அதற்கு செயல் வடிவம் கொடுத்தவர் முத்துராமலிங்கத் தேவர்.

தேவர் காலத்தில் உழுவோர் நலன் காப்பதில் பெரும் பங்கு வகித்தார். இவர் 32 1/2 கிராமங்களுக்கு சொந்தக்காரர். ஒரு லட்சம் பனை மரங்களை உடையவர். குறுநில மன்னர்களின் ஆட்சியில் உழவர்கள் படும் துயரை அறிந்தவர். அவர்களின் நலன் காக்க ''தமிழ்நாடு ஜமீன் விவசாயிகள் சங்கம்'' என்ற அமைப்பை உருவாக்கினார். இதன் மூலம் பல்வேறு மாநாடுகளை கூட்டினார். ராஜபாளையத்தில் தமிழகம் தழுவிய விவசாயிகள் மாநாட்டை கூட்டினார். இதில் பேரா. என்.ஜி. ரங்கா, கேரளா பொதுவுடைமை தலைவர் ஈ.எம்.எஸ். நம்பூதிரிபாட், ஏ.கே. கோபாலன், பி. இராமமூர்த்தி, ஜீவானந்தம் மற்றும் சீனிவாசராவ் போன்ற பெருமக்கள் பங்கு பெற்றனர். அம்மாநாட்டில் பல இலட்ச மக்கள் பங்கேற்றனர்.

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் கொண்டு வரப்பட்ட ஜமீன்தாரி முறை இந்திய மக்கள் வாழ்வில் பெரும் துன்பத்தை ஏற்படுத்தியது. நிலச் சுவான்தாரர்கள் பிடியில் சிக்கி மக்கள் சீரழிந்தனர். விவசாயிகள் பிறந்தது முதல் இறக்கும் வரை கடனாளியாகவே இருந்தனர். ''Every Farmers of India born on debt Live on debt. And died on debt'' என்ற நிக்கோல்சன் கூற்றுப்படி இந்திய மக்கள் துயரத்தில் வாழ்ந்தனர். இந்நிலை மாறுவதற்கு தேவர் மிகவும் பாடுபட்டார். ஜமீன்தாரி முறை ஒழிக ! ஒழிக என்று கோசமிட்டு பல விவசாயிகள் நலன் காக்கும் மாநாட்டை கூட்டினார்.

காங்கிரஸ் அமைப்பு இம்முறைக்கு முடிவு காண பல்வேறு போராட்டங்களை நடத்தியது. தன் தேர்தல் அறிக்கையில் ஜமீன்தாரி முறை ஒழிப்போம் என்று கூறியது. இதனைப் பற்றி ஆராய பிரகாசம் தலைமையில் ஒரு குழுவை உருவாக்கியது. அதன் அடிப்படையில் பிரகாசம் கமிட்டி அறிக்கை அளித்ததும் காங்கிரஸ் அரசு அதனை நிறைவேற்றியது. ஜமீன்தாரி முறை ஒழிக்கப்பட்டது. விவசாயிகளின் வாழ்வில் திருப்பம் ஏற்பட்டது. தமிழகத்தை ஆண்ட குறு நில மன்னர்களுள் பெரும்பான்மையோர் தேவரின் உறவினர்கள். அவர்களின் வளத்தைப் பறிக்கும் ஒரு பெரும் அறப்போரைத் தேவர் துவங்கினார். தொடர்ந்து போராடி இறுதியில் வெற்றியும் பெற்றார். உழுதவருக்கே நிலத்தை சொந்தமாக்கினார். தமிழக உழவர்களின் வாழ்வில் ஒளியேற்றினார்.

விவசாயம் செய்தும் சரியான விலை விளைபொருள்களுக்குக் கிடைக்காததை கடுமையாக எதிர்த்தார். வர்த்தகர்களின்

செயற்கையான விலைக்குறைப்பைச் சாடினார். ஏழை விவசாயிகளுக்கு குறைந்த வட்டியில் கடன் கிடைக்க வேண்டுமென்றார். நகர்புற வியாபார மக்களின் இந்த விலைச் சுரண்டலை விவசாயிகளுக்குச் சுட்டி காண்பித்தார்.

விவசாயிகளுக்கு நன்மை செய்ய விரும்பினால் அரசாங்கம் நிலச் சுவான்தாரர்களின் உறவை அறுக்க வேண்டும் என்றார். விவசாயிகள் கிராமங்களை விட்டு நகரங்களுக்குச் செல்வதால் சீரழியும் விவசாயத்தை மேற்கொள்காட்டி அவர்களுக்கு ஊதியங்களும், மானியங்களும் வழங்க வேண்டினார்.

நில உச்ச வரம்பு சட்டத்தை கிராமத்தில் இருந்து தொடராமல் மேல் மட்டத்தில் இருந்து அமுல்படுத்த கோரினார். சேமிப்பு என்பது நகர்ப்புறத்திற்கு மட்டும் சேரக் கூடாது என்பதில் கண்டிப்புடன் இருந்தார். 20% நகர்புறத்துக்காரர்கள், 80% கிராமபுற மக்களை ஆதிக்கம் செலுத்தும் போக்கை கண்டித்து, விவசாயிகளுக்காக தனது கடைசி காலம் வரை போராடினார். இரயில்வே தொழிலாளர்கள் சங்கம் போலவும், தபால் தந்தி ஊழியர்கள் சங்கம் போலவும், விவசாயிகளுக்கும் தங்கள் தேவைகளை அரசிடமிருந்து பெறுவதற்கு வலுவான சங்கம் தேவை என்பதனைப் பலவிடங்களிலும் வலியுறுத்தி கூறியுள்ளார்.

நெசவாளர்கள் நாட்டில் படும் இன்னல்களைக் கண்டு வெதும்பியவர் தேவர். கௌவரமான தொழிலைச் செய்பவர்கள் நெசவாளர்கள் என்று போற்றப்படுவதுண்டு. ஆனால் அன்றாட வாழ்க்கையை கழிப்பதற்கும் அவர்கள் படும் துயரத்தைப் போக்குவதற்கும் வழி வகையும் எடுத்துரைத்தவர் தேவர். மில் துணிகளுக்கு போடப்படும் செஸ்வரியை இன்னும் அதிகப்படுத்துவதன் மூலம் கைத்தறி துணிகள் மலிவான விலைக்குக் கிடைக்கும் என்றால் அதனால் மக்கள் விரும்பிக் கைத்தறித் துணியை வாங்குவார்கள். அதன் மூலம் விவசாய உற்பத்தி பெருகும், விவசாயத் தொழிலாளர்களுக்கு வேலைவாய்ப்பும் அதிகமாகும் என்பதனை அரசுக்கும், மற்றவர்களுக்கும் எடுத்துக் கூறியவர் தேவர்.

24.02.1954ல் கவர்னர் சொற்பொழிவின் மீது தேவர் அவர்கள் சென்னை சட்டசபையில் விவசாயிகளின் நிலைமையையும் அவர்களின் வாழ்க்கை தரம் பற்றியும் விவாதித்துள்ளார். சட்டசபையில் பேசிய சில குறிப்புக்கள், ''இந்த நாட்டில் உள்ள விவசாயிகளின் உண்மையான நிலவரம் என்ன ? எங்கு பார்த்தாலும் பூச்சிகள் விழுந்து பயிர்கள் சர்வநாசம் அடைந்து விட்டன. அறுவடை செய்த பல விவசாயிகள் அளந்து பார்க்கும் போது தலைமையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டார்கள். சொல்ல முடியாத சேதமும், அதனால் விவசாயிகளுக்கு ஏற்பட்டிருக்கிற அல்லலும் தொந்தரவும் இந்த சர்க்காருக்குத் தெரியாதா ? தெரிந்து கொள்ள வேண்டுமென்று விரும்பியிருந்தால் இவைகள் அவர்கள் கவனத்திற்குத்தான் வந்திருக்காதா ? '' என்று ஆவேசமாக பேசி விவசாய மக்களின் நிலையினை விளக்கி கூறியுள்ளார். மேலும் பஞ்சாப் பிரதேசங்களை பார்வையிட்டு அறிக்கையை தயாரித்த சில பிரமுகர்களையும் சாடியுள்ளார். ஷெஜ்மாடி போன்ற பிரமுகர்கள் சுற்றுப் பயணம் மேற்கொண்டு வெறும் வாய்மொழி அறிக்கைகளை மட்டும் வீசி வந்துள்ளனர் என்று குற்றம் சாட்டினார் தேவர். இதன் மூலம் விவசாயிகளின் நலனில் உண்மையான அக்கறையும், நோக்கமும் உடையவராய் தேவர் திகழ்கிறார்.

ஆங்கில அரசு காலத்தில் விவசாயிகளுக்கு பெரிய நன்மைகள் ஏதும் செய்யவில்லை என்று குறை கூறுகிறார். ஆங்கில அரசால் மக்களுக்கு இன்னல்களும் சங்கடங்களும், தொல்லைகளும் பெருகி வருவதாக சட்டமன்றத்தில் குரல் எழுப்பியுள்ளார் தேவர்.

ஆங்கில அரசு கடன் ஒத்திவைப்புச் சட்டம் கொண்டு வந்ததன் மூலம் விவசாயிகளுக்கு ஒன்றும் நன்மை ஏற்படவில்லை யென்றும், அதன்

மூலம் மக்களை மேலும் துன்பத்திற் குள்ளாயிருக்கிறார்கள் என்று கூறினார் தேவர். அதற்குப் பதிலாக குறைந்த வட்டிக்கு கடன் கொடுக்கும் வங்கிகளை நிறுவ அரசு முயற்சிக்கவில்லை என்றும், அப்படி செய்திருந்தால் இந்தச் சட்டத்தால் உண்மையான பலன் ஏற்படலாம் என்றும் எடுத்துரைக்கின்றார். அப்படியில்லாமல் இந்த சட்டத்தை மாத்திரம் கொண்டு வந்திருப்பதால் விவசாயிகள் கடன் கிடைக்காமல் அலைந்து கொண்டும் கடன்காரர்களின் தொல்லைகளினால் பலரது வாழ்க்கை மிக மோசமாகப் போகிறது என்றும் அரசை மேலும் சாடுகிறார். மேலும் விவசாயிகளின் தானியங்கள், சாமான்கள் லேவாதேவிக்காரர்களால் ஜப்தி செய்யப்படும் நிலையும் அவர்களுக்கு நிரந்தரமாக ஒரு நிவாரணமும் அளிக்காமல் அரசு உள்ளது என்றும் சட்டசபையில் விவாதித்துள்ளார்.

விவசாய கடன் ஒத்திவைப்புச் சட்டம் விவசாயிகளுக்கு உண்மையான நிவாரணம் அளிக்கவில்லை என்றும் அதற்குப் மாறாக லேவாதேவிக்காரர்களின் கருணையை நம்பி அவர்கள் போடச் சொன்ன இடத்தில் கையொப்பம் போட்டு விட்டு (6 சதவீத வட்டிக்குக் கொடுக்கும்) ரூபாய்க்கு 6 அணா வட்டி (37%) வாங்கினாலும் கூட அவர்களது பாதாரவிந்தங்களே கதி என்று இருந்தால் தான் விவசாயிகள் கடன் பெற முடியும் என்று விவசாய மக்களின் இன்னல் நிலையை தேவர் விளக்கினார்.

மொத்தத்தில் கடன் நிவாரணம் சட்டம் ''பாலுக்கும் காவல்; பூனைக்கும் தோழன்'' என்று கூறும் அளவிற்கு விவசாயிகளின் நலன் (பெயரளவில்) பாதுகாப்பது போலவும், நிலச் சுவான்தாரர்களின் தோழனாகவும் ஆங்கில அரசு செயல்படுகிறது என்று சுட்டி காட்டியுள்ளார். அதனால் இந்தச் சர்க்கார் இந்நாட்டிலுள்ள நிலச்சுவான்தார்களின் நட்பை ஜமீன்தாரர்களின் தோழமையை நிலப்பிரபுக்களின் உறவை முறித்தால் தான் இந்த அரசு விவசாயிகளின் நலனின் அக்கறை செலுத்த முடியும் என்று ஆணித்தரமாக கூறியுள்ளார்.

விவசாயிகளுடைய விளைபொருட் களுக்கு ஓர் விலை. ஆனால் விவசாயிகள் வாங்கக்கூடிய விவசாய இடு பொருட்களுக்கு ஓர் விலையாக வைத்து விவசாயிகளை ஏமாற்றும் வகையில் அன்றைய பிரிட்டிஷ் கவர்னரின் தத்துப்பிள்ளைப் போல் இருந்த ''சேம்பர் ஆப் காமர்ஸ்'' உள்ளது என்று கூறினார். அறுவடை காலத்தில் ஒரேயடியாக விலையை இறக்கியும் கடன் தொந்தரவினால் குறைந்த விலைக்கு எல்லா தானியத்தையும் ஒரேயடியாக வாங்கிக் கொண்டு தானிய அறுவடையில்லாத காலத்தில் உணவுப் பொருட்களின் விலையை தான் வாங்கியதைப் போல பல மடங்கு உயர்த்தி விற்கும் வியாபார வர்க்கத்தினை எதிர்த்து குரல் எழுப்பியுள்ளார்.

பஞ்ச காலத்தில் விவசாயிகளுக்கு நிவாரணம் அளிக்க சில ஜில்லாக்களில் நிவாரணமளிக்கும் வேலைகளை ஏழை விவசாயிகளுக்கு கொடுக்கும்படி தேவர் வலியுறுத்தினார். பொதுவாக இராமநாதபுரம் ஒரு பஞ்சப் பிரதேசம் என்றும் அதற்கென தனியாக பஞ்சப் பிரதேசமாக இராமநாதபுரம் ஜில்லாவை பிரகடனப்படுத்த வேண்டும் என்றும் வேண்டிக் கொண்டார். பஞ்ச நிவாரண வேலையாக கிராமத்தில் நிறைய கிணறுகள் வெட்டித்தர வேண்டும் என்று சர்க்காரை வற்புறுத்தினார். இதன் மூலம் தண்ணீர் வளம் பெருகும் என்றும், விவசாயத்தை பெருக்கிக் கொள்ளலாம் என்றும் அறிவுரை கூறினார்.

கிணறுகளை வெட்டுவதற்கு ராணுவத் தினரை பயன்படுத்துவதற்குப் பதிலாக ஏழை விவசாயிகளைப் பயன்படுத்தினால் பஞ்ச நிவாரண வேலை அவர்களுக்கு ஒரு உதவியாக இருக்கும் என்றும், ராணுவத்தினருக்கு ஒரு கிணறு வெட்ட ரூ. 5000க்கும் மேல் செலாகிறது. அதையே நம் நாட்டுக் கூலிகளைக் கொண்டு ரூ. 500 ரூபாயில் கிணறு வெட்டி விடலாம் என்றும் அதனால் அந்நிய சர்க்கார் ஏழை விவசாயிகள் நலனில் அதிக கவனம் செலுத்துமாறு அறிவுறுத்தினார்.

நம் நாட்டின் விளை பொருளாகிய கரும்பு, மிளகாய், பருத்தி போன்றவைகளின் விலையை நிர்ணயிக்கும் நம் சர்க்காரின் அதிகாரியைக் கைக்குள் போட்டு கொண்டு மிகக் குறைந்த விலையில் நிர்ணயிக்கச் செய்து விவசாயிகளுக்கு கிடைக்கும் கொஞ்ச இலாபத்தையும் கெடுத்து விடுவதாகவும் அதே போல் நம் நாட்டு விவசாயிகள் வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யும் ரசாயன உரங்கள், பம்பு செட்டுகள், ஆயில் இன்ஜின்கள் போன்றவற்றின் விலையை மட்டும் இறக்குவதற்கு இடைத்தரகர்கள் முயற்சி எடுக்க வில்லை என்று தேவர் குறை கூறுகிறார். பொதுவாக வியாபாரிகள் நடந்து கொள்ளும் முறையும் அதைக் கண்டிக்க முடியாமல் இருக்கும் இந்த பலவீன சர்க்கார் செய்யும் மற்ற காரியங்களும் இன்னலும் விவசாயிகளையே அதிகம் பாதிக்கின்றது. எனவே அரசு முதலில் விவசாயிகளின் பிரச்சினைகளை களைய முன்வர வேண்டும் என எடுத்துரைத்துள்ளார்.

ஆங்கில அரசு கஞ்சித் தொட்டிகளையும், பஞ்ச நிவாரண வேலைகளையும், மானியங்களையும் படிப்படியாக குறைத்துக் கொண்டே வருவதால் விவசாயிகளின் நிலை இன்னும் மோசமடைந்து வருகிறது. எனவே அதிக அளவில் மானியங்களையும், உணவு பொருட்களின் மீதான வரியைக்குறைத்து, விலை நிர்ணயம் சரியான அளவில் ஏற்படுத்தினால் இந்த விவசாயிகளின் நிலை உயரும். எனவே அரசு இந்த முயற்சிகளில் தீவிரம் காட்ட வேண்டும் என்று கூறுவதன் மூலம் தேவர் விவசாய மக்களின் அடிப்படை நலனில் அதிக ஆர்வம் காட்டி அவர்களின் வாழ்க்கை தரத்தை உயர்த்த வழி வகை செய்துள்ளார் என்பது நன்கு புலனாகிறது.

விவசாயிகளின் நிலங்களுக்கு வரி, உபரி வரி, பிராந்தியத்திலுள்ள தரிசு நிலங்களுக்கும் வரி என்று வரி விகிதத்தை அதிகரித்து மேலும் விவசாயிகளை அறவே கடனுக்குள் தள்ளியுள்ளது ஆங்கில அரசு. எனவே வரி விதிப்பில் மாற்றமும், தரிசு நிலங்களில் வரி விலக்கும் அளிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார் தேவர். அதே போன்று ஜமீன்தார்கள் சட்டப்படி தங்கள் பிராந்தியத்தில் உள்ள கண்மாய், ஏரி, குளம் போன்றவற்றை மராமத்து செய்ய 1908 ஆம் ஆண்டு ஜமீன் சட்டம் கொண்டு வரப்பட்டது. ஆனால் அதன்படி எந்த ஒரு கண்மாய், ஏரி, குளமும் பராமரிக்கப்படவில்லை. எனவே விவசாயிகள் தங்களது நிலங்களை பராமரிக்க போதிய தண்ணீரும், விதை பொருளும் இன்றி மிகுந்த துன்பத்திற்குள்ளாயினர். இதற்கான முயற்சியை அரசு உடனே எடுக்க ஆவன செய்ய வேண்டும் என்று அரசை கேட்டுக் கொண்டார்.

நீர்ப்பாசனம் என்பது சரியாகக் கையாளப்படாவிட்டால் நீர் பாஷணமாகவே மாறிவிடும் என்று எச்சரித்துள்ளார். எனவே நீர்ப்பாசன வசதிகளை சரியாக செய்யாவிடில் அது ''பாஷணம்'' (விஷம்) போல ஆகிவிடும் என்று கூறுகிறார் தேவர். 23.03.1954ல் சென்னை சட்டசபையில் தேவர் நீர்ப்பாசன வசதி எவ்வளவு அவசியம் என்பதை இவ்வாறு சுட்டிக்காட்டியுள்ளார்.

தேவர் ஒரு தேசீயவாதி, மிகச்சிறந்த ஆன்மீகவாதி, தனது அரசியல் வாழ்க்கையில் நேதாஜி போன்றும் ஆன்மீக வாழ்க்கையில் சுவாமி விவேகானந்தர் போலவும் விளங்கினார். விவசாயக் குடும்பத்திலிருந்து பொதுவாழ்விற்கு வந்த தேவர் தன் நிலை எவ்வளவு உயர்ந்தாலும், விவசாயிகளின் அடித்தளமான பிரச்சனைகளை புரிந்து கொண்டு, அவர்களின் துயர் துடைக்கும் பணியில் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட அப்பழுக்கற்ற தலைவரே தேவர்.



**ஜாதியும் நிறமும் அரசியலுக்குமில்லை, ஆன்மீகத்துக்குமில்லை.**



மதுரையில் நேதாஜிக்கு அளிக்கப்பட்ட வரவேற்பில் தேவர்.



பர்மா ரங்கூனில் 1939 திருவாங்கூர் கொச்சி சமஸ்தானங்களில் பார்வார்டு பிளாக் தலைவர் ஜனாப். அப்துல் ரஹ்மான் உடன் தேவர் திருமகனார்.

# தேவரும் சமூக சீர்திருத்தமும்

முனைவர் **அ. சிங்காரவேல்**
இணைப்பேராசிரியர், வரலாறு,
பாரதிதாசன் பல்கலைக்கழகம்,
திருச்சி.

மனிதன் வாழும் அமைப்பிடம், புவியியல் மற்றும் சுற்றுச் சூழலைப் பொறுத்து அவன் உடல் அமைப்பால், நிறத்தால் மாறுபடுகின்றான். இந்த இயற்கையான மாற்றத்தை மனிதன் வேறுபாடாகக் கருதுகிறான். இந்த மாறுபாடு மனித சமூகத்திற்கு மட்டுமல்லாது விலங்கு மற்றும் தாவர இனத்திற்கும் பொதுவானதொரு இயல்பாகும். மேலும் மனித வள மேம்பாட்டிற்கு ஒவ்வொரு குடும்பமும் அல்லது சமூகமும் ஒரு தொழிலை சார்ந்து வாழுகிறது, அத்தொழிலை வைத்து ஏற்ற இறக்கம் காணப்படுகிறது. இந்த நியதியை சிந்திக்கும் ஆற்றல் படைத்த சமூகம் ஒரு கணம் சிந்தித்து விட்டால் அல்லது உணர்ந்து விட்டால் உலக சமூகத்தில் வேறுபாடு, ஏற்றத்தாழ்வு, ஏகாதிபத்தியம் என்ற உணர்வு நீங்கி பரந்து விரிந்த உலக சமூகத்தில் அமைதி ஏற்படும் என்ற தத்தவத்தை உணர்த்திய மகாவீரர், புத்தர் போன்றோர் மனித வளம் அழிவிற்காகத்தான் பெரும் நேரத்தையும், வளத்தையும் விரையம் செய்கிறதே தவிர ஆக்க சக்திக்கு அல்ல என்ற உண்மையை உணர்த்தினார்கள். எனினும் சில தீர்க்கத்தரிசிகள் உலக சமூகத்தை மாற்றும் சக்தியை பெற்று உழைத்ததால்தான் அவர்களை நாம் நாள்தோறும் சிந்தித்து வருகிறோம். அவ்வகையில் தென் தமிழகத்தில் சமூக ஏற்றத்தாழ்வை களைந்து சமரச சமூகத்தை ஏற்படுத்த உழைத்த, தனது வளங்களை, பொருளாதாரத்தை வாரி வழங்கிய தேவர் போன்ற ஒரு சிலரை மட்டுமே அறிய முடிகிறது.

தேவர் அவர்கள் ஏழை எளிய மக்களுக்கு குறிப்பாக ஆதிதிராவிட மக்களுக்கு தனது பெரும் பகுதி நிலத்தை இனாமாக அளித்து வாழ வழிவகுத்த மகான் என்று சொன்னால் அது மிகையாகாது. தென் தமிழ் நாட்டின் இரு இன மக்களுக்குத்தான் நீண்ட காலமாக பூசல் ஏற்பட்டுக்கொண்டு இருக்கிறது. இந்த பூசலை களைய அவர்கள் பொருளாதார ரீதியாக உயர்ந்து விட்டால் அவர்களுள் பகைமை நீங்கிவிடும், அவர்களது வாழ்வும் வளமாகிவிடும் என்ற தொலைநோக்கினால் தான் அவர் புகழ் ஆதிதிராவிட சமூகத்திலும் நிலைத்து இருக்கிறது.

### சமூக சீர்திருத்தம்

தேவரின் சமயத் தொண்டு பற்றி கூறும்போது, இவருக்கு பாலூட்டி வளர்த்தது ஒரு முகமதியப் பெண். கல்வியை புகட்டியவர் கிறிஸ்தவர். எனவே தேவர் அவர்கள் எம்மதமும் சம்மதம் எனவெண்ணினார். தேவர் சமயம், ஆன்மீகம், தத்துவம் போன்றவற்றின் பெயரால் செய்யப்படும் தீங்குகளைக் கடுமையாகக் கண்டித்தார். சமயங்களும், சடங்குகளும் பலவானாலும் அவர்கள் அனைவருக்கும் ''ஆண்டவன் ஒருவனே'' என்று சமய சீர்த்திருத்ததை ஊட்டியவராவார்.

இந்து மதக் கோட்பாடுகளை நன்கு உணர்ந்த தேவர், எல்லோரையும் சமமாகவே கருதினார். இறைவனின் திருவுருவமாக மக்கள் அனைவரையும் கண்டார். சாதி, மத பேதமற்ற உலகை காணவேண்டுமென்றும், உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற பாகுபாட்டிற்கு இடமில்லை என்றும், உயர்வு, தாழ்வு அற்றதுதான் மனித உலகம் என்றும், உயர்வு, தாழ்வு மனிதனாகக் கூறிக்கொண்டவை என்றும் கூறினார். உதாரணமாக அன்னத்தை ஊட்டும் வலது கரத்தை உயர்வாகவும், இடது கரத்தை தாழ்வாகவும் கருதினாலும் இறைவனை வணங்க வலது கரம் மட்டும் கொண்டு செயல்பட

யாரும் தயாரில்லை என்பதை விளக்கி, இருகரமும் இணைந்தால் தான் உயர்வு, எனவே உயர்வு, தாழ்வு எனக் கூறி சாதி சமய வேறுபாடுகள் கூடாது என வலியுறுத்தினார். மேலும் அரசியலிலும், ஆன்மீகத்திலும் செயல்படுபவர்கள் சாதியை பார்க்கக் கூடாது என கூறியுள்ளார்.

தீண்டாமைக் கொடுமைக்கு எதிராக தேவர் கூறும் போது சாதி என்பது மக்களை தனித்தனியாக பிரித்து விட்டது. சமூகத்தின் பிறப்பின் அடிப்படையில் தாழ்த்தப்பட்ட இனம் என்னும் முத்திரையைப் பெற்றதன் பயனாக, இவர்கள் புறக்கணிக்கப்படுகிறார்கள். காலக் கட்டாயத்தின் பேரில் சமூகத்தின் அடித்தளத்தில் அழுந்தி நசுங்கிக் கிடக்கும் தாழ்த்தப்பட்ட மக்களுக்குரிய சமூக நீதியைப் பெற்றுத்தரும் சமத்துவ நோக்கில் தேவர் அவர்கள் செயல்பட்டார்.

ஹரிஜன மக்கள் தாழ்த்தப்பட்ட நிலையிலிருந்து உயர வேண்டுமானால் முதலில் தொழிலின் பெயரால் சாதீய அமைப்பு முறை ஏற்படுவதை அரசாங்கம் உடனடியாக ஒழிக்க வேண்டும். மற்றும் ஹரிஜனங்களுக்கு சமூக நீதி மறுக்கப்படுவதற்கான அடிப்படைக்காரணம் பொருளாதார தாழ்வு நிலையே, இந்நிலை மாற்றி அமைக்கப்பட வேண்டும் எனத் தேவர் விரும்பினார்.

**கல்வி சீர்திருத்தம்**

கல்வியின் சேவையையும், தேவையையும் உணர்ந்த தேவர் கல்வி என்ற சாதனம் தான் எல்லா ஏற்றத்தாழ்வுகளையும் சமப்படுத்தக் கூடிய வலிமையான உபகரணம் என்றும், தாழ்த்தப்பட்டவர்கள் வாழ்க்கையில் பொருளாதார முன்னேற்றமடைய கல்வி மிக முக்கியம் என உணர்ந்து கிராமம் தோறும் பள்ளிகளை உருவாக்கவும், அது செவ்வனே செயல்படவும் முயற்சிகளை மேற்கொண்டார். ஒரு சாதி ஆதிக்கத்திலுள்ள உயர்தரப் பள்ளியில் மற்றொரு சாதி மாணவருக்கு இடம் கிடைக்காத நிலை மற்றும் அமருமிடம், உணவு உண்ணுமிடம் எல்லாம் தனித்தனியாக இருப்பதைக் கண்ட தேவர், அந்நிலையை களைய முன் வந்தார்.

குழந்தைகளின் அறிவுக்கண்களாக ஒளிப்பெறச் செய்பவர்கள் ஆசிரியர்களே. ஆனால் அவ்வாசிரியர்களுடைய ஊதியம் மிகவும் குறைவு, மத்திய அரசில் பணியாற்றும் கடைநிலை ஊழியர் ஊதியம் கூட ஆசிரியர்கள் பெறுவதில்லை. ஆசிரியர்கள் மன அமைதியோடு செயல்பட்டால்தான் மாணவர்களுக்கு பாடங்களை நன்கு போதிப்பர். இதனால் ஆசிரியர்களுக்கு ஊதியத்தை அதிகப்படுத்திக் கொடுக்க வேண்டும் என்று தேவர் கூறினார். ஆசிரியர்கள் இந்த நாட்டிற்கு செய்து வரும் தொண்டின் பெருமையை அரசு இன்னும் உணர்ந்து கொள்ள வில்லை என்பது தான் முக்கிய காரணம். இதை அரசு மறுக்க முடியாது என்றும், மேலும் மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்குமிடையே நல்லுறவு வலுப்பெற வேண்டும் என தேவர் எடுத்துரைத்தார்.

**ஆலய பிரவேச சீர்திருத்தம்**

தேவர் தனது உரையில் அன்னை மீனாட்சி அம்மன் ஆலயத்தையும், கோபுரங்களையும் ஆயிரமாயிரம் தூண்களும், சுவர்களும் தாங்கி நின்று பாதுகாக்கின்றன. அதே போல் இந்து மதத்தைக் காக்க, அதிலுள்ள இழிவை அகற்றி அதன் பெருமையினைக் காக்க, என் இன மக்கள் இந்து மதத்தின் தூண்களாகவும், அரண்களாகவும் நின்று காப்பார்கள் என்றார். என் சகோதரர்கள், ஆதிதிராவிடர்கள் ஆலய பிரவேசம் செய்வதற்கான அத்துணை ஏற்பாடுகளையும் நானே முன் நின்று நடத்துவேன் என்றார். அவரது உறுதிமொழி தமிழகமெங்கும் எதிரொலித்தது. அதைப்போல் ஆலயப் பிரவேசத்தில் வெற்றியும் பெற்றார்.

**குற்றப் பரம்பரைச் சட்ட எதிர்ப்பு**

ஆங்கிலேய அரசு இந்திய மக்களின் விடுதலை உணர்வை நசுக்கவும், அச்சமுதாயத்தை

களங்கப்படுத்தவும் பல சட்டங்களை அறிமுகப்படுத்தியது. அவற்றில் குறிப்பிடத் தக்கது குற்றம்பரம்பரைச் சட்டமாகும். இச்சட்டம் மக்கள் மனதில் ஆழமாகப் பதிந்து எதிர்ப்புக்குரல் பரவியது. மேலும் பெரும் போராட்டத்தின் வாயிலாக ரேகைச் சட்டம் ஒழிக தேவர் மகன் வாழ்க, ''வந்தே மாதரம்'' என்ற கோஷங்கள் வானைப் பிளந்தன. தமிழகம் ரேகைச்சட்டத்தை எதிர்த்து ஒரு பெரும் புரட்சிக்குத் தயாரானது. முத்துராமலிங்கத் தேவரின் இடைவிடாத முயற்சியின் பயனாகவே 1948 மே மாதம் குற்றப் பரம்பரைச் சட்டம் நீக்கப்பட்டது. அதன்பின் தென் தமிழ்நாட்டில் மறவரும், கள்ளரும் தேவரைத் தெய்வமாக மதித்து தேவர் காட்டிய வழியில் தங்களை விடுதலைப்போரில் ஈடுபடுத்திக் கொள்ள துணிந்தனர்.

**பிற சீர்திருத்தம்**

குடி குடியைக் கெடுக்கும் என்பார்கள். இதன் தீமையை உணர்ந்த தேவர் மதுவை ஒழித்து, குடியை காக்க வேண்டும் என்ற தொலை நோக்குச் சிந்தனையின் காரணமாக கள்ளினால் ஏற்படும் தீமைகளை உணர்ந்து நாடெங்கும் கள்ளுக்கடை மறியல் போராட்டம் தேவர் தலைமையில் நடைபெற்றது. முதுகுளத்தூர் பகுதியிலுள்ள கொடுமலூரிலும் கள்ளுக்கடையின் முன் மறியல் நடைபெற்றது. மறியலில் ஈடுபட்ட தொண்டர்களை காவலர்கள் வைக்கோல் பிரியால் கட்டி இழுத்துக் கொண்டு சென்றனர். இச்செய்தியை அறிந்த தேவர் மறியல் செய்யும் தொண்டர்களைச் சட்டப்படி கைது செய்து சிறைக்கு அனுப்புங்கள். இதற்குப்பின் அத்துமீறி காவலர்கள் செயல்பட்டால் பெரும் போராட்டத்தை சந்திக்க நேரிடும் என்று எச்சரித்தார். மேலும் தமிழகத்தில் மதுவை ஒழிக்கவும், மக்களை அப்பிணியிலிருந்து விடுபடவும் பல போராட்டங்களை நடத்தி மதுவிலக்கு அமல் சட்டம் இயற்றுவதற்கு காரணமாக இருந்தார்.

ஆணாதிக்கச் சமூகத்தின் பிடியில் சிக்கித் தம் உரிமைகளை இழந்து வாழும் பெண் சமுதாயத்தவருக்குரிய சமூக நீதியைப் பெற்றுத் தருவதற்காகவும் தேவர் குரல் கொடுத்தார். சமூகத்தில் ஒருவர் பிரிதொருவரை அடக்கியாளுவதையும், அடிமைப்படுத்து வதையும் வன்மையாகக் கண்டனம் செய்யும் முத்துராமலிங்கத் தேவர், பெண்ணாசை காரணமாக தீய செயல்கள் செய்வதையும் அவர்களை ஈடுபடுத்துவதையும் சுட்டிக்காட்டியதுடன், பெண்களைப் போதைப் பொருள்களாக நினைத்து கபடமாடும் போலிச்சாமியார்களையும் இனம் காட்டினார். பெண்களுள் மூத்தோரைத் தாயாகவும், இளையோரை உடன் பிறந்த சகோதரிகளாகவும் மதிக்க வேண்டுமென தாம் உரையாற்றிய பல்வேறு கூட்டங்களிலும் எடுத்துரைத்தார். பெண்ணினத்தின் மீதும், தாய்ப்பாசத்தின் மீதும் தேவருக்குரிய மரியாதை அளவு கடந்தது.

உலக சமூகத்தில் சிலர் தான் முற்றிலுமாக தனி வாழ்வை துறந்து பொதுவாழ்வை மேற்கொண்டவர்கள். தேவர் அவர்கள் மிக இளமையிலேயே கல்வியை நன்கு கற்று

''கற்க கசடற கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக''

என்ற வள்ளுவத்தின் தெய்வ மொழிக்கேற்ப நின்றவராவார். தேவர் அவர்கள் வாழ்க்கையின் ஆரம்பம் முதல் இறுதி வரை சமூக சீர்த்திருத்திற்கும், மாற்றத்திற்கும், மறுமலர்ச்சிக்கும் அயராது உழைத்த தியாகச் சீலர் என்பதை இந்த சமூகம் இருக்கும் வரை உணரும் என்பதில் ஐயமில்லை.



**தேசபக்தனுக்கு தேசமே குறி. அரசியல்வாதிக்கு தேர்தலே குறி.**

# அவர் ஒரு வினைச் சொல்

**கவிப்பேரருவி ஈரோடு தமிழன்பன்**

பிடர்சிலிர்க்க
முழங்கிய தமிழ்ச்சிங்கம்
பசும்பொன் முத்துராமலிங்கர்
தன்னவிலேயே – ஒரு
தமிழ்ச்சங்கம்

வேதவேதங்களைத்தம்
வாதங்களால் முறித்துப்போட்ட
ஞானச்சுனாமி !
சன்மார்க்க வடலூராரின்
அருட்பாச்சந்ததி !
முத்துராமலிங்கர் என்னும்
சமரச முரசு
உதடுகளை உரசிப் பறந்த
சொல்லில்
கர்ம யோகத்தின்
கதவுகள் திறக்கும் ஓசையே
கேட்டது.

முருக பக்தர்
முத்துராமலிங்கர் – எனினும்
முஸ்லீம் தாயின்
பால் பருகி வளர்ந்ததால்
முகம்மது நபிக்கும்
சொந்தக்காரர் !

நாட்டுப்பற்று
எப்படி இருந்தது அவரிடம் ?
தேநீர் பருகித்
தீர்மானம் போடுவதாகவா ?
கோரிக்கை வைத்துக்
கும்பிடு போடுவதாகவா ?

ஆதிக்க வெள்ளையர்
அடிவயிற்றைக் கலக்கிய
எரிமலை அவர் !
எந்த நாளிலும் இருந்ததில்லை
இருமல் தும்மல் !

வங்கச்
சுபாசு சந்திரன்
தன்னை நகல் செய்து
முத்துராமலிங்கம் என்று தந்தார் !
ஆனால்
அகமே வியந்த
அதிசய நகல் அவர் !

பசும்பொன் மகன்
ஆன்மீகத்தில் ஈரம் மிக்கவர் !
அரசியலில் வீரம் மிக்கவர் !
இந்த
ஈரமும் வீரமுமே
தென்பாண்டி நாட்டு வரலாற்றின்
சாரமும் சத்தும் !

முத்துராமலிங்கம்
என்பது பெயர்ச்சொல் என்று
இலக்கணம் சொல்லும்
இது பிழை என்பேன் – ஏனெனில்
முத்துராமலிங்கம் என்பது
நாட்டுப்பற்றாய் மொழிப்பற்றாய்
எப்போதும்
இயங்கிக் கொண்டிருக்கும்
வினைச்சொல் !

**வாழத்தான் தெரியும் வயிறு வளர்க்கத் தெரியாது.**



பர்மா ரங்கூனில் தேவர்.



தேவர் திருமகனாருடன் எம். சுப்பையா, அணுகுண்டு அய்யாவு மற்றும் பலர்.

# பசும்பொன் தேவர் ஒரு சமுதாய சிற்பி

**சுப. தங்கவேலன்**
மாண்புமிகு குடிசை மாற்று மற்றும்
இடவசதிக் கட்டுப்பாட்டுத் துறை அமைச்சர்

பசும்பொன் தேவர் 1908 அக்டோபர் 30 அன்று ''பசும்பொன்'' என்ற சின்னஞ்சிறு கிராமத்தில் பிறந்தார். 1963 அக்டோபர் 30 அதிகாலையில் மதுரை திருநகரில் பசும்பொன் தேவர் மறைந்தார். மொத்தம் 20,075 நாட்கள் இந்த மண்ணில் வாழ்ந்த பசும்பொன் தேவர், இதில் 4,000 நாட்களை சிறையிலே கழித்தார்.

இவர் இளமைக் காலத்தில் படித்துக் கொண்டிருந்த போது முதன் முதலாக சாயல்குடியைச் சேர்ந்த சேதுராமன் செட்டியார் அவர்கள், சாயல்குடியில் விவேகானந்தர் வாசகசாலையை நிறுவி, அதைத் தேவர் திருமகனார் அவர்களை கொண்டு திறந்து வைக்கச் செய்தார். இது தான் அவருடைய பொது வாழ்க்கையில் ஏறிய முதல் மேடையாகும். அதே இடத்தில்தான் இன்று தேவர் திருமகனாருக்கு சிலை வைக்கப் பட்டுள்ளது. இப்படியாக தொடங்கியவருடைய பொது வாழ்க்கை, விடுதலை வேட்கையால் ஈர்க்கப்பட்டு, தென்பாண்டி சீமையினுடைய, குறிப்பாக தமிழகத்தினுடைய இளைஞர்களின், நாடி, நரம்புகளை முறுக்கேற்றி, சுதந்திர வேட்கையினை உருவாக்கி, தன்னுடைய பேச்சாற்றலால் சுதந்திர போராட்டத்திற்கு பெரும்படை திரட்டிய போராளிகளில் இவரும் ஒருவராவார்.

காங்கிரஸ்காரராக பொதுவாழ்க்கையில் நுழைந்த பசும்பொன் தேவர், நேதாஜியின் பார்வர்டு பிளாக் இயக்கத்தின் தலைவராக இருந்த போது மறைந்தார். தேர்தல் களத்தில் இராமநாதபுரம் ராஜாவைத் தோற்கடித்த வரலாறும், சட்டமன்றம், பாராளுமன்றம் என இரு பதவிகளுக்கு ஒரே நேரத்தில் போட்டியிட்டு வாக்குக் கேட்டு தொகுதிக்குச் செல்லாமலேயே வெற்றி வாகை சூடிய வரலாறும் தமிழகத்தில் பசும்பொன் தேவருக்குமட்டுமே உண்டு.

தனி நபர் ஒழுக்கம், தியாக உள்ளம், அநீதியைக் கண்டு எதிர்க்கும் ஆண்மை, தெய்வ பக்தியையும் தேச பக்தியையும் இரு விழிகளாகக் கொண்டு அமைத்துக்கொண்ட வாழ்க்கை, தமிழிலும், ஆங்கிலத்திலும் நிகரற்ற புலமை, தன்னலம் நாடாத் தகைமை என பல சிறப்புகள் பசும்பொன் தேவருக்கு அணிகலன்களாக அமைந்திருந்த போதிலும், அவர் ''அரிஜனங்கள்'' என்று அழைக்கப்படுகிற ஒடுக்கப்பட்ட மக்களுக்காகவும், அவர்களுடைய உயர்வுகளுக்காகவும் பட்டபாடுகள் மகத்தானதாகும்.

1957ல் நடந்த பொதுத் தேர்தலில் முதுகுளத்தூர் சட்டமன்ற தொகுதிக்கும், ஸ்ரீவில்லிபுத்தூர் நாடாளுமன்றத் தொகுதிக்கும் பசும்பொன் தேவர் போட்டியிட்டார். இரண்டிலும் வெற்றியும் பெற்றார். முதுகுளத்தூர் சட்டமன்ற உறுப்பினர் பதவியை பசும்பொன் தேவர் ராஜினாமா செய்ததால் வந்தஇடைத்தேர்தலில் சசிவர்ணத் தேவரை தம் கட்சியின் வேட்பாளராக பசும்பொன் தேவர் நிறுத்தினார். இவரை எதிர்த்து காங்கிரஸ் கட்சியும் வேட்பாளரை நிறுத்தியது. இருப்பினும் சசிவர்ணத்தேவரே வென்றார். இந்தத் தேர்தலை ஒட்டி பார்வர்டு பிளாக் – காங்கிரஸ் கட்சி தொண்டர்களுக்கு இடையே மோதல் ஏற்பட்டு, அது கலவரமாக மாறி, இறுதியில் கொலையில் முடிந்தது. இந்தக் கொலை வழக்கில் பசும்பொன் தேவர் இணைக்கப்பட்டு, சிறை வாழ்ந்து, குற்றம் தள்ளுபடி செய்யப்பட்டு விடுதலையானார்.

இரண்டு கட்சிகளுக்கிடையே ஏற்பட்ட கலவரம் இரண்டு சாதிகளுக்கிடையே ஏற்பட்ட கலவரமாக பிரச்சாரம் செய்யப்பட்டு, அனைத்துக் கொடுமைகளும் நடந்தன. அதன் காயங்கள் இன்றும் அந்தப் பகுதி மக்களிடையே வடுக்களாக இருந்து வருகின்றன. இந்தப் பின்புலத்தோடு பசும்பொன் தேவர் அரிஜன மக்களுக்காக ஆற்றிய பணிகளைப் பார்க்க

வேண்டும். அப்போதுதான் பசும்பொன் தேவரின் சிறப்பும், இரண்டு சமூகத்தாரிடையே வளர வேண்டிய நட்பும் புலப்படும்.

காந்திஜி அந்நிய துணி எதிர்ப்பை மக்களிடம் கொண்டு சென்ற அதே காலகட்டத்தில் அரிஜன மக்களை ஆலயத்திற்குள் அனுமதிக்க மறுக்கும் உயர் சாதியினர் செயலைக் கண்டித்து, ''அரிஜனங்கள் ஆலயப் பிரவேசம் செய்ய வேண்டும், அதற்குத் தேச பக்தர்கள் வழி செய்யவேண்டும்'' என்று முழங்கினார். அதனால் இந்தியா முழுவதும் தேச பக்தர்கள் அரிஜன மக்களை ஆலயத்திற்கு அழைத்துச் செல்லும் போராட்டத்தை ஆரம்பித்தனர்.

மதுரையில் தேசபக்தர் வைத்தியநாதய்யர், மதுரை மீனாட்சி அம்மன் கோயிலுக்குள் அரிஜன மக்களை அழைத்துச் செல்ல எண்ணினார். இதை அறிந்த சனாதனிகள் எதிர்க்கத் திட்டமிட்டனர். இந்த எதிர்ப்பை சமாளிப்பதற்காக வைத்தியநாதய்யர், மதுரை எட்வர்டு ஹாலில் ஆலோசனைக் கூட்டம் ஒன்றிற்கு ஏற்பாடு செய்தார். இதில் கலந்து கொண்ட மூதறிஞர் இராஜாஜி, இந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டிருந்த பசும்பொன் தேவரை இந்தப் போராட்டம் வெற்றி பெற ஒத்துழைக்க வேண்டினார். பசும்பொன் தேவரும் அதற்கு உறுதி அளித்தார்.

இதை அறியாத சனாதனிகள், ''மீனாட்சி கோயிலில் ஹரிஜனங்களுடன் நுழைந்தால் மிகப் பெரிய விளைவுகளைச் சந்திக்க வேண்டியது வரும்'' என்ற அச்சுறுத்தல் நோட்டீசை வெளியிட்டனர். இதற்குப் பதிலாக பசும்பொன் தேவர், ''ஸ்ரீ வைத்தியநாதய்யர், மீனாட்சி அம்மன் ஆலயத்திற்குள் ஹரிஜனங்களை அழைத்துக் கொண்டு உள்ளே நுழைகிறபோது, சனாதனிகளால் ஏற்பாடு செய்யப்பட்ட ரவுடிகள் கலகம் விளைவிக்கப் போவதாகக் கேள்விப்படுகிறேன்''. ஹரிசனங்களை பயங்கரமான ஆயுதங்களால் தாக்கி, அங்கயற்கண்ணி ஆலயத்தை ரத்தக்கரை படியச் செய்யப்போவதாக எல்லாம் தகவல் எனக்குக் கிடைத்துள்ளது.

சனாதனிகளால் ஏற்பாடு செய்யப்பட்ட அந்த ரவுடிக் கும்பலை எச்சரிக்கிறேன். வைத்தியநாதய்யர் ஹரிசனங்களை அழைத்து வருகிறபோது அடியேனும் வருவேன். ஏதேனும் அசம்பாவிதம் நடந்தால் அந்த ரவுடிக் கும்பலை சந்திக்கவேண்டிய முறையில் சந்திப்பேன், என்று துண்டுப் பிரசுரம் வெளியிட்டார்.

1939 ஜுலை 8 அன்று அரிஜன மக்களுடன் மதுரை மீனாட்சி ஆலயத்திற்குள் வைத்தியநாதய்யர் சென்றபோது, அவருடன் பசும்பொன் தேவரும் சென்றார். ஆலய வாசலில் பசும்பொன் தேவரின் பற்றாளர்கள் எதற்கும் தயார் நிலையில் நின்றனர். அதனால் எதிர்ப்புத் தெரிவித்த சனாதனிகளும், அவர்களுடைய ரவுடிகளும் அந்தத் திசைப் பக்கமே தலைகாட்டாமல் தப்பினர். மதுரை மீனாட்சி ஆலயத்திற்குள் நுழைந்த அரிஜனமக்கள் மீனாட்சியைத் தொழுது மகிழ்ந்தனர். இந்நிகழ்வின் மூலம் தாழ்த்தப்பட்ட பெருமக்களின் சார்பாக சிங்கமே வெளிவந்து விட்டது, என்பதை எதிரிகள் உணர்ந்து கொண்டார்கள்.

1954 மார்ச் மாதத்தில், அன்று ''சென்னை ராஜதானி'' என்று அழைக்கப்பட்ட தமிழக சட்டமன்றத்தில் ''ஹரிஜன முன்னேற்றம்'' பற்றிய விவாதம் நடந்தது. இந்த விவாதத்தில் கலந்து கொண்டு மார்ச் 24 அன்று பசும்பொன் தேவர் பேசியது கவனம் கொள்ளத் தக்கதாகும். அந்த உரையில்,

'ஆதிகாலத்தில் தொழிலின் பேரால் ஜாதி வகுக்கப்பட்டது என்பதுதான் தமிழ்ச் சான்றுகளும், சாஸ்திரங்களும் கூறுகின்ற உண்மை. அதற்கு உதாரணம் ஆண்களை அழைக்கின்ற காலத்தில் ஒரே பெயர் பலருக்கு இருக்கின்றது என்பதன் காரணமாக, ஒரே பெயரையுடைய பலரைக் கூப்பிடும்போது 'இன்ன தேவர்', 'இன்ன செட்டியார்', 'இன்ன அய்யர்' என்று

பெயர் வைத்த தமிழ்ப் பெரியோர்கள், பெண்களை அழைக்கும்போது அந்தப் பெயரின் கடைசியில் வால்வைத்துக் கூப்பிடாமல், அதாவது 'இந்தப் பிராமணத்தி', 'இந்தச் செட்டிச்சி' என்று கூப்பிடாமல், எல்லாப்பெண்களையும் 'இந்த அம்மாள்', 'அந்த அம்மாள்' என்று கூப்பிடுவதுதான் பழக்கமாக இருந்து வருகிறது. இது நீண்டகாலமாக இந்த நாட்டில் அனுஷ்டித்து வருகிற சித்தாந்தமாகும். அப்படி இருக்கும் போது, ஆண்களுக்கு மாத்திரம் தொழிலில் பெயரை பின்னால் வைத்து அழைத்து, ஒரே பெயரையுடைய பல நபர்கள் தொழிலின் பெயரால் வித்தியாசப்படும் பொருட்டு செய்த சகாயமாகும்' என்றும், மனிதனில் ஏற்றத்தாழ்வுகள் இல்லையென்று குறிப்பிட்டுவிட்டு, பின்வரும் உதாரணத்தையும் சொல்கிறார் ; அடியேனுடைய உடம்பில் இரண்டு கைகள் இருக்கிறது.

ஒன்று வலது கரம். இது உண்ணவும், என்னுடைய எண்ணத்தை எழுத்து மூலமாக வெளிப்படுத்தவும் பயன்படுகிறது.

இன்னொன்று இடது கரம், உடம்பிலிருந்து வெளிவரும் அசுத்தங்களை அப்புறப்படுத்தி, உடம்பை தூய்மையாக வைத்துக் கொள்ள பயன்படுகிறது.

ஆனால், இறைவனையோ, பெரியவர்களையோ வணங்குகிற போது, இரண்டு கைகளையும் ஒன்றாக சேர்த்துதான் வணங்க வேண்டும். அதே போல அனைத்து சமுதாய மக்களும் இரண்டு கைகள் போல ஒன்றாக இணைந்தால்தான் சமுதாயத்தில் மக்கள் அனைவரும் செம்மையாக வாழ்ந்திட முடியும்.

மேலும், சமுதாயத்தின் பொருளாதார ரீதியான ஏற்றத்தாழ்வு பற்றி தேவர் திருமகனார் அவர்கள் குறிப்பிடும் பொழுது ; 'பெரும்பாலான நிலங்கள் வீணாகக் கிடக்கின்றன. அந்த பெரும்பாலான நிலங்களை தர்க்காஸ்து கொடுக்கிறபொழுது பழைய அரசாங்கத்தின் பழக்கப்படியே உயர்ந்தவர்கள், வேண்டியவர்கள் என்பவர்களுக்குத்தான் கொடுக்கப்படுகிறதே தவிர, அந்த ஏழைகளுக்கு ஏன் சலுகை காட்டப்படவில்லை ? அப்படியே ஏழைகளுக்கு வழங்குவதாகச் சொல்லி பாவனைகள் செய்யப்பட்டாலும், அதன் பின்னால் இருக்கிற பணக்கார, வியாபார வர்க்கத்தின் சூழ்ச்சியாகவே இருக்கிறது. பெரும் பணக்காரர்களுக்கு மீண்டும் மீண்டும் கொடுக்க வேண்டும் என்ற பழக்கத்தை நிறுத்திக் கொண்டு, அந்த ஏழைகளுக்கு, ஒரு ஏக்கர், அரை ஏக்கர்விவசாயத்துக்கு லாயக்காக புதிதாக நிலம் வழங்கப்படுமானால், அவர்கள் யாரையும் எதிர்பாராமல் முயற்சி செய்து வாழ வசதி ஏற்படும்' என்று குறிப்பிட்டார்.

இதே உரையில், 'மதுரையில் ஹரிஜனங்கள் தங்குவதற்கு ஒரு விடுதி ஆயிரக்கணக்கான பணச் செலவில் கட்டப்பட்டிருக்கிறது. அது நகரத்தின்மத்தியில் இருந்திருக்குமானால், பல ஹரிஜனங்கள் வந்து தங்கவோ, அவர்கள் இதர சமூகத்தாரோடு பழகவோ வசதி அளிக்கும்' என்றும் குறிப்பிட்டார்.

பசும்பொன் தேவரின் இந்த சிந்தனை ஓட்டம் தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் உள்ளத்திலும் பற்றிப் படர்ந்ததனால்தான் 'நிலமற்ற ஏழைகளுக்கு இரண்டு ஏக்கர் நிலம் கொடுப்பேன்' என்று தேர்தல் வாக்குறுதி அளித்து, அதை இன்று பல லட்சம் மக்களுக்கு வழங்கி வருகிறார் ; தொடர்ந்து வழங்குவார். இதில் பெரிதாக பலன் அடைபவர்கள் தாழ்த்தப்பட்ட மக்களும் உண்டு.

அதேபோன்று அரிஜன மக்களுக்கு கட்டிக்கொடுக்கும் பள்ளி, விடுதி, வீடு ஆகியவற்றை ஊருக்கு வெளியே கட்டிக்கொடுப்பதால் அவர்கள் காலங்காலமாக தனித்து வாழும் சூழ்நிலை உருவாகிறது. இதைத்தான் பசும்பொன் தேவர் தனக்கே உரித்தான பாணியில் மதுரையில் அன்றைய ஆட்சியாளர்கள் கட்டிய விடுதி பற்றி குறிப்பிட்டார்.

இந்த இழிநிலை மாற வேண்டும் ; மாற்ற வேண்டும் என்று விரும்பிய டாக்டர் கலைஞர் சமத்துவபுரங்களை உருவாக்கி தாழ்த்தப்பட்டவர்களும், பிற வகுப்பினரும் இணைந்து வாழுகின்ற ஓர் அற்புதத்தை நிகழ்த்திக் காட்டி வருகிறார்.

சட்டப் பேரவையில் பசும்பொன் தேவர் அரிஜன மக்களுக்காக வலியுறுத்திய அதே கருத்துக்களை வலியுறுத்தி, ''ஹரிஜன மக்களுக்குஎனது வேண்டுகோள்'' என்ற தலைப்பில், 'கண்ணகி' பத்திரிக்கையில் ஓர் கட்டுரையும் பசும்பொன் தேவர் எழுதினார். இந்தக் கட்டுரையை இன்றைய தலைமுறை அவசியம் படிக்க வேண்டும். அப்போதுதான் அரிஜன மக்கள் மீது பசும்பொன் தேவர் கொண்டிருந்த அன்பும், அவர்களுக்காக அவர் சொல்லிய கருத்துக்களும் தெரியும்.

பசும்பொன் தேவர் திருமணம் செய்து கொள்ளவில்லை என்பதும், அவருக்கு வாரிசு இல்லை என்பதும் அனைவருக்கும் தெரியும். ஆனால் அவர் எழுதிவைத்த இனாம் சாசனம் பற்றி எத்தனை பேர் அறிவர் ?

1960ல் புளிச்சிகுளத்தில் தனக்குச் சொந்தமான எஸ்டேட்டில் தங்கியிருந்த பசும்பொன் தேவர், திருச்சுழி துணைப் பதிவாளரை தம் இருப்பிடத்திற்கு அழைத்து ஓர் இனாம் சாசனத்தை பதிவு செய்தார். அதில் தன்னுடைய சொத்துக்களை 17 பாகங்களாகப் பிரித்து அவற்றில் ஒரு பாகத்தை தனக்கு வைத்துக்கொண்டு, மீதி 16 பாகங்களை 16 பேர்களுக்கு எழுதிவைத்தார். அதில் பசும்பொன்னைச் சேர்ந்த அரிஜன வகுப்பில் பிறந்த வீரன், சன்னியாசி என்ற இருவருக்கு இரண்டு பாகங்களை ஒதுக்கி பசும்பொன் தேவர் பத்திரப் பதிவு செய்தார். ஆம் ! தன்னுடைய சொத்துக்களை அனுபவிக்கும் உரிமையில் இரண்டு அரிஜனங்களுக்கும் எழுதிவைத்த பெருந்தகையாளர் பசும்பொன் தேவர் !

பல தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்த சிறுவர்கள், இளைஞர்கள், தேவர் திருமகனாரின் வீட்டிலேயே நிரந்தரமாக தங்கியிருந்து தங்களது கல்வி உணவு, உடை தேவைகளை, சிறப்பாக பெற்றிருக்கிறார்கள். தேவர் திருமகனாரின் வீட்டில் சமையல் கூடத்தில் அடுப்பு அணைக்கப்பட்டதே கிடையாது. அந்த அளவுக்கு ஏழை, எளிய மக்களை நேசித்தவர் தேவர் திருமகனார். தீண்டாமை என்பது தெய்வத்திற்கும், மனிதனுக்கும் நாம் செய்யும் பாவம் என்ற மகாத்மா காந்தியடிகளின் சொல்லுக்கு ஏற்ப, நான் தமிழன், இந்தியன் என்று முழக்கமிட்டவர் தேவர் திருமகனார்.

பசும்பொன் தேவர் அரிஜனங்கள் மீது கொண்டிருந்த அன்பை, அதுவும் பசும்பொன் தேவரை எதிர்த்து அரசியல் நடத்திய காங்கிரஸ் கட்சியில் இருந்த, அதுவும் நாடாளுமன்ற உறுப்பினராக பதவி வகித்த ஒருவர் சொல்வதை இங்கே குறிப்பிட்டாக வேண்டும்.

1952ல் பசும்பொன் தேவர் சட்டமன்ற உறுப்பினராக இருந்தபோது ஆர்.எஸ். ஆறுமுகமும் சட்டமன்ற உறுப்பினராக இருந்தார். 1957ல் நடந்த தேர்தலின் போது ஸ்ரீவில்லிபுத்தூர் நாடாளுமன்ற இரட்டைத் தொகுதிக்கு பொதுத் தொகுதியில் பசும்பொன் தேவர் போட்டியிட்டார். தாழ்த்தப்பட்டோருக்கான தொகுதியில் பசும்பொன் தேவர் தம் கட்சியின் சார்பில் ஒருவரை நிறுத்தினார். பசும்பொன் தேவரை எதிர்த்தும் தாழ்த்தப்பட்டோருக்கான பசும்பொன் தேவரின் வேட்பாளரை எதிர்த்தும் காங்கிரஸ் கட்சி வேட்பாளர்களை நிறுத்தியது. அப்படி தாழ்த்தப்பட்டோருக்கான தொகுதியில் பசும்பொன் தேவரின் வேட்பாளரை எதிர்த்து காங்கிரஸ் கட்சியின் வேட்பாளராக போட்டியிட்டு வெற்றி பெற்றவர்தான் ஆர்.எஸ். ஆறுமுகம் ! இந்த ஆர்.எஸ். ஆறுமுகம் சொல்கிறார் ; முதுகுளத்தூரை அடுத்த தெற்கு காக்கூரில் தேவர் பேசிக்கொண்டிருந்தபோது ஒருவர் வந்து ஒரு துண்டுச்சீட்டைக் கொடுத்தார். அதை தேவர் பார்த்துவிட்டு பையில் போட்டுக் கொண்டார்.

மற்றொருவர் இன்னொரு சீட்டுக்

கொடுத்தார். படித்துவிட்டு கையில் வைத்துக்கொண்டே பேசினார். கூட்டம் முடியும் நேரத்தில் ஒருவர் எழுந்து 'ஆர்.எஸ். ஆறுமுகத்தைப் பற்றி பேசுங்கள்' என்றார். சற்றும் சஞ்சலப்படாத தேவர் நிதானமாகக் கூறினார் ; 'என்னிடம் கொடுக்கப்பட்ட இரண்டு சீட்டுகளிலும் ஆர்.எஸ். ஆறுமுகத்தைப் பற்றி பேசுங்கள் என்றுதான் இருந்தது. பேச வேண்டாம் என்று நான் நினைத்தேன். நீங்கள் வற்புறுத்துவதால் நான் அவரைப் பற்றி கூறுகிறேன். நான் ஆர்.எஸ். ஆறுமுகத்தை நன்கு அறிவேன். ஆர்.எஸ். என்றே அவரை அழைப்பேன். அவர் திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்தவர். நல்லவர்: நல்ல பண்பாளர் ; சிறந்த நண்பர் ; நமது குடும்பர் இனத்தைச் சேர்ந்தவர். எனது சகோதரனைப் போன்றவர்' எனக் கூறிவிட்டு தனது பேச்சை முடித்து புறப்பட்டுவிட்டார். ஆனால் மக்கள் அவரை விடவில்லை. அதுவும் அரிஜன மக்கள் அவரை சுற்றிச் சூழ்ந்து நின்று கொண்டனர். நான் அவ்வூர் போவதாக திட்டமிட்டிருந்தேன். எனக்காக அவ்வூர் அரிஜனங்கள் மாலைகள் வாங்கி வைத்திருந்தனர். அவற்றை எல்லாம் தேவருக்கே அணிவித்து மகிழ்ந்தனர்.

சிறு நேரம் கழித்து நான் போனேன். நடந்ததை கூறினார்கள். எனக்கு போட மாலை இல்லையே என வருத்தமும் பட்டார்கள். 'நீங்கள் வருத்தப்பட வேண்டாம். எனக்காக வாங்கி வந்த மாலைகளை தேவருக்கு அணிவித்ததற்காக நான் ஆனந்தப்படுகிறேன். நான் எதிர் கட்சியிலிருந்தும் என்னைப் பற்றி அப்படி கூறிய அந்த மகானுக்கு மாலை அணிவித்ததே நமக்கு பெருமை என நான்கூறிக்கொண்டிருக்கும்போது ஒரு தேவர் மாலையோடு ஓடிவந்தார். 'இது தேவருக்குபோட்ட மாலை. அவரிடமிருந்து நான் வாங்கி வைத்திருந்தேன். நீங்கள் வந்திருக்கிறீர்கள். ஆகவே, உங்களுக்கு அதைச் சூட்டுகிறேன்' என சூதுவாது இன்றி மாலையை போட்டார். நானும் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டேன்'.

ஆம்! அரிஜன வகுப்பைச் சார்ந்த, பசும்பொன் தேவரை எதிர்த்து அரசியல் நடத்திய ஆர்.எஸ்.ஆறுமுகம் சொல்லிய இந்த நிகழ்விலிருந்து பசும்பொன் தேவரின் சாதிபேதமற்ற உள்ளத்தை அறியலாம்.

தேவர் திருமகனார் தன் பெயருக்கு ஏற்றபடி தேவர் இனத்திற்கு மட்டுமே உரியவர் என்று நினைத்திருந்தனர் சிலர். ஆனால், தேவர் திருமகன் தமிழகத்தின் தங்கம், எல்லா இனத்தவருக்கும் பொதுவானவர் என்பதை பின்வரும் சம்பவம் விளக்கும் ;

இராமநாதபுரம் மாவட்டத்தில் ஜாதி கலவரம் மூண்ட போது மதுரை திலகர் திடலில் நடந்த பொது கூட்டத்தில் பேசிய தேவர் திருமகன் அவர்கள் ஜெயராம ரெட்டியார், எம்.எல்.சி. அவர்களுடன் காரில் திரும்பிய போது, மதுரை கோரிப்பாளையத்தில் வைத்து காவல் துறையினர் அவரை கைது செய்தார்கள். அப்போது ஒரு பத்திரிக்கையாளர் ஓடி வந்து, நாடெங்கும் கலவரம் மூண்டு விட்டது, இந்த நேரத்தில் உங்களை கைது செய்தால் மேலும் விபரீத விளைவுகள் ஏற்படாதா ? என்று கேட்டார். அப்போது தேவர் திருமகன், இது அரசியல் சூழ்ச்சி, இதைப் புரிந்துகொள்ளாமல் ஏழை அரிஜன மக்களை யாரேனும் துன்புறுத்துவார்களேயானால், அவர்கள் என்னுடைய நெஞ்சை பிளந்து இரத்தத்தை குடிப்பதற்கு சமமாகவே கருதுவேன். மேலும் எல்லோரும் அமைதி காக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு காவல்துறை வேனில் ஏறினார். அதேயிடத்தில் தான் தமிழகத்தினுடைய தலைவர், மாண்புமிகு முதலமைச்சர் தலைவர் கலைஞர் அவர்கள், தேவர் திருமகனாருக்கு ஆசிய கண்டத்திலேயே மிகப்பெரிய வெண்கல திருவுருவ சிலையை நிறுவி, அன்றைய ஜனாதிபதியாக இருந்த திரு. வி.வி.கிரி அவர்களை அழைத்து வந்து சிலையை திறந்து வைத்து பெருமை சேர்த்தார்கள்.

1962ல் பொதுத் தேர்தல் நடைபெற்ற போது பேரறிஞர் அண்ணா அவர்கள், பரமக்குடி தொகுதியில் உன்னை நிறுத்த விரும்புகிறேன்;

எனவே, திருச்சியில் தங்கியிருக்கும் தேவர் திருமகனாரின் ஆதரவை கேட்டுவிட்டு, எனக்கு தகவல் தெரிவிக்கவும் என்று என்னிடம் சொன்னார்கள். திருச்சிக்கு சென்று, தேவர் திருமகனாரைப் பார்த்து, அண்ணா அவர்கள் சொன்ன செய்தியை சொன்னேன். அதற்கு தேவர் திருமகனார், இந்த தேர்தல் களத்தில் நான் ஈடுபடவில்லை. நான் முழுமையாக ஆன்மீகத்தில் ஈடுபட விரும்புகிறேன். 1967ல் உங்கள் அண்ணாதுரை அவர்கள் நிச்சயம் ஆட்சிக்கு வந்துவிடுவார் என்றும் கூறினார். சிறுகதை மன்னன் அண்ணன் தென்னரசு அவர்களும், தேவர்அவர்களின் பேச்சை கேட்பதில் மிகுந்த ஆர்வம் உள்ளவர். அவர் ஒரு முறை பொதுக்கூட்டத்தில் பேசிய போது, ''பேரறிஞர் அண்ணா மட்டும் தி.மு.க.வினை துவங்கியிருக்கா விட்டால், நான் பார்வர்டு பிளாக் கட்சியிலே தான் சேர்ந்து இருப்பேன்'' என்று பொதுக்கூட்டத்தில் பேசினார்.

1963 அக்டோபர் திங்கள் 30ஆம் நாள், இத்தனை சிறப்பு மிகுந்த தேவர் திருமகனார் காலமான செய்தி, காட்டுத்தீ போல் மதுரையெங்கும் பரவியது. அன்றுதான் சிறுகதை மன்னன் அண்ணன் எஸ்.எஸ்.தென்னரசு அவர்களுக்கு, பேரறிஞர் அண்ணாஅவர்களுடைய தலைமையில் மதுரையில் தமுக்கம் கலையரங்கில் திருமணம் நடைபெற இருந்தது. இச்செய்தி கேட்டவுடன், மதுரையில் நடக்கவிருந்த திருமணத்தை மாலை 4.30 மணிக்கு தள்ளி வைத்துவிட்டு, பேரறிஞர் அண்ணா அவர்களும், அண்ணன் மதுரை முத்து அவர்களும், அன்பில் தர்மலிங்கம், ரெத்தினவேல் பாண்டியன் போன்றவர்களும், நான், தா. கிருஷ்ணன் போன்றவர்களும், இராமநாதபுரம் தங்கப்பன், சேக் சுல்தான், மாங்குடி மதியழகன், வே. தங்கபாண்டியன், உளுத்திமடை சுந்தரராஜன், ஆர்.எம்.அலியார், அழ.கிருஷ்ணன், தா.சோணையர் போன்றவர்களும் மற்றும் ஏராளமான கழகத் தோழர்கள் உடன் செல்ல, பேரறிஞர் அண்ணா அவர்கள் மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார். 1967ல் தி.மு.க. ஆட்சியைக் கைப்பற்றி, அண்ணா அவர்கள் முதலமைச்சர் ஆனார்கள். அவர் மறைவுக்கு பின் முதலமைச்சராக பொறுப்பேற்ற அண்ணன் கலைஞர் அவர்கள், தேவர் திருமகனாருடைய சமாதியை, பாம்பன் பாலம் கட்டிய நீலகண்டன் சகோதரர்களை அழைத்து, அழகிய மணிமண்டபமாக உருவாக்கினார். மதுரையில் தேவர் திருமகனாருக்கு முதன் முதலாக சிலை வைத்து, தேவருக்கு சிலை வைக்க வேண்டுமென்ற உணர்வை தலைவர் கலைஞர் அவர்கள் அந்த சமுதாய மக்களுக்கு ஏற்படுத்தினார். மேலும், கமுதி, உசிலம்பட்டி, நெல்லை மாவட்டம் மேலநீலிதநல்லூர் ஆகிய 3 இடங்களில் தேவர் திருமகனார் பெயரில் கல்லூரியை உருவாக்கி தந்தார். மேலும், கல்வி, வேலைவாய்ப்பில் சீர்மரபினருக்கென தனியாக இடஒதுக்கீடு செய்ததோடு மட்டுமல்லாமல், அண்மையில் சீர்மரபினருக்கென தனிவாரியம் மற்றும் எண்ணற்ற சலுகைகளை செய்து தந்த தலைவர் கலைஞர் அவர்கள்.

தேவர் திருமகனுடைய நூற்றாண்டு விழாவை அரசு சார்பாக ஏற்பாடு செய்து, அவராலேயே உருவாக்கப்பட்ட மணி மண்டபத்தை சீரமைத்து, அவர் வாழ்ந்த வீட்டை பழமை மாறாமல் புதுப்பித்து, அணையா விளக்கையும் அமைத்து, அவருடைய புகைப்பட கண்காட்சிக்கு பெரிய வளாகம் புதியதாக கட்டியும், புதிய நூலகம் அமைத்தும், பால்குடம் எடுக்க தனி கட்டடம், முளைப்பாரி இறக்கி வைக்க தனி கட்டடம், ஏராளமான கழிப்பறைகள் மற்றும் இந்தக் கிராமத்தில் உள்ள ஆதி திராவிட மக்களுக்கு அற்புதமான புதிய வீடுகள், தியான மண்டபம், தேவர் நூற்றாண்டு தோரண வாயில் போன்ற ஏராளமான திட்டங்களை உருவாக்கி தந்தவர் தலைவர் கலைஞர் அவர்கள்.



**அறிவு என்பது என்ன ? நாம் எவ்வளவு அறியாமையில் இருந்தோம் என்பதை நமக்கு அளந்து கொடுக்கின்ற கருவிதான் அறிவு. அது முற்றும் பெற்ற அறிவு அல்ல.**



நேதாஜி மற்றும் ஐ.என்.ஏ. தொண்டர்களுடன் தேவர்.



பார்வர்டு பிளாக் மற்றும் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி உறுப்பினர்களுடன் தேவர்.

# மண்ணை மாண்புறச் செய்த மகான் தேவர்

**எம்.எஸ்.கே. பவானி இராஜேந்திரன்,**
நாடாளுமன்ற உறுப்பினர்,
இராமநாதபுரம்.

''மழை செய்து விளைகிறது மலையாள சீமை, ஆறு பாய்ந்து விளைகிறது தஞ்சை சீமை, வறட்சியாய் விளைகிறது இராமநாதபுரம் சீமை''

இந்த வறண்ட பூமியில் தான், இருண்ட இந்தியாவை ஒளி பெறச் செய்ய, தியாகத்திரு வுருவாக, ஒழுக்க சீலராக, உயர்ந்த ஆன்மீக நெறிகளுக்கு உட்பட்டவராக, தன்னலமற்ற தேசியவாதியாக, பாண்டிய நாடு மட்டுமல்ல, இப்பண்பட்ட பாரத தேசமே போற்றிப் புகழக்கூடிய, தெய்வீகத் திருமகனார் பசும்பொன் தேவர் ஐயா அவர்கள் தோன்றினார்கள்.

இருளைப் போக்க கிழக்குத் திசையில் உதிக்கும் ஞாயிறைப் போல, மானங்காக்கும் மறவர் சீமையாம் கமுதிக்கு கிழக்கே உள்ள தவசிக் குறிச்சியில் தேவர் அவதரித்தார் என வரலாறு கூறுகிறது. பசும்பொன் என்ற பகுதி மேற்கேயும், தவசிக்குறிச்சி கிழக்கேயும் இருக்கும் வகையில் ஓடை ஒன்று பிரித்து வைத்த இடத்தில், பாரதம் சுதந்திரம் பெற பிறவி எடுத்த மகான் அவதரித்தார்.

மூத்த சித்தர் நந்தித் தேவர் முதலாக இளைய சித்தர் அகத்தியர் வரை உள்ள சித்தர்கள் வழி வந்தவர்கள் வாழ்ந்த இடமே தவசிக் குறிச்சி எனப்படுகிறது. எந்த பிரதி பலனையும் எதிர் பாராமல், நாட்டு மக்களின் நலன் கருதி வாழ்ந்தவர்கள் சித்தர்கள். அப்படிப்பட்ட சித்தர்கள் வாழ்ந்த இடம் எனக் கருதப்படும் பூமியில் பிறந்த காரணத்தினால்தானோ என்னவோ, தேவர் ஐயாவும், எந்த பிரதிபலனையும் கருதாது, தன்னைச் சுற்றியுள்ள மக்கள் நல்வாழ்வு வாழ, தனது சொத்து சுகம் ஏன் இன்னுயிரையும் ஈந்து, தெய்வீகத் திருமகனாக, ஒரு சித்தராகவே இன்றும் நம்மிடையே வாழ்ந்து கொண்டிருக்கிறார்.

அன்றைய காலக் கட்டத்தில் முகவையில் இந்திர விழாவிற்கு இணையாக நடந்த நவராத்திரி விழாவில், சேதுபதி மன்னரால் மிகவும் கௌரவிக்கப்பட்ட தேவர் ஐயா அவர்கள், இந்த நூற்றாண்டின் ஈடு இணையற்ற ஆன்மீக சக்தி என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

''எல்லாம் நிறைந்த செல்வந்தரையும், எல்லாம் தெரிந்த மேதையையும், ஏராளமாகப் படித்த அறிவாளியையும் விட சுய கட்டுப்பாடுடையவன் மேலானவன் எனப் போற்றப்படுகிறான்''.

செல்வக் குடும்பத்தில் பிறந்து இருந்தாலும், தனக்கென ஒரு குடும்பம் என அமைத்துக் கொள்ளாமல், அதே சமயம் ஒழுக்க சீலராக, அனைத்து சாதி மக்களும் தம் மக்கள் என எண்ணி, தியாக வாழ்வுக்கு ஒரு சிறந்த முன்னுதாரணமாக வாழ்ந்த மகான் பிறந்த மண்ணில் வாழ்கிறோம் என்ற உயர்ந்த பெருமையை நம் பெற்றுள்ளோம்.

வங்கத்தில் பிறந்த விவேகானந்தருக்கும் முகவையில் பிறந்த பாஸ்கர சேதுபதிக்கும், ஆன்மீக உறவு ஏற்பட்டது போல, வங்கத்தில் பிறந்த நேதாஜிக்கும், முகவையில் பிறந்த தேவருக்கும் அரசியல் உறவு ஏற்பட்டதுடன், மதுரை ஆதீனத்திற்கும், தேவருக்கு இடையில் ஆன்மீக உறவு ஏற்பட்டு, தேசீயமும், தெய்வீகமும் தனது இரு கண்கள் என தேவர் ஐயா வாழ்ந்தார்கள்.

அரசியலில் அப்பழுக்கற்ற மனிதராக, தன்னலமற்றவராக, கொண்ட கொள்கையில் உறுதி உடையவராக, வீரமனத்தினராக வாழ்ந்த ஐயா அவர்கள், அனைத்து அரசியல் வாதிகளும் பின்பற்றி நடக்க வேண்டிய மிகச் சிறந்த முன்னுதாரணமாக வாழ்கிறார்.

''வகுப்புவாதி என என்னைக் கூறாதீர்கள்'' நான் ஒரு ''தேசீயவாதி'' என கம்பீரமாக முழங்கியவர் தேவர் ஐயா அவர்கள். தனது தொகுதியில் அவர் சார்ந்த வகுப்பினர் 18 ஆயிரம் பேர் மட்டும் இருந்த சூழ்நிலையிலும் இரண்டு லட்சம் வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றவர் தேவர் அவர்கள்.

சாதி சங்கங்களை எதிர்த்தார். குலக் கல்வித் திட்டத்தினை எதிர்த்து முழங்கினார். 1954 ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 6ஆம் தேதி, பாரதப் பிரதமர் பண்டித ஜவஹர்லால் நேரு தலைமையில் கூடிய பல தலைவர்கள் அடங்கிய கூட்டத்தில், மிக தைரியமாக வீரத்துடன் முழங்கிய தேவர் ஐயா குறிப்பிட்டது, ''நேதாஜியின் சோசலிசத்தை நிறைவேற்ற இங்கே கூடியுள்ளீர்களா, அல்லது நாங்கள் சார்ந்த பார்வர்டு பிளாக் கட்சியையும் தங்களுடன் இணைத்து எதிர்கட்சிகளே இல்லை என்ற நிலையை உருவாக்கி, உங்களைப் பலப்படுத்திக் கொள்ள இங்கே கூடியுள்ளீர்களா ? நாட்டின் நலனிற்காக ஆலோசனைகளைக் கூறக் கூட்டப்பட்ட கூட்டமாக இருக்க வேண்டுமே ஒழிய எதிர்கட்சிகளே இல்லை என்ற நிலையை ஏற்படுத்தி உங்களைப் பலப்படுத்திக் கொள்ள கூடுவது சரியல்ல. இதற்குக் காரணம், பாகிஸ்தானை இழந்து, தாங்கள் பெற்றது மூளிச் சுதந்திரந்தான் ; இந்த தேசம் பெரியது ; நம் தலைமை சிறியது என்ற எண்ணந்தான் எனக்குத் தோன்றுகிறது'' என, தைரியமாக வீர முழக்கமிட்ட தேவர் ஐயாவின் சுதந்திரவேட்கையையும், தன்னலமற்ற வீரத்தையும், நேரு உள்ளிட்ட அனைத்துத் தலைவர்களும் வியந்து பாராட்டினார்கள்.

எதிர்கட்சிகளின் கருத்துச் சுதந்திரத்தைப் போற்றி, நாகரீக அரசியலை, ஆட்சியை நடத்திச் சென்ற பேறிஞர் பெருந்தகை அண்ணாவும், நல்லாட்சியை நடத்திக் கொண்டிருக்கும் உயர்ந்த நாகரீக அரசியலுக்கு மிகச் சிறந்த சான்றாக விளங்கிக் கொண்டிருக்கும் மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்களும் போற்றும் தலைவர் தான் தேவர் ஐயா அவர்கள். ''சிங்கமென வாழ்ந்தவர் தேவர் ஐயா'' என பேரறிஞர் அண்ணா, தேவரின் இறுதிநாளில் போற்றினார். ''வீரராகப் பிறந்து, வீரராக வாழ்ந்து, வீரராகவே மறைந்து, இன்றளவும் நமது இதயங்களில் வீரராகவே வாழ்ந்து கொண்டிருப்பவர் தேவர் ஐயா அவர்கள். அவர் உருவ அளவில் நம்மிடையே இல்லாவிட்டாலும், நமது இரத்தத்தில், நாடி, நரம்புகளில் அவர் குடி கொண்டிருக்கிறார் என டாக்டர் கலைஞர் அவர்கள் தேவர் ஐயாவைப் புகழ்ந்து கூறியுள்ளார்கள். நாடு போற்றும் நல்ல தலைவர்களெல்லாம் போற்றிப் புகழும் தேவர் ஐயாவின் புகழ் பற்றி, என் பிஞ்சு வயதிலேயே, என் நெஞ்சில் விதைத்தவர் என் தந்தையார் திருமங்கலம் திரு. ரெத்தினசாமித் தேவர் அவர்கள். தேவரின் திருத்தொண்டராக 1971ல் திருமங்கலம் சட்டப் பேரவைத் தொகுதியில் பார்வர்ட் பிளாக் வேட்பாளராகப் போட்டியிட்டு வென்றவர். பார்வர்ட் பிளாக் தலைவர் திரு. மூக்கையாத் தேவர் வேண்டுகோளின்படி உசிலம்பட்டி, கமுதி, மேலநீலதநல்லூரில் தேவர் பெயரால் கல்லூரிகள், திமுக ஆட்சியின் போது அமைக்கப்பட்டன.

மதுரையில் வானளாவிய சிலை, ஆசிய துணைக் கண்டத்திலேயே, மிகப் பெரிய தேவர் சிலையை அமைத்து உதவியதோடு, டாக்டர் கலைஞர் அவர்கள் விழாவின் தலைமை ஏற்றுப் புகழ் அஞ்சலியை தேவர் ஐயாவுக்குச் செலுத்தினார். பசும்பொன் கிராமத்தில் தேவர் ஐயா மணிமண்டபம் அமைய துணை நின்றது கலைஞர் அரசு. மிகச் சிறப்பாக, தேவர் நூற்றாண்டு விழா நிகழ்ச்சியை, பசும்பொன் கிராமம் மற்றும் சுற்றுப் பகுதிகள் தன்னிறைவு பெற்றப் பகுதியாக திகழும்படி அனைத்து நலத்திட்டங்களையும் செய்து, மென்மேலும் தேவர் ஐயாவுக்குச் சிறப்பு செய்து கொண்டிருக்கிறார் டாக்டர் கலைஞர் அவர்கள்.

அனைத்து சாதி மக்களும் இந்திய மக்கள் எனப் பெரு வாழ்வு வாழ்ந்த தேவர் ஐயா அவர்கள், தனது சொத்துக்களில் பெரும்பான்மையானவற்றை, ஆதி திராவிட மக்களுக்குப் பகிர்ந்தளித்தப் பண்பாளராகத்

திகழ்ந்தார். மகாத்மா போற்றிய ஆதிதிராவிட மக்கள் ஆலயப் பிரவேசம் செய்ய மிகவும் பாடுபட்டார். கைரேகைச் சட்டம், குற்றப் பரம்பரைச் சட்டம், வாய்ப்பூட்டுச் சட்டம் எனச் சொந்த நாட்டிலேயே அடிமைகளாக நடத்தப்பட்ட மக்களின் விடுதலைக்காகப் பல இன்னல்களுக்கு ஆளாகி, அக்கொடுமையானச் சட்டங்களில் இருந்து, மக்களைக் காப்பாற்றிய பாங்கினை பொது வாழ்வில் உள்ள அனைவரும் போற்றிப் பின்பற்ற வேண்டுமல்லவா !

திராவிட இயக்க ஆட்சி ஆனாலும் ஆன்மீக நெறியாளர் பசும்பொன் தேவர் அவர்களின் ஆசியைப் பெற்ற ஆட்சி எனப் போற்றினார் பேரறிஞர் அண்ணா அவர்கள்.

தேவர் ஒரு புனித மனிதர் ; தன்னலமற்றவர், தயவு, தாட்சண்ணியத்திற்காகப் பாராது உள்ளத்தில் உள்ளதை வீரமுடன் எடுத்துரைப்பவர், எனக் பலவாறு மூதறிஞர் இராஜாஜி அவர்களால் புகழப்பட்டவர்.

தேவர் ஐயாவே சுய விளக்கமாகத் தன்னைப் பற்றிக் கூறிய கருத்துக்கள், அவர் எப்படிப்பட்ட தெய்வீகத் திருமகன் என்பதைப் படம் பிடித்துக் காட்டுகிறது.

''எனக்கு மக்களைத்தான் தெரியும் !
மன்னர்களையும் மந்திரிகளையும் தெரியாது !
எனக்கு வாழத்தான் தெரியும் !
வயிறு வளர்க்கத் தெரியாது !
எனக்குப் பாய்தான் தெரியும் !
பட்டு மெத்தை தெரியாது !
ஆடம்பரம் தெரியாது !
எனக்குத் தொண்டாக இருக்கத் தெரியும் !
அவசியப்படுகிற இடத்தில் தலைவனாக நடக்கத் தெரியும் !
எனக்கு நடிக்கத் தெரியாது !
எனக்கு பாசம் கொள்ளத் தெரியும் !
பகைமை கொள்ளத் தெரியாது !
எனக்கு விவசாயம் தெரியும் !
வியாபாரம் தெரியாது !
எனக்குப் பாராட்டத் தெரியும் !
பாராட்டுப் பெறத் தெரியாது !
எனக்கு வெற்றி பெறத் தெரியும் !
எனக்குப் பதுங்கத் தெரியும் !
பாயவும் தெரியும் !
பயப்பட தெரியாது !''
என்கிறார் பசும்பொன் தேவர்.

இப்படிப்பட்ட, மிகச் சிறந்த சிந்தனை வாதியாக, தன்னலமற்ற எளிமையாளராக, தொண்டுள்ளம் கொண்டவராக, ஆன்மீக வாதியாக, தேசீய வாதியாக, உள்ளத்தில் வீரமும், பேச்சில் விவேகமும், நடத்தையில் ஒழுக்க சீலராகவும் உள்ள, எல்லாவற்றுக்கும் மேலாக, மிகச்சிறந்த மனித நேயமும், மாண்பும் உள்ள மனிதராக வாழ்ந்து, இன்றளவும் அனைத்துப் பிரிவினராலும் போற்றிப் புகழப்படும் தெய்வீகத் திருமகனாக தேவர் திகழ்கிறார்.



**தேசத்திற்கு கொடுப்பவன் தேசீயவாதி, தேசத்தில் இருந்து எடுப்பவன் அரசியல்வாதி.**

# தேவரும் டாக்டர் கலைஞரும்

**கே. முருகவேல்**
சட்டமன்ற உறுப்பினர்,
முதுகுளத்தூர்.

''வீரராக வாழ்ந்து – வீரராக மறைந்து இன்றளவும் நமது இதயத்தில் வீரராகவே திகழ்பவர் முத்துராமலிங்கத் தேவர் அவர்கள். தேவர் அவர்கள் இன்று உருவ அளவில் நம்மிடையே இல்லாவிடினும் உணர்வு அளவில் இருக்கிறார். நமது ரத்தத்தில் துடிப்புள்ள நாடி நரம்புகளில் அவர் குடி கொண்டிருக்கிறார்''. இவ்வாறு கூறியிருப்பது யார் தெரியுமா ? நமது இன்றைய முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் தான். அது மட்டுமா ? தேவர் அவர்கள் தமிழகத்தின் நேதாஜியாகவும், சுபாஷ் சந்திர போஸ் வங்காளத்தின் தேவராகவும் விளங்கியதை யாரும் மறுத்திட முடியாது என்று டாக்டர் கலைஞர் அவர்கள் குறிப்பிட்டிருப்பதிலிருந்து தேவரும் சுபாஷ் சந்திர போசும் சம வல்லமை படைத்தவர்கள் என்பதை அழகாக தெளிவுபடுத்தியுள்ளார் டாக்டர் கலைஞர் அவர்கள்.

தேவர் அவர்களின் பேச்சுக்கள் எப்படி வீரம் செறிந்தவையாக இன்றும் கருதப்படுகிறதோ அவ்வாறே டாக்டர் கலைஞர் அவர்கள் திராவிட முன்னேற்ற கழக வளர்ச்சிக்காக அவர் இளமைக் காலத்தில் பேசிய பேச்சுக்கள் எழுதிய எழுத்துக்கள் யாவும் வீராவேசமாக அமைந்திருந்தன.

டாக்டர் கலைஞர் அவர்கள் ''மனோகரா'' திரைப்படத்திற்கு எழுதிய வசனங்கள் இன்றும் ஒரு திரைக் காவியமாக மதிக்கப்படுகிறது. கல்கி பத்திரிக்கையைப் பற்றி யாவரும் அறிவர். மனோகரா திரைப்படம் வெளியான போது மேற்படி திரைப்படத்திற்கு கல்வி பத்திரிக்கையில் சுமார் இரண்டு பக்கங்களுக்கு எழுதப்பட்ட விமர்சனத்தில் ''நெளியும் புழுவிற்கும் உணர்ச்சியூட்டும் வசனங்கள்'' என்று கலைஞர் அவர்களின் பெயரை குறிப்பிடாமலேயே கலைஞரை கல்கியார் பாராட்டியுள்ளார்.

தேவர் அவர்கள் கணீரென்ற குரலில் மணிக்கணக்கில் தமிழிலும் சரி, ஆங்கிலத்திலும் சரி பேசும் திறமை படைத்தவர். அவர் தம் பேச்சை கேட்க மக்கள் லட்சக்கணக்கில் அன்று கூடினார்கள். டாக்டர் கலைஞர் அவர்கள் சற்று கரகரத்த குரலில் தன் எதிரே அமர்ந்திருக்கும் கூட்டத்தின் கவனம் வேறு எதிலும் திசை திரும்பா வண்ணம் தமது பேச்சை உன்னிப்பாக கவனிக்கச் செய்யும் வகையில் பேசும் வல்லமை பெற்றவர்.

முத்துராமலிங்கம் என்ற பெயருக்கு டாக்டர் கலைஞர் அவர்கள் கொடுத்த விளக்கத்தை அனேகமாக எனக்குத் தெரிந்தவரையில் யாரும் கூறவில்லை. அதாவது வெள்ளையனை எதிர்த்து வீரமுழக்கமிட்டவர் முத்துவடுகநாதர். அந்த முத்து என்ற பெயரை தனது பெயரில் முன் பாதியாகக் கொண்டதன் மூலம், தேவர் அந்த வீரத்தின் பிரதிபலிப்பாக இருந்தார் என்றும் ராமலிங்க வள்ளலார் பெயர் அமைதியான தத்துவத்தை குறிக்கும் ; ராமலிங்கம் என்று தனது பெயரின் பின் பாதியாகக் கொண்ட தேவர் தத்துவப் பேச்சாற்றல் கொண்டவராய்த் திகழ்ந்தார் என்றும் டாக்டர் கலைஞர் அவர்கள் கூறியிருக்கும் பெயர் விளக்கமானது ஒப்பற்றதாகும்.

தான் பிறந்த சோழ மண்டலத்திற்கும் தேவர் பிறந்த பாண்டிய மண்டலத்திற்கும் தொடர்பு இருப்பதாகக் கூறி அதனை டாக்டர் கலைஞர் எவ்வாறு ஒப்பிடுகிறார் தெரியுமா ? சோழ மண்டலத்தின் சின்னம் புலி. பாண்டி மண்டலத்தில் தோன்றிய தேவர் தனது கட்சிக்கு தேர்ந்தெடுத்த சின்னம் புலி. ஆகவே சோழ மண்டலத்துக்கும் தேவருக்கும் இந்த வகையில் தொடர்பு உண்டு என்று ஒப்பிட்டு கூறியிருக்கின்றார் டாக்டர் கலைஞர் அவர்கள்.

தேவர் அவர்களின் மனவலிமை பற்றி டாக்டர் கலைஞர் அவர்கள் ''ஆகாயமே பிளந்தாலும் மண்டலங்கள் பிளந்து மண்டையில் மோதினாலும் கடலே கொந்தளித்து கிளம்பினாலும் அதிர்ச்சியடையாத இதயம் படைத்தவர் தேவர்'' என்று குறிப்பிட்டிருப்பதிலிருந்து தேவர் அவர்களின் மனவலிமையை எந்த அளவிற்கு டாக்டர் கலைஞர் சீர்தூக்கியார்த்துள்ளார் என்பது நன்கு விளங்கும்.

தேவர் திருமகன் மீது இத்தகைய பற்றும், மரியாதையும் டாக்டர் கலைஞர் அவர்கள் கொண்டிருந்த காரணத்தால் தான் பசும்பொன்னில் தேவர் மீளாத துயில் கொண்ட இடத்தில் ஒரு நினைவு மண்டபம் எழுப்பினார். பின்னர் வெவ்வேறு தலைவர்கள் அதற்கு மெருகூட்டினார்கள். தேவர் தம் நூற்றாண்டு விழாவையொட்டி அந்த நினைவு மண்டபம் தற்போது மேலும் அழகூட்டப்படுகிறது.

தேவர் பெயரில் கல்லூரிகள் தொடங்க அனுமதி கேட்ட மாத்திரத்தில் டாக்டர் கலைஞர் அவர்கள் திருநெல்வேலிச் சீமையில் மேலநீலிதநல்லூரிலும், இராமநாதபுரம் மாவட்டத்தில் கமுதி கோட்டைமேட்டிலும், மதுரை மாவட்டத்தில் உசிலம்பட்டியிலும் கல்லூரிகள் துவங்க உதவிகள் செய்தார்.

1957ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 28 ஆம் நாள் மதுரை தமுக்கம் மைதானத்தில் நடந்த இந்திய தேசிய ஜனநாயக் காங்கிரஸ் மாநாட்டில் பேருரையாற்றிவிட்டுத் திரும்பிய தேவர் அவர்கள் மதுரை கோரிப்பாளையத்தில் நான்கு பக்கமும் சாலைகள் பிரிந்து செல்லும் இடத்தில் அதாவது இப்போது தேவர் சிலை அமைந்திருக்கும் இடத்தில் வைத்து கைது செய்யப்பட்டார். தேவர் அவர்களின் அந்தக் கைது சம்பவத்தை இன்று நினைவு கூறத் தக்க வகையில் அந்த இடத்திலேயே தேவர் சிலை நிறுவ பி.கே. மூக்கையாத் தேவர் அனுமதி கேட்ட போது டாக்டர் கலைஞர் அவர்கள் புன்முறுவலுடன் அனுமதி அளித்ததோடு மட்டுமின்றி அப்போது ஜனாதிபதியாக இருந்த வி.வி. கிரி அவர்களால் தேவர் சிலை திறப்பு விழா தனது தலைமையில் வெகு சிறப்பாக நடைபெற எல்லா உதவிகளும் செய்தார்.

அருட்செல்வம், பொருட் செல்வம், சொற்செல்வம் முதலிய எல்லாச் செல்வங்களையும் தேவர் அவர்கள் பெற்றிருந்த போதிலும் கூட தனது இறுதி காலத்தில் மதுரை திருநகரில் ஒரு வாடகை வீட்டில்தான் தங்கியிருந்து வந்தார். அந்த வீட்டில் தற்போது ஒரு மெட்ரிகுலேஷன் பள்ளி இயங்கி வருகிறது. அந்த வீட்டையும் அதனை ஒட்டிய காலி இடத்தையும் மதுரை தேவர் அறக்கட்டளை கையகப்படுத்தி அங்கு தேவர் நினைவு மண்டபம் எழுப்ப மேற்படி அறக்கட்டளை செய்து வரும் முயற்சிக்கு டாக்டர் கலைஞர் அரசு தன்னால் ஆன உதவிகளைச் செய்து வருகிறது. ஆதி திராவிட மக்கள் மதுரை மீனாட்சியம்மன் திருக்கோவிலில் ஆலயப் பிரவேசம் செய்வதற்கு முன்னின்றவர் பசும்பொன் தேவர் அவர்கள். அதே போன்று ஆதி திராவிடரும் கோவில் அர்ச்சகராகலாம் என்பதை சட்டமாக இயற்றியவர் டாக்டர் கலைஞர் அவர்கள்.

டாக்டர் கலைஞர் அவர்களின் முயற்சியால் தேவர் நூற்றாண்டு விழாவில் மத்திய அரசு தேவர் தபால்தலை வெளியிட உள்ளது. தேவர் நூற்றாண்டு விழாவையொட்டி தேவரின் புகழுக்கு மேலும் பெருமை சேர்க்க தமிழக அரசிடம் வைக்கப்பட்டுள்ள பல்வேறு கோரிக்கைகளை பரிவுடன் பரிசீலிப்பதாக டாக்டர் கலைஞர் அவர்கள் கூறியிருக்கிறார்.

தேவர் அவர்களுக்கு டாக்டர் கலைஞர் அவர்கள் முதல்வராக இருந்த போது தான் பசும்பொன்னில் நினைவாலயம் எழுப்பப்பட்டுள்ளது. தேவர் அவர்களின் நூற்றாண்டு விழா நடக்கும் இப்போதும் டாக்டர் கலைஞர் அவர்கள் முதல்வராக பவனி வருகிறார். இந்தச் சிறப்பு வேறு எவருக்கு கிடைக்கும் ?



**பனைமரம் ஏறி விழுந்து பிழைத்தவனும் உண்டு.**
**செருப்பு கடித்து இறந்தவனும் உண்டு.**




ஸ்ரீலஸ்ரீ சபாபதி சுவாமிகளுடன் தேவர்

# தேவரும் காங்கிரஸ் பேரியக்கமும்

**அ. சின்னத்தம்பி,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
வரலாற்றுத்துறை,
பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சி.

இந்தியத் துணைக் கண்டத்தில் ஆண்டாண்டு காலமாய் சுதந்திரமாய் ஆண்டு வந்த அரசர்களும், பட்டத்தரசிகளும், ஒற்றுமையின்மையாலும், அரசியல் சூழ்ச்சியினாலும், தங்களுடைய ஆளுமையையும், அதிகாரத்தையும் கி.பி. 17, 18 ஆம் நூற்றாண்டுகளில் இழக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. இதன் காரணமாக தன்னாட்சியாளர்களின் சுதந்திரம் பறிபோய் ஒரு கப்பம் கட்டிகள் என்ற ஒரு நிலைப்பாட்டிற்குத் தள்ளப்பட்டனர். மேலும் தேசீய உணர்வு படைத்த தலைவர்களும், தன்மானச்சிங்கங்களும் அன்னியரின் அட்டூழியத்தால் அவமானப்பட்டு, ஆங்காங்கு சுதந்திர எழுச்சிக்கும், விடுதலை உணர்வுக்கும் புத்துயிர் ஊட்ட கிளர்ந்தெழுந்தனர். இந்த மாபெரும் சுதந்திரப் போராட்டத்தில் தங்களின் உயிரையும், உடலுறுப்பையும், உடமையையும் மற்றும் உறவையும் இழந்த பல்லாயிரக்கணக்கோரின் சுதந்திர தியாக மனப்பான்மையையும், எழுச்சியையும், புரட்சியையும் இன்றைய சமுதாயமும், எதிர்காலச் சமுதாயமும் உணர வேண்டும். இந்திய ஒற்றுமைக்கும், ஒருமைபாட்டிற்கும், சமய சார்பின்மை ஐக்கியத்திற்கும் நாம் இந்த விடுதலைப் போராட்ட வரலாற்றை முறையாக பதிவு செய்து உணர்த்தினால் தான் நாம் நம் தாய் நாட்டிற்குச் செய்யும் மதிப்பிட முடியா அரும் பெரும் சேவையாகும்.

20 ஆம் நூற்றாண்டில் மனித சமூகம் பெற்ற மாமனிதர்களுள் ஒருவர் முத்துராமலிங்கத் தேவர். சுயநலம் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்கும் நம் சமூகத்தில், பொதுநலப் பண்பைப் பெற்று பொதுவுடமைக்கு இலக்கணமாகத் திகழ்ந்தவர் தான் முத்துராமலிங்கத் தேவர். நமது பாரதத்தின் செல்வங்களையெல்லாம் சுரண்டி கொள்ளையடித்துச் சென்ற ஐரோப்பியரின் தொல்லையினால், அல்லலுற்று தவித்த மக்களின் துயரினை நீக்க சுடரொளியாக அவதரித்தவர். சேவை மற்றும் கடமையாற்றுவதற்கு திருமணம் ஒரு தடையாய் அமையும் எனக் கருதி திருமணம் செய்யாமலேயே சமூக விடுதலைக்கும், தேச விடுதலைக்கும் உழைத்த உத்தமர். காந்தியடிகளின் கதர் ஆடைத் திட்டம், மதுவிலக்குத் திட்டம், தீண்டாமை ஒழிப்பு ஆகிய பணிகள் தமிழகத்தில் நிலைபெறத் தேவர் திருமகனார் அயராதுழைத்தார்.

1927 ஆம் ஆண்டு சென்னையில் நடந்த அகில இந்திய காங்கிரஸ் மாநாட்டில் பார்வையாளராக பங்கேற்றதுதான், தேவரது முதல் அரசியல் பிரவேசம் ஆகும். இம்மாநாட்டில், நாட்டின் சுதந்திரத்திற்கான சித்தாந்தத்தில் காந்தியின் மிதவாதத்தையும், நேதாஜியின் தீவிரவாதத்தையும் நேரில் பார்த்தவர். அதன் பிறகு நேதாஜியின் கொள்கை போக்கை உணர்ந்து அவரை சந்தித்து அவரையே தலைவராக ஏற்றுக் கொண்டு சுதந்திரப் போரில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். நேதாஜியின் தேர்ந்த அறிவும், திடமான சிந்தனையும், தீர்க்கமான அணுகுமுறையும், தேவரைக் காந்தம் போல் கவர்ந்தது. அன்று முதல் பசும்பொன் தேவர், சீனிவாச அய்யங்காரை தன் வழிகாட்டியாகவும், நேதாஜியைத் தலைவராகவும், நெஞ்சார ஏற்றுச் செயல்படத் தொடங்கினார்.

1927 இல் காங்கிரஸ் மாநாடு முடிந்து ஊர் திரும்பிய தேவர் ஓய்வு எடுக்க விரும்பவில்லை. மேலும் தனது குடித்தொழிலான உழவுத்

தொழிலிலும் மனம் செல்லவில்லை. மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்களில் சுற்றுப்பயணம் மேற்கொண்டு பட்டி தொட்டிகளிலெல்லாம் ''சுதந்திரம் நம் பிறப்புரிமை'' என முழங்கி நாட்டின் நலனையும் விடுதலையையும் எடுத்துரைத்தார். தேவரின் உரையைக் கேட்டவர்கள் தேச பக்தர்களாக மாறினார்கள் ; விடுதலை வேள்வியில் குதிக்கத் தயாரானார்கள். தேவரின் பேச்சால் மயங்கிய காவலர்கள் தான் வகித்த உத்தியோகத்தை உதறித்தள்ளிவிட்டு, காக்கிச்சட்டையைக் களைந்து எறிந்து விட்டு, கதர் ஆடை அணிந்தவர்களும், பிற துறை அதிகாரிகளும் அடங்குவர். தேவரின் மேடைப்பேச்சுக்கு அத்தகைய காந்த சக்தியும், கவர்ச்சியும் இருந்தது.

காங்கிரஸ் பேரியக்கம் மற்றும் விடுதலை இயக்கத்தை படித்த மற்றும் பார்த்தவர்களில் ஒரு சாரார் மத்தியிலும், தீவிரவாத எண்ணம் கொண்ட இளைஞர்கள் மத்தியிலும் காலூன்றி, வேரூன்றி இருந்த இலட்சிய பயணத்தை ஒரு ''பொது ஜன இயக்கமாக'' மாற்றிய பெருமை பசும்பொன் தேவரையே சாரும். 1933 இல் முதன் முதலாக மேடை ஏறி சாயல்குடியில் சுவாமி விவேகானந்தர் வாசகசாலை ஆண்டு விழாவில் மூன்று மணி நேரம் பேசினார். மூன்று மணி நேரம் பேசினார் என்றாலும் சுவை குன்றாமல், உணர்ச்சிக் குன்றாமல், எண்ணம் குழம்பாமல், தடதடவென்று மடை திறந்த வெள்ளம் போல் தெளிவான வார்த்தை உச்சரிப்பைக் கொண்டு உரையாற்றினார். இதற்காகத்தான் தேவரை நடமாடும் ஓர் தமிழ் நீர் வீழ்ச்சி என்று போற்றுவர்.

குற்றப்பரம்பரைச் சட்டத்தின் மூலம் மதுரை மாவட்டப் பிரமலைக் கள்ளர்களும், இராமநாதபுரம் மாவட்ட ஆப்ப நாட்டு மறவர்களும், சிவகங்கைப்பகுதி குறவர்களும், புதுக்கோட்டை வட்டார மற்றும் திருநெல்வேலி மாவட்ட கள்ளர்களும், மறவர்களும், காலாடி என்றழைக் கப்பட்ட பள்ளர் இன மக்களும் கடும் துன்பத்திற்கு ஆளானார்கள். மேலும் ரேகைச் சட்டத்தை ரத்து செய்யக்கோரி மக்கள் கிளர்ச்சி செய்தனர்.

இந்த நிலையில், இச்சட்டத்தை எதிர்த்துப் போர் தொடங்கினார் பசும்பொன் தேவர். ''கை ரேகை வைக்காதே ! கட்டை விரலை வெட்டிக்கொள் அல்லது சிறைக்குப்போ'' என்றார். ''வெற்றியா ? வீரமரணமா ? ஒன்றைத் தேர்ந்தெடு !'' என முழங்கினார். 1934 இல் அபிராமம் என்னும் கிராமத்தில் நடந்த கைரேகைச் சட்ட எதிர்ப்பு மாநாட்டில் டாக்டர் வரதராஜுலு நாயுடு தலைமையில் படை எனத் திரண்டனர் பாதிக்கப்பட்ட மக்கள். ஆங்கிலேய அரசுக்குப் பயம் பிறக்கிறது. இதற்கு பின் ஆங்கிலேய அரசு பயந்து சட்டத்தை சிறிது சிறிதாக தளர்த்த நடவடிக்கை மேற்கொண்டது. அதன்பின் தென் தமிழ்நாட்டில் மறவரும், கள்ளரும் தேவரைத் தெய்வமாக மதித்து விடுதலைப் போரில் தேவர் வழியில் பின் தொடர துணிந்தனர்.

ரேகைச் சட்டம் ஒழிக்க, தேவர் மகன் வாழ்க ''வந்தே மாதரம்'' என்ற கோஷங்கள் வானைப் பிளந்தன. மீண்டும் ரேகைச்சட்டத்தை எதிர்த்து ஒரு பெரும் புரட்சிக்குத் தயாரானது தமிழகம். இதை அகில இந்தியப் பிரச்சனையாக மாற்ற தேவர் முயற்சி எடுத்து, திரிபுராவில் அகில இந்திய காங்கிரஸ் மாநாடு 1937 ஆம் ஆண்டு கூடிய நேரத்தில் எம்.எஸ். ஆனே தலைமையில் ''அகில இந்திய சி.டி.ஆக்ட் எதிர்ப்பு மாநாடும்'' நடைபெற்றது. இதன் தொடர்ச்சியாக 1937ல் நடந்த தேர்தலில் இந்தச் சட்டத்தை அகற்றுவோம் என்று காங்கிரஸ் கட்சி தேர்தல் அறிக்கையில் குறிப்பிட்டிருந்தது. இராஜாஜி தமிழக முதல்வர் பொறுப்பேற்ற பின்னரும் குற்றப்பரம்பரைச் சட்டத்தை நீக்க காலதாமதம் ஆனது. அதனால் மதுரை வந்த ராஜாஜியின் முன் ஒரு லட்சம் பிரமலைக் கள்ளர் சமூகத்தினரை ஒன்று சேர்த்து பிரம்மாண்டமான ஊர்வலத்தை தலைமை ஏற்று நடத்தினார். முத்துராமலிங்கத் தேவரின் இடைவிடாத முயற்சியின் பயனாகவே 1948 – மே மாதம் இக்குற்றப் பரம்பரைச் சட்டம் நீக்கப்பட்டது.

ஆதி திராவிடர்களின் ஆலய பிரவேசத்தை சுதந்திரப் போரின் இன்னொரு முகமாகக் கருதிய ஆங்கிலேய அரசு, இந்த விஷயத்தில்

அக்கறை காட்டாமலும், பிரவேசம் செய்பவர்களுக்கு பாதுகாப்புக் கொடுக்க மறுத்தும் ஆலயப் பிரவேச எதிர்ப்பாளர்களுக்கு மறைமுக ஆதரவு அளித்தது. இதனால் ராஜாஜி அரிஜனங்களுக்குப் பாதுகாப்புத் தர வேண்டியதும், அது சம்பந்தமான உத்திரவாதங்களைத் தர வேண்டியதும் அவற்றை நிறை வேற்ற வேண்டியதும் பசும்பொன் தேவர் தான் என்று பொறுப்பை முத்துராமலிங்கத் தேவரிடம் ஒப்படைத்தார்.

என் சகோதரர்கள் ஆதி திராவிடர்கள் ஆலய பிரவேசம் செய்வதற்கான அத்தனை ஏற்பாடுகளையும் நானே முன்நின்று நடத்துவேன் என்றார் தேவர். அவரது உறுதிமொழி தமிழகமெங்கும் எதிரொலித்தது. அதைப்போல் ஆலயப் பிரவேசத்தில் வெற்றி பெற்றார். அன்று முதல் தேவரை தெய்வமாக வணங்கத் தொடங்கினர் அவ்வினமக்கள். தீண்டாமை பற்றி பேச்சளவில் இல்லாமல் தமது சொத்துக்களை தனது மரண சாசனத்தில் கூட ஆதி திராவிட மக்களுக்காக தனது நிலத்தின் பெரும் பகுதியை எழுதி வைத்து விட்டு இறந்தார் என்பது நாடு அறியும். மேலும் மக்களிடையே ஏற்றத்தாழ்வுகளை அகற்ற சமபந்தி உணவு முறையையும் நடைமுறைப்படுத்தினார்.

1936 ஆம் ஆண்டு நகர சபைகளுக்கும், மாவட்ட கழகங்களுக்கும் தேர்தல் நடைபெற்றது. காங்கிரஸ் பேரியக்கம் முதன் முதலில் தேர்தலில் போட்டியிட்டது. எதிர்த்து நிற்பவர்களோ பணபலம் படைபலம் மற்றும் ஆளும் அரசின் (நீதிகட்சி) ஆதரவைப் பெற்ற பெரும் முதலைகள். பசும்பொன் தேவர் பம்பரமாகச் சுழன்று மாவட்டம் முழுவதும் தீவிர பிரச்சாரம் செய்து மகத்தான வெற்றி பெறுகிறது காங்கிரஸ் என்று முழங்கினார். வெற்றி விழாக் கூட்டத்தில் ''காங்கிரஸின் வெற்றி, தேவரின் வெற்றியே'' என்று புகழாரம் சூட்டினார் தீரர் சத்தியமூர்த்தி. அந்த அளவிற்கு தேவருக்கு மக்கள் செல்வாக்கு இமயம் போல் இருந்தது.

தேவரின் தீவிரப் பேச்சாற்றலாலும், எழுத்தாற்றலாலும், சர்வதேச பத்திரிக்கைளில் வெளியாகியதன் விளைவாகவும், ஆங்கிலேயரை எதிர்த்து தேசீய உணர்வை மக்களிடம் பரப்பியதாலும் தேவருக்கு வாய்ப்பூட்டு சட்டம் போடபட்டது. சுதந்திரப் போராட்டக் காலக்கட்டத்தில் ஆங்கிலேயரால் இந்தியாவில் இரண்டு நபர்களுக்கும் வாய்ப்பூட்டுச் சட்டம் போடப்பட்டது. ஒன்று வடக்கே திலகர் பெருமகனார், இரண்டாவது தெற்கே தேவர் பெருமகனார் என்பது குறிப்பிடத்தக்கது. தேவரையும், திலகரையும் கண்டு தான் ஆங்கிலேய அரசு அஞ்சியது என்பதற்கு இது ஒன்றே சான்றாகும்.

1937 ஆம் ஆண்டு சட்டசபைத் தேர்தல் நடைபெற்றது. இத்தேர்தலில் காங்கிரசும், நீதிக்கட்சியும் களத்தில் மோதின. இராமநாதபுரம் தொகுதியில் இராமநாதபுரம் மன்னர் சேதுபதி நீதிக் கட்சியின் சார்பில் போட்டியிட்டார். எதிர்த்துப் போட்டியிட்ட காங்கிரஸ் கட்சி தேவரை வேட்பாளராக நிறுத்தியது. தேர்தலில் சேதுபதியை எதிர்ப்பதை தேவரின் தந்தை உக்கிரப்பாண்டியத் தேவரும் விரும்பவில்லை. ஆகவே மகனை எதிர்த்து, மன்னர் சேதுபதியை ஆதரித்து முழக்கமிட்டார். தேவர் காட்டாற்று உரையால் மக்கள் மனதை கவர்ந்து விடுவாரோ என்று ஆங்கிலேய அரசு பயந்து எந்த மேடையிலும் சொற்பொழிவு ஆற்றக்கூடாது என்று வாய்ப்பூட்டு போட்டது. அரசின் ஆணையை ஏற்று தனது பலத்தை ஒவ்வொரு மேடையிலும் ஒரு ஞானியைப் போல அமர்ந்து விட்டு மக்களைப் பார்த்து கரம் கூப்பி வணக்கம் தெரிவித்தார். மக்கள் அனைவரும் ''பேசுங்கள்!'' ''பேசுங்கள்'' என்றனர். தேவர் பேசியது இதுவே, ''நான் ஆதியிலும் ஊமையல்ல, வியாதியாலும் ஊமையல்ல, பாதியிலே ஊமையானேன், அரசின் சட்டத்தால்'' தேவரின் பேச்சு மக்களைக் கண் கலங்க வைத்து ; அவரின் சொல்லுக்குக் கட்டுப்பட வைத்தது. இத்தேர்தலில் மக்கள் செல்வாக்கைப் பெற்ற தேவரே வெற்றி பெற்றார்.

1937 தேர்தலில் காங்கிரஸ் வேட்பாளராகக் காமராஜர் சாத்தூர் தொகுதியில் போட்டியிடும் போது நீதிக்கட்சியைச் சேர்ந்த சிலர் காமராஜரைக் கடத்திச் சென்று விட்டதாகவும், காமராஜரின் உயிருக்கு ஆபத்து என்றும் செய்தி பரவியது. இச்செய்தியை கேட்டத் தேவர் உடனே விருதுநகருக்குச் சென்று மேடையில் பேசும் போது,

''காமராஜரைச் சாதாரணக் காங்கிரஸ் தொண்டன் என்று யாராவது நினைத்தால், அவர்களுக்காக நான் அனுதாபப்படுகிறேன். காமராஜருக்குப் பின்னால் காங்கிரஸ் மகாசபை இருக்கிறது. அந்த மகா சபையில் எங்களைப்போல், எவ்விதத் தியாகத்திற்கும் தயாராக உள்ள கோடானு கோடிப்பேர் இருக்கிறார்கள். காமராஜர் மீது ஒரு துரும்பு படுமானால், நீங்கள் வீதியில் நிம்மதியாக நடமாட முடியாது.. இருப்புக்கவசம் போட்டுக் கொண்டு தான் நடக்க முடியும். விடிவதற்குள் காமராஜ் வீடு வந்து சேர வேண்டும் இல்லை என்றால், அவரை மறைத்து வைத்திருப்பவர்கள் அதன் விளைவுகளை சந்திக்கத் தயாராகுங்கள் என்று கூறினார். காலிகள் கலங்கிப் போனார்கள். காமராஜர் உடனடியாக விடுவிக்கப்பட்டார்''. இந்தத் தேர்தலில் ''காங்கிரசுக்கு போடும் ஓட்டு, தேவருக்குப் போடும் ஓட்டு, தேச விடுதலைக்குப் போடும் ஓட்டு'' என்று தான் தலைவர்கள் பேசினார்கள் தேவரும் வென்றார், காமராஜரும் வென்றார், காங்கிரஸ் வேட்பாளர்கள் மகத்தான வெற்றி பெற்றனர். இவ்வெற்றிக்கு முத்துராமலிங்கத் தேவர் முக்கியக் காரணமாக இருந்தார். இவ்வெற்றி விடுதலைப் பயணத்தில் இன்னொரு மைல்கல்லாக அமைந்தது.

அகில இந்திய காங்கிரஸ் தலைவர் பதவிக்கு காந்திஜியின் வேட்பாளரான பட்டாபி சீத்தாராமையாவை எதிர்த்து நேதாஜி போட்டியிட்டார். 11.03.1937 ல் திரிபுராவில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் நேதாஜி தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார். இதன் பின் காந்திஜி, பட்டாபியின் தோல்வி என் தோல்வி என்று பகிரங்கமாக அறிவித்தார். இதன் பின் சுதந்திரப் போராட்டத்தில் நேதாஜியுடன் ஒன்று சேர்ந்து செயல்பட காங்கிரஸில் மிதவாதக் கொள்கையை அடிப்படையாகக் கொண்ட அனைவரும் முன்வரவில்லை. இதனால் 01.05.1937ல் காங்கிரஸ் தலைவர் பதவியை ராஜினாமா செய்து, 06.07.1937இல் பார்வர்டு பிளாக் (Forward Block) என்ற கட்சியை நேதாஜி தொடங்கினார். சுதந்திரப் போராட்டத்தில் தீவிரவாதக் கொள்கை எண்ணம் கொண்ட அனைவரும் பார்வர்டு பிளாக் கட்சியில் இணைந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது. இதன் பின் சுபாஷ் சந்திரபோஸ், பாலகங்காதர திலகர் போன்ற தீவிரவாத தேசீயதலைவர்களோடும், தீவிரவாத கொள்கைக் கூட்டத்திற்கு அன்று தமிழகத்தில் தலைமை ஏற்றிருந்த சீனிவாச ஐயங்கார் போன்றவர்களின் உறுதுணையோடும், தேவர் திருமகனார் தமிழகம் எங்கும் விடுதலை வேட்கை எனும் தீப்பிழம்புகளை ஏந்தி வலம் வந்தார். குறிப்பாக தமிழகத்தின் தென்பகுதிகளில் சுதந்திர தாகம் கொழுந்து விட்டு எரியச் செய்ததில் தேவரின் பங்கை எவரும் குறைத்து மதிப்பிட முடியாது என்து வரலாற்று உண்மையாகும்.



**உடலுக்கு வெளி அழகு மாத்திரம் போதாது**
**அக அழகும் மனதை அடக்கும் ஆற்றலும் ஒருங்கே வேண்டும்.**



காசி பல்கலைக்கழகத்தில் சர்.சி.பி. இராமசாமி ஐயருடன் தேவர்.



சிஷ்யர் பி.கே. மூக்கையா தேவருடன் பசும்பொன் தேவர்.

# தேவர் புகழ்வாழி

**சி. பாலகுருசாமி,**
நல்லாசிரியர், ஐயப்ப பக்தர் குருநாதர், முதுகுளத்தூர்.

சீர்தந்த தாமரையாள் செல்வம் நிறைந்தோங்கு
கார்தந்த செழுங்கழனி கதிர்முற்றி செழித்தோங்கு
தார்தந்த வாழைநிறை தனித்தங்கம் பசும்பொன்னில்
பேர்தந்த உயர்குடியில் பிறந்திட்டார் தேவர்மகான்

தேசீயமும் தெய்வீகமும் தேர்ந்த இருபொருளை
நாசிஉயர் பெருமூச்சாய் நாளெல்லாம் வாழ்ந்திட்டார்
தேசீயத்தில் விடுதலைக்கு சிறைசென்று போராடி
பேசிய பேச்செல்லாம் பேரிடியாய் முழங்கிடவே.

கேட்டுக் கிறுகிறுத்த வெள்ளையனும் போட்டான்வாய்
பூட்டு சட்டத்தையும் வல்லவராம் தேவருக்கு
பட்டு எதிரவரும் பந்துபோல மக்களினம்
கூட்டாக கோஷமிட்டார் வெள்ளையனே வெளியேற்ற

பாடுபட்டு தேடிபெற்ற பாரதச் சுதந்திரத்தை
நாடுகின்ற பொருளாசை நப்பாசை ஏதுமின்றி
நீடுவந்த உயர்பதவி தீதெனவே மறுத்துவிட்டார்
பாடுஉறும் மக்களுக்காய் பரிவோடு சேவை செய்தார்

அண்டைநாடு பர்மாவிற்கு ஆங்கிலேயர் ஆட்சியிலும்
மீண்டுவந்த சுதந்திரத்தின் உரிமையுள்ள தலைமகனாய்
இரண்டுமுறை மியான்மருக்கு சென்று வந்த நம்தேவர்
திரண்டபெரும் கூட்டமதில், ஆங்கிலத்தில் முழங்குகின்றார்

இருதிறந்து மொழியிலுமே இன்னமுதன் புத்தர்பற்றி
அருமந்த விளக்கம்பல அளித்தபோது பிட்சூக்களும்
இருமாந்து செம்மடுத்தார் இன்புற்ற பர்மியரோ
கருமந்த கூந்தல்மேல் நடந்துவர அழைப்பித்தார்

மாதரை தெய்வமாக மதித்திடும் தேவர்மகான்
ஈதெனக்கு ஒவ்வாத செயலென்று மறுத்திட்டார்
வேதமொழி நல்வழியில் விரும்பியன்றோ வாழ்ந்திட்டார்
நாதமென அவர்புகழோ நாற்றிசையும் முழங்குதம்ம.

பர்மியரின் தலைவருக்கு பக்குவமாய் திருக்குறளின்
அருமந்த சிறப்பதனை அழகுறவே எடுத்தியம்பி
திறக்குறள் புத்தகத்தை திருக்கரம் சேர்த்திட்டார்
பெருக்குற்ற சேச்சாற்றல் தெரிய புகழ்ந்திட்டார்

வங்கத்துச் சிங்கமென வாழ்ந்திட்ட போஸைப்போல்
சங்கவளர் தமிழ்நாட்டில் தேவர்மகான் வலம் வந்தார்
பொங்கிவளர் வீரமுடன் பொருத்தமுள்ள இருதலைவர்
மங்காத வீரப்புகழ் மனத்தினிலே இனிக்குதம்ம

அஸ்ஸாமுடன் சீனாவும் அழகுசேர் பர்மாவும்
ஒன்றுசேர் எல்லையமர் சானிநாடு சென்று வந்து
''நன்றுள்ளார் நேதாஜி இறக்கவில்லை'' என்றார்.
பொன்றாத் துணை நண்பர் ''போஸ்ஸவர்கள் வாழி என்றார்''

ஆன்மீகச் செம்மலாம் விவேகானந்தர் ஆன்மீகத்தை
காண்பித்த சிகாகோ நகர்போல வளம்சேர்
தேன்மொய்க்கும் மலர்சோலை பர்மாவோ நம்தேவர்
ஆன்மீகத் தத்துவத்தை அண்டமெலாம் சாற்றியதே

எங்கும் நிறைந்தருளும் ஈசன் விஸ்வநாதன்
தங்கி அருள் சுரக்கும் காசிநகர் பல்கலையில்
சிங்கநிகர் தேவர்மகான் இந்துமதம் என்பதாக
எங்கும் பொதுமொழியாம் ஆங்கிலத்தில் முழங்குகின்றார்

தலைமை ஏற்றுள்ள சர்.சி.வி. இராமசாமி – ஐயர்
திளைத்தே மகிழ்ந்திட்டார் தேவரவர் சொற்பெருக்கில்
நிலைத்து உலகெலாம் நின்று மொழி ஆட்சிசெயும்
தழைத்த ஆங்கிலத்தை தன்னுரையால் ஆட்சி செய்தார்

அணலும் புனலுமாய் அற்புத உருவாகி
தினவெடுத்த தோள்வழியும் தெவிட்டாத அருள்மொழியும்
மனத்தகத்தே தேசத்தார் உயர்வையே எண்ணியெண்ணி
களப்பொழுதும் குறையாத கற்பொழுக்கர் தேவர் மகான்

வாழ்ந்தபோது வாழவைத்த வளமான குறிப்பெல்லாம்
தாழ்ந்ததில்லை கண்கூடாம் தரணியில் நிகழுதைய
தீர்க்கத் தரிசனமாய் தேவர்திருமகன் எடுத்துரைத்த
வார்த்தைகள் நல்மாந்தர் வாழ்க்கை கவசமாகும்

வீரராய் பிறந்துகற்று வீரராய் தொண்டாற்றி
தீரராய் திகழ்ந்தோங்கி தென்னாட்டுச் சிங்கமதாம்
மாறாத தெய்வமதாய் மனத்தினிலே உரைந்திட்ட
சீராளன் நம்தேவர் நூற்றாண்டில் பணிந்திடுவோம்

பிறந்த திருமண்ணில் பெயர்விளங்க மணிமன்றம்
சிறந்து விளங்கிடவே செய்திட்டார் கலைஞரவர்
சிறைந்த நூற்றாண்டு விழாவினையும் சிறப்புறவே
விழைந்தே செய்திட்டார் வியத்தகு கலைஞரவர்

உள்ளத்தில் உறுதிகொண்டார் உறங்காத வீரங்கொண்டார்
வெள்ளத்தில் புரளாத வேங்கைநிர் மறவரெல்லாம்
தென்தமிழ் காட்டுகின்ற தீதறு அன்புவழி
உள்ளுவீர் விழாவெடுக்க உவக்கின்றார் கலைஞரவர்

வெள்ளையனை வேரறுக்க வித்திட்ட முத்து வடுகன்
சொல்லை முதற்கொண்டு சோராத வீரங்கொண்டார்
வள்ளல் பெருமகனார் ராமலிங்கம் பெயர் பின்கொண்டார்
எல்லையில்லா ஆன்மீக ஏந்தலாளார் என்றார் மு.க.

நாட்டின் விடுதலைக்காய் நாட்டோரை ஒன்று கூட்டி
காட்டினார் சொற்பொழிவில் கன்றாத விழிப்புணர்வு
ஊட்டினார், விடுதலை உற்றார் அவர் காலத்தே
பாட்டினால் இதை உரைக்க பணிகொண்டேன் புகழ்வாழி.

# தேவரின் அரசியல் வாழ்வு

**வீ. சாமிநாதன்,**
ஆய்வு மாணவர் (வரலாறு),
பாரதிதாசன் பல்கலைக்கழகம்,
திருச்சிராப்பள்ளி.

**பொ**து வாழ்க்கையில் மக்களுக்காக சிறிதும் விட்டுக் கொடுக்காமல் இறுதி வரை போராடி இதற்காகத் தனது சொந்த வாழ்க்கையையும், அரசியல் வாழ்க்கையையும் கூட இழந்து மக்களின் மனதில் நின்றவர்களில் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் குறிப்பிடத்தக்கவர். நேதாஜியைப் போலவே, அரசியல் வாரிசு, தென்னாட்டு போஸ் என்று அழைக்கப்பட்ட பசும்பொன் முத்துராமலிங்கத் தேவரும், கடுஞ்சிறையில் நாலாயிரம் நாட்கள் அடைபட்டு அவதியுற்றார். இன்னும் வாய்ப்பூட்டுச் சட்டம் என்னும் கொடும் சட்டத்தால் பேச்சுரிமையைக் கூட சில காலம் இழந்து நின்றார்.

1927ல் சென்னையில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் நேதாஜி சுபாஷ் கலந்து கொண்டார். இம்மாநாட்டில் தனது வழக்கறிஞர் ஸ்ரீனிவாச அய்யங்காருடன் சென்று தேவர் கலந்து கொண்டார். அதில் நேதாஜியை சந்தித்த தேவர் தன்னை காங்கிரஸ் பேரியக்கத்துடன் இணைத்துக் கொண்டார். 1933ல் சாயல்குடியில் நடந்த விவேகாநந்தர் வாசகர் சாலை ஆண்டு விழாவில் கலந்து கொண்டு தேவர் ஆற்றிய பேருரை கலந்து கொண்ட அனைவரையும் திகைக்க வைத்தது. ஏனெனில் கன்னிப்பேச்சே பத்து பதினைந்து நிமிடங்களில் முடிந்து போகாமல் மூன்று மணி நேரம் கொண்ட பேருரையாக அமைந்தது. இது எதிர்கால தேவரின் அரசியல் மேடைகளுக்கு அடித்தளமைத்துக் கொடுத்தது.

1935ல் மூதறிஞர் இராஜகோபாலச்சாரியார் தலைமையில் கோவையில் நடைபெற்ற தமிழ்நாடு காங்கிரஸ் அரசியல் மாநாட்டில் பிரதிநிதியாகக் கலந்து கொண்டு, தான் அரசியல் குருவாக ஏற்றுக் கொண்ட திரு. டி. சீனிவாச அய்யங்காரின் வேண்டுகோளினை ஏற்று மாநாட்டில் பெரியதொரு சொற்பொழிவாற்றினார். அது முதல் அவரது புகழ் தமிழகம் முழுவதும் பரவியது. 1935 முதல் 1937 வரை தமிழகம் முழுவதும் சுற்றுப்பயணம் செய்து காங்கிரஸ் பேரியக்கத்தை வளர்க்க தன்னுடைய நாவன்மையால் மக்களை எழுச்சியுறச் செய்தார். விருதுநகர் நகராட்சி தேர்தல் 1936ல் நடந்தது. அப்போது கோடீஸ்வரர்களான நீதிக்கட்சியின் பிரமுகர்கள் கொடி கட்டிப்பறந்த காலம். சாதாரணமான காங்கிரஸ் தொண்டர் காமராஜர் நகராட்சி தேர்தலில் நிற்க முன் வந்தார். உடனே நீதிக்கட்சிப் பிரமுகர்கள் அவரை அடியாட்களைக் கொண்டு கடத்திச் சென்று எங்கோ அடைத்து விட்டனர். அப்போது சாயல்குடியில் இருந்த தேவருக்கு தகவல் தெரிவிக்கப்பட்டது. உடனே அவர் விருதுநகர் வந்து ஓர் மாபெரும் பொதுக் கூட்டம் நடத்தி இக்கூட்டம் முடிந்து நான் மேடையை விட்டு இறங்கும் முன்பு காமராஜர் இங்கே வரவேண்டும். இல்லையேல் அவரை அடைத்து வைத்திருப்பவர்கள் அதன் விளைவுகளை அனுபவிக்க வேண்டிவரும் என்று எச்சரித்தார். தேவரின் எச்சரிக்கையால் மிரண்டு நீதிக்கட்சிப்பிரமுகர்கள் காமராஜரை விடுவித்தனர். தேவர் மேடையை விட்டு இறங்கிய போது அதே இடத்தில் காமராஜர் அவரை சந்தித்து நன்றி கூறினார்.

அன்றைய தேர்தல் முறை தேர்தலுக்கு நிற்பவர் நகராட்சிக்கு வரி செலுத்துபவராய் இருக்க வேண்டும். எனவே நகராட்சிக்கு வரி செலுத்த ஒரு ஆட்டுக்குட்டியை விலைக்கு வாங்கி அதற்கான வரியைக் காமராஜர் பெயரில் கட்டி அவரை தேர்தலில் காங்கிரஸ் வேட்பாளராக

நிற்கவைத்து வெற்றி பெறச் செய்தார் தேவர். அதன் பின் 1948ல் நடந்த திருப்பரங்குன்றம் காங்கிரஸ் மாநாட்டில் தமிழ்நாடு காங்கிரஸ் கட்சித் தலைவர் தேர்தல் நடந்தது. இந்த தேர்தலில் காமராஜர் தன்னைத் தலைவராக ஆக்க வேண்டுமெனத் தேவரிடம் வேண்டிக்கொண்டார். அத் தேர்தலில் அரசியல் மேதை ராஜாஜிக்கு எதிராக காமராஜர் பெயரை முத்துரங்க முதலியார் முன் மொழிய ஏற்பாடாகியிருந்தது. ஆனால் கடைசி நேரத்தில் முத்துரங்க முதலியார், காமராஜர் பெயரை முன் மொழிந்தால் கலாட்டா நடக்கலாமெனக் கருதி அம்மாநாட்டிற்கே வரவில்லை. அத்தகைய இக்கட்டான சூழ்நிலையில் தேவர் காமராஜர் பெயரை முன் மொழிந்தார்.

புதுக்கோட்டைப் புலி வல்லத்தரசு வழி மொழிந்தார். அன்று முதல் காமராஜர் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவராகி அரசியலில் படிப்படியாக உயர்ந்தார். 1937ல் சென்னை மாகாணத்திற்குச் சட்டசபைத் தேர்தல் வந்தது. இத்தேர்தலில் இராமநாதபுரம் சட்டசபைத் தொகுதியில் நீதிக்கட்சியின் சார்பில் இராமநாதபுரம் சேதுபதி வேட்பாளராக நின்றார். அவரை எதிர்க்க ஆளில்லாத நிலை, நீதிக்கட்சி வேட்பாளர் சேதுபதியைத் தோற்கடிக்க வேண்டுமென்று காங்கிரஸ் தலைமை விரும்பியது. இதனால் நீதிகட்சி வேட்பாளரும், இராமநாதபுரம் சமஸ்தானதிபதியும் மறவர் மகா சபைத் தலைவருமான சண்முகராஜேஸ்வர சேதுபதியை எதிர்த்து காங்கிரஸ் தேவர் அவர்களை நிறுத்தியது.

இராமநாதபுரம் சமஸ்தானம் மிகப் பெரிய பாரம்பரியமிக்க சமஸ்தானமாகும். இராமேஸ்வரம் வரும் பக்தர்கள் இறைவனை வழிபட்டபின், கடைசியாக, இராமநாதபுரம் சேதுபதியைத் தரிசித்துச் செல்வது வழக்கம். அப்போது தான் புனித யாத்திரை நிறைவு பெற்றதாக பக்தர்கள் கருதுவார்கள். அப்பேர்பட்ட புகழுடைய சமஸ்தானம் இராமநாதபுரம் சமஸ்தானம். அத்துடன் அன்றைய தேர்தல் நிலவரி கட்டும் நிலச்சுவான்தார்கள் மட்டுமே வாக்களிக்கும் தேர்தலாகும். நிலம் வைத்து நிலவரி கட்டுகின்ற நிலச்சுவான்தார்கள் அனைத்து சாதிகளிலும் இருந்தனர். இவர்கள் சேதுபதியின் தயவால் நிலம் பெற்றிருந்ததால் அவர்கள் அனைவருமே சேதுபதிக்கே வாக்களிப்பார்கள் என்ற நிலை. இத்தனைக்கும் மேலாக தேவரின் தந்தை உக்கிரபாண்டித் தேவர் அவர்களே தனது மகனை எதிர்த்து சேதுபதிக்குத் தேர்தல் வேலை செய்தார். மேலும் நீதிக்கட்சி பிரமுகர் பட்டிவீரன்பட்டி சௌந்தரபாண்டிய நாடார், கமுதி நாடார்கள் அனைவரும் மறவர் மகாசபைத் தலைவர் சேதுபதிக்கே வாக்களிக்க வேண்டுமென்று நாடார் மகாசபை மூலம் உத்தரவிட்டிருந்தார். மேலும் அன்றைக்கு இராமநாதபுரம் மாவட்டத்தில் பீட்டர் பெருமாள் தலைமையில் இருந்த பூவைசிய தேவேந்திர குல வேளாளர் சங்கமும் சேதுபதிக்கே தேர்தலில் வேலை செய்தது. ஆனால் தேர்தலில் காங்கிரஸ் வேட்பாளர் தேவர் வெற்றிப் பெற்றார். அன்றைக்கு பொப்பிலி ராஜாவை எதிர்த்துத் தேர்தலில் வெற்றி பெற்ற வி.வி. கிரியும் இராமநாதபுரம் சேதுபதியை எதிர்த்து வெற்றி பெற்ற தேவரும் மிகவும் பிரபலமானார்கள்.

அடுத்து 1938ல் திரிபுராவில் காங்கிரஸ் மகாசபைத் தேர்தல் நடந்தது. அதில் காந்தி அடிகளின் ஆதரவுடன் பட்டாபி சீதாராமையா நின்றார். அவரை எதிர்த்து நேராஜி சுபாஷ் சந்திரபோஸ் போட்டியிட்டார். ராஜாஜி, சத்தியமூர்த்தி முதலானோர் பட்டாபிக்காகப் பாடுபட்டனர். எஸ். சீனிவாச ஐயங்காருடன் சேர்ந்து தேவர் நேதாஜியை ஆதரித்தார். தேவர் ஆதரித்த நேதாஜியே இறுதியில் வெற்றிப் பெற்றார்.

1939ல் நேதாஜிக்கு மதுரை மாநகரில் ஓர் மாபெரும் வரவேற்பு கொடுத்தார். 1939ல் காங்கிரஸ் உட்பூசல்கள் காரணமாய் மனம் வெதும்பிய சுபாஷ் தீவிரவாத கொள்கையை அடிப்படையாக கொண்டு பார்வர்ட் பிளாக் என்ற பெயரில் கட்சியை ஆரம்பித்தார். கட்சி சுபாஷ் தலைமையில் என்.ஜி. ரங்கா, கவிஷர், நரிமன்,

சேனாதிபதி பாபட், சரத் சந்திரபோஸ், பசும்பொன் தேவர் ஆகியோர் அடங்கிய மத்தியக் கமிட்டி அமைக்கப்பட்டது. பிறகு சுபாஷ் கொள்கையை விளக்க நாடெங்கும் சுற்றுப்பயணம் செய்தார். 1939 செப்டம்பர் 4ல் சென்னையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. அக்கூட்டத்தில் பேசிக் கொண்டிருக்கும் சமயத்தில் பிரிட்டன் ஜெர்மனி மீது போர் தொடுத்த செய்தி வெளியாகியது. யுத்தம் மூண்டு விட்டதால் தமிழக சுற்றுப்பயண நிகழ்ச்சி கைவிடப்பட்டது. தேவரின் விருப்பத்திற்கிணங்க மதுரைக்கு மட்டும் வர சுபாஷ் ஒப்புக் கொண்டார். அதன்படி 1939 செப்டம்பர் 6 அன்று ஸ்ரீ மீனாட்சி மில் அதிபர் உயர்திரு. கருமுத்து தியாகராஜ செட்டியார் அவர்கள் தலைமையில் மதுரை நகரே திரண்டு சுபாஷை வரவேற்றது. அக்கூட்டம் முடிந்த அன்றிரவே காரியக் கமிட்டியில் கலந்து கொள்ள சுபாஷும், தேவரும் வார்தா சென்றனர்.

இரண்டாவது யுத்தக் காலம் முழுவதும் அநேகமாய் தேவர் சிறையிலேயே கழித்தார். 1942 ஜூன் 22ல் பார்வர்ட் பிளாக் சட்ட விரோதமாக்கப்பட்டது. 1945 செப்டம்பர் 4ம் நாள் ஜப்பான் சரணாகதி ஒப்பந்தம் கையெழுத்தானது. 5ம் நாள் காலை தேவர் தனது சிறைத் தவத்தை முடித்து தனது நண்பர்களான அப்துல் ரஹ்மான், ராமன்னர், பாப்பையா சாஸ்திரி, சித்திரா, ராதாகிருஷ்ணன், சசிவர்ணத் தேவர் ஆகியோருடன் வேலூர் சிறையிலிருந்து விடுதலையாகி வந்தார். அதன்பிறகு 1946ல் நடந்த சட்ட சபைத் தேர்தலில் தேவர் முதுகுளத்தூர் தொகுதியிலிருந்து போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்திய வரலாற்றில் இது மிகப்பெரிய சாதனையாகும். இதற்குப்பின் 1952 தேர்தலிலும் பார்வர்ட் பிளாக் சார்பில் தேவர் வெற்றி வாகை சூடினார். 1957ல் சுதந்திர இந்தியாவில் இரண்டாவது பொது தேர்தல் வந்தது. அப்போது தேவர் பாராளுமன்றத்திற்கும், சென்னை சட்ட மன்றத்திற்கும் பார்வர்ட் பிளாக் சார்பில் போட்டியிட்டு, இரண்டு தொகுதிகளிலும் வெற்றி பெற்றார். பின் மக்களவை உறுப்பினர் பதவியை மட்டும் வைத்துக் கொண்டு சட்டமன்ற உறுப்பினர் பதவியை ராஜினாமா செய்தார். இதனால் முதுகுளத்தூர் சட்டமன்றத்திற்கு இடைத்தேர்தல் வந்தது. இந்த இடைத் தேர்தலில் பார்வர்ட் பிளாக் வேட்பாளராக சசிவர்ணத் தேவர் நிறுத்தப்பட்டார். அவரை எதிர்த்து காங்கிரசு வேட்பாளராக பாஸ்கரன் சேர்வை என்பவர் நிறுத்தப்பட்டார். பல எதிர்ப்புகளையும் மீறி தேவரின் தொண்டன், சசிவர்ணத் தேவர் மகத்தான வெற்றி பெற்றார்.

1962ல் முதுகுளத்தூர் சட்டமன்றத்திற்குத் தேர்தல் நடந்தது. இத்தேர்தலில் பார்வர்ட் பிளாக் வேட்பாளராக சசிவர்ணத் தேவர் போட்டியிட்டார். இவரை எதிர்த்து காங்கிரசு வேட்பாளராக இராமநாதபுரம் சேதுபதி காசிநாததுரை போட்டியிட்டார். இறுதியில் பார்வர்ட் பிளாக் வேட்பாளர் சசிவர்ணத் தேவர் வெற்றி பெற்றார். இதே போல் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவரும் 1962ல் அருப்புக்கோட்டை பாராளுமன்றத் தேர்தலில் வெற்றி பெற்றார்.



**உண்மையைச்சொல், உறுதியாகச்சொல், இறுதிவரை சொல்**
**அவனே உண்மையான வீரன்.**




சிஷ்யர் ஏ.ஆர். பெருமாளுடன் தேவர்.



மதுரை தமுக்கம் மைதானத்தில் நடந்த பார்வர்டு பிளாக் மாநாட்டில் தேவர்

# தேவரும் அரசியல் சிந்தனைகளும்

**கா.வெ.சே. மருதுமோகன்,**
நிறுவனர் / தலைவர்,
தமிழர் பண்பாட்டு ஆய்வு நிறுவனம்,
சென்னை.

மேலை நாட்டு அறிஞர் பெர்னாட்ஷா, ''அரசியல் என்பது அயோக்கியர்களின் இறுதிப் புகலிடம்'' என்று கூறினார். இதற்கு விதிவிலக்காக விளங்கியவர் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் ஆவார். மிகப்பெரிய நிலச்சுவான்தார் குடும்பத்தில் பிறந்த தேவர் மிக எளிய வாழ்க்கை வாழ்ந்தார். அரசியலில் மிக நேர்மையாக விளங்கினார். அரசியலில் எவருக்கும் அஞ்சாமல் தன் கொள்கையில் எதற்காகவும் நெறி பிறழாமல் இறுதி வரை வாழ்ந்தார். தமிழ்நாட்டு அரசியல் மட்டுமல்லாது இந்திய அரசியலில் நீக்கமற இணைந்து சர்வதேச அரசியலிலும் வியாபித்து இருந்தது அவரது அறிவாற்றல். கல்வித் தகுதியில் பள்ளி இறுதிப் படிப்புதான் என்றாலும் தமிழிலும் ஆங்கிலத்திலும் மிகுந்த புலமையுடன் விளங்கினார் தேவர். இந்த அறிவாற்றல் அவருக்கு அரசியலில் பெரும் பலமாக விளங்கியது. அரசியல் ஆனாலும் சரி, ஆன்மீகமானாலும் சரி, தலைப்பிலிருந்து விலகாமல் ஆழ்ந்த கருத்துக்களை மிக விளக்கமுடன் பல மணி நேரங்கள் தமிழிலும் ஆங்கிலத்திலும் சரளமாக உரையாற்றும் ஆற்றல் அவருக்கு பிறவிலேயே இருந்தது எனலாம்.

''தேசியமும், தெய்வீகமும் என் இரு கண்கள்'' என தன் அரசியல் கோட்பாட்டை வைத்திருந்தவர் தேவர். ''தேசியம், தெய்வீகம் இரண்டும் அரசியலில் இணைந்து இருத்தல் வேண்டும். ஒன்றைப் பிரிந்து ஒன்றை இயக்கினால் அரசியலும் கெடும் அரசியலுக்குரிய நாடும் கெடும். தெய்வீகம் நல்லவர்களையும் நல்லவைகளையும் பெற்றுத்தரும் சக்தியாகும். தெய்வீகமற்ற நாட்டில் நீசத்தன்மை பெருகும். நீசத்தன்மை பெருகிய நாட்டில் நல்லவர்கள் குறைந்து போவார்கள். தெய்வீக சக்தியை வேண்டாத தேசீயம், தேசீயம் ஆகாது'' எனக் கூறினார் தேவர்.

தேவர் தேசீய சக்தியின் மகிமை பற்றிக் கூறுகையில் ''ஓங்கார சக்தியின் உட்பொலிவையும் அணையாக்கனலையும் கொண்டது தேசீய சக்தி. அந்த சக்திக்கு தன்னை ஆகுதி செய்து கொள்ள அவாவுறுகிற ஒருவன் முதலில் தன்னை எந்தச் சுற்றுச் சார்புக்கும் ஆட்பட்டவனாக ஆக்கி கொள்ளாத அளவுக்கு தன்னை சுத்திகரித்துக் கொண்டு இதயத்தை வைரப்படுத்திக் கொள்ள வேண்டும். தேசீய சக்தியை நம்பினால் பகைமைகளும், ஆபத்துக்களும் தான் ஆரம்பத்தில் அடுத்தடுத்து மோதவரும். அந்த மோதல்கள் லட்சியத்தையே பெயர்த்தெறியும் அளவுக்குக் கடுமையானதாகவும் இருக்கும். அவைகளில் நெஞ்சுடையாமல் தேறிவிட வேண்டும். தேறிய பிறகு தான் தேசீய சக்தி அவனை தன்சார்பு பெற அனுமதிக்கும். அச்சார்பு பெற்றவன்தான் தன்னை தேசீய நாட்டுத் தொண்டன் என கூறிக் கொள்ளலாம். அவ்வாறில்லாமல் ஒருவன் தன்னை தேசீயவாதி என சொல்லிக் கொண்டால் அவனை தேசீயத்தாய் ஆரம்பத்தில் அட்டகாசிக்கவிட்டு முடிவில் முடக்கிப் போட்டுவிடுவாள்''.

தேசீயவாதிக்கும் அரசியல்வாதிக்கும் உள்ள வேறுபாட்டினை ''தேசத்திற்குத் தன் சொத்துக்களைத் தருபவன் தேசீயவாதி ; தேசத்தின் சொத்துக்களை தனதாக்கி கொள்பவன் அரசியல்வாதி'' என்று கூறுகிறார் தேவர்.

மேற்கூறிய அரசியலின் இயல்புகளான தேசீயத்தையும், தெய்வீகத்தையும் தன்

கண்களெனப் போற்றி தேச பக்தியுடன் தேவர் பெற்ற தேசீய சக்தி தந்த வீரியத்தினால் புகழ்பெற்ற பசும்பொன் தேவர் மறைந்தும் மக்களின் மனதில் வாழும் ஒரு தெய்வீக பண்புகள் கொண்ட நாகரீகமான அரசியல்வாதியாக திகழ்கிறார் என்பது மறுக்க முடியாத உண்மை.

அரசியல் வாழ்வில் அவர் கடைப்பிடித்த கொள்கைகள், தன்னலமற்ற தியாகப் பண்பு, தேவரின் தீவிர தேசீய பற்றினால் அவர் இமாலய வெற்றிகள் பெற்றார். மேலும் ''வீரமற்ற விவேகம் கோழைத்தனம், விவேகமற்ற வீரம் முரட்டுத்தனம்'' என்ற தனது கொள்கையை வெள்ளை ஏகாதிபத்தியத்தை போர் முனையில் சந்தித்த நேதாஜிக்கு உற்ற துணையாக இருந்ததன் மூலம் வீரத்தையும் விவேகத்தையும் சரியாகப் பயன்படுத்தியவர் தேவர் ஆவார். இந்திய துணைக் கண்டத்திலேயே தேவரைப் போன்று அதிக நாட்கள் சிறைத்தண்டனை பெற்ற தலைவர்கள் யாரும் இல்லை. தேவரது தூய அரசியல் வாழ்வு அப்பழுக்கற்றது என்பது அவர் தனக்கு தெரிந்தவையும் தெரியாதவையும் என்று கூறிய பொன்மொழிகளிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

''எனக்கு மக்களைத்தான் தெரியும் மன்னர்களையும், மந்திரிகளையும் தெரியாது.
எனக்கு வாழத்தான் தெரியும், வயிறு வளர்க்கத் தெரியாது.
எனக்கு பாய்தான் தெரியும், பட்டு மெத்தை தெரியாது.
எனக்கு அடக்கம் தெரியும், ஆரம்பரம் தெரியாது.
எனக்கு தொண்டனாக – அவசியப்படுகின்ற இடத்தில் தலைவனாகத் தெரியும்,
நடிக்க தெரியாது.
எனக்கு பாசங்கொள்ளத் தெரியும், பகைமை கொள்ளத் தெரியாது.
எனக்கு விவசாயம் தெரியும், வியாபாரம் தெரியாது.
எனக்கு பாடுபடத் தெரியும், பாராட்டுப் பெறத் தெரியாது.
எனக்கு வெற்றி பெறத் தெரியும், வெற்றிக்காக விழா வெடுக்கத் தெரியாது.
எனக்கு பதுங்கத் தெரியும், பாயவும் தெரியும், பயப்படத் தெரியாது.''

வாழ்க தேவர் நாமம் ! ஓங்குக தேவரின் புகழ் !



**அடக்கம் தெரியும் ஆடம்பரம் தெரியாது**



புளிச்சிகுளம் கிராம கோயில் கும்பாபிஷேகத்தில் தேவர்.

# ஸ்ரீ தேவர் மஹா மந்திரம்

லயன். புலவர். **ஸ்ரீடி. இராமன்,**
தலைவர், கீழமாத்தூர் ஊராட்சி மன்றம்,
திருப்பரங்குன்றம் ஊராட்சி ஒன்றியம், மதுரை.

ஓம் ஸ்ரீ ஜெயந்தி பசும்பொன் தேவா போற்றி !
ஓம் ஸ்ரீ தேவகுரு பசும்பொன் தேவா போற்றி !
ஓம் ஸ்ரீ வேதகுரு பசும்பொன் தேவா போற்றி !
ஓம் ஸ்ரீ ஞானகுரு பசும்பொன் தேவா போற்றி !
ஓம் ஸ்ரீ சிவகுரு பசும்பொன் தேவா போற்றி !
ஓம் ஸ்ரீ பரமகுரு பசும்பொன் தேவா போற்றி !

ஓம் ரிஷி பசும்பொன் தேவா போற்றி !
ஓம் மஹரிஷி பசும்பொன் தேவா போற்றி !
ஓம் தேவரிஷி பசும்பொன் தேவா போற்றி !
ஓம் வேதரிஷி பசும்பொன் தேவா போற்றி !
ஓம் பிரம்மரிஷி பசும்பொன் தேவா போற்றி !
ஓம் ராஜரிஷி பசும்பொன் தேவா போற்றி !

ஓம் தவக்குறிச்சி பசும்பொன் தேவா போற்றி !
ஓம் தவச்சிரேஸ்டர் பசும்பொன் தேவா போற்றி !
ஓம் தவஞான பசும்பொன் தேவா போற்றி !
ஓம் சிவஞான பசும்பொன் தேவா போற்றி !
ஓம் சுடர்ஞான பசும்பொன் தேவா போற்றி !
ஓம் அருள்ஞான பசும்பொன் தேவா போற்றி !

ஓம் பசுபதி பசும்பொன் தேவா போற்றி !
ஓம் சேதுபதி பசும்பொன் தேவா போற்றி !
ஓம் ராமநாத பசும்பொன் தேவா போற்றி !
ஓம் ராமேஸ்வர பசும்பொன் தேவா போற்றி !
ஓம் தனுஷ்கோடி பசும்பொன் தேவா போற்றி !
ஓம் தவகோடி பசும்பொன் தேவா போற்றி !

ஓம் உகார பசும்பொன் தேவா போற்றி !
ஓம் முத்து பசும்பொன் தேவா போற்றி !
ஓம் ராம பசும்பொன் தேவா போற்றி !
ஓம் லிங்க பசும்பொன் தேவா போற்றி !
ஓம் தேவாதிதேவ பசும்பொன் தேவா போற்றி !
ஓம் சிவாய சிவ பசும்பொன் தேவா போற்றி !

ஓம் சத்ய சொரூப பசும்பொன் தேவா போற்றி !
ஓம் நித்ய சொரூப பசும்பொன் தேவா போற்றி !
ஓம் பக்தி சொரூப பசும்பொன் தேவா போற்றி !
ஓம் முக்தி சொரூப பசும்பொன் தேவா போற்றி !
ஓம் சித்தி சொரூப பசும்பொன் தேவா போற்றி !
ஓம் சஷ்டி சொரூப பசும்பொன் தேவா போற்றி !

ஓம் உக்கிர பாண்டி தேவர் சொரூப பசும்பொன் தேவா போற்றி !
ஓம் இந்திராணி சொரூப பசும்பொன் தேவா போற்றி !
ஓம் இந்திராதி தேவ சொரூப பசும்பொன் தேவா போற்றி !
ஓம் தெய்வீக தேவ சொரூப பசும்பொன் தேவா போற்றி !
ஓம் பகவான் தேவ சொரூப பசும்பொன் தேவா போற்றி !
ஓம் சிவசக்தி தேவ சொரூப பசும்பொன் தேவா போற்றி !

ஓம் மஹாசக்தி தேவ பசும்பொன் தேவா போற்றி !
ஓம் நவசக்தி தேவ பசும்பொன் தேவா போற்றி !
ஓம் ஏகசக்தி தேவ பசும்பொன் தேவா போற்றி !
ஓம் அஷ்டசக்தி தேவ பசும்பொன் தேவா போற்றி !
ஓம் திருநகர் தேவ பசும்பொன் தேவா போற்றி !
ஓம் தேவலோக தேவ பசும்பொன் தேவா போற்றி !

ஓம் மூவேந்தர் தேவ பசும்பொன் தேவா போற்றி !
ஓம் முத்தமிழ் தேவ பசும்பொன் தேவா போற்றி !
ஓம் முச்சங்க தேவ பசும்பொன் தேவா போற்றி !
ஓம் முக்கொடி தேவ பசும்பொன் தேவா போற்றி !
ஓம் முக்குல தேவ பசும்பொன் தேவா போற்றி !
ஓம் சம்போ மஹா தேவ பசும்பொன் தேவா போற்றி !

ஓம் ஸ்ரீ பசும்பொன் உ. முத்துராமலிங்கத் தேவர்
மஹா ஸ்ரீ ஜெயந்தி போற்றி ! போற்றி !
மஹா ஸ்ரீ தேவர் ஸ்வாமியே போற்றி ! போற்றி !

**பாய்தான் தெரியும் பட்டு மெத்தை தெரியாது**

# தேவரும் அரசியல் சாணக்கியமும்

முனைவர். **எஸ். விஜயன்,**
பேராசிரியர் & துறைத் தலைவர்,
சமூக அறிவியல் துறை,
தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகம்,
சென்னை – 25.

நம் பாரத நாடு ஆங்கிலேயர்களால் அடிமைப்படுத்தப்பட்ட காலகட்டத்தில் அன்னிய ஆட்சியை அகற்ற அரும்பாடுபட்டவர்கள் பலர். அவர்களுள் தென்னாட்டில் குறிப்பிடத்தகுந்த தலைவர் தான் தேவர் திருமகனார். வளம் பொருந்திய நம் நாடு அன்னியரின் அடக்கு முறைக்கு ஆளாகி வறுமை நிலவும் சூழலைக் கண்டு பொறுக்க முடியாமல் தேசீய உணர்வுடன் போராடியவர்தான் முத்துராமலிங்கத் தேவர்.

**தேவரின் ஆளுமை அடையாளங்கள்**

சமூக அரசியல் பொருளாதார வளர்ச்சியின் அடிப்படையில் தேசீய ஒருமைப்பாடு, தொழிலாளர் நலம், விவசாய மற்றும் வெளியுறவுத் தொடர்பு ஆகியவற்றில் தேவர் சீர்திருத்தம் கொண்டுவர முனைந்தார். திலகர், காந்தி மற்றும் ஈ.வே.ரா. உள்ளிட்ட சமகாலத்தவர்கள் கருத்துக்களில் இருந்து தேவருடைய கருத்துக்கள் வேறுபட்டிருந்தன. தேவருடைய கருத்துக்கள் பரந்த நோக்கம் கொண்டும் தேசீயவாதத்தை அடிப்படையாகக் கொண்டும் விளங்கின.

காங்கிரஸ் கட்சியை வழி நடத்துவதற்கும், காங்கிரஸ் அரசை ஏற்படுத்துவதற்கு தேவர் மிகவும் பாடுபட்டார். ஆனால் காங்கிரஸ் ஆட்சியானது மிகவும் மாறுபட்ட ஆட்சியாக இருந்தது. இவர் 1952 முதல் காங்கிரஸ் அல்லாத கூட்டணி ஒன்று உருவாக்கி அதனை (1963) அவர்தம் வாழ்நாள் வரையில் வழி நடத்தினார்.

தேவர் மூன்று விதமாக தன்னுடைய அரசியல் வாழ்க்கையை வெளிப்படுத்தினார். அவை ஒன்று புனிதத் தன்மை, அடுத்து பாரம்பரியம், இறுதியாக நவீனத்துவம் இம்மூன்றுமாக தேவர் காணப்பட்டார். அவருடைய சமூகப் பொருளாதாரக் கருத்துக்கள் அனைத்தும் மிகுந்த புரட்சிகரமானதாகக் காணப்பட்டது. ஆனால் தேவரால் பெருந்தலைவர்களான காந்தி, காமராஜர் உள்ளிட்ட மற்றவர்களின் கருத்துக்களோடு ஒத்துப்போக முடிவதில்லை. இன்னும் அவருடைய கருத்துக்கள் சரிவர மக்களைச் சென்று சேராமல் இப்பொழுது வரை இருட்டறையிலேயே கிடக்கின்றன. அதனால் இப்போதைய தேவை என்னவென்றால், தேவருடைய கருத்துக்களோடு மற்றவர்களின் கருத்துக்களை ஒப்பிட்டு ஒரு ஆய்வு ஒன்றை மேற்கொள்ள வேண்டும்.

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் தேசீயப் பற்றுக் கொண்டவராகவும் நேதாஜியின் சீடராகவும், ஃபார்வாட் பிளாக் கட்சியின் தனித் தலைவராகவும் இருந்தார். ஆனால் இவர் காங்கிரஸ் அல்லாத ஆட்சி அமைவதற்கு எடுத்துக் கொண்ட முயற்சிகள் இதுவரை வெளிப்படாமல் இருக்கின்றன. அதனால் இக்கட்டுரையில் தன்னுடைய மரணம் வரை அவர் காங்கிரஸ் அல்லாத ஆட்சியை அமைப்பதற்கும், கூட்டணியை அமைப்பதற்கும் எடுத்துக் கொண்ட முயற்சிகளை வெளிப்படுத்த முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. தேவர் காங்கிரஸ் அல்லாத ஆட்சியை அமைப்பதற்கு எடுத்துக் கொண்ட முயற்சிகள் ஓரளவிற்கு வெற்றி பெற்றாலும், பிற தலைவர்களான இராஜாஜி, அண்ணா அவர்களின் முயற்சிகளால் 1967 இல் நடந்த பொதுத் தேர்தலில் காங்கிரஸ் ஆட்சி நீக்கப்பட்டு தி.மு.க. ஆட்சியைக் கைப்பற்றியது.

முதலில் காங்கிரஸ் அல்லாத ஆட்சியை அமைக்கும் முயற்சியில் தேவர் ஈடுபட்டார். கம்யூனிஸ்ட் கட்சியுடன் உடன்படிக்கையை ஏற்படுத்திக் கொண்டார். இந்தத் தேர்தலில் தேவருக்கு ஆதரவாக ஈ.வெ.ரா., ஆந்திரகேசரி, பிரகாசம், கிருபாளினி மற்றும் என்.எஸ். கிருஷ்ணன் ஆகியோர் செயல்பட்டனர். தேவருடைய முயற்சியினால் குமாரசாமி ராஜா இராஜபாளையத்தில் தோற்கடிக்கப்பட்டார்.

எனினும் காங்கிரஸ் கட்சி 152 உறுப்பினர்களுடனும், பிற சுயேட்சை உறுப்பினர்களுடனும் மொத்தம் 375 உறுப்பினர்களைக் கொண்ட அவையில் ஆட்சியை அமைத்தது. 1954 இல் நடைபெற்ற மதுரை மாவட்டக் கழகத் தேர்தலில் தேவர் வெற்றிகரமாக ஒரு தேசீய முன்னணியை அமைத்து வெற்றி பெற்றார்.

**1957 ஆம் ஆண்டுப் பொதுத் தேர்தல்**

1956 இல் சென்னை மாநிலம் அங்கீகரிக்கப்பட்டது. அதனைத் தொடர்ந்து 1957இல் நடைபெற்ற தேர்தல் காங்கிரஸிற்குப் பெரும் எதிர்ப்பாக அமைந்தது. காங்கிரஸ் கட்சியில் இருந்த காங்கிரஸ் அதிருப்தியாளர்களைத் தேவர் ஒன்றிணைத்துப் பெயர் சூட்டினார். இது ''காங்கிரஸ் சீர்திருத்தக் குழு'' என்றழைக்கப்பட்டது.

1957 இல் தேர்தலுக்குச் சற்று முன்பாக ''காங்கிரஸ் சீர்திருத்தக் குழு'' மிகவும் வலிமையாக வளர்ச்சி பெற்றது. தேவர் எதிர் கட்சியின் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டு இராஜாஜியினால் ஆசீர்வதிக்கப்பட்டார்.

தேர்தலுக்குப் பின்னால் காங்கிரஸ் சீர்திருத்தக் குழு ஒரு வலிமையான எதிர்கட்சியாக 22 உறுப்பினர்களுடன் உருவானது. வி.கே. ராமசாமி முதலியார் காங்கிரஸ் சீர்திருத்தக் குழுவின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவ்வகையில் வலிமையான எதிர்கட்சி ஒன்றை உருவாக்க வேண்டும் என்ற தேவரின் எண்ணம் நிறைவேறியது.

1957 ஆம் ஆண்டில் நடந்த தேர்தலைப்பற்றி ஒரு சில குறிப்புகளைக் கூற வேண்டி இருக்கிறது. இந்தத் தேர்தலில் புதிய கூட்டணியை தேவர் உருவாக்கினார். தேவருடைய முயற்சியால் காங்கிரஸ் அல்லாத ஆட்சி எதிர்காலத்தில் அமைப்பதற்கு அடித்தளம் அமைக்கப்பட்டது.

**1959 ஆம் ஆண்டில் மதுரை முனிசிபல் தேர்தல்**

மதுரை நகராட்சித் தேர்தல் காங்கிரஸ் அல்லாத கட்சியினருக்கு காங்கிரஸை எதிர்க்க ஒரு அருமையான வாய்ப்பாக அமைந்தது. காங்கிரஸ் அல்லாத வாக்குகளைச் சேகரிப்பதற்கு தேவர் சி.பி.ஐ. மற்றும் தி.மு.க. கட்சிகளோடு கூட்டுச் சேர்ந்தார். 10 இடங்களில் மட்டுமே வெற்றி பெற்றது. தேவர் அமைத்த தந்திரமான வியூகத்தினால் மதுரை நகராட்சியை காங்கிரஸ் இழந்தது.

**1962 ஆம் ஆண்டில் பொதுத் தேர்தல்**

தேவரின் உடல் நலக் குறைவால் ஃபார்வர்டு பிளாக் கட்சி 1962இல் செயலிழந்து காணப்பட்டது. ஆனால் இந்தத் தேர்தலிலும் காங்கிரஸ் அல்லாத ஒரு கூட்டணியை அமைப்பதில் பெரிய மைல் கல்லாக இருந்தது. இராஜாஜியின் சுதந்திரா, தி.மு.க. முஸ்லீம் லீக் மற்றும் ஃபார்வர்டு பிளாக் ஆகிய கட்சிகள் ஒன்றிணைந்து போட்டியிட தேவர் அரும்பாடுபட்டார். இதன் மூலம் தேவர் அரசியல் என்ற கடலில் சாணக்கியத்துவத்தைப் பயன்படுத்தி எவ்வாறு நீந்தினார் என்பது நமக்குத் தெளிவாகிறது.



**வெற்றி பெறத்தெரியும் வெற்றிக்காக விழா எடுக்கத்தெரியாது**

# இராஜாஜியின் குலக்கல்வித் திட்டமும் தேவரும்

முனைவர். **எம். சுந்தரராஜ்,**
தமிழ்நாடு ஆவணக் காப்பகம்,
சென்னை – 8.

**ப**சும்பொன் முத்துராமலிங்கத் தேவர் ஆட்சியாளர்கள் செய்யும் தவறுகளை தயக்கமின்றி சட்டமன்றத்தில் சுட்டிக்காட்டி அதை நிவர்த்தி செய்வதில் கண்ணும் கருத்துமாக செயல்பட்டவர். அவரது சட்டமன்றப் பேச்சுக்கள் எல்லோரையும் கவரும் வண்ணம் அமைந்திருந்தன. இதில் இராஜாஜியின் குலக் கல்வித் திட்டத்தை விமர்சித்து நடைபெற்ற விவாதத்தை இக்கட்டுரையில் காணலாம்.

தேவர் பிறந்து வளர்ந்த காலக்கட்டத்தில் இந்தியாவின் அரசியல், பொருளாதார மற்றும் சமூக நிலைமை மிகவும் மோசமாக இருந்தது. இந்தியா ஆங்கிலேயர் ஆட்சியின் கீழ் அடிமைப்பட்டு இருந்தது. 1909 முதல் 1935 வரை அரசியல் சீர்திருத்தத்தை ஆங்கிலேயர்கள் இந்தியா மீது திணித்தனர். அதன் விளையாக மின்டோ மார்லி சீர்திருத்தம் (1909), மாண்டேகு செம்ஸ் போர்டு சீர்திருத்த அரசியல் சட்டம், (1919) மற்றும் இந்திய அரசியல் சட்டம் (1935) ஆகியவை இயற்றப்பட்டு இந்தியர்களுக்கு ஆட்சியில் பங்கு கொடுப்பது போல் பாவனை செய்து ஒரு மாயயை ஏற்படுத்தினர். 1919ஆம் ஆண்டின் சீர்திருத்தச் சட்டத்தின் அடிப்படையில் 1916 ஆம் ஆண்டு துவங்கப்பட்ட நீதிக்கட்சி 1920 ஆம் ஆண்டு நடந்த தேர்தலில் ஆங்கிலேயரின் ஆதரவோடு நீதிக்கட்சி வெற்றி பெற்று மேயர் சுப்பராயலுரெட்டியார் தலைமையில் மந்திரி சபையை அமைத்தது. 1885 ஆம் ஆண்டு துவங்கப்பட்ட காங்கிரஸ் கட்சி 1905 – 1911 ஒத்துழையாமை இயக்கம், 1920 – 21 சைமன் கமிசன் எதிர்ப்பு, 1928 சட்ட மறுப்பு இயக்கம், 1930 – 31 உப்பு சத்தியாகிரகம், 1942 வெள்ளையனே வெளியேறு இயக்கம் ஆகியவைகளை சுதந்திரப் போராட்டமாக நடத்தி வந்தது.

முத்துராமலிங்கத்தேவர் வெள்ளையனுக்கு எதிராக போராடிய காங்கிரஸ் கட்சியில் தன்னை இணைத்துக் கொண்டு வெள்ளையனுக்கு எதிராக தன் விடுதலை போரை ஆற்றல்மிகு சொற்பொழிவுகளின் மூலமாக சுதந்திரத்திற்காக அரும்பெரும்பாடுபட்டார்.

1935ஆம் ஆண்டு இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் அடிப்படையில் 1937 ஆம் ஆண்டு சென்னை மாகாணத்தில் பொதுத்தேர்தல் நடந்தது. நீதிக்கட்சி அரசு குற்றம்பரம்பரை சட்டத்தை விலக்காத காரணத்தினாலும், அது ஆங்கில அரசுக்கு அடிமைப்பட்டு நடந்த காரணத்தாலும், தேவர் காங்கிரஸ் கட்சியின் வளர்ச்சியில் மிகவும் பாடுபட்டார். அதன் விளைவாக இராமநாதபுரம், மதுரை, திருநெல்வேலி ஆகிய இடங்களில் காங்கிரஸ் கட்சி விரைவாக வளர்ந்தது.

1937ல் சட்டமன்ற அங்கத்தினரான பின்பு அவர் மறையும் வரை சட்டமன்ற அங்கத்தினராக 1937 – 1957 வரையும், 1957 முதல் (அக்டோபர் 29) 1963 வரை பாராளுமன்றத்தில் அங்கத்தினராகவும் இருந்தார். 1952ல் நடந்த பொதுத்தேர்தல் காங்கிரஸ் கட்சி வெற்றி பெற்று இராஜாஜி சட்ட மேலவை மூலமாக, சென்னை மாகாணத்தில் முதல்மந்திரியானார். தேவருக்கும் இராஜாஜிக்கும் பல விசயங்களில் சட்டமன்றத்திலும் வெளியிலும் கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டன. தேவர் தன் தமிழ் மொழிப் புலமையாலும், ஆங்கில அறிவினாலும் சட்டமன்றத்தை கலகலக்க வைத்ததோடு மட்டுமின்றி இராஜாஜியையும் திகைக்க வைத்துள்ளார். இக்கால கட்டத்தில் 1953ஆம் ஆண்டு மே மாதம் 31ஆம் தேதி இராஜாஜி குலக்கல்வித் திட்டத்தை சென்னை மாகாணத்தில் அறிமுகப்படுத்தினார்.

இராஜாஜியின் குலக்கல்வி திட்டப்படி, சவரத்தொழில் மற்றும் சலவைத் தொழில்

செய்யும் தொழிலாளியின் மகன் காலை அல்லது மதியத்திற்கு மேல் தன் தந்தை செய்யும் தொழிலை தன் தந்தையிடம் கற்று பயிற்சி பெற வேண்டும். இராஜாஜியின் குலக்கல்வி முறையை அனைத்து அரசியல் தலைவர்களும், கல்வி ஸ்தாபனங்களும், கல்வியாளர்களும் எதிர்த்தனர்.

இராஜாஜியின் குலக்கல்வி திட்டத்தை சட்டசபையின் உள்ளும் வெளியேயும் பலமாக எதிர்த்தனர். குறிப்பாக, ஈ.வெ. இராமசாமி நாயக்கர், அண்ணாதுரை மற்றும் திராவிடக் கழகத்தாரும் பகிரங்கமாக எதிர்த்தனர். சட்டமன்றத்தில் தேவர் குலக்கல்வித்திட்டத்தை எதிர்த்ததுடன் தன் கருத்துக்களை 1954 ஆம் ஆண்டு பிப்ரவரி 24ல் கவர்னர் உரையின்மீது பேசிய போது ''ஆச்சாரியார் புதுக்கல்வித் திட்டத்தை கொண்டு வந்த போது அதைப் பல பெற்றோர்கள் எதிர்த்தார்கள்''. குழந்தைகளுக்குப் பாடம் போதித்துக் கொண்டிருக்கும் பல ஆசிரியர்கள் எதிர்த்தார்கள். சட்டசபை அங்கத்தினர்கள் எதிர்த்தார்கள். அவர்கள் கட்சிக்காரர்களே எதிர்த்தார்கள்.

ஆனால் வெளியிட முடியாமல் கட்சிக்கட்டுப்பாடு அவர்கள் பிராணனை வாங்கிற்று. நாட்டிலுள்ள கல்வி நிபுணர்கள் எதிர்த்தார்கள். ஆனால் அவ்வளவு பேர் சொல்வதும் தப்பு. தாம் ஒருவர் சொல்வதுதான் சரியானது என்ற அகந்தையில், இறுமாப்பில் தான்தோன்றித் தனமாக ஸ்ரீ ஆச்சாரியார் இந்தக் கல்வித் திட்டத்தைக் கொண்டு வந்து புகுத்தினார்கள். ஆனால் கொதிப்பதைந்த பல கட்சிகள், தங்களது எதிர்ப்பைக் காட்டிக் கொள்ளும் முறையில், நியாயமான வகையில் சட்டத்திற்கு உட்பட்டே கிளர்ச்சிகள் நடத்தியும் கூட நமது ஆச்சாரியார், அவர்கள் மேல் பலாத்காரமாக போலீஸ் படையை ஏவி, தடியால் அடிக்கச் செய்து, துப்பாக்கியால் சுடச்செய்து, ''நீர் செய்தது தப்பு'' என்றவனை எல்லாம் இழுத்து சிறையில் போட்டுவிட்டு, ''எனது திட்டத்தை எல்லோரும் ஆதரிக்கிறார்கள். பருளேகர் கமிட்டியும் இதை அங்கீகரித்து விட்டது. மத்திய கல்வி ஆலோசனைப் போர்டும் பருளேகர் கமிட்டியின் ரிப்போர்ட்டை ஒப்புக் கொண்டுவிட்டது'' என்று பெருமைப்படுகிறார்கள் என்றால், நெருப்புக்கோழி கண்ணை மூடிக்கொண்டு உலகமே அஸ்தமித்து விட்டது என்று எண்ணிக் கொள்ளும் தன்மையைப் போலத்தான் இது இருக்கிறது என்று சொல்லத் தோன்றுகிறது.

இந்தப் புதுக்கல்வித் திட்டத்தை கனம் ஆச்சாரியார் கொண்டு வந்து புகுத்திய போது நாட்டில் ஏற்பட்ட வாதப் பிரதிவாதங்கள் எதிலும் நான் சம்பந்தப்படாமல் நடுநிலைமையிலே இருந்து கொண்டு, என்னை நடக்கிறது என்று பார்த்து வந்தேன்.

இந்திய தேசத்திலிருந்து பாகிஸ்தான் பிரிந்த போது நாட்டில் முஸ்லீம்களால் செய்யப்பட்டது அவ்வளவும் சரியானது. அவர்களை சகோதரர்களாகவே பாவித்து நன்மை செய்ய வேண்டுமென்று சொல்லிய காந்தியார், அதனால் நாட்டில் ஏற்பட்ட அநீதிகளுக்கு எல்லாம் எப்படிக் காரணமாக இருந்தாரோ, அதனால் எப்படி உயர்ந்து இருந்த தனது ஸ்தானத்திலிருந்து வழுக்கி சரசரவென கீழே விழுந்தாரோ அதைப் போலவும், காஷ்மீரைப் பற்றிய விஷயத்தில் எப்படி இந்தியப் பிரதம மந்திரி ஜவஹர்லால் நேரு ஷேக் அப்துல்லாவை நம்பி முழுக்க முழுக்க மோசம் போய் நாசம் அடைந்தாரோ அதைப் போலவும், ஸ்ரீ ராஜாஜி அவர்கள் தனது சொந்த மூளையினால் சிருஷ்டி செய்யப்பட்ட திட்டம் என்று சொல்லிக் கொண்டு, ஒரு புதுக்கல்வித்திட்டத்தைக் கொண்டு வந்து என்றும் அழியா மாசைத் தேடிக் கொண்டு விட்டார் என்று மாத்திரம் நான் சொல்ல விரும்புகிறேன்.

அந்தத் திட்டம் உண்மையிலேயே நல்ல திட்டமாக இருக்கலாம். இருந்தாலும் அதைக் கொண்டு வர வேண்டிய முறை என்னவென்று ஜனநாயகத்தில் ரொம்பவும் பண்பட்டவரைப் போலப் பேசும் கனம் ஆச்சாரியாருக்குத்

தெரியாதா ? தெரிந்தும் ஏன் இந்தச் சபையோரைக் கலந்து கொள்ளாமல், கல்வி நிபுணர்களைக் கலந்து கொள்ளாமல், தங்கள் குழந்தைகளின் படிப்பில் முதன்மையான அக்கறையைப் பெற்று இருக்கின்ற இந்த நாட்டுப் பெற்றோர்களைக் கலந்து கொள்ளாமல் கொண்டு வந்தார்கள் என்று நான் கேட்கிறேன். இங்கே தான் கனம் ஆச்சாரியாரின் உண்மை விஸ்வரூபம் வெளிவருகிறது. ''என்னிஷ்டப்படி சர்வாதிகாரம் செய்வேன். யதேச்சாதிகாரம் செய்வேன். அதை யாரும் தடுக்க முடியாது'' என்று சொல்லும் வெறித்தன்மை வெளிப்படுகிறது. குழந்தைகளுக்கு நன்மை செய்கிறேன் என்று சொல்லிக் கொண்டு குழந்தைகளுக்கும் சொல்ல முடியாத தீமையைத்தான் செய்திருக்கிறார் ஆச்சாரியார்.

இந்தத் திட்டம் நன்மையைப் பயக்கும் ஒரு திட்டமாகவே இருந்தாலும் கூட, யாரையும் கேட்காமல் ஏன் கொண்டு வந்தீர்கள் என்று கேட்டால் சங்கரரும், புத்தரும் யாரைக் கேட்டுக் கொண்டு இந்த உலகத்திற்கு நன்மையைச் செய்தார்கள் என்று சொல்லுகிறார் கனம் முதல் அமைச்சர். சங்கரரும், புத்தரும் இவரைப் போன்று அரசியல் வாதிகளா ? அல்லது ஜனநாயகவாதிகளா என்று நான் கேட்கிறேன். அது போகட்டும், சங்கரரையும், புத்தரையும் போல நாட்டுக்கு நன்மையை நான் செய்கிறேன் என்று தன்மைப் பற்றி தானே தம்பட்டம் போட்டுக் கொள்ளுகிறாரே, இது சரியா ? அப்படியே நடந்து கொண்டாலும் இவர் சங்கரரைப் போல, புத்தரையும் போல நடந்து கொள்ளுகிறார் என்று சொல்லி நாமல்லவா புகழ வேண்டும். சங்கரரையும், புத்தரையும் போன்ற சிறந்த தத்துவ ஞானிகளை, மதாச்சாரியர்களை தன்னுடன் சேர்த்து இவர் ஒப்பிட்டுக் கொள்வதன் மூலம் இவர் ஹிந்து தர்மத்தையே, ஹிந்து மதத்தையே அவமானப்படுத்துகிறார், பழிக்கிறார் என்று நான் சொல்ல விரும்புகிறேன்.

இந்தக் கல்வித் திட்டத்தால் மாணவர்களுக்குக் கெடுதியே ஏற்படும், ஏற்பட்டிருக்கிறது என்று பெற்றோர்கள் சொல்லுகிறார்கள். ஆசிரியர்கள் சொல்லுகிறார்கள். அறிவாளிகள் சொல்லுகிறார்கள். இந்தச் சர்க்காரைக் கவிழ்க்க வேண்டுமென்று எண்ணம் கொண்ட சில சுயநலக் கட்சிக்காரர்களும் சொல்லுகிறார்கள். அதை நான் இல்லையென்கவில்லை. ஆனால் பெரும்பான்மையோரால் உண்மையாகவே ஒரு முகமாக எதிர்க்கப்படுகின்ற இந்தக் கல்வித் திட்டத்தை இவ்வாண்டு நகரங்களுக்கும் விஸ்தரிக்கப் போகிறோம் என்று சொல்லும்போது, எனக்கு என்ன சொல்வது என்று தான் புரியவில்லை.

குதிரை கீழே தள்ளியதோடு அல்லாமல் குழியும் தோண்டிற்றாம் என்ற பழமொழிக்கேற்ப, இவர்கள் நடந்துக் கொள்ளுகிறார்கள் என்று தான் சொல்லத் தோன்றுகிறது. ''அன்றைக்கு நான் பல நல் காரியங்களைச் செய்தேன். அதை அப்போதும் பலர் எதிர்த்தார்கள். இப்போதும் இந்தக் காரியத்தை எதிர்க்கிறார்கள். இதன் அருமை பின்புதான் தெரியும்'' என்கிறார் ஆச்சாரியார். முன்பு ஆலயப் பிரவேசச் சட்டத்தைக் கொண்டு வந்தீர்கள். எதிர்த்தவர்கள் நாங்களா அல்லது இன்றைக்கு நீங்கள் சொல்வதற்கு எல்லாம் தாளம் போடும் சனாதானிகளா என்று தான் அவரைக் கேட்கின்றேன்.

அன்றைக்கு மக்களின் நன்மையை உத்தேசித்து, நீங்கள் கொண்டு வந்ததை எல்லாம் ஆதரித்த நாங்கள், இன்றைக்கு உங்களை எதிர்க்கிறோம் என்றால், மக்களால் விரும்பப்படாத காரியங்களை நீங்கள் செய்கிறீர்கள். நீங்கள் செய்யும் தவறுகளுக்கு நாங்கள் உட்படமாட்டோம் என்பதை, உங்களுக்கு உணர்த்தத்தான் எதிர்க்கிறோம் என்பதை ஏன் உங்களால் அறிந்து கொள்ள முடியவில்லை ?

தனக்குள்ள பதவி, அதிகாரம், போலீஸ், ராணுவம் ஆகியவற்றை யாரும் ரொம்ப நாள் நம்பி நாட்டை ஆண்டு விட முடியாது.

''அல்லற்பட் டாற்றா தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை''

என்றபடி மக்கள் படுகின்ற அல்லல், அவர்கள் விடும் கண்ணீர் நிச்சயம் இந்தச் சர்க்காரை அழித்து விடும் என்று அறிவுறுத்த விரும்புகிறேன். ஆகவே இனியாகிலும் உடனடியாக இந்தக் கல்வித் திட்டத்தை வாபஸ் வாங்கிக் கொண்டு மற்ற காரியங்களையும், நேர்மையான முறையில், சத்தியத்திற்கு கட்டுப்பட்டு, ராஜதந்திரம் என்ற முறையில் பித்தலாட்டத்தனம் எதுவும் செய்யாமல் நடந்து கொள்வார்களா ? நடந்து கொள்ளும்படியாக இந்த ராஜ்யத் தலைவராவது இவர்களுக்குப் புத்தி சொல்வார்களா ? இரண்டும் நடக்கக்கூடிய காரியமாக எனக்குத் தோன்றவில்லை. ஆகவே இவர்கள் எல்லோருக்குமே ஆண்டவன் தான் புத்திகொடுக்க வேண்டுமென்று சொல்லிக் கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன். இது போன்ற கடுமையான சட்டமன்ற வாக்குவாதத்தால் குலக்கல்வி திட்டம் ரத்துச் செய்வதற்கு தேவர் மிகவும் உதவியாக இருந்தார். ராஜாஜிக்கு பின் வந்த காமராஜர் தலைமையிலான காங்கிரஸ் அரசு இச்சட்டத்தை ரத்து செய்தது.



**மாலைக்கு கழுத்தை நீட்டும்போது மகிழ்கின்ற நெஞ்சம்**
**தூக்கு கயிற்றை நீட்டும்போதும் மனம் மகிழ வேண்டும்.**
**அவன்தான் உண்மையான வீரன்.**

# குற்றப்பரம்பரைச் சட்டத்தை நீக்குவதில் தேவரின் பங்கு

டாக்டர். **என். மகேஸ்வரி,**
ஆராய்ச்சியாளர்,
மதுரை காமராஜ் பல்கலைக்கழகம்,
மதுரை.

இந்தியாவில் ஆங்கிலேயர் தங்கள் ஆட்சியை நிலை நிறுத்தியபின், அவர்களுடைய ஆட்சிக்கு எதிராக இந்தியாவில் பல பகுதிகளில் புரட்சி வெடித்தது. விடுதலை இயக்கங்கள் தோன்றின. இத்தகைய எதிர்ப்பு இயக்கங்களை ஒடுக்குவதில், ஆங்கில அரசு தீவிரம் காட்டியது. 1871ஆம் ஆண்டு பஞ்சாப், மத்திய இந்தியா, உத்திரப் பிரதேசம், மேற்கு வங்காளம் போன்ற பகுதிகளில் வாழ்ந்த நிரந்தர குடியற்ற மக்களை அடக்கும் பொருட்டு 1871ம் ஆண்டு குற்றம்பரம்பரைச் சட்டம் என்ற ஒரு சட்டத்தை ஆங்கில அரசு பிரகடனம் செய்தது. ஆனால், அச்சட்டத்தின் விதிமுறைகள் சென்னை மாகாணத்தில் அப்பொழுது அமுல்படுத்தபடவில்லை.

குற்றப்பரம்பரைச் சட்டம் Act III of 1911 என்று அழைக்கப்படும், இச்சட்டத்தின்படி அரசாங்கம் எந்த ஒரு ஜாதியையும், எந்த ஒரு கூட்டத்தையும், ஜாமீனில் வர முடியாத பல குற்றங்களை தொடர்ந்து செய்து வருகிறார்கள் என்று கருதினால், அவர்கள் மீது இச்சட்டத்தைப் புகுத்தலாம். அப்படி எந்த ஒரு ஜாதியினர் மீதும் இச்சட்டம் பயன்படுத்தப்படும்போது, அந்த ஜாதியிலுள்ள உறுப்பினர்கள் தங்கள் உரிமையை நிலைநாட்ட நீதி மன்றத்திற்கு செல்ல முடியாது. 1911 – ஆம் ஆண்டு, பிரிவு 11 மற்றும்12ன்படி, எந்த ஒரு உறுப்பினரும் சுதந்திரமாக ஒரு இடத்திலிருந்து மற்ற இடத்திற்கு செல்ல முடியாது. அன்றாடம் இரவு நேரங்களில் இச்சட்டத்தின் கீழ் கொண்டு வரப்பட்டவர்கள் அருகில் காவல் நிலையத்திற்குச் சென்று தினமும் இருமுறை தங்கள் வருகையை பதிவு செய்ய வேண்டும். அவ்வாறு பதிவு செய்கிற போது கல்வியறிவு இல்லாத காரணத்தால், கைரேகை வைப்பது வழக்கம். எனவே, இச்சட்டம் ‘‘ரேகைச் சட்டம்’’ என்று அழைக்கப்பட்டது. இச்சட்டத்தின் கீழ் பிரமலைகள்ளர்கள் கொண்டு வரப்பட்டனர். இவ்வாறாக இக்குற்றப்பரம்பரைச் சட்டத்தால் பிரமலைக்கள்ளர்களின் தனி மனித உரிமை முழுமையாக பாதிக்கப்பட்டிருந்தது. W.J. Hatch என்பவர், இச்சட்டத்தைப் பற்றி விமர்சிக்கும் போது, ‘‘I was doubtful whether any other Act on the Statute book goes so far in giving the police powers to take away a man's freedom’’ என்று கூறுகிறார்.

இத்தகைய கொடுமையான சட்டம் நடைமுறையில் இருந்த போது, அதைக் கண்டிக்க வேண்டுமென்று ஆரம்ப காலத்தில், காங்கிரஸ் கட்சி முயற்சி மேற்கொள்ளவில்லை. காங்கிரஸ் இயக்கத்தில் தீவிர ஈடுபாடு கொண்டகேரளாவைச் சேர்ந்த வழக்குரைஞர் ஜார்ஜ் ஜோசப் என்பவர் இச்சட்டத்தின் கொடுமைகளைப் பற்றியும், இச்சட்டத்தால் பாதிக்கப்பட்ட பிரமலைக்கள்ளர் பகுதிகளில் 1915ஆம் ஆண்டிலிருந்து பிரச்சாரம் மேற்கொண்டார். இச்சட்டத்தை எதிர்த்து 1920ல் புரட்சி செய்த பெருங்காமநல்லூர் மக்கள் சார்பாகவும், தன் வாதங்களை அவர் முன் வைத்தார்.

1933ம் ஆண்டு இராமநாதபுரம் மாவட்டத்தைச் சார்ந்த ‘‘ஆப்ப நாட்டு மறவர்கள்’’ மீது இக்குற்றப்பரம்பரைச் சட்டம் பாய்ந்த போது, இச்சட்டத்தின் கொடுமைகளை தேவர் உணர்ந்தார். அது முதற்கொண்டு, இச்சட்டத்தை நீக்க முழு மூச்சாக செயல்பட்டார். 1934 ஆம் ஆண்டு அபிராமம் என்ற ஊரில் காங்கிரஸ் தலைவர் வரதராஜுலு நாயுடு

என்பவர் தலைமையில் குற்றப்பரம்பரைச் சட்ட எதிர்ப்பு மாநாடு கூட்டப்பட்டது. அக்கூட்டத்தில் வரதராஜுலு நாயுடு தலைமையில், ஒரு குழு அப்போதைய சென்னை மாகாண ஆளுநர் முகம்மது உஸ்மான் அவர்களைச் சந்தித்து ஆப்பநாட்டு மறவர்கள் மீது போடப்பட்ட குற்றப்பரம்பரைச் சட்டத்தை நீக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டது. ஆனால் சென்னை மாகாண ஆளுநர் முகமது உஸ்மான் இச்சட்டத்தை நீக்குகின்ற அதிகாரம் தனக்கு இல்லையென்றும், இது குறித்து தலைமை ஆளுநருக்கு தான் சிபாரிசு செய்வதாகவும் கூறினார்.

அதன் விளைவாக, 2000 பேர் மீது விதிக்கப்பட்டிருந்த குற்றப்பரம்பரைச் சட்டம் 400 பேராக குறைக்கப்பட்டது. இதே போன்று பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர், நீதிக்கட்சி ஆட்சியிலிருந்த போதும், காங்கிரஸ் கட்சி ஆட்சிக்கு வந்த போதும், 1911 ஆம் ஆண்டு கொண்டு வரப்பட்ட சட்டத்தை நீக்க வேண்டுமென்று குரல் கொடுத்தார்.

1936ஆம் ஆண்டு நடைபெற்ற பேரையூர் மாநாட்டில் குற்றப்பரம்பரைச் சட்டத்தை நீக்க வேண்டுமென்று தேவர் மிகக் கடுமையாகப் பேசினார். இக்கூட்டத்தில் இந்தியாவிலுள்ள வீரம் மிக்க சாதியினரான சீக்கியர்கள், மராத்தியர்கள் மீது இச்சட்டம் பாய்ந்துள்ளது. அது போன்று தமிழ்நாட்டிலுள்ள கள்ளர்கள் மற்றும் மறவர்கள் மீதும் பாய்ந்துள்ளது. அவ்வேளையில், கைரேகை வைப்பதற்கு பதிலாக, கட்டை விரலை வெட்டிக் கொள்ளுங்கள் என்று தேவர் முழங்கினார். தேவரின் பேச்சு வேகத்தை கண்ணுற்ற காவல் துறையினர் இவரைப் பேச அனுமதிக்கக் கூடாதென்று நீதிமன்றத்தில் முறையீடு செய்து 144 தடை உத்தரவு பெற்றனர். இது சம்மந்தப்பட்ட வழக்கில் கூறப்பட்ட தீர்ப்பின் அடிப்படையில் தான் தேவர் மேடைகளில் பேசுவது தடை செய்யப்பட்டது. இது தான் ''வாய்ப்பூட்டுச் சட்டம்'' என்று அழைக்கப்பட்டது. இந்த வாய்ப்பூட்டுச் சட்டம், தென்னிந்தியாவில் தேவர் மற்றும் வட இந்தியாவில் லோகமான்ய பாலகங்காதிர திலகருக்கு மட்டும் தான் போடப்பட்டது.

தேவர் பல ஊர்களில் பேசிய பேச்சின் காரணமாகவும், இச்சட்டத்தை நீக்க அவர் கொடுத்த கடுமையான எதிர்ப்பின் காரணமாகவும், இராஜாஜி தலைமையிலான அரசு 1938 ஆம் ஆண்டு சென்னை மாகாணத்திலுள்ள அனைத்து மாவட்ட ஆட்சித் தலைவர்களிடமிருந்தும் குற்றப் பரம்பரைச் சட்டத்தின் செயல்பாடு குறித்து அறிக்கையை அளிக்குமாறு கேட்டுக் கொண்டது. அனைத்து மாவட்டங்களிலிருந்தும், மாவட்ட ஆட்சித் தலைவர்கள் அறிக்கை சமர்ப்பித்தனர்.

அதன் மேல் நடவடிக்கை எடுப்பதற்கு முன்பாக இரண்டாம் உலகப்போர் ஏற்பட்ட காரணத்தால், காங்கிரஸ் அமைச்சரவை ராஜினாமா செய்தது. அதன் பின்னரும், தேவர், இந்த குற்றம்பரம்பரைச் சட்ட எதிர்ப்பு இயக்கத்தை தீவிரப்படுத்தினார். பல கிராமங்களுக்குச் சென்று குற்றப்பரம்பரைச் சட்டத்தை நீக்க போராட வேண்டுமென்று கோரிக்கை வைத்தார். 1939 ஆம் ஆண்டு, ஜுன் மாதம் உசிலம்பட்டியில் நடைபெற்ற ''கள்ளர் இளைஞர் மாநாட்டில்'' இக்குற்றப் பரம்பரைச்சட்டத்தை எதிர்த்துத் தீவிரமாகப் பேசினார். அப்போது அச்சட்டத்தை நீக்கத் தவறிய காங்கிரஸ் அரசைக் கண்டித்தார். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் ஒழிக்கப்பட வேண்டுமானால், குற்றப்பரம்பரைச் சட்டம் நீக்கப்பட வேண்டும் என்று கூறினார்.

இந்த, குற்றப்பரம்பரைச் சட்டத்தை வைத்து தேசீய வாதிகளை பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் ஒடுக்குகின்றது என்று கூறினார். சுத்தமான ரத்தம், மறவர்களின் நரம்புகளில் ஓடுவது உண்மையானால், ''நீ கை ரேகை வைப்பதற்கு பதிலாக, கை விலங்கை மாட்டிக் கொள்ளத் தயாராகு'' (இச்சட்டத்தை எதிர்த்து) என்று அறை கூவல் விடுத்தார். சென்னை மாகாண ஆளுநர், உசிலம்பட்டி பகுதியில் நடைபெறுகின்ற

ஜல்லிக்கட்டைப் பார்க்க வருவதாக திட்டமிட்ட போது, தேவர் இதில் ஏதோ சூழ்ச்சி இருக்கிறது என்று கருதி, ஜல்லிக்கட்டை புறக்கணிக்குமாறு பிரமலைக்கள்ளர்களுக்கு வேண்டுகோள் விடுத்தார்.

இதன் காரணம், காளைகளை அடக்குவதில் பிரமலைக்கள்ளர்கள் காட்டும் வீர தீரத்தைக் கண்டு, இவர்கள் மீது குற்றப்பரம்பரைச் சட்டம் புகுத்தியது சரி என்று சென்னை மாகாண ஆளுநர் கருதி விடுவார் என்று அஞ்சினார். இவருடைய வேண்டுகோளின்படி பிரமலைக்கள்ளர்கள் ஜல்லிக்கட்டைப் புறக்கணித்தனர். 1940ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம், இந்திய பாதுகாப்புச் சட்டப்படி கைது செய்யப்பட்ட தேவர் 1945 ஆம் ஆண்டு ஜுன் மாதம் வரை சிறையிலிருந்தார். 1942 ஆம் ஆண்டு சுபாஷ் சந்திர போஸ் நிறுவிய ''இந்திய பார்வர்டு பிளாக்'' கட்சி தடை செய்யப்பட்டது.

இச்சட்டத்தை நீக்க வேண்டுமென்று 1946 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம், அப்போதைய சென்னை மாகாண உள்துறை அமைச்சராக இருந்த டாக்டர். பி. சுப்பராயன், மசோதா ஒன்றை அறிமுகப்படுத்தினார். அம்மசோதா மீது ஆளுங்கட்சி, எதிர்க்கட்சி மற்றும் குற்றப்பரம்பரைச் சட்டத்தால் பாதிக்கப்பட்டவர், பாதிக்கப்படாதவர் என்று பாகுபாடின்று இச்சட்டத்தை விலக்கிக் கொள்ள கருத்துக்களை வழங்கினார்கள். அப்போது, எதிர்க்கட்சியாக முஸ்லீம் லீக் செயல்பட்டது.

எதிர்க்கட்சி உறுப்பினரான பேகம் சுல்தான் மீர் அம்ருதீன் என்ற பெண்மணி கூறுகையில் ''நாகரிகமான நாட்டில்உள்ள சட்டப் புத்தகத்தில் எழுதப்பட்ட ஒரு கரும்புள்ளி தான் இந்தச் சட்டம்'' என்று கூறினார். மேலும் ஆர்.வி. சுவாமிநாதன், வி.ஐ. முனியசாமி பிள்ளை (ஆதி திராவிடர்), ராஜாராம் நாயுடு, ரெங்காரெட்டி மற்றும் பலர் இச்சட்டத்தை நீக்கக்கோரி சட்டமன்றம் மற்றும் சட்ட மேலவையில் பேசினர். அதன் அடிப்படையில் குற்றப்பரம்பரைச் சட்டத்தை ரத்துச் செய்யும் மசோதா சட்டமாக நிறைவேறியது.

இறுதியாக, இம்மசோதா ஒரு மனதாக நிறைவேற்றப்பட்டு, 1947 ஆம் ஆண்டு மே மாதம் 30 ஆம் நாள் தலைமை ஆளுநரின் ஒப்புதல் பெற்று, 1947 ஆம் ஆண்டு ஜுன் 5 ஆம் தேதி முதல் குற்றம் பரம்பரைச் சட்டம் முழுமையாக நீக்கப்பட்டது.

தேவரின் குற்றப்பரம்பரை சட்ட எதிர்ப்பு போராட்டங்கள் தேவரை ஜாதீயவாதியாக காட்ட முற்படுகிறது. ஆனால் உண்மையில் இந்தியாவில் 89க்கும் மேற்பட்ட ஜாதிகள் இக்கொடூரச் சட்டத்தின் கோரப்பிடியில் சிக்கியிருந்தனர். தமிழகத்தில் தேவரினத்தை தவிர வேப்பூர் பறையர்களும், படையாட்சிகளும், குறவர்களும் கூட இச்சட்டத்தால் பாதிக்கப்பட்டிருந்தனர். எனவே இப்போராட்டம் விடுதலை போராட்டத்தின் ஒரு பகுதியே தவிர, தன் ஜாதிக்காக போராடிய போராட்ட மல்ல !



**ஒரு நல்லவனை வளரவிட்டால் பல கெட்டவர்களைக் குறைத்து விடுகிறான்.**

# தெய்வீகத் திருக்கோயில் தேவர் !

பெருங்கவிக்கோ **வா.மு. சேதுராமன்**

தெய்வீக மாகித் திருக்கோயில் பேரருள் செய்
மெய்யே உடலுயிராய் மேவிய – பெய்யமுத
ஆன்மீக மாஞானி அஞ்சாத் தவப்புயல்
வான்பசும்பொன் தேவர் வணங்கு !

வணங்கும் வளரறிவு வாஞ்சைப் பேரன்பு
மணக்கும் மலர்க்காவின் மாண்பு – குணக்கோட்டம்
கட்டியே வாழ்ந்த கதரோன் புகழ் பண்பு
மட்டிலாத் தேவர் மதி

மதிப்பவர் தம்மை மதித்தே மதியாப்
பதிப்பெயர் வீழ்ச்சி பதித்தே – விதித்ததம்
வெற்றி விதியே விதியாக்கி வாழரிமா
பற்றில் பழுத்த பழம்

பழுமரம்போல் ஊரார் பயன்பேறவே செம்மை
உழவர் குடிகள் உயர்த்தி – நிழல்போல்
சாதிபே தம்இன்றி தாழ்வுயர்வைப் போக்கிய
நீதிக்கோர் தேவர் நிலம் !

நிலம்கண்ட மேதைகள் நீள்வரலாறே
தலம் பசும்பொன் தேவர் போல் சால்பு – வலம்காண்
அரசியல் மாத்தலைமை அண்டம் இவரைத்தான்
சிரம்வணங் காரில்லை தேர்

தேர்தலில் முத்தொகுதி சேர்ந்து வென்றார் இவரே
ஆர்த்தெழுந்தார்நீதி ஆட்சியைத் – தீர்த்திடவே
வீரமுரசு கொட்டி வேதனை தான் மாற்றிச்
சோரம் தவிர்த்த சுடர்

சுடரும் பசும்பொன் சுடர் போல் ஒளிர்ந்தே
படரும் கொடுமை பொசுக்கி – இடரும்
இடர்களை எல்லாம் இடறியே மக்கள்
கடமைகள் கண்ட களம்

களம்காண் விடுதலைக்காவல் அறப்போர்
உளம் கொதித் தேதலைமை ஓர்ந்தே – வளம் துறந்தே
நாட்டுச் சுதந்தரத்தை நாட்டநே தாசி படை
கூட்டுப் படைக்கொள்கைக் கோ

கொள்கைகோ வாகிக் குவிதமின் சொத்தெல்லாம்
வள்ளல் போல் ஏழை யர்க்கே வாரியிறை – தெள்ளியர்
சிந்தை ஒளிவிளக்கால் தேசஇருள் நீக்கியஎம்
விந்தைப் பசும் பொன்னாம் வேந்து

வேந்தர்க்கும் வேந்தாராய் வீற்று மறவர் குடி
மாந்தார்குள் மாந்தர் மதிதலைமை – ஆர்ந்தபுகழ்
திக்கெட்டும் போற்றும் திறம் அறம் தேவர்தாம்
மக்கள் தலைவரான மாண்பு !

மாண்புடைய அண்ணல் நம் மன்னு புகழ்கண்மணியாம்
பூண்பழமை நம்மரபுப் பொன்னேடு – வீண்பெருமை
வேண்டா அகவிளக்கு விஞ்சும் தவவிளக்கு
காண்பரிய தேவர்கருத்து

கருத்துதிர் பூஞ்சோலை காட்சித் திருக்கோயில்
மருந்தாகி விருந்தாகி மன்றம் – தருந்தமிழ்ச்
சொல்லாட்சி வெல்லாட்சி சூட்சமப் பேராட்சி
வல்லாட்சி வீழ்த்துதே வர்.

தேவர்கள்வான்தோய் சிறப்பெல்லாம் தானாகி
ஆவல்மூ வாசை அறுத்தெரிந்தே – காவலனாய்ச்
சேவைக்கே வாழ்ந்தஎம் தேவர்போல் யாருண்டோ ?
கோவைக்கா மாட்சிகுரு கூறு !

கூறுமடியார்களின் கொள்வினைகள் தான் தீர்க்கும்
வீறுஅருள் மெய்யடியார் மேலாகி – ஏறுபுகழ்
ஞானத் தமிழ்காத்த நம் தேவர் பேச்சமிழ்தோ
மோனத் திறையின் முடி

முடிஅடி காணாத முற்றம்மெய் ஞானம்
படிஅடி கண்டபதம் பற்றி – விடிவிளக்காய்க்
காலம் தமக்குள்ளே கையடங்க வாழ்தேவர்
ஞாலம் மறவாதே நன்று

நன்றுக்கே பூமி நனிவலம் தான் வந்தார்
என்றைக்கும் நேர்மை இருந்தாண்டார் – மன்றத்தில்
செந்தமிழ்க் கார்மழை சிந்திக் கருத்துமழை
சிந்தை குளிர் வித்த சிறப்பு

சிறப்புடையார் தேவர் திருநாவுடையார் தேவர்
அறமுடையார் ஆற்றல் உடையார் – திறமுடையார்
எல்லார்க்கும் எல்லாமாய் ஏற்றம் வழங்கிய
நல்லார்நம் தேவர் போல் யார் ?

யார்யார்க்கும் பாதுகாவல் நம்தேவர் தானாகி
ஊர்பேர் சீர் ஒன்றும் உவக்காமல் – தார்வேந்தர்
தம்மைப் போல் வாழ்ந்தும் தமக்கென்றே ஒன்றுமிலார்
எம்மான் தேவர் போல் எவர் ?

எவரெவர்க்கும் வேண்டுவன எக்களிப்பாய் ஈந்தார்
கவலைகள் காணாக்கடமை – தவவலிமை
என் பெயர் சேதுராமன் என்றே தான் சூட்டுபுகழ்த்
தன்னேரில் லாத தமிழ் !

தமிழோங்கு முச்சங்கச் சங்கம்சான்றாண்மை
நமின்சேது பதிவேந்தர் நட்பு – இமிழ்கடல் சூழ்
போற்றுசேது கால்வாய் ஏற்றுநிறை வேற்றுபுகழ்
மாற்றுதேவர் கண்டதிட்டம் மன்று !

மன்றத் தமிழ் மன்னர் மாஅரசி யல் மன்னர்
நன்மனித நேய நனிமன்னர் –நின்றுபசு
கன்றினைக் காக்கக் கதறல் போல் நாடுகாத்த
தென்னாட்டுத் தெய்வீகமே !

# தாழ்த்தப்பட்ட மக்களின் முன்னேற்றத்தில் தேவர்

**எம். அருள்செல்வி**
மதுரை.

உலகின் எந்தவொரு மூலையில் பிறக்கும் எவனொருவன் மீதும், மதவர்க்க முத்திரைகள் மட்டுமே பதிக்கப்படுகின்றன. இந்தியாவில் பிறக்கின்ற ஒருவன் இவை தவிர சாதி முத்திரை தரித்துக் கொண்டு தான் இம்மண்ணில் கால் பதிக்க வேண்டியிருக்கிறது. ஏற்றத் தாழ்வான இச்சமூக அமைப்பில், இதன் மூலம், அவனுக்கு ஓர் இடமும், தகுதியும் நிர்ணயிக்கப்படுகின்றன. எத்தனை முயற்சிகள் மேற்கொண்டாலும் இவற்றை மாற்றிக் கொள்ள அவன் அனுமதிக்கப்படுவதில்லை.

இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் எதிர்கால விளைவுகள் என்ற புகழ்பெற்ற கட்டுரையில் – காரல் மார்க்ஸ் ''பாரம்பரிய வேலைப் பிரிவினையின் பேரிலேயே இந்தியச் சாதிகள் தங்கியுள்ளன'' என்றார். மேலும் ''இந்தியாவின் முன்னேற்றத்திற்கும் அதிகாரத்திற்கும் சக்தி வாய்ந்த தடைக்கற்களாக சாதிகள் உள்ளன'' என்று மார்க்ஸ் குறிப்பிட்டார்.

சாதிக் கொடுமைக்கு எதிராக புத்தர் முதல் பூலே, அம்பேத்கார், பெரியார், பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் வரை பலர் இயக்கங்கள் அமைத்துப் போராடியிருக்கிறார்கள்.

**பசும்பொன் தேவரின் சமூக எழுச்சி**

தனி மனித ஒழுக்கத்திற்கும், சமூக ஒழுக்கத்திற்கும் எடுத்துக்காட்டாய்த் திகழ்பவர் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் ஆவார். பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் தமக்குச் சொந்தமான முப்பத்திரண்டரைக் கிராமங்களில் உள்ள விளைச்சல் நிலங்களில் தலித் மக்களைப் பயிரிட அனுமதித்தார். வேளாண்மை செய்து, அறுவடை செய்து கொண்டும் வரும் நெல் மற்றும் தானியங்களைப் பார்த்த தேவர், பாடுபட்ட மக்களைப் பார்த்து, ''விதைத்தது நீங்கள், விளைவித்தது நீங்கள், பாடுபட்ட உங்களுக்குத்தான் பயன் கிடைக்க வேண்டும், எனவே நிலத்திற்கு உரியவன் என்பதற்காக ஒரு மரக்கால் மட்டும் அளந்து வைத்து விட்டது போக மீதமுள்ளது அனைத்தும் உங்களுக்கே உரியது'' என்று தலித் மக்களுக்குத் தந்து விடுவார் என்று சொல்கிறார் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர் தோழர். தா. பாண்டியன். தேவர் மறைவுக்குப் பின்பும் பசும்பொன், முத்தாலங்குளம், மேலராமநதி, மணக்குளம், வண்ணாங்குளம், பாரக்குளம் உள்ளிட்ட கிராமங்களில் உள்ள தேவர் நிலங்கள் அனைத்தும் தலித் மக்கள் பயன்பாட்டிலேயே உள்ளது.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்க்கும் பூர்வக் குடிகள், சுதந்திர வேட்கைகள் ஆயுதம் தரித்து போராடினார்கள். இவர்கள் மலைவாழ் பழங்குடி மக்களாகவும், சமவெளிப் பழங்குடி மக்களாகவும் வாழ்ந்த 89 சாதிப்பிரிவுகளைச் சார்ந்த பூர்வீகக் குடிமக்களாவர். இவர்களை கிரிமினல் டிரைபல் ஆக்ட் என்னும் கொடுமையான ரேகைச் சட்டத்தின் மூலம் ஒடுக்கினர். இதன்படி மதுரை மாவட்ட பிரமலைக் கள்ளர்களும், இராமநாதபுரம் ஆப்பநாட்டு மறவர்களும், சிவகங்கைப் பகுதி குறவர்களும், புதுக்கோட்டை, திருநெல்வேலி மாவட்டக் கள்ளர்களும், மறவர்களும் காலாடி என்றழைக்கப்பட்ட பள்ளர் இன மக்களும் கடும் துன்பத்திற்கு ஆளானார்கள்.

1934 ல் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அபிராமம் கிராமத்தில் ரேகைச்சட்ட எதிர்ப்பு மாநாடு நடத்தி ஒதுக்கப்பட்டவர்களுக்கு குரல் கொடுத்து பின்னாளில் அச்சட்டம் ரத்து செய்வற்கு காரணமாக விளங்கினார்.

கமுதிக்கு அருகே செங்குளம் கிராமம் ஐயாரப்பன் என்ற பெரும் நிலக்கிழார் தலித், பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்த கூலி மற்றும் சிறு விவசாயிகளுக்கு கடன் கொடுப்பது, வட்டிக்கு மேல் வட்டி போட்டு விவசாயிகள் நிலங்களைக் கையகப்படுத்துவது போன்ற செயல்களை வழக்கமாகக் கொண்டிருந்தார். தேவரிடம் இந்த விசயம் வந்தவுடன், அந்தப் பகுதி ம களை ஒன்று திரட்டி ஐயாரப்பன் வட்டிக் கொடுமைக்கு எதிராகப் போராட்டம் நடத்தப்பட்டது. இதன் விளைவாக, இவருடைய நிலத்திற்கு யாரும் வேலைக்குச் செல்லவில்லை. நெல் அறுவடைக்கு அல்லது பருத்தி எடுக்க யாரும் செல்லவில்லை, ஆடு மாடு மேய்ந்ததை விரட்டக்கூட ஆளில்லை. இதனால் ஐயாரப்பனின் ஆதிக்கம் அப்பகுதியில் மறைந்தது. வட்டிக் கொடுமையும் அப்பகுதியில் மறைந்தது.

தேவர் சட்டசபைத் தேர்தலில் வெற்றி பெற்றதால், நீதிக்கட்சி ஆதரவு வியாபாரிகள் கமுதிக்குட்பட்ட பகுதிகளில் பொருளாதாரத் தடை விதித்தார்கள். ஏழை எளிய தாழ்த்தப்பட்ட விவசாயிகளிடமிருந்து கொள்முதல் செய்ய வேண்டிய எந்தப் பொருளையும் கொள்முதல் செய்யவில்லை. இதனால் தேவரின் ஆதரவு விவசாயிகள் மிகவும் பாதிக்கப்பட்டனர். பொருள்களை விற்கவும் வாங்கவும் முடியவில்லை. தேவர் வியாபாரிகளின் முற்றுகையைத் தகர்க்கத் திட்டமிட்டார். கூட்டுறவுக் கடையை நடத்த நல்ல சில திறமையான விவசாயிகளைக் கொண்டு, அந்தப் பகுதி விவசாயிகள் அனைவரையும் உறுப்பினராக்கி, பாரத மாதா ஸ்டோரை நடத்தச் செய்தார். கூட்டுறவுக் கடையின் மூலம் விவசாயிகளின் உற்பத்திப் பொருட்கள் கொள்முதல் செய்யப்பட்டன. விவசாயிகளுக்குத் தேவையான பொருள்கள் குறைந்த விலையிலும் தரமாகவும் விற்கப்பட்டன. இதனால் தேவரை எதிர்த்த நீதிக்கட்சியைச் சார்ந்தவர்கள் கதிகலங்கி நின்றார்கள். வியாபாரப் பிரமுகர்கள் தேவரிடம் வந்து முறையிட்டதன் காரணமாக குறைந்த பட்ச லாபம் வைத்து வியாபாரம் செய்ய சம்மதித்தார். எனவே பாரத மாதா ஸ்டோர் மூடப்பட்டது.

இராஜாஜி மந்திரி சபை தலித் மக்களுக்கான ஆலயப் பிரவேசச் சட்டத்தை நிறைவேற்றியது. அதனை மதுரை மீனாட்சி அம்மன் கோவிலில் அமுல்படுத்த சுதந்திரப் போராட்ட வீரர் வைத்தியநாதய்யர் தலைமையில் முயன்ற போது சனாதனிகளிடமிருந்து (இந்து சமய மதவாதிகள்) கடும் எதிர்ப்புக் கிளம்பியது. செய்வதறியாது திகைத்துப் போயிருந்த வைத்தியநாதய்யருக்கு தேவரை அணுகுங்கள் என்கிற ஆலோசனை ராஜாஜியிடமிருந்தே கிடைத்தது. அவ்வாலோசனைப்படி தேவரை அணுகிய வைத்தியநாதய்யருக்கு உதவி செய்ய தேவர் முன் வந்து சனாதனிகளைப் பார்த்து தேவர் சொன்னார். உங்களின் எதிர்ப்பை கைவிடாமல் மேலும் கெடுதல் செய்தால் நானே பல்லாயிரக்கணக்கான ஹரிஜனங்களையும் மற்றுமுள்ள இந்துக்களையும் படையாகத் திரட்டி தமிழகம் முழுவதும் ஆலயப்பிரவேசம் செய்வேன் என்றார். இந்த எச்சரிக்கைக்குப் பின்னர் சனாதனிகள் பணிந்தனர். மேலும் ஆலய நுழைவு போராட்டமும் வெற்றி பெற்றது.

இதனை தேவர் அவர்களே தமிழக சட்டமன்றத்திலும், தனது சொற்பொழிவு ஒன்றிலும் பின்னர் உறுதிப் படுத்தியிருக்கிறார். 1952 இல் மீண்டும் ராஜாஜி மந்திரி சபை அமைத்த போது குலக் கல்வித் திட்டம் என்ற வர்ணாஸ்ரம அடிப்படையிலான திட்டம் ஒன்றைக் கொண்டு வந்தார். அதனை வன்மையாக எதிர்த்த தேவர் கீழ் வருமாறு கூறினார்.

அன்றைக்கு நான் பல நல்ல காரியங்களைச் செய்தேன். அதை அப்போதும் பலர் எதிர்த்தார்கள். இப்போதும் இந்தக் காரியத்தை எதிர்க்கிறார்கள். இதன் அருமை பின்பு தான் தெரியும் என்கிறார். மேலும் கனம் மிகுந்த முதல்வர் அவர்கள் முன்பு ஆலயப் பிரவேசச் சட்டத்தைக் கொண்டு வந்தீர்கள். எதிர்த்தவர்கள் நாங்களா ? அல்லது இன்றைக்கு

நீங்கள் சொல்வதற்கு எல்லாம் தாளம் போடும் சனாதனிகளா ? என்று முதல்வரை தேவர் கேட்டிருக்கிறார். மேலும் மெஜாரிட்டி கூடும், குறையும். ஆனால் நியாயம் ஒரே மயமானது என்கிறார்.

1954ஆம் ஆண்டு பிப்ரவரி 24 அன்று சட்ட மன்றத்தில் தேவர் பேசிய இந்தப் பேச்சு மட்டுமல்ல. தொடர்ந்து மார்ச் திங்களில் அவர் ஆற்றிய சொற்பொழிவுகளும் முக்கியமானவையே. அவற்றில் அவரின் வர்ணாஸ்ரம எதிர்ப்புச் சிந்தனைகளைக் காண்போம். தகப்பன் தொழிலை மகன் செய்யத்தான் வேண்டுமென்றே ஒரு சூழ்நிலை, ஒரு சமுதாய அமைப்பு, ஒரு கல்வி முறை முன்பு இருந்தது. அதை நான் மறுக்கவில்லை. ஆனால் இன்றைக்கு எந்த ஜாதியில் பிறந்தவனாக இருந்தாலும் கூட தன்னுடைய திறமைக்கேற்ப எந்தத் தொழிலையும் செய்யலாமென்ற ஒரு சூழ்நிலை ஏற்பட்டு விட்டது என்பது கனம் முதலமைச்சரைப் போன்ற அறிவாளிக்குத் தெரியாமலிருக்க முடியாது. இப்படி பிறப்பில் ஏற்றத்தாழ்வு காணும் அமைப்பு மாறி வருகிறது என்பதைச் சொல்லி ஆட்சியாளர்களை இடித்துரைத்தார் தேவர்.

சாதி வேற்றுமையை தேவர் கடுமையாகச் சாடி வந்தார். சாதி வேறுபாடு அறிவுக்குப் பொருந்தாது என்பதை எடுத்துணர்த்த ஓர் அருமையான உவமையையும் அவர் மேற்கோளாகக் காட்டி வந்தார். நமது இரு கைகளையும் இதற்கு ஓர் உதாரணமாக எடுத்துக் கொள்ளலாம். வலது கை அன்னத்தை வாயில் ஊட்டுகிறது. அதனால் உயர்வான கரமாகக் கருதப்படுகிறது. இடது கரத்தால் உடலுக்குத் துப்புரவு செய்யப்படுவதால் அது மட்டமான கரமாகக் கருதப்படுகிறது. ஆனால் கோயிலில் ஆண்டவனுக்கு முன் இரு கரங்களையும் குவித்தால் தான் அது வழிபாடாகிறது. ஆகவே கரங்களில் உயர்வு தாழ்வு ஏது ? அதைப்போலவே எந்தத் தொழிலைச் செய்தாலும் மனிதர்களிடையே உயர்வு தாழ்வுக்குக் காரணம் எப்படி இருக்க முடியும் என்று முழங்கினார்.

மனிதனாகப் பிறந்து விட்டால் வயதில் தான் வித்தியாசம், சாதியில் அல்ல. அனல் நிறம் கொண்ட சிவபெருமானையும், அட்டக் கரி நிறம் கொண்ட கண்ணனையும் நாம் நிறம் வித்தியாசம் பார்த்து வணங்குவதில்லை. கடவுள்களும் சாதி வித்தியாசம் பார்ப்பதில்லை. மனிதர்களும் சாதி வித்தியாசம் பார்க்கக் கூடாது என்பதற்காகத்தான் அரன் மகன் குமரனையும், குறமகள் வள்ளியையும் தம்பதிகளாக்கிக் காட்டுகிறது நமது புராணம்.

சேலம் பகுதியில் சுற்றுப்பயணம் செய்த போதெல்லாம் காவிரிப்பட்டணம் மாரியின் வீட்டில் தான் தங்குவார். மாரி ஒரு அரிஜன். அவர் வீட்டின் தான் சாப்பிடுவார். தேவருக்கு எல்லோரும் சமம். எல்லோரும் சகோதரர்கள் என்ற பார்வை தான் கடைசி வரை இருந்தது. தேவர் வீட்டில் அரிஜன சிறார்கள் பலர் தங்கினர். இவர் வீடடிலேயே உணவும் உறைவிடமும் கல்வியும் கொடுக்கப்பட்டது. தேவர் எவரையும் போடா வாடா என்று கூறமாட்டார். வாங்கய்யா .. போங்கய்யா . . . என்று மரியாதையுடன் அழைப்பார்.

சேரன்மாதேவியில் வ.வே.சு. ஐயர் அவர்கள் ஆரம்பித்த குருகுல ஆசிரமக் கூடத்தில் முன்னேறிய சாதியைச் சேர்ந்த குழந்தைகளைத் தனியாகவும், அரிஜன சாதியைச் சேர்ந்த குழந்தைகளைத் தனியாகவும் பிரித்து, தனித்தனியாகத் தங்க வைத்தும், தனித்தனியாக உணவு இட்டும் வருவதைத் தேவர் சட்டமன்றத்தில் 1952 ல் முதல்வராக இருந்த ராஜாஜிமுன் கண்டிக்கிறார். ஐயரின் தியாகப் போராட்டம் மற்றும் உயர் செயல்களைச் சுட்டிக்காட்டி, அவர் இன்று அப்படி நடந்து கொள்வது மிகவும் கண்டனத்திற்கும், வருத்தத்திற்கும் உரிய செயல் என்று கூறுகிறார்.

பொருளாதார ஏற்றதாழ்வு தான் சமூக வேறுபாட்டிற்கு அடிப்படைக் காரணம் என்பதை உணர்ந்த தேவர் அவர்கள், மார்ச் 24, 1954 ஆம் ஆண்டு சென்னை சட்ட சபையில் பேசிய போது தாழ்த்தப்பட்டோர்கள் பணக்காரர்களாக

இருப்பார்களானால் அவர்களோடு கைகோர்த்து கலந்து வாழவும், சம்மந்தம் செய்து கொள்ளவும் உயர் குடியினர் தயாராக இருக்கிறார்கள் என்பதை நடைமுறையில் பார்க்கிறோம். இது கற்பனை அல்ல, பணம் இல்லாத போது ஏழைகளை யாரும் கவனிப்பது கிடையாது. இது நாம் தினம் பார்க்கின்ற உண்மை. அதோடு பொருளாதாரம் ஒன்று தான் அவர்களுடைய சமூக ஏற்றத்தாழ்வுக்கு அடிப்படைக் காரணம் என்பதை உணர்ந்த தேவர் அவர்கள் தாழ்த்தப்பட்டவர்களை பொருளாதாரத்தில் வளம் பெறச் செய்ய வேண்டுமென்று விரும்புகிறார்.

முதுகுளத்தூர் பகுதியில் கலவரம் நடைபெற்றது. இதைக் கண்ட தேவர் மிகவும் வேதனைப்பட்டு கீழ்க்கண்டவாறு அறை கூவல் விடுத்தார். அனைத்து மக்களும் அமைதிகாக்க வேண்டும், மீறி சாதியின் பெயரால் தாக்கிக் கொண்டால் ''என் இதயத்தை பிளந்து இரத்தத்தை குடித்ததற்கு சமமாகும்'' என அறை கூவல் விடுத்தார். எனவே இவருடைய மனித நேயமான கருத்துக்களையும், தொண்டுகளையும் பார்க்கும் பொழுது தேவர் சாதி, மதத்திற்கு அப்பாற்பட்டு மனித நேயம் கொண்டு வாழ்ந்தவர் என்பது தெளிவாகிறது.

1953 மார்ச் 30ல் சட்டசபையில் தேவர் ஆற்றிய உரையில் பின்வரும் நிலச் சீர்த்திருத்தக் கருத்துக்களை எடுத்துக்கூறினார். ''பெரும்பாலான நிலங்கள் வீணாகக் கிடக்கின்றன. அந்தப் பெரும்பாலான நிலங்களை, விவசாயத்திற்கு லாயக்கான நிலங்களாக மாற்றி ஹரிசனங்களுக்கு – அந்த ஏழைகளுக்கு – ஒரு ஏக்கர், அரை ஏக்கர் என வழங்கப்படுமானால், அவர்கள் யாரையும் எதிர்பாராமல் முயற்சி செய்து வாழ வசதி ஏற்படும், ஹரிசனங்கள் நல்ல விவசாயிகள் ஆவார்கள். அந்த வகையில் ஹரிசனங்களுக்கான பிரச்சனையை 60 சதவீதம் சவுகரியமாகத் தீர்க்கலாம் என்று உரைத்தார்''.

மதுரையில் ஹரிசனங்கள் தங்குவதற்கு ஒரு விடுதி ஆயிரக்கணக்கான பணச்செலவில் கட்டப்பட்டிருக்கிறது. அது நகரத்தின் மையத்தில் இருந்திருக்குமானால், ஹரிசனங்கள் வந்து தங்கவோ அவர்கள் இதர சமுதாயத்துடன் பழகவோ வசதி அளிக்கும். ஆனால் அது பல மைல்களுக்கு அப்பால் மாட்டுத் தாவணிக்கு அருகில் இருப்பதால், அங்கே சென்று தங்க நினைக்கின்ற ஹரிசனங்கள் ஒரு வண்டியை அமர்த்திக் கொண்டு செல்வதற்கு வாடகை கொடுக்கக் கூட முடியாதவர்களாக இருக்கிறார்கள். பல ஹரிஜனங்கள் திண்ணைகளிலும், தெருக்களிலும் படுக்க நேரிடுவதால் குற்றவாளிகளாகக் கருதப்பட்டு பல துன்பங்களுக்கு ஆளாகிறார்கள் என்று ஹரிஜனங்களின் நலன் காத்திட அரசை வற்புறுத்தினார்.



**வீரமில்லையேல் விவேகமில்லை, விவேகமில்லையேல் வீரமில்லை.**



தியான நிலையில் தேவர்.

# தேவரும் சமூக சம நீதியும்

**கே. பவுன்ராஜ்,**
துறைத்தலைவர், அரசியல் அறிவியல் துறை,
பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் கல்லூரி,
உசிலம்பட்டி.

ஒருவர் உதவியின்றி ஒருவர் வாழ முடியாது என்ற நடைமுறை உண்மையை எல்லோரும் உணர்ந்து செயலாற்றினால் உலகில் பஞ்சமும், பற்றாக் குறையும், பகைமையையும் தலை தூக்கவே முடியாது என்கிறார் தேவர்.

மனிதர்களுள் உயர்வு தாழ்வு என்பது நாமாகவே தோற்றுவித்துக் கொண்ட மரபுகளில் ஒன்றாகும். ஆனால், இயற்கையில் அப்படி இல்லை – உயர்வு தாழ்விற்கு இடம் அற்றது தான் உலகம். இவைகள் இரண்டும் மனிதனால் கற்பித்துக் கொண்டவைகள். அவனே ஒன்றை ஒதுக்கி ஒன்றை மட்டும் கொண்டு வாழ்வதில்லை – வாழவும் முடிவதில்லை. உதாரணம், வலதுகரம் அன்னத்தை மட்டும் ஊட்டும் உயர்தரமாக இருக்கிறது. ஆனால் தாழ்வு நிலையில் உள்ளது எனக் கருதப்படும், இடது கரத்தை ஒதுக்கிவிட்டு உயர் நிலையானது என கருதப்படுகின்ற வலது கரத்தாலே மட்டும் மனிதன் எதையும் செய்ய முடிகிறதா ? தாழ்வு நிலையாக கருதப்படும் இடது கரத்தையும் மிகவும் உன்னதமானதாகக் கருதப்படும், வலதுக்கரத்தையும் சேர்த்துக் குவித்துத்தான் ஆண்டவனை வணங்குகிறான் மனிதன். ஆகவே இத்தகைய இழி செயல் வேண்டாம் என்கிறார் தேவர்.

ஜாதி என்பது பச்சை அநாகரீகம். ஜாதியையும், நிறத்தையும் பார்க்கிறவன் அரசியலுக்கு லாயக்கு இல்லை. இன்றைய சமுதாயத்தில் ஜாதியின் பெயராலோ அல்லது மனிதர்கள் பெற்று இருக்கும் செல்வச்செழிப்பின் காரணத்தாலோ உயர்வு தாழ்வு கணக்கிடப்படும் கொடுமையைக் காண்கிறோம். இவைகளை நாட்டிலிருந்து அறவே அகற்ற வேண்டும். ஜாதிக் கொடுமை புரிவோரை தண்டிக்க வேண்டும் என்கிறார் தேவர் பெருமகன்.

ஒவ்வொருவரின் உழைப்பிற்கும் அதன் தன்மைக்கும் தக்கவாறு உழைப்பை சர்க்கார் பெற்று அவனுடைய தேவைக்குத் தக்கவாறு அனைவருக்கும் ஊதியம் அளித்து அதனடிப்படையில் அரசாட்சி புரிவது தான் உண்மையான சமதர்மம் ஆகும்.

தான் உற்பத்தி செய்த பொருளுக்குரிய விலை கிடைத்து விட்டால் உழைப்பே பிரதானமாக ஆகி விடுவதோடு வாழ்க்கைக்கும் உத்திரவாதம் கிடைத்து விடுகிறது. உழைப்பின் முன்னே சாதியும் மதமும் அடிபணிந்து காலாவதி ஆகிவிடும். ஒவ்வொரு வகுப்பினரையும் உசுப்பி விட்டுத்தான் இந்தியாவில் சமதர்ம சமுதாயம் காண முடியும் என்பது தேவரின் கூற்று. ஜனநாயக நாட்டில் அதிகாரத்தில் இருப்போருக்கு தேவர் பெருமகன் கீழ்கண்டவாறு அறிவுரை வழங்குகின்றார்.

''அதிகாரத்தில் இருப்பவனுக்கு அடக்க உணர்ச்சியும்
அரசியல்வாதிக்கு நாவடக்கமும்
தேசபக்தனுக்கு சேவா நோக்கும்
தவிர்க்க முடியாத தேவைகள்'' என்கிறார்.

பாராளுமன்றத்தில் தேவர் பெருமகன் உரையாற்றுகின்ற பொழுது ''உடைமைகளில் சமபங்கீட்டை அடைய வேண்டுமானால் அதிகம் வைத்து இருப்பவர்களிடம் இருந்து எடுத்து இல்லாதவர்களுக்கு கொடுக்க வேண்டும். இதற்காக உச்சவரம்புச் சட்டத்தை நடைமுறைப்படுத்த வேண்டும். உச்சவரம்பு என்பது இன்றைக்கு நாடாளுகின்ற பிரதமர் ஜவஹர்லால் நேருவிலிருந்து ஆரம்பிக்க வேண்டும். மேலும் மக்கள், மண், பெண், பொன், பதவி ஆகியவற்றில் ஆசையற்ற எவனுக்கும் இவ்வுலகில் எதிரிகளே இல்லை, இவற்றில்

ஆசையுள்ளவனுக்கு உலகம் மட்டுமல்ல, அவனுக்கு அவனே எதிரி'' என்கிறார் தேவர் பெருமகன்.

கடவுள் மனிதனைப் படைத்ததும் அவனுக்கு இயற்கையின் உன்னத கொடையினை அளித்ததும் ஏற்றத்தாழ்வு ஏழை பணக்காரன் என்றெண்ணி அல்ல. இந்த விஷயத்தில் இறைவன் ஒரு சமதர்மவாதியைப் போல் அனைவருக்கும் அளித்தார். ஆனால் இவற்றை சில சூத்திரதாரிகள் நாகரீகத்தின் பெயரால் அதனை தங்களுக்குச்சாதகமாக பயன்படுத்தி நாட்டை சீரழித்து வருகின்றனர். மனித ஒழுக்கம், சுயகட்டுப்பாடு இவற்றை மறந்து செல்வச் செழிப்பின் மிகுதியாலும், தாங்கள் சார்ந்த உயர் குலத்தின் பெயராலும், அந்நிய மோகத்தாலும் சமுதாய ஒற்றுமையை, கலாச்சார மேன்மையை சீரழிப்பதற்கான சூழ்நிலையை உருவாக்குகின்றனர் என வருத்தமுற்ற தேவர் ஐயா பின் வருமாறு கூறுகிறார்.

''உயர் குலத்தின் பெயராலும், நாகரீகத்தின் பெயராலும் ஒழுக்கத்தை மக்கள் கை விட்டதன் பலன் நாடெங்கிலும் கேடுகள் பெருகிவிட்டன''.

எனவே இச்சீர்கேட்டை சரி செய்ய வேண்டுமென்றால் ஒழுக்கமும், சுய கட்டுப்பாடும் நம் மக்களுக்கு அவசியம் என்கின்றார். காலமாற்றம் என்பது தவிர்க்க முடியாதது தான். அதில் நாகரீக வளர்ச்சி என்பதும் தவிர்க்க முடியாதது தான், இருந்த போதிலும் நாகரீகம் நமக்குரிய பண்பாட்டுடன் சேர்ந்து வளர்ச்சி பெற வேண்டுமேயொழிய அது தானாகவே அது மட்டும் வளர்வது நாட்டுக்கு நன்மை பயக்கவல்லது அல்ல என்கிறார்.

ஒரு சமூகப் புரட்சியாளருக்கு என்னென்ன குணங்கள் உண்டோ, அவை அனைத்தும் தேவரய்யாவிடம் உண்டு. அடக்கப்பட்ட மக்களுக்காக குரல் கொடுத்த தேவர் ஒடுக்கப்பட்ட மக்களுக்கும் ஆதரவு கரம் நீட்டினார். தேசபக்தர்கள் இறந்தபின் புதைக்கப்படுகிறார்கள் என்ற வாதத்தை முறியடித்து தேசீயவாதிகள் விதைக்கப்படுகிறார்கள் என்ற வாதமே தலைசிறந்ததாக உள்ளது. தேவர் ஒரு ஆன்மீகவாதியாக, தேசீயவாதியாக, கட்சித்தலைவராக, ஒரு போராளியாக, ஒரு சமூக சீர்த்திருத்தவாதியாக பாரதத்தாயின் குழந்தைகளில் பல பரிணாமங்களை எடுத்தவர் ஆவார்.



**பாயத்தெரியும் பயப்படத்தெரியாது!**

# ஆற்றுவோம் தேவர் பணி

சூலூரர் கலைப்பித்தன்
**கோவை காமாட்சிபுரி ஆதீனப் புலவர்.**

பசுவொன்று கன்றீன்ற நன்னாள் போல
பசும்பொன்னில் சிசுவென்று பிறந்த அன்று
பசும்கொடிகள் நெல்வயல்கள் எல்லாம் ஆட
பறவைகளும் பூச்சிகளும் கீதம் பாட
இசையொலிக்கும் கோயில்கள் மங்க ளத்தால்
இன்னிசையின் ராகம்போல் குழந்தை தானும்
திசையெட்டும் தாலாட்ட தலையைக் காட்ட
திடம்பெற்றார் தேவரினம் வாழ்த்துக் கூறி !

ஆயிரத்து தொள்ளாயி ரத்தாம் எட்டில்
அக்டோபர் மும்பத்தாம்நாள் வெள்ளி நாளில்
தாயவளின் கருப்பையாகும் வாயில் வந்த
தமிழ்மகனை தேவனாகப் பாயில் கண்டார்
ஆயரினக் கிருஷ்ணர்போல் அவதா ரந்தான்
அயோத்ய ராமன்போல் முகபா வம்தான்
பாயிரங்கள் பாடினார்கள் மாதம் கூட்டம்
பட்டாசு வெடித்தார்கள் இளைஞர் கூட்டம்

நாளொன்றும் பொழுதென்றும் நாளும் செல்ல
நல்லதொரு இந்துவாக பிறந்த பிள்ளை
ஆளானார் பாத்மாபீ முஸ்லீம் தாயாள்
அறிவுபெற்றார் கிருத்துவராம் பாடத் தாலே !
வாளானார் தேவருக்கு வீரம் காட்ட
வானுயர்ந்தார் விவேகானர் பேச்சை ஊட்ட !
கோளாராம் ரேகைசட்டம் கொடுமை கண்டு
குரல்கொடுத்தார் சிங்கமாக சீறிக் கொண்டு !

நாலாயி ரம்நாட்கள் சிறையில் வாசம்
நாட்டுக்காய் மக்களுக்கு இழந்தார் இன்பம்
கோலமிட்ட வீதியிலே தேர்தல் காலம்
தொகுதிக்குப் போகாமல் வெற்றி மாலை
காலமெல்லாம் தெய்வீகம் தேசப் பற்று
கண்ணீரில் வாழ்கின்றோம் நெஞ்சில் வைத்து
சோலைமலர் வாழ்க்கையென்னும் சுகத்தை விட்டு
கொடுஞ்சிறைக்குள் சித்ரவதையின் சின்ன மானார் !

மக்களைத்தான் தெரியுமென்றார் தேவர் அய்யா
மன்னனெல்லாம் தெரியாது என்றும் சொன்னார்
தக்கபடி வாழவேண்டும் என்றும் சொன்னார்
தலைகனத்தை விடச்சொன்னார் அடக்க மாக
பக்கமுள்ள ஏழைக்கு தொண்ட னென்றார்
பாசமுள்ள தலைவனென்றார் ! தோழன் என்றார்
எக்கணமும் வீரனென்றார் ! எதிர்ப்பு வந்தால்
எமனுக்கும் எமனென்றால் வீரத் தேவர் !

நூற்றாண்டில் அவர்கென்று கோயில் செய்யும்
நுகர்ந்திடவே பூமணமாய் நூற்கள் செய்யும்
போற்றிடவே திரைப்படமாய் காணச் செய்யும்
புவியெங்கும் பின்தொடர பாடம் செய்யும்
ஏற்றிருந்தார் கொள்கையதாம் தேசம் பக்தி
எடுத்திருந்தார் அதற்காக துறவுக் கோலம்
ஆற்றுநீர்போல் கண்ணீர்தான் அழுதல் வேண்டாம்
ஆற்றிடுவோம் அவர்பணியை ! தேவர் வாழ்க !

**மக்களைத்தான் தெரியும் மன்னர்களையும் மந்திரிகளையும் தெரியாது**

# மத நல்லிணக்கத்தில் தேவர்

முனைவர். **ஜோ. ஜெயகுமாரி ஞான தீபம்,**
கௌரவ விரிவுரையாளர்,
வரலாற்றுத் துறை,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்,
மதுரை – 21.

இந்திய வரலாற்றின் இடைக்காலத்தில் சமண, பௌத்த மதங்கள் பெற்றிருந்த செல்வாக்கை, பிற்காலத்தில் இசுலாமும், கிறிஸ்துவமும் பெறத் தொடங்கின. அண்மைக் காலத்தில் தோன்றிய தாயுமானவரும் இராமலிங்கரும் தமிழ்நாட்டில் சமய சமரச சன்மார்க்க நெறிக்கு அடித்தளம் இட்டனர். மக்களிடையே இச்சமரச சன்மார்க்க நெறியைப் பரப்பிய பெருமை பசும்பொன் முத்துராமலிங்க தேவருக்கு உரியதாகும்.

இது குறித்து தேவரவர்கள் பேசும் பொழுது, ''ஞானியர் உலக வாழ்க்கைக்குப் பின் மேலுலகில் ஆவி நிலையில் சஞ்சரிக்கின்றார்கள் என்று கூறும் போது கிறிஸ்துவ வேதம் கூறும் பரிசுத்த ஆவியை, ''புறா போன்று இறைவன் காட்சியளித்ததாக கிறிஸ்துவ வேதமும் கூறுகிறது'' என்று எடுத்துக்காட்டி தேவரவர்கள் விளக்குகிறார்கள். பல்வேறு சமயங்களிலுள்ள மெய் ஞானத்தை எடுத்துக்காட்டும் அவர், சமயங்கள் பலவானாலும் ஆண்டவர் ஒருவரே என்பதை வாய்ப்பு வரும் போதெல்லாம் வலியுறுத்துகின்றார். இராமலிங்க சுவாமிகள் தமது சாதிபேதம், சமய பேதம் அற்ற சுத்த சமரச சன்மார்க்க நெறி தழைத்தோங்கப் போகும் காலம் நடக்கிறது என்றும் தன்னுடைய சன்மார்க்க கொடியே உலகாளும் கொடி என்றும் சொல்லியிருக்கிறார். சிறியோர்கள் மதவெறி கொள்கிறார்கள். இதனுடைய உண்மையான அர்த்தத்தை உணராததால் ஏற்பட்ட வினை இது. கிறிஸ்துவரும், முஸ்லீம்களும், இந்துவும் தனக்குள்ளிருக்கும் தன் இருள் தத்துவங்களை கண்டு யோக மறையை பயின்று தன் இருள் நீங்கி தனக்குள்ளிருக்கின்ற ஜோதியைக் கண்டு ஆத்மாவை அனுபவித்து ஆண்டவனை அடையுங் காலத்தில் புறவொழுக்கங்களால் ஏற்பட்ட மாறுபாடுகள் அந்தந்த நாட்டு சீதோஷ்ண நிலைமைக்கு தக்கவாறு அமைந்தது என்றும், கலாச்சாரம் பெரிதும் பூகோள அமைப்பிற்குட்பட்ட தெனக்கண்டு, மதங்களெல்லாம் பல நதிகள், பல இடங்களில் உற்பத்தியாகி பல பாதைகளில் சென்று, முடிவில் சமுத்திரத்தில் சங்கமிப்பது போல, பல மதப் பிரிவுகளும் ஒரே ஆண்டவனை அடையும் மார்க்கமே என்பதை உணருவார்கள். இதை விவரமில்லாத கிறிஸ்தவனும், முஸ்லீமும், இந்துவும் வெவ்வேறு என்று நினைத்துக் கொண்டு ஒவ்வொருவரும், தன் மதத்தின் பேரால் உலகத்தை ஆள வேண்டும் என்று ஆசை கொள்கிறார்கள். கிறிஸ்தவனும், முஸ்லீமும், இந்துவும் தனக்குள்ளிருக்கும் வெவ்வேறு சரீர தத்துவங்களை கொண்டு இருள் நீங்கி தனக்குள்ளிருக்கின்ற ஜோதியை கண்டு ஆத்மாவை அனுபவித்து ஆண்டவனை அடையும் மதப்பாகுபாடுகள் மறையும் என்றார் தேவர்.

பக்குவப்பட்ட ஒருவன் இந்து கோவிலில் கட்டுகின்ற தீப வெளிச்சமும், கிறித்துவர் வணக்கத்தில் வைக்கின்ற மெழுகுவர்த்தியின் ஒளியும், முகமதியர் ஊதுபத்தியில் காண்கின்ற சுடரும், தன் சரீரத்தின் இருட்டை போக்கி, எழுப்ப வேண்டிய ஞான விளக்கின் சொரூபம் என்பதை காண்கிறான் என்று தேவர் கூறுவதிலிருந்து அனைத்து மதங்களும் உணர்த்துகின்ற உண்மை ஒன்று தான் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது. இந்த உரையின் மூலம் சமயம் கடந்த தேவரின் மத நல்லிணக்க சிந்தனைகள் நமக்கு நன்கு விளங்கும்.

எடுத்துக்காட்டாக ஒரு உண்மை சம்பவத்தைப் பற்றி காணலாம். 1955ம் ஆண்டு தேவரவர்கள் இரண்டாம் முறையாக பர்மா சென்றிருந்த பொழுது, பர்மாவில் பெரும் புத்த பிட்சுகள் அடங்கிய கூட்டத்தில் புத்தரையும் அவரது தத்துவங்களையும் பற்றி பேசினார். இத்தத்துவங்களை தேவர் பேசியதை பர்மா நாட்டு தலைமை நீதிபதி பர்மீய மொழியில் மொழி பெயர்த்து கூறினார். இந்த சொற்பொழிவை கண்டு நீதிபதியும், தலைமை பிட்சுவும் அதிசயித்து போனார்கள். ஆதலால் பசும்பொன்னார் பல்சமய அறிஞராக விளங்கினார் என்பதில் வியப்பில்லை.

மதமென்ற பேய் பிடிக்காதிருக்க வேண்டும் என்பதில் ஆழ்ந்த நம்பிக்கைக் கொண்டவர் தேவர். அதற்கு எடுத்துக்காட்டாக ஒரு நிகழ்ச்சியை காணலாம். அதன் மூலம் அவரின் சமயத் தொண்டு எவ்வளவு சிறப்பானது என்பதையும் காணலாம். தேவர் பிறந்த பசும்பொன் கிராமத்தில் ஐந்து மைல் தொலையிலுள்ள அபிராமம் என்னும் ஊரில் முஸ்லீம்கள் வசிக்கின்றனர். வியாபாரம் தொடர்பாக இந்துக்களுக்கும், முஸ்லீம்களுக்கும் ஏற்படவிருந்த மிகப்பெரிய மோதல்களை தேவரின் தலையீட்டின் பேரில் சுமூகமாக முடித்து வைத்ததன் மூலம் தேவர் தன்னை சமூக நல்லிணக்க தலைவராக நிரூபித்தார்.

இந்து சமயத்தின் மீது தேவருக்கு ஆழ்ந்த ஈடுபாடு இருந்தாலும் இந்து சமயத்தின் பெயரால் நடைபெற்ற போலித்தனம், மடமை போன்றவற்றை எதிர்த்ததன் மூலம் போலிச் சாமியாரைச் சாடிய உண்மையான ஆன்மீக வாதி, சமூக நல்லிணக்கத்திற்காகப் பாடுபட்ட மத நல்லிணக்கவாதி, புரையோடிய சமூகக் கேடுகளை அழித்து புதிய சமுதாயத்தை படைப்பதற்கு பாடுபட்ட ஒரு சமூக சிந்தனையாளர் தேவர் என்பதை நிரூபித்தார்.



**நூறு ஏழைகள் ஒரு பணக்காரனை உண்டாக்குகிறார்கள்,**
**ஒரு பணக்காரன் ஆயிரம் ஏழைகளை உண்டாக்குகிறான்.**



தேர்தல் பிரச்சாரத்தில் தேவர்.



சட்டப்பேரவையில் உரையாற்றும் போது தேவர்.

# தேவரும் பர்மா பயணங்களும்

**கே. முத்துவேல்,**
முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்,
தமிழ்மாநில தலைவர்,
அகில இந்திய பார்வர்ட் பிளாக், கமுதி.

தெய்வீகத் திருமகன் பசும்பொன் தேவர் அவர்கள் ''தேசீயமும் தெய்வீகமும் எனது இரு கண்கள்'' என்று சொன்னதோடு மட்டுமல்ல அதனை தனது வாழ்வின் இறுதி மூச்சுவரை வாழ்ந்து காட்டிய உத்தமத் தலைவராவார். இயற்கையாகவே அவரிடம் அமைந்திருந்த மனோதிடமும், மனப்பக்குவமும் தான் அவரை அரசியலிலும், ஆன்மீகத்திலும் முடிசூடா மன்னராக உயர்த்தியது என்றால் அதுமிகையாகாது.

அப்பழுக்கற்ற அரசியல் வாதியான தேவர் நினைத்திருந்தால் இந்திய சுதந்திரம் பெறுவதற்கு முன்னர் தமிழ்நாட்டில் அமைந்த காங்கிரஸ் அமைச்சரவையில் அமைச்சராகியிருக்கலாம். தேடி வந்த அமைச்சர் பதவியை வேண்டாம் என்று ஒதுக்கி விட்டார். அதே போன்று 32 1/2 கிராமங்களில் உள்ள சொத்துக்களுக்கு அதிபதியாகத் திகழ்ந்த ஆன்மீகச் செம்மலான தேவர் நினைந்திருந்தால் அவரிடம் குடி கொண்டியிருந்த ஆன்மீகத்தின் அடிப்படையில் சுத்த பிரம்மச்சாரியான அவர் ஓர் மடாதிபதியாக மாறி தன்னைச் சுற்றி துதிபாடும் சீடர்களை வைத்துக் கொண்டு இறைத் தொண்டு செய்திருக்கலாம். இரண்டையும் தவிர்த்து மக்களோடு மக்களாக எளிமையான வாழ்க்கை வாழ்ந்து, தான் பிறந்த இந்திய திருநாட்டின் விடுதலைக்காகவும், ஏழை எளிய தொழிலாளர் வர்க்கத்தின் வளர்ச்சிக்காகவும், அடித்தளத்தில் வாழ்ந்து வந்த அரிசன மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதற்காகவும் தனது வாழ்வை அர்ப்பணித்துக் கொண்டவர் தேவர்.

உயிர் கொடுத்த தாய் இந்துவாக இருந்தாலும் பாலூட்டி உயிர் வளர்த்த தாய் இஸ்லாம் மார்க்கத்தை சேர்ந்தவர்.

காலந்தோறும் வறட்சிக்குள்ளாகும் இராமநாதபுரம் மாவட்ட மக்கள் திரைகடல் கடந்து திரவியம் தேடிட பர்மா சென்று வாழ்ந்து வந்தனர்.

இந்தியா ஆங்கிலேய காலனியாக இருந்த போது பர்மாவும் ஆங்கிலேய காலனியாக இருந்தது. பர்மாவில் விவசாயம் செய்வதற்காக தமிழர்கள் பர்மாவில் குடியமர்த்தப்பட்டனர். சின்ன ரங்கூன் என்றழைக்கப்பட்ட அபிராமத்தைச் சேர்ந்த இஸ்லாமியர்கள் பர்மாவில் வணிகத்தில் ஈடுபட்டுவந்தனர். இந்தியாவில் தனிப் பெரும் தலைவராக வளர்ந்து வந்த தேவரை தாங்கள் வாழும் நாட்டிற்கு அழைத்து சிறப்பு செய்யும் நோக்கத்திற்காகவே தேவரின் பர்மா பயணங்கள் அமைந்தன.

தேவர் பெருமகனார் இந்திய சுதந்திரம் பெறுவதற்கு முன்பும், பெற்ற பின்புமாக இரண்டு முறை பர்மாவிற்குச் சென்றுள்ளார். அவரது முதல் பயணம் இந்திய விடுதலையின் பேரில் அவர் கொண்டிருந்த தணியாத வேட்கையையும், அவரது இரண்டாவது பயணம் அவரது ஆன்மீக முதிர்ச்சியையும் வெளிப் படுத்துவதாக அமைந்தது. 1936 ஆம் ஆண்டு தேவர் அவர்கள் முதல் தடவை கடல் மார்க்கமாக ரங்கூன் சென்று சேர்ந்தார்.

பர்மா வாழ் தமிழர்களின் அழைப்பின் பேரில் 1936ல் பர்மாவுக்குச் சென்ற தேவர் அவர்கள் ரங்கூன் துறைமுகத்தில் இறங்கிய

போது அவருக்கு சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது. கப்பலில் இருந்து தரை இறங்கிய தேவர் அவர்களை பர்மாவில் அப்போது பர்மிய மக்களின் தலைவராக இருந்த பாமோ என்பவர் முதன் முதலில் மாலை அணிவித்து வரவேற்றது பர்மிய மக்கள் தேவர் அவர்கள் மீது கொண்டிருந்த மரியாதையையும், பாச உணர்வையும் வெளிப்படுத்தியது.

பர்மாவுக்கு வருகை தரும் வெளிநாட்டுத் தலைவர்கள் மற்றும் கவர்னர்கள் போன்றோரை இரங்கூன் நகரில் சூலைப்பகோடா 8ஆம் எண் பாலத்தில் வைத்து வரவேற்பது அந்நாட்டின் மரபு. அந்த மரபின் படியே தேவர் அவர்களுக்கு வெளிநாட்டு தலைவருக்குரிய மரியாதைப்படி அந்த பாலத்தில் வைத்து வரவேற்பு அளிக்கப்பட்டது.

பர்மாவில் தேவர் அவர்கள் தான் கலந்து கொண்ட ஒன்பது பொதுக்கூட்டங்களில் பேசிய பேச்சுக்களில் ஒலித்த அவரது ஆன்மீகமும், அரசியலும் கலந்த கருத்துக்கள் பர்மா வாழ் தமிழர்களை மட்டுமின்றி, பர்மிய மக்களையும், அரசியல் மேதைகளையும், ஆன்மீக புத்த பிட்சுக்களையும் வெகுவாக கவர்ந்தது.

பர்மாவில் ஒரு கூட்டத்தில் கண்ணீர் மல்க கொடி ஏற்றிய தேவரைப் பார்த்து அந்தக் கூட்டத்திற்கு தலைமை வகித்த டாக்டர் பாமோ ஏன் கண்ணீர் விட்டீர்கள் என்று வினவியதற்கு ''இன்று அடிமை இந்தியனாகக் கொடி ஏற்றுகிறேன். சுதந்திர இந்தியாவில் சுதந்திரம் பெற்ற இந்தியனாகக் கொடி ஏற்றும் காலம் எதுவோ என எண்ணிக் கண்ணீர் விட்டேன்'' என்று தேவர் அவர்கள் அளித்த பதிலைக் கேட்ட டாக்டர் பாமோ தேவரை கட்டிப் பிடித்து, ''நீங்கள் இந்திய விடுதலையின் தீவிர வாரிசு, உங்களைப் போன்ற வீரமிக்க தலைவர்களைத் தான் நான் காணப் பிரியப்படுகிறேன்'' என்று மெய்சிலிர்க்கக் கூறினார்.

பர்மாவில் பேசிய ஒவ்வொரு கூட்டத்திலும் தேவர் அவர்கள் பர்மா வாழ் இந்தியர்களை நோக்கி ''நீங்கள் பர்மா நாட்டு மக்களோடு மக்களாக வாழ வழி வகுத்துக் கொள்ளுங்கள். இங்கே வாழ்ந்து கொண்டு இந்த நாட்டுக்கு விரோதமாக அல்லது துரோகமாக எதையும் செய்யாதீர்கள்'' என்று கூறிய அறிவுரைகளைக் கேட்ட பர்மா வாழ் இந்தியர்களும், பர்மீய மக்களும், தன் நாட்டைவிட்டு பிற நாடுகளில் வாழும் மக்கள் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதை தேவர் எவ்வளவு ஆணித்தரமாக வலியுறுத்துகிறார் என்று எண்ணி ஆனந்தக்கண்ணீர் சிந்தினார்கள்.

1955 ஆம் ஆண்டு 2வது முறையாக பர்மா வாழ் இந்தியர்களால் அழைக்கப்பட்டு பர்மாவுக்குச் சென்ற தேவர் அவர்களை சீருடை அணிந்த தொண்டர் படையும் பர்மிய மக்களும் பர்மாவில் வாழும் இந்தியர்களும் ரங்கூன் விமான நிலையத்தில் கூடி மிகச் சிறப்பான வரவேற்பு அளித்தனர்.

பர்மாவின் ஜனாதிபதியைச் சந்தித்து உரையாடிய தேவர் அவர்கள் திருக்குறளின் அருமை பெருமைகளை சுருக்கமாக விளக்கிக் கூறி திருக்குறள் புத்தகம் ஒன்றை அன்பளிப்பாக வழங்கியதை ஏற்றுக் கொண்ட ஜனாதிபதி தேவர் அவர்களின் பேச்சு சாதுர்யத்தை பாராட்டினார்.

பர்மாவில் பெரும் புத்தபிட்சுக்கள் அடங்கிய கூட்டத்தில் புத்தரைப் பற்றியும் புத்தரின் 12 கிரந்தங்களைப் பற்றியும், புத்த மதத்தின் சிறப்பு பற்றியும், புத்த மதம் இந்தியாவில் தோன்றிய மதமாக இருந்தும் இந்தியாவில் வளர்ச்சி பெறாமல் பர்மா, இலங்கை போன்ற நாடுகளில் எதனால் வளர்ச்சி பெற்றது என்பது பற்றியும் நீண்டதொரு சொற்பொழிவாற்றினார். தாங்கள் சிந்தித்துப் பார்க்காத புத்தமதக் கோட்பாடுகளையும், சித்தாந்தங்களையும் தேவர் அவர்கள் எடுத்துரைத்ததைக் கண்ட தலைமை பிட்சு, அவர் ஒருவர் மட்டுமே அணியக் கூடிய மணி மாலையை தேவருக்கு அணிய முற்பட்ட போது தேவர் அதனை பெற்றுக் கொள்ள மறுத்து ''உங்களைப் போன்ற பெரியவர்கள் எழுதிய நூலைப் படித்து பார்த்துத்தான் பேசினேன்'' என்று தன்னடக்கத்துடன் கூறினார்.

புத்தமத தத்துவங்களை தேவர் ஆங்கிலத்தில் பேசியதை பர்மீய மொழியில் மொழி பெயர்த்துக் கூறிய அந்நாட்டு தலைமை நீதிபதி, தேவர் அவர்களின் ஆங்கிலப் புலமையை வியந்து பாராட்டினர்.

தேவர் அவர்களின் ஆன்மீகப் புலமையையும், புத்தமத பிட்சுக்களே போற்றும் வண்ணம் புத்தமதக் கோட்பாடுகள் பற்றி அவரிடம் காணப்பட்ட ஆற்றலையும் கௌரவிக்க எண்ணிய தலைமை பிட்சுவான ஊச்சாண்டோன், புத்தமதத்தவரல்லாத வேற்று மதத்தவராகிய தேவர் அவர்களுக்கு வேறு எவருக்கும் செய்யாத ஒரு சிறப்பான கௌரவம் கொடுக்க எண்ணினார். புத்த மத வழக்குப்படி புத்த பிட்சு நடந்து வரும் பாதைக்கு இருபுறமும் வரிசையாக பெண்கள் மண்டியிட்டு அமர்ந்து தங்கள் கூந்தலை அந்த பாதை மீது படரவிட்டு அதன் மேல் நடந்து வரும் சிறப்பான கௌரவத்தை தேவருக்கு வழங்க அந்த தலைமைபிட்சு ஏற்பாடு செய்தார்.

அதனை அறிந்த தேவர் ''எங்கள் மதக் கோட்பாட்டின்படி அன்னை பராசக்தியின் திருவுருவமாக தாய்க்குலத்தை மதிக்கும் அடியேன் அந்த தாய்க்குலத்தின் கூந்தல் மீது கால் வைத்து நடக்க மாட்டேன்'' என்று மறுத்து விட்டார். தாய்க்குலத்தின் மீது தேவர் கொண்டிருந்த மட்டில்லா மாண்பினை அங்கு குழுமியிருந்த அனைவரும் போற்றி பாராட்டினார்கள்.

பர்மாவில் தேவர் சுமார் மூன்று மாதங்கள் வரை தங்கி பல இடங்களில் ஆன்மீகம் மற்றும் அரசியல் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். அவருடன் பி.கே. மூக்கையாத் தேவரும், கண்ணகி பத்திரிக்கை ஆசிரியர் சக்தி மோகனும் சென்றிருந்தார்கள். எங்கு சென்றாலும் மூவரும் ஒன்றாகவே செல்வார்கள்.தேவர் பர்மாவில் இருந்த போது ஷான் நாட்டு மன்னரின் அழைப்புக்கு இணங்க ஷான் நாட்டுக்கு தேவர் அவர்கள் மட்டும் தனியாகச் சென்றார். ஷான் நாடு என்பது பர்மா, சீனா, அஸ்ஸாம் ஆகிய மூன்று நாட்டு எல்லைகளும் சந்திக்கின்ற இடத்தில் அமைந்த ஒரு தனி சமஸ்தானம் ஆகும். அங்கு சென்று திரும்பிய பிறகு பர்மாவிலிருந்து கல்கத்தா வந்தடைந்த தேவர் பத்திரிக்கை நிருபர்கள் கூட்டத்தில் ''நேதாஜி இறக்கவில்லை அவர் சுகமாக இருக்கிறார்'' என்று கூறினார். ஷான் நாட்டில் அவர் என்ன கண்டார் ? என்ன விபரம் அறிந்தார் ? என்பதை தேவர் அவர்கள் இறுதி வரை வெளிப்படையாகக் கூறவில்லை. அதே போன்று நேதாஜியின் மறைவு குறித்த செய்திகளில் பல விசாரணை கமிஷன்கள் அமைத்த போதிலும் அவரது மறைவில் உள்ள மர்மம் இன்னும் புரியாத புதிராகவே இருந்து வருகிறது.

சுவாமி விவேகானந்தர் அவர்களை சிகாகோ மாநாடு எப்படி உலகறியச் செய்ததோ அதே போன்று தேவர் அவர்களின் பர்மா விஜயம் அவரது ஆன்மீகப்பற்றையும், பிற மதங்கள் பற்றி தெரிந்து வைத்திருந்த அவரது ஆற்றலையும் இந்தியா மட்டுமின்றி அண்டை நாடுகளும் அறிய வாய்ப்பாக அமைந்தது.

தேவருக்கு பர்மியர்கள் வழங்கிய வாழ்த்து மடல்களும், புத்தமத துறவிகள் வழங்கிய புத்தருடைய சிலைகளும் தேவரின் கடல் கடந்த நிலைத்த புகழுக்கு இன்னும் சான்றாக விளங்குகின்றன.



**மந்திரி பதவி என்றால் அதன் பொறுப்பை சுமக்க நாணயம் நேர்மை வேண்டும்.**

# சுபாஷ் சந்திரபோஸ் பற்றிய தேவரின் கருத்துக்கள்

டாக்டர். **கே. பேச்சியம்மாள்,**
மதுரை காமராஜர் பல்கலைக்கழகம்,
மதுரை.

தென்னகத்தின் போஸ் என்று அழைக்கப்பட்ட தேவர் 1927ல் நேதாஜியை முதன் முதலாக சென்னையில் சந்தித்தார். தேவரின் பொதுவாழ்வு தீவிரவாதமாக மாறுவதற்கான உணர்வுகளை நேதாஜியே விதைத்தார்.

1939ல் திரிபுரா காங்கிரஸ் மாநாட்டில் நேதாஜி காங்கிரஸ் தலைமைக்கு போட்டியிட்ட போது, அவரை எதிர்த்து தென் மாநில பட்டாபி சீத்தாராமையா நிறுத்தப்பட்டார். ஆனால் தேவர் நேதாஜியின் மீது கொண்டிருந்த அளவற்ற அன்பின் காரணமாக சென்னை மாகாண வாக்குகளை நேதாஜிக்கு பெற்று தந்து நேதாஜியின் வெற்றிக்கு வழி வகுத்தார்.

காங்கிரஸ் கட்சியில் மன வேறுபாடு கொண்டு பார்வர்டு பிளாக் இயக்கத்தை ஆரம்பித்த பொழுது அந்த இயக்கத்தின் மாபெரும் சக்தியாக தேவர் உருவாகினார். 1939லிருந்து பார்வர்டு பிளாக் இயக்கத்தினை தென்னிந்தியப் பகுதியில் பரப்பிய பெருமை தேவரையே சாரும். இத்தகைய ஒரு தீவிர இயக்கத்தின் தலைவராக இருந்த நேதாஜி சுபாஷ் சந்திரபோஸின் மறைவு ஒரு மர்மமாகவே இருக்கின்றது. நேதாஜி அவர்கள் இரண்டாம் உலகப்போர் முடியும் தருவாயில் ஜப்பானின் வேண்டுகோளின்படி 1945 ஆம் ஆண்டு ஆகஸ்ட் 16ல் சிங்கப்பூரை விட்டு டோக்கியோவிற்கு அழைக்கப்பட்டார். அவ்வாறு அழைக்கப்பட்ட சுபாஷ் சந்திர போஸ் 1945 ஆம் ஆண்டு ஆகஸ்ட் 18 ஆம் நாள் டைஹோக் என்ற விமான நிலையத்தில் விபத்திற்குள்ளாகி நேதாஜி, ஆபத்தான காயங்களுடன் ஜப்பானுக்கு அழைத்துச் செல்லப்பட்டு சிகிச்சை பலனின்றி காலமாகிவிட்டார் என்று ஜப்பான் அரசாங்கம் செய்தி கொடுத்தது. ஆனால் இச்செய்தியை பசும்பொன் முத்துராமலிங்கத்தேவரைப் போல நேதாஜியின் பற்றுள்ளவர்கள் நம்பவில்லை.

சுபாஷ்சந்திரபோஸ் மறைவின் மர்மத்தை அறிந்து கொள்ள ஜவஹர்லால் நேரு தலைமையிலான இந்திய அரசு, நேதாஜி படையில் தளபதியாக இருந்த ஷாநவாஸ்கான் தலைமையில் ஒரு குழு ஒன்றை அமைத்தது. அக்குழுவில் விளக்கமளிப்பதற்காக தேவர் போன்ற பலருக்கும் 1956ம் ஆண்டு ஏப்ரல் 1ஆம் தேதி வருமாறு அழைப்பு விடுக்கப்பட்டது. அதனடிப்படையில் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் டெல்லிக்குச் சென்றிருந்தபோது, அவர் பத்திரிகையாளர்களுக்கு அளித்த பேட்டியின் அடிப்படையில் இக்கட்டுரை அமைந்துள்ளது.

பேட்டியின் போது அவர் கூறியதாவது : நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் 1941ல் ஜனவரி 10ல் கல்கத்தாவில் வீட்டுக் காவலில் இருந்து வெளியேறி காபூல் வழியாக ஜெர்மனி சென்றடைந்தார். ஆனால் இந்திய அரசாங்கத்திற்கு ஜனவரி 16ல் தான் அவர் தப்பிச்சென்ற விஷயம் தெரிய வந்தது. பல இடங்களில் தேடியும் கண்டுபிடிக்க முடியாத இந்திய அரசு, டோக்கியோவில் நடைபெற்ற சுதந்திர இந்திய காங்கிரஸிற்கு விமானத்தில் செல்லும் வழியில் ஜப்பானிய கடற்கரைக்கு அப்பால் விமானம் விபத்தாகி சுபாஷ்சந்திரபோஸ் உயிர் இழந்தார் என்ற செய்தியை லண்டன் ராய்ட்டார் செய்தி நிறுவனம் வெளியிட்டது. அது ஒரு பொய்யான செய்தி என்று 1942ல் மார்ச் மாதம் அதே ராய்ட்டார் செய்தி மூலம் தெரியவந்தது. காரணம் 1941 ஜனவரி 10ல் தப்பிச் சென்ற சுபாஷ்சந்திரபோஸ் 1941 மார்ச்சில் பெர்லினில் வானொலியில் பேசிய பின்னர்தான் அவர் சாகவில்லை என்பது தெரியவந்தது. அது போன்று தான் இரண்டாவது முறையாக நேதாஜி இறந்து விட்டார் என்று 1945 ஆகஸ்ட் 24ல் இந்திய பத்திரிகையில் வந்த செய்தியும் ஆகும். ஆனால் நிகழ்ச்சி நடந்ததாக கூறப்படுவது 1945ல் ஆகஸ்ட் 18ஆம் நாள் ஆகும்.

இந்நிலையில் உலக முக்கியத்துவம் வாய்ந்த இச்செய்தி ஐந்து நாட்களுக்குப் பின்னர் பத்திரிக்கையில் வந்திருப்பது ஒரு புதுமை என்று தேவர் வாதாடுகிறார்.

நேதாஜி சென்ற விமான விபத்தில் அவருடன் சென்ற பலர் சிகிச்சை பலனின்றி இறந்து விட்டனர் என்று பத்திரிகையில் கூறப்பட்டு இருந்தது. ஆனால் இவருடன் சென்று விபத்தில் காயம் அடைந்த ஜப்பானிய தளபதி ஹிமூரா என்பவர் அமெரிக்காவிடம் சரணடைந்து ஜப்பான் சார்பில் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டுள்ளார். இதற்கு ஆதாரமாக 1945 செப்டம்பர் 18ல் இலங்கையில் இருந்து வெளியிடப்பட்ட யுனைடட் பிரஸ் என்ற பத்திரிக்கை கூறுவதாவது : சிங்கப்பூரில் பிரபல வழக்கறிஞராகவும், உயர்நீதிமன்ற நீதிபதியாகவும் இருந்த எம்.வி. பிள்ளை என்பவர் நேதாஜி இறந்ததை எதிர்க்கின்றார். ''ஏனெனில் அவருடன் அதே விமானத்தில் பிரயாணம் செய்து விபத்தில் சிக்கி, மடிந்து விட்டதாகச் செய்தி கொடுக்கப்பட்ட ஜப்பான் தளபதிகளில் ஒருவரான ஹிமூரா என்பவர் தான் பிறகு சிங்கப்பூரில் நேச தேசப்படையினரிடம் சரணாகதி ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டவர். இவர் ஒரு மாதத்திற்குள் சென்று எப்படிப் பிழைத்து வந்தாரோ, அதே மாதிரிதான் நேதாஜியின் மரணச் செய்தியுமிருக்கும்'' என்று தேவர் கூறினார்.

இதே போன்று இந்திய அசோஸியேட்பிரஸ் வெளியிட்ட மற்றொரு செய்தியில், ஷியாம் இராணுவ உதவி தலைமைத் தளபதி, லே ஜெனரல் அக்டி சேனாநரோஸ் என்பவர் நேதாஜி இறந்து விட்டதாகக் கூறும் ஜப்பானியரின் செய்தியை நம்ப முடியவில்லை. இதே மாதிரி பல செய்திகள் நேதாஜி மரணம் பற்றி வெளியாகி விட்டன. ஆனால் ஒரு செய்தி கூட அவரின் இறப்பை இது வரை நிஜமாகக் கூறவில்லை என்று கூறுகிறது. லாகூரில் உள்ள Tribune பத்திரிகை 1946 மார்ச் 26ல் வெளியிட்ட செய்தியில் இரண்டாம் உலகப்போரில் சிங்கப்பூர் வீழ்ச்சியடைந்தபோது நகரசபை இஞ்சினியராக இருந்த நாயர் என்பவர் டைஹோக்கூவில் விபத்தாகி நொறுங்கிவிட்டதாக செய்தி கூறப்பட்ட நேதாஜி சென்ற விமானம், மறுநாள் ஹாங்காங்கில் காணப்பட்டது. அதில் எவ்வித சேதமோ பழுதோ கிடையாது என்று கூறுகிறார்.

மகாத்மா காந்தி அவர்களே நேதாஜி இறந்து விட்டார் என்ற செய்தியை நம்பவில்லை. பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்கள் கூறுகையில் 1946 மார்ச் 12ல் இந்திய தேசீய இராணுவ (INA) வீரர்களான ஷாநவாஸ்கானும், சைஹாலும் காந்தியடிகளோடு பேசிக் கொண்டிருந்த போது, ''நீங்கள் எதிர் எதிரான எத்தகைய செய்திகளை கொடுத்தாலும் நேதாஜி சுபாஷ்சந்திரபோஸ் சாகவேயில்லை என்பது'' எனது தீர்மானம் என்று காந்தியடிகள் கூறியதாக கூறுகின்றார். சுபாஷ் சந்திரபோஸ் மரணம் அடைந்து விட்டார் என்ற செய்தியை ஆங்கிலோ – அமெரிக்கர்கள் கூட உறுதியாக நம்பவில்லை என்பதை ஆதாரங்களுடன் தேவர் விளக்குகின்றார். 1945, செப்டம்பர் 2ம் நாள் காந்தியும், சுபாஷ் சந்திர போஸும் தொடர்பு வைத்துள்ளனர் என்ற ஐயப்பாட்டில் காந்தி பூனாவில் தங்கியிருந்த இயற்கை வைத்திய மாளிகையைச் சுற்றி நேதாஜியை கைது செய்யும் நோக்கத்தோடு 24 சி.ஐ.டி.கள் வட்டமிட்டனர். ஆனால் அவர்கள் ஏமாற்றமே அடைந்தனர். காந்தியோடு அங்கு பேசிக் கொண்டு இருந்தது போஸ் அல்ல, போஸ் போன்ற உருவம் கொண்ட அவருடைய தம்பியான சலீல் போஸ் என்பது தெரியவந்ததால் தொங்கிய முகத்துடன் சி.ஐ.டி.கள் திரும்பி விட்டனர் என்று தேவர் கூறுகின்றார்.

அதே போன்று அமெரிக்கப் பத்திரிகை நிருபர் ஒருவர் 1945 செப்டம்பர் மாதம் ராய்ட்டார் மூலம் வெளிவந்த செய்தியில் நேதாஜி இறந்து போனார் என்று ஜப்பான் செய்தி வெளியிட்ட சில தினங்களுக்குப்பிறகு செய்ஹோனில் அவர் இருந்ததாக நிச்சயமாக தெரிகிறது என்று நிருபர் தெரிவித்ததாக தேவர் தெரிவிக்கின்றார். இச்செய்திகளை ஆங்கிலோ – அமெரிக்க அரசாங்கம் அலட்சியப்படுத்தவில்லை என்றும், அவற்றை நம்பிற்று என்றும் தேவர் கூறுகின்றார்.

அகில இந்திய காங்கிரஸ் கட்சியும் சுபாஷ் இறந்து விட்டார் என்ற செய்தியை ஏற்றுக் கொள்ளவில்லை. அதற்கு தேவர் கொடுக்கின்ற ஆதாரம் என்னவென்றால், சுபாஷ் இறந்ததாக கூறப்பட்ட ஒரு மாதத்திற்குப் பின்னர் பம்பாயில் நடைபெற்ற காங்கிரஸ் கூட்டத்தில் 1942 ஆகஸ்ட் 8க்குப் பின்னர் சிறந்த முக்கியத் தலைவர்களுக்கு அனுதாபம் தெரிவிக்கப்பட்டது. கிருபாளினி வாசித்த இறந்தவர்கள் பட்டியலில் நேதாஜி பெயர் இடம் பெறவில்லை. அப்பொழுது ஒரு உறுப்பினர் சுபாஷ் பெயர் ஏன் இடம்பெறவில்லை என்று கேட்டதற்கு, அப்போது காங்கிரஸ் தலைவர் மௌலான அப்துல் கலாம் ஆசாத் பதில் அளிக்கையில், நேதாஜி சுபாஷ் இறந்து விட்டதாகக் கிடைத்த செய்திகளை திட்டவட்டமாக நம்புவதற்கில்லை. எனவே அவர் பெயரை இறந்தவர்களின் பட்டியலில் சேர்க்கவில்லை என்று பதில் கொடுத்ததாக தேவர் கூறுகின்றார். அதே போன்று பத்திரிகைகள் கேட்ட கேள்விக்கு நேதாஜி உயிருடன் இருப்பது எனக்கு மட்டும் தெரிந்த உண்மையல்ல. நேருவுக்கும் தெரியும், அதோடு அமெரிக்க, பிரிட்டன், சீன அதிகாரிகள் போன்றோருக்கும் தெரியும். ஆயினும் ஏதோ ஒரு காரணத்தை வைத்து நேரு தமக்கு தெரிந்த உண்மையைப் பகிரங்கப்படுத்த தயங்குகிறார் என்று தேவர் கூறுகிறார். மேலும் நேதாஜி இருக்கும் இடம் அவரது மர்ம மரணச் செய்தி ஆகியவை மர்மமாக வைத்திருப்பது இராணுவ முக்கியத்துவம் வாய்ந்த பிரச்சனையே ! என்று பதிலளிக்கிறார்.

மேலும் நேதாஜியை நேரில் சந்தித்தீர்களா என்று நிருபர்கள் கேட்டதற்கு ''1947 டிசம்பர் 17ல் இந்தியாவை விட்டு கடந்தேன். 1950 கொரியப் போர் நடைபெற்ற சமயம் நேதாஜியை சந்தித்து விட்டு 1950 நவம்பரில் தாயகம் திரும்பினேன். எனது இந்த யாத்திரை நமது சர்க்காருக்கும் தெரியும் என்று கருதுகிறேன்'' என்று பதிலளித்தார்.

தேவரின் இக்கூற்று, நம்பிக்கை எந்த அளவுக்கு உண்மை என்பதை பாரத பிரதமர் வாஜ்பாய் அமைத்த விசாணைக்குழு கொடுத்த அறிக்கை நமக்கு தெளிவுபடுத்துகிறது. அதே போன்று ஷாநவாஸ் தலைமையில் அமைக்கப்பட்ட விசாரணைக்குழு கொடுத்த அறிக்கை முறையானது அல்ல என்பதால்தான் பாரதப் பிரதமர் இந்திராகாந்தி காலத்தில் மற்றொரு விசாரணைக்குழு ஒன்று அமைக்கப்பட்டது. அக்குழு தேவர் வைத்திருந்த நம்பிக்கை கூற்றினை போன்று 1945 ஆகஸ்ட் 18ல் நடந்ததாகக் கூறப்பட்ட விமான விபத்தில் நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் இறக்கவில்லை என்ற கருத்து வெளியிட்டது.

தேவர் இதயபூர்வமாக ஏற்றுக் கொண்ட தலைவர் நேதாஜி மரணமடையவில்லை என்பதை தன் வாழ்நாள் முழுவதும் முழுமையாக நம்பினார். காங்கிரஸ் கட்சிக்குள்ளேயே இயக்கமாக துவங்கிய பார்வர்டு பிளாக்கை மிகப் பெரிய கட்சியாக உருவாக்கி காத்த பெருமையும், அவர் பெயரில் பத்திரிக்கையும், வாசகர் சாலையும் நிறுவி தன் தலைவனுக்கு தனிப்புகழ் பெருமை சேர்த்தவர் தேவரேயாகும்.



**வீரத்திற்கு அழகு தன்னடக்கம். அந்த தன்னடக்கத்தைத் தருவது பக்தியாகும்.**



பர்மாவில் விமானத்திலிருந்து இறங்குகிறார் தேவர் (1955)



பர்மா பயண வரவேற்பில் தேவர்.

# பசும்பொன் தேவரும் பார்வர்ட் பிளாக்கும்

**வீ.எஸ். நவமணி,**
தலைவர்,
பசும்பொன் தேவர் சிந்தனை மையம்.

இந்திய நாட்டின் விடுதலையை வென்றெடுக்க வேண்டும், அந்நிய ஏகாதிபத்தியத்தை இந்தியாவை விட்டு வெளியேற்ற வேண்டும், இந்திய நாட்டின் பண்பாட்டிற்கும் நாகரீகத்திற்கும் உகந்த வழியில் புரட்சியை நடத்தி ஏற்ற தாழ்வற்ற சமுதாயத்தை உருவாக்க வேண்டும், சாதிபேதமற்ற சமூக மறு கட்டமைப்பை ஏற்படுத்த வேண்டும், இந்திய விடுதலையைத் தொடர்ந்து, ஆசிய ஆப்பிரிக்க இனமே ஆங்கில, அமெரிக்கர்களிடமிருந்து விடுதலை பெறச் செய்ய வேண்டும் என்ற உயரிய இலட்சியங்களோடு நேதாஜியால் உருவாக்கப் பெற்ற இயக்கம் அகில இந்திய பார்வர்ட் பிளாக். இந்த இயக்கத்தின் ஸ்தாபகத் தலைவர்களில் ஒருவர் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் ஆவார்.

**பார்வர்ட் பிளாக் தோற்றம்**

1938 ஆம் ஆண்டு ஹரிபுராவில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் மாநாட்டில் சுபாஷ் சந்திரபோஸ் தலைவராக எதிர்ப்பின்றி தேர்ந்தெடுக்கப்பட்டார். 1938 மத்தியில் உலக அரங்கில் இரண்டாவது உலகப்போர் தொடங்குவதற்கான சாத்தியக்கூறுகள் தோன்றின. இதை உணர்ந்த சுபாஷ் சந்திரபோஸ் ஆங்கிலேயனை எதிர்த்து ஆயுதப் போர் நடத்தினால் அது இந்திய விடுதலைக்கு ஏதுவாகும் என்று எண்ணினார். எனவே வெள்ளையர்கள் ஆறு மாத காலத்தில் இந்தியாவை விட்டு வெளியேறும்படி அறிவிக்க வேண்டும் என்றார். இது காந்தி வழி சிந்தனையாளர்களுக்கு பிடிக்கவில்லை.

1939 ஆம் ஆண்டு திரிபுராவில் அகில இந்திய காங்கிரஸ் மாநாடு நடைபெற்றது. சுபாஷ் சந்திர போஸ் மீண்டும் தலைவராகப் போட்டியிட விரும்பினார். காந்திஜி ஏற்கவில்லை. தனது ஆதரவு வேட்பாளராக பட்டாபி சீத்தா ராமையாவை நிறுத்தினார். சுபாஷ் சந்திர போஸ் போட்டியிட்டு வென்றார். சுபாஷின் வெற்றி அகிம்சாவாதிகளை தடுமாற வைத்தது. ஜனநாயக முறையில் போட்டியிட்டு வென்ற தலைவர் செயல்பட விடாமல் தடுக்கப் பட்டார். எனவே நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் 1939ஆம் ஆண்டு ஜுன் 22ஆம் நாள் ''பார்வர்ட் பிளாக்'' என்ற இடது சாரி இயக்கத்தைத் தொடங்கினார். இது தனிக்கட்சியாக இல்லாமல் காங்கிரஸிற்குள் ஒரு இடதுசாரி அமைப்பாக செயல்பட்டது. இதில் நேதாஜியைத் தலைவராக ஏற்றுக் கொண்ட பசும்பொன் தேவர் அவருடன் இணைந்து செயல்பட்டார். பார்வர்ட் பிளாக் ஸ்தாபகத் தலைவர்களின் ஒருவராகவும், தமிழ்நாடு தலைவராகவும் பொறுப்பேற்று செயல்பட்டார். நேதாஜி தேவரின் அழைப்பை ஏற்று சென்னை, மதுரை நகரங்களுக்கு வருகை தந்தார். தேவர் பிரமாண்ட ஊர்வலம், பொதுக்கூட்டங்களை ஏற்பாடு செய்தார். நேதாஜி வீர உரையாற்றினார். பெரும் பான்மையான காங்கிரஸ்காரர்களும், பொதுமக்களும் பார்வர்ட் பிளாக்கிற்கு ஆதரவளித்தனர்.

**தேவர் சிறையிருந்தார் நேதாஜி நாடு கடந்தார்**

06.09.1939ல் மதுரையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தை முடித்துக் கொண்டு நேதாஜியும், தேவரும் காந்திஜியின் அழைப்பை ஏற்று வார்தா சென்றனர். காங்கிரஸ் காரியக் கமிட்டி கூட்டம் முடிந்துதேவர் மதுரை வந்தார். மதுரையில் கட்சியின் அமைப்பு வேலைகள், தொழிற்சங்க நடவடிக்கைகளில் ஈடுபட்டார். வெள்ளைய அரசு தேவரை கைது செய்து சிறையிலடைத்தது.

நேதாஜி நாடெங்கும் கட்சி மற்றும் வெள்ளையர் எதிர்ப்பு நடவடிக்கைகளில் ஈடுபட்டார். 1940 ஜூன் 22 – 27 நாட்களில் நாக்பூரில் நடைபெற்ற மாநாட்டில் அகில இந்திய ஃபார்வர்ட் பிளாக் பெயரிடப்பட்டது. இயக்கம் முழு வீச்சில் செயல்படுவதைத் தடுக்க வெள்ளைய அரசு நேதாஜியை கைது செய்து சிறையிலடைத்தது. நேதாஜி சிறையில் உண்ணாவிரப் போராட்டத்தை மேற்கொண்டார். எனவே அவர் விடுதலை செய்யப்பட்டு கல்கத்தாவில் வீட்டுச்சிறையில் வைக்கப்பட்டார். 20.01.1940ல் நேதாஜி வீட்டுச் சிறையிலிருந்து ரகசியமாக தப்பிச் சென்றார். இந்தியாவைக் கடந்து காபூல், ஆப்கானிஸ்தான், இத்தாலி வழியாக ஜெர்மனியை அடைந்தார்.

**வெள்ளையனே வெளியேறு இயக்கம்**

1942 ஆகஸ்ட்டில் காந்திஜி வெள்ளையனே வெளியேறு போராட்டத்தை அறிவித்தார். ''செய் அல்லது செத்து மடி'' என்றார். விடுதலை வேட்கை தீவிரமானது. போராட்டத்தில் வன்முறை தலையெடுத்து விட்டது என்று கூறி காந்திஜி ''வெள்ளையனே வெளியேறு'' போராட்டத்தை இடை நிறுத்தி விட்டார்.

**பார்வர்ட் பிளாக் கட்சிக்குத்தடை**

கட்சியை ஆரம்பித்த நேதாஜி நாட்டை விட்டு தன்னந்தனி மனிதனாக தப்பிச் சென்றார். ஹிட்லர், முசோலினி டோஜோ என்ற சர்வாதிகாரிகளுடன் ''எதிரிக்கு எதிரி நண்பன்'' என்ற முறையில் இணைந்து இந்திய விடுதலைப் போராட்டத்தை முன்னெடுத்தார். இந்திய தேசீய இராணுவம் அமைத்தார். பசும்பொன் தேவர் ஏற்கனவே கைது செய்யப்பட்டு சிறையில் இருந்தார். ஜெர்மன் ரேடியோவின் மூலம் நேதாஜி விடுத்த அழைப்பு பார்வர்ட் பிளாக் தொண்டர்களை வீறு கொள்ளச் செய்தது. ஆங்கிலேயர் எதிர்ப்பு அதிகரித்தது. எனவே ஆங்கிலேய அரசு பார்வர்ட் பிளாக்கை தடை செய்தது. தலைவர்கள், தொண்டர்கள் சிறையிலடைக்கப்பட்டனர்.

**இரண்டாவது உலகப் போர் முடிவும், தேவர் விடுதலையும்**

1939 செப்டம்பரில் ஆரம்பித்த இரண்டாவது உலகப்போர் 1945ல் முடிவுக்கு வந்தது. ஜப்பானில் நாகசாகி, ஹிரோசிமா நகரங்களில் அமெரிக்கா வீசிய அணுகுண்டு பெரும் நாசத்தை ஏற்படுத்தியது. ஜப்பான் சரண் அடைந்தது. ஜப்பானின் சரணாகதி நேதாஜியின் இந்திய தேசீய இராணுவத்திற்கு பின்னடைவைத் தந்தது. 18.08.1945ல் தைவான் நாட்டில் நடைபெற்ற விமான விபத்தில் நேதாஜி இறந்து விட்டார் என்று ஜப்பான் வானொலி அறிவித்தது. சிறையிலிருந்த தேவர் இச்செய்தியை நம்பவில்லை. இச்செய்தி திட்டமிட்ட நாடகம் என்றார். 2வது உலகப் போர் முடிவுக்கு வந்தவுடன் சிறையிலடைக்கப்பட்டிருந்த அரசியல் தலைவர்கள் விடுதலை செய்யப்பட்டனர். தேவரும் சிறையிலிருந்து வெளியே வந்தார்.

**I.N.A. வீரர்கள் மீது விசாரணை**

இந்திய விடுதலைக்குப் போராடிய நேதாஜியும் அவரது இந்திய தேசீய இராணுவத்தினரும் சர்வ தேச யுத்தக் குற்றவாளிகள் என்று ஆங்கிலேயே அரசு அறிவித்தது. அவர்களை கைது செய்து குற்ற விசாரணை நடத்தியது. தேவர் இதை வன்மையாகக் கண்டித்தார். நாடெங்கும் மக்கள் எதிர்ப்பு எழுந்தது. புலவாய் தேசாய், ஜவஹர்லால் நேரு ஆகியோர் வழக்கறிஞர் உடையணிந்து எதிர் வழக்காடினர். இந்திய தேசீய ராணுவ வீரர்கள் விடுவிக்கப்பட்டனர்.

**1946 தேர்தலும், திருப்பரங்குன்றம் மாநாடும்**

1946 அக்டோபர் 29, 30 தேதிகளில் மதுரை திருப்பரங்குன்றத்தில் தமிழ்நாடு காங்கிரஸ் ஊழியர் மாநாடு காரியக் கமிட்டிக் கூட்டம் நடைபெற்றது. மாநாட்டில் தேவர் கொடியேற்றி துவக்கி வைத்தார். தலைவர் யக்ஞஸ்வர சர்மா தீர்மானத்தை வாசிக்க முற்பட்ட போது

அவருக்கு எதிர்ப்பு ஏற்பட்டது. எனவே இராஜாஜி தலைமையை ஏற்பதில்லை என்ற தீர்மானத்தை பசும்பொன் தேவரே படித்து நிறைவேற்றினார். தமிழ்நாடு காங்கிரஸ் தலைவராக காமராஜரைத் தேர்வு செய்தார்.

இடைக்கால அரசு தேர்தலில் பசும்பொன் தேவர் எதிர்ப்பின்றி சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

**இந்திய விடுதலை**

1947 ஆகஸ்ட் 15ல் இந்தியா விடுதலை பெற்றதாக அறிவிக்கப்பட்டது. இந்திய சுதந்திரம் முழு சுதந்திரம் அல்ல. மூளிச் சுதந்திரம். இந்திய விடுதலைக்காகப் பாடுபட்ட நேதாஜியை சர்வதேச யுத்தக் குற்றவாளியாக அறிவிக்கச் செய்து பெற்ற தன்னக்கட்டு சுதந்திரம் என்றார் தேவர்.

**காங்கிரஸிலிருந்து ஃபார்வர்ட் பிளாக் விலகல்**

காங்கிரஸ் கட்சிக்குள் ஒரு தீவிரவாத அமைப்பாக செயல்பட்டு வந்தது பார்வர்ட் பிளாக். இந்திய விடுதலைக்குப்பின்பு 1948ல் பார்வர்ட் பிளாக் காங்கிரஸை விட்டு வெளியேறி தனிக்கட்சி ஆனது. வெளியே வரும் போதே இரண்டு கட்சியாக வந்தது. ஜோக்லேகர் என்பார் தலைமையில் அகில இந்திய பார்வர்ட் பிளாக் (மார்க்ஸிஸ்ட்), ஆர்.கே. ரூயிக்கர் தலைமையில் அகில இந்திய பார்வர்ட் பிளாக் (சுபாஷிஸ்ட்) என்று செயல்படத் துவங்கியது. தேவர் இந்த பிளவை விரும்பவில்லை.

ஜோக்லேகர் அணியின் தேர்தல் சின்னமான ''சிங்கம்'' சின்னத்தையும், ரூயிக்கரின் கொடியான மூவர்ணக் கொடியில் ''பாயும் புலி'' பொறித்த கொடியையும் தேவர் பயன்படுத்தினார். இதை இரு தரப்பும் எதிர்க்கவில்லை. இதனால் 1952 தேர்தலுக்குப்பின்பு ஏற்பட்ட பார்வர்ட் பிளாக் இணைப்பிற்கு துணையாக அமைந்தது.

**1952 முதல் பொதுத் தேர்தல்**

21 வயது நிரம்பப் பெற்ற இந்தியக் குடிமக்கள் அனைவரும் வாக்காளர்கள் என்ற உரிமை வழங்கப் பெற்ற முதல் பொதுத்தேர்தல் 1952 பிப்ரவரியில் நடைபெற்றது. பார்வர்ட் பிளாக்கிற்கு ஜனநாயக நடைமுறையில் நாட்டில் பொருளாதார மாற்றத்தைக் கொண்டு வந்து விட முடியாது என்று நிலைப்பாடு உண்டு. இருப்பினும் மக்கள் மத்தியில் தங்களுக்கு ஆதரவு உண்டு என்பதை வெளிப்படுத்தவும் மக்களை புரட்சிப்பாதைக்குத் திருப்பவும் இதை ஒரு கருவியாகக் கையாண்டது பார்வர்ட் பிளாக். அதன் அடிப்படையில் குறைந்த எண்ணிக்கையிலேயே பார்வர்ட் பிளாக் போட்டியிட்டது.

தேவர் அருப்புக்கோட்டை பாராளுமன்றத் தொகுதியிலும், முதுகுளத்தூர் சட்டப்பேரவைத் தொகுதியிலும் ஒரே சமயத்தில் போட்டியிட்டு இரட்டை வெற்றி பெற்றார். இந்திய அரசியல் வரலாற்றில் இது ஒரு சாதனையாக மதிக்கப் பெற்றது. தேர்தல் முடிவுக்குப் பின்பு அருப்புக்கோட்டை பாராளுமன்ற உறுப்பினர் பதவியை ராஜினாமா செய்தார். சட்டமன்ற உறுப்பினராக அமர்ந்தார்.

**அருப்புக்கோட்டை இடைத்தேர்தல்**

தேவர் இராஜினாமா செய்த அருப்புக்கோட்டை பாராளுமன்றத் தொகுதிக்கு இடைத்தேர்தல் அறிவிக்கப்பட்டது. தேவர் பார்வர்ட் பிளாக் வேட்பாளராக எம்.டி. இராமசாமி செட்டியாரை அறிவித்தார். காங்கிரஸ் வேட்பாளராக திருநெல்வேலியைச் சேர்ந்த இராஜாத்தி குஞ்சிதபாதம் என்பார் போட்டியிட்டார். மத்திய, மாநில அரசுகள் எப்படியும் வெற்றி பெற்றாக வேண்டும் என்று முழுவேகத்துடன் செயல்பட்டன. முதல்வர் இராஜாஜி ''நான் வேண்டுமானால் காங்கிரஸுக்கு ஓட்டுப்போடுங்கள் நான் வேண்டாம் என்றால் யாருக்கு வேண்டுமானாலும் ஓட்டுப்போடுங்கள் என்று பேசினார்''. எனவே

தேவர் இந்தத் தொகுதியில் மக்கள் உங்கள் கோரிக்கை நிராகரித்தால் நீங்கள் ராஜினாமா செய்வீர்களா ? என்று எதிர்கதுரல் கொடுத்தார். தேர்தலில் பெரியார், ஜீவா, பி. ராமமூர்த்தி போன்றவர்கள் தேவரை ஆதரித்தனர். எதிர்பார்த்தபடி பார்வர்ட் பிளாக் வேட்பாளர் எம்.டி. ராமசாமி செட்டியார் வென்றார். காங்கிரஸ் வேட்பாளர் ராஜாத்தி தோற்றார். ராஜாஜி சொன்னபடி ராஜினாமா செய்ய வேண்டும் என்ற கோரிக்கை வலுத்தது.

**ராஜாஜி நம்பிக்கைத் தீர்மானம்**

முதல்வர் பதவியை விட்டு விலக விரும்பாத ராஜாஜி சட்டசபையில் தனக்கு ஆதரவு இருப்பதாகக் காட்ட முற்பட்டார். சட்டப்பேரவையில் ராஜாஜி நம்பிக்கைத் தீர்மானம் கொண்டு வந்தார். தேவர், கம்யூனிஸ்ட் தலைவர் ஜீவா, இராமமூர்த்தி உள்ளிட்ட தலைவர்கள் தீர்மானத்தை எதிர்த்துப் பேசினர். ''தலைவர்கள் தலைவர்களாக நடந்து கொள்ள வேண்டும், அரசியல் வியாபாரிகளாக இருக்க கூடாது'' என்று குறிப்பிட்டார். ''வெள்ளையரின் அடக்குமுறையை எதிர்த்தவர்கள் ஆட்சிக்கு வந்ததும் வெள்ளையர்களை விட கொடூரமான அடக்கு முறையை மக்கள் மீது ஏவுகிறார்கள்'' என்று எடுத்துச் சொன்னார். மக்கள் மன்றத்தில் தோற்றுப்போன நீங்கள் சட்டசபையில் நம்பிக்கை கோருவது விந்தையானது என்று குறிப்பிட்டார்.

**காங்கிரஸ் பார்வர்ட் பிளாக் இணைப்பு முயற்சி**

1952 தேர்தல் சமயத்தில் பிரிந்து கிடந்த பார்வர்ட் பிளாக் ஒருங்கிணைந்தது. கேப்டன் மோகன் சிங் தலைவர் ஆனார். ஷீலபந்ரயாஜி பொதுச் செயலாளர், தேவர் தமிழ்நாடு தலைவராகவும், மத்திய கமிட்டி உறுப்பினராகவும் இருந்தார். காங்கிரஸில் இருந்த பார்வர்ட் பிளாக்கை மீண்டும் காங்கிரஸில் இணைக்க பிரதமர் நேரு விரும்பினார். நேதாஜியின் வீரர்கள் கேப்டன் மோகன் சிங், ஜி.எஸ். தில்லான், ஷாநவாஸ்கான் பொதுச் செயலாளர் ஷீலபத்தியாஜி போன்றோர் உடன் பட்டனர். பதவி ஆசை ஊட்டப்பட்டது. ஆனால் இலட்சியவாதியான தேவர் இணைப்பு முயற்சியில் இருந்த சூசகத்தை உணர்ந்து எதிர்த்தார். மத்திய கமிட்டி கூடியது, நேருவின் கோரிக்கையை நிராகரித்தது. ஆனால் கேப்டன் மோகன் சிங், ஷீலபத்தியாஜி உள்ளிட்டோர் காங்கிரஸில் இணைந்தனர். தேவர் மத்திய கமிட்டியை கூட்டச் செய்து ஹேமந்த்குமார் பாசுவை தலைவராகவும், ஆர்.கே. ஹல்துல்கரை பொதுச் செயலாளராகவும் தேர்வு செய்தார். தேவர் துணைத் தலைவர் பொறுப்பேற்றார். பார்வர்ட் பிளாக் ஆரம்பிக்கப்பட்ட நோக்கம் சிதைவு படாமல் காப்பாற்றினார்.

**சட்ட மன்றப் பணிகளில் தேவர்**

சட்டமன்ற உறுப்பினராக தேவர் செயலாற்றியது அவரது சட்டமன்ற உரைகள் ஆட்சியாளர்களுக்கு ஆலோசனை வழங்குவதாகவும், பிரச்சனைகளுக்கு தீர்வு காண்பதாகவும் இருந்தது. விவசாயம், கல்வி, தொழிலாளர் நலம், தாழ்த்தப்பட்ட மக்கள் நலம் குறித்து அவர் பேசியவை பிரச்சனைகளைச் சொல்வதாக மட்டுமல்லாமல் பிரச்சனைகளைத் தீர்ப்பதாகவும் அமைந்தன. கலப்படம், கள்ள நோட்டு, கள்ள மார்கெட்காரர்களைக் கடுமையாகச் சாடினார்.

**நேதாஜி விசாரணைக் கமிஷன்**

நேதாஜி தைவானில் ஏற்பட்ட விமான விபத்தில் இறந்து விட்டதாக சொல்லப்பட்டதை காந்திஜி உள்ளிட்ட தலைவர்களும் பொதுமக்களும் நம்பவில்லை. தேவர் நேதாஜி உயிருடன் இருக்கிறார் என்று அறிவித்தார். எனவே மக்கள் மத்தியில் நேதாஜியை பற்றிய ஆர்வம் மிகுந்தது. எனவே நேரு அரசு நேதாஜி விசாரணைக் கமிஷனை அமைத்தது. ஷாநவாஸ்கான், நேதாஜியின் சகோதரர் சுரேஸ் சந்திர போஸ் ஆகியோர் இடம் பெற்ற கமிஷன் அமைந்தது. கமிஷன் முன்பு நேதாஜியை பற்றிய வினாக்களை முன் வைத்தார். அவற்றிற்கு

ஷாநவாஸ்கான் கமிஷன் சரியான விளக்கம் தரவில்லை. எனவே தேவர் நேதாஜி பற்றிய செய்திகளை மக்கள் மன்றத்தில் வைத்தார்.

**1957 பொதுத் தேர்தல்**

1957 பிப்ரவரியில் 2வது பொதுத்தேர்தல் நடைபெற்றது. தேவர் ஸ்ரீவில்லிப்புத்தூர் பாராளுமன்றத் தொகுதியிலும், முதுகுளத்தூர் சட்டமன்றத் தொகுதியிலும் போட்டியிட்டார். இரண்டிலும் வென்றார். காங்கிரஸில் காமராஜர் எதிர்ப்பாளர்கள் ஒருங்கிணைந்து காங்கிரஸ் சீர்திருத்தக் கட்சியை அமைத்தனர். தேவர் ஆதரவைப் பெற்ற இக்கட்சி சட்டமன்றத்தில் முக்கிய எதிர்க்கட்சியாக அமர்ந்தது. பார்வர்ட் பிளாக் சார்பில் போட்டியிட்ட மூக்கையாத் தேவர், ராமசாமி செட்டியார், தோப்புடைப்பட்டி பெருமாள், குடும்பன் ஆகியோர் சட்டமன்ற உறுப்பினர் ஆனார்கள்.

**முதுகுளத்தூர் இடைத்தேர்தல்**

இரட்டை வெற்றி பெற்ற தேவர் இம்முறை முதுகுளத்தூர் சட்டமன்ற உறுப்பினர் பதவியை ராஜினாமா செய்து விட்டு பாராளுமன்ற உறுப்பினர் ஆனார். எனவே, இடைத்தேர்தல் வந்தது. முதுகுளத்தூர் பொதுத்தொகுதி வேட்பாளராக தேவர் டி.எல். சசிவர்ணத் தேவரை வேட்பாளராக அறிவித்தார். இம்முறை பார்வர்ட் பிளாக்கின் சிங்கச் சின்னம் சசிவர்ணத் தேவருக்கு ஒதுக்கப்படவில்லை. அவருக்கு யானைச் சின்னம் ஒதுக்கப்பட்டது. அதிகார வர்க்கத்தின் அத்தனை நடவடிக்கைகளையும் மீறி சசிவர்ணத் தேவர் வெற்றி பெற்றார். இதனால் ஏற்பட்ட கலவரத்தைக் கட்டுப்படுத்த மாவட்ட ஆட்சித் தலைவரிடம் சசிவர்ணத் தேவர் கோரிக்கை வைத்தார்.

**முதுகுளத்தூர் சமாதானக் கூட்டம்**

முதுகுளத்தூர் தொகுதியில் ஏற்பட்டுள்ள கலவரத்தை கட்டுப்படுத்தி அமைதியை ஏற்படுத்த மாவட்ட ஆட்சித் தலைவர் சி.வி.ஆர். பணிக்கர் கூட்டத்தைச் கூட்டினார். கூட்டத்தில் தொகுதியின் தலித் பிரதிநிதி தோப்புடைப்பட்டி ஏ. பெருமாள், தொகுதியின் தலித் எம்.பி. ஆர்.எஸ். ஆறுமுகம் ஆகியோர் அழைக்கப்படவில்லை. கம்யூனிஸ்ட் கட்சி பிரதிநிதிகள் வெளியேற்றப்பட்டனர். காங்கிரஸ், பார்வர்ட் பிளாக் பிரதிநிதிகள் பங்கேற்றனர். 10.09.1957ல் நடைபெற்ற சமாதானக் கூட்டத்தில் அமைதிக்கான பல கருத்துக்கள் ஆராயப்பட்டன. சமாதான வேண்டுகோள் விடுப்பது என்று முடிவானது. கூட்டறிக்கையில் யார் யார் கையெழுத்துப் போடுவது என்பதில் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. தொகுதியின் தேர்ந்தெடுக்கப்பட்ட அரிசனப்பிரதிநிதி தோப்புடைப்பட்டி பெருமாள் தான். எனவே அவர்தான் முடிவில் இடம்பெற வேண்டும் என்றார் தேவர். எனவே தனித்தனியாக அமைதி வேண்டுகோள் விடுப்பது என்றே முடிவானது.

**கா.சீ.க. மாநாடும் தேவர் கைதும்**

காமராஜர் எதிர்ப்பாளர்களால் உருவாக்கப்பட்ட காங்கிரஸ் சீர்திருத்தக் கட்சியின் முதல் மாநில மாநாடு மதுரை தமுக்கம் மைதானத்தில் நடத்த முடிவு செய்தனர். 28.09.1957ல் இந்த மாநாட்டைத் துவக்கி வைத்து தேவர் பேசினார். பேசி முடித்து விட்டு வரும் பொழுது பாதுகாப்பு சட்டப்படி தேவர் கைது செய்யப்பட்டார். காங்கிரஸ் சீர்திருத்த கட்சி, ஜனநாயகக் காங்கிரஸ் என்று பெயர் மாற்றம் பெற்றது.

**சட்டப்பேரவையில் நம்பிக்கையில்லாத் தீர்மானம்**

முதுகுளத்தூர் கலவரத்தைத் தூண்டியதாகவும், காமராசர் ஆட்சியின் மீது நம்பிக்கை இல்லை என்றும் கம்யூனிஸ்ட் தலைவர் எம். கல்யாண சுந்தரம் தீர்மானம் கொண்டு வந்தார். பார்வர்ட் பிளாக், ஜனநாயக காங்கிரஸ் உறுப்பினர்கள் ஆதரித்தன. நம்பிக்கையில்லா தீர்மானம் 25.10.1957 முதல் 31.10.1957 முடிய நடைபெற்றது. சட்ட மேலவையில் நவம்பர் 1, 2, 3 தேதிகளில் விவாதம்

நடைபெற்றது. அரசின் முறை மீறிய செயல்கள் எடுத்து வைக்கப்பட்டன. 11.09.1957 ல் பரமக்குடியில் நடைபெற்ற கொலை சம்பவத்திற்கு நவம்பர் 16 ஆம் தேதி தேவர் காரணம் என்றனர்.

### தேவர் மீது பொய் வழக்கும் விடுதலையும்

தேவர் மீது போடப்பட்ட வழக்கு புதுக்கோட்டை சிறப்பு நீதி மன்றத்தில் நடைபெற்றது. தேவர் நிராபராதி என்று விடுவிக்கப்பட்டார் மற்றும் 8 பேர்களும் குற்றமற்றவர்கள் என விடுதலை செய்யப்பட்டனர். விடுதலையான தேவர் பாராளுமன்றம் சென்றார். அரசின் மக்கள் விரோதப் போக்கை முன் வைத்தப் பேசினார். இந்தியாவின் அந்நிய நாட்டுக் கொள்கையையும், அரசின் முறை மீறிய செயல்களையும் நாட்டு மக்களுக்கு எடுத்துச் சொன்னார்.

### 1962 பொதுத் தேர்தல்

மீண்டும் அருப்புக்கோட்டை பாராளுமன்றத் தேர்தலில் போட்டியிட்டார். சட்டப்பேரவைக்கு சசிவர்ணத் தேவர். மூக்கையாத்தேவர், எம்.டி. ராமசாமி செட்டியார், பாடகர் டி. மொக்கையன் உள்ளிட்ட பார்வர்ட் பிளாக் வேட்பாளர்கள் போட்டியிட்டனர். தேவர் வழக்கம் போல பிரச்சாரத்திற்கு போகாமலேயே வென்றார்.

### அரசியல் கொள்கை மாறாதவர்

பசும்பொன் தேவர் மனித நேயப்பற்றாளர். மகத்தான மனிதர். காங்கிரஸ்காரர்களுக்காக அரசியல் களம் இறங்கினார். காங்கிரஸின் கொள்கையில் போராட்டங்களில் முழு ஈடுபாட்டுடன் செயல்பட்டார். எந்த நிலையிலும் பதவி ஆசை கொண்டதில்லை. பதவி ஆசை கொண்டவர்களுக்கு வழிவிட்டு ஒதுங்கினார். நேதாஜி பார்வர்ட் பிளாக் துவங்கிய போது அவருடன் இணைந்தார். பார்வர்ட் பிளாக் கொள்கைகளை முன்னெடுத்துச் சென்றார்.

சோசலிஸ்ட் கட்சி துவங்கிய ஜெயபிரகாஷ் நாராயணன், வி.டி. சவர்க்கார், கோல்வால்கர் என்று தன்னை அணுகிய அத்துனை தலைவர்களுக்கும் உதவி புரிந்துள்ளார். கம்யூனிஸ்ட் தலைவர்கள் ப. ஜீவானந்தம், பி. இராமமூர்த்தி ஆகியோருடன் சேர்ந்து தொழிலாளர் இயக்கங்களை நடத்தியுள்ளார். கம்யூனிஸ்ட் இயக்கங்களை நடத்தியுள்ளார். கம்யூனிஸ்ட் கொடியை தன் கையால் ஏற்றி வைத்துள்ளார்.

காங்கிரஸில் ஜனநாயகம் இல்லை, காமராஜர் சாதி அணுகுமுறையில் செயல்படுகிறார் என்று கூறி சேலம் வெங்கட கிருஷ்ணன் ரெட்டியார், வி.கே. ராமசாமி முதலியார், டி.ஜி. கிருஷ்ணமூர்த்தி, சிங்கராயர், எஸ்.எஸ். கரையாளர் போன்றவர்கள் துவங்கிய காங்கிரஸ் சீர்திருத்த கமிட்டி பின்பு ஜனநாயக காங்கிரஸ் என தோன்றிய போதும் அவர்களுக்கு ஆசியும் ஆதரவும் வழங்கினார். முதறிஞர் ராஜாஜி சுதந்திர கட்சியை ஏற்படுத்திய போதும் அவருக்கும் உதவினார். என்றாலும் அவர் பார்வர்ட் பிளாக் கொள்கையினைக் கொண்டவராகவே திகழ்ந்தார். ம.பொ. சிவஞான கிராமணியார் தமிழக எல்லை மீட்புப் போர் நடத்திய போது அவருக்கு ஆதரவு தந்தார்.

தன் கட்சிக்கோ தனது தேர்தல் சின்னத்திற்கோ வாக்களியுங்கள் என்ற கேட்காமல் நல்லவர்களைப் பார்த்துத் தேர்ந்தெடுங்கள் என்றார். அந்த நெஞ்சத் துணிவு வேறு எந்தத் தலைவருக்கும் வாய்க்காத தனிச் சிறப்பு ஆகும்.

ஒரு மனிதன் பிறந்த குலத்தால் செல்வச் சிறப்பால் மட்டும் போற்றப்படுவதில்லை. தன்னிகரில்லா தொண்டின் சிறப்பால் தியாக நெஞ்சால் தனி மனித ஒழுக்கத்தால் செயல்பாடுகளின் சிறப்பால் மட்டுமே போற்றப்படுகின்றனர்.

''புரட்சிகரமான எனது கட்சியான பார்வர்ட் பிளாக் ஒரு போதும் மடிந்து போகாது'' என்று

நேதாஜியின் கம்பீர வைர வரிகளுக்குச் சொந்தமான பார்வர்ட் பிளாக் இயக்கத்தின் உயிரோட்டமாகத் திகழ்கிறார் தேவர். அவரது ஒவ்வொரு நடவடிக்கையும் அவரது இயக்கம் சார்ந்ததாகவே இருந்தது என்றால் அது மிகையல்ல.



**யம பயத்தை தாண்டியவரும் காமத்தை கடந்தவரும் தான் ஞானி.**



ரங்கூன் விமான நிலைய வரவேற்பில் தேவர்.



பர்மியத் தலைவர் டாக்டர் பாமோ மற்றும் பர்மா நீதிபதியுடன் தேவர்.

# நாடாளுமன்றத்தில் தேவர்

**சு. சுபரேகா,**
மூன்றாம் ஆண்டு ஆங்கில இலக்கியம்
ஸ்ரீ ஆதி சுஞ்சனகிரி பெண்கள் கல்லூரி,
கம்பம், தேனி மாவட்டம்.

**1957**ல் நடந்த ஸ்ரீவில்லிபுத்தூர் நாடாளுமன்றத் தேர்தலில் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் வெற்றி பெற்று பாராளுமன்றம் சென்றார்.

1959 பிப்ரவரி 13 ... இன்று தான் பசும்பொன் தேவர் நாடாளுமன்றத்தில் முழங்க நேரம் ஒதுக்கப்பட்டது. பின் 16ஆம் தேதியாக அது மாற்றப்பட்டது. இறுதியில் 17ஆம் தேதிதான் அந்த வாய்ப்பு பசும்பொன் தேவருக்கு கிடைத்தது. அதுவும் மாலை 4.45க்கு ... மாலை ஐந்து மணிக்கு நாடாளுமன்றம் முடிந்து விடும். இந்த இடைப்பட்ட கால்மணி நேரத்தில் தனது கருத்து முழுவதையும் பசும்பொன் தேவர் வெளியிட வேண்டும் . . . எழுந்தார் பசும்பொன் தேவர் . . . ஆங்கிலத்தில் தொடர்ந்தார் முழக்கத்தை . . . அது வரை கேட்டறியாத பசும்பொன் தேவரின் ஆங்கில முழக்கத்தைக் கேட்டு வடமாநிலத் தலைவர்கள் விழிகள் மூட மறந்தன.

மறுநாள் வெளிவந்த இந்தியன் எக்ஸ்பிரஸின் டெல்லிப் பதிப்பு, ''Mr. Muthuramalinga Thevar the last speaker of the day, held the attention of the house with his fiery oratory'' என்று பசும்பொன் தேவரின் நாடாளுமன்ற முழக்கம் பற்றிக் குறிப்பிட்டது, அவற்றுள் சில.

ஐயா,

ஜனாதிபதியவர்களின் தலைமையுரை மீது பேச வேண்டிய இவ்வேளையில், நமது வெளிநாட்டுக் கொள்கை, காமன்வெல்த் தொடர்பு முதலியவை பற்றி இடையே கொஞ்சம் விவரிக்க விரும்புகிறேன். விவரிக்க வேண்டியது அவசியமும் கூட.

காமன்வெல்த் என்பதன் பெயரால் நாம் ஒரு கூட்டுறவில் பிணைக்கப்பட்டிருக்கிறோம். ஆனால் நாம் பிணைக்கப்பட்டுள்ள காமன்வெல்த் என்ற கூட்டுறவின் பங்காளிகள், நமது நாட்டையும் செல்வத்தையும் சேர்த்துப் பங்குரிமை கொள்ள ஆசைப்படுகிறார்கள். பொதுச் சொத்து என்றும் கருதுகிறார்கள். நமது நாட்டையும் செல்வத்தையும் அவர்கள் நேசிக்கிற அளவுக்கு நமது சுயாட்சியை நேசிக்கவில்லை என்பதால் இது ஓர் அபாயகரமான கூட்டுறவு என்றே குறிப்பிடலாம்.

மேலும், நாம் சாதிக்கும் ஒவ்வொரு சாதனையையும் அஹிம்சா முறையில் சாதித்து விட்டதாக ஒரு அபிப்பிராயத்தை உலகெங்கும் உண்டாக்கி விட்டிருக்கிறோம். ஆனால் அகிம்சை என்ற தத்துவம் சிந்திப்பதிலும், பேசுவதிலும் உள்ள எளிமை, அதை நடைமுறைப்படுத்துவதில் இல்லை என்பது அநேகமாக நம் எல்லோருக்குமே தெரியும்.

அகிம்சை என்பது அரசியல் ரீதியான செயல்பாடுகளுக்கு ஒத்தியங்க அல்லது உடன்படுத்தி இயக்க இயலாத ஒரு தத்துவம் ! அதை பேசலாம், எழுதலாம், ஆனால் அரசியலில் அதைச் செய்ய முடியாது என்பது கண்கூடு.

எல்லா நாடுகளிலும் – எல்லாப் பகுதி களிலும், இரண்டு கட்சிகள் உண்டு. ஒன்று வலதுசாரிக் கட்சி மற்றொன்று இடது சாரிக் கட்சியாக இருக்கும் – இருந்து வருவதை நாமும் அறிவோம். இரண்டு கட்சிகளும் ஒன்றை ஒன்று வேறுபடுமேயன்றி தேசீயத்தை – தேச நலனைப் பற்றிய துறையில் வேறுபடாது. இரண்டுமே தேச பக்தக் கட்சிகள் தான். இரண்டுக்கும் மக்கள் ஆதரவு உண்டு ; இரண்டு கட்சிகளுமே

நாட்டுக்கான கடமையைச் செய்து வருகின்றன. அதே போல இந்த நாட்டிலும் வலது சாரி – இடது சாரி என்ற முறையில் இயங்கினர் – இயங்குகின்றனர்.

தேச விடுதலைக்காகப் பல பயங்கரப் புரட்சிகளைச் செய்த நமது நாட்டு இடது சாரிகளில், பகவத் கீதையைக் கையில் வைத்துக் கொண்டே அந்நியரின் தூக்கு மேடையில் பலியானோரும், அந்தமான் தீவுகளில் ஆவி துறந்தோரும் கொஞ்சமல்ல அவர்கள் தேசத்திற்காகவே கடமையைச் செய்து உயிரை இழந்தவர்களாக இருந்தாலும், காந்தீயர்களாக இருக்கவில்லை என்றே கருதப்பட்டார்கள். இதனால் அவர்கள் அடியிட்ட சுதந்திர இந்தியாவில் அவர்களுக்குரிய சிறப்புக்கு இடமில்லாது போய்விட்டது. அதாவது, ஒருவன் தேசத்தியாகியாக மட்டும் இருந்தால் போதாது – அவன் தேச பக்தன் – தியாகி – என்பதைவிட காந்தீயன் – காந்தி பக்தக் கூட்டத்தில் ஒருவனாக இருக்க வேண்டும் என்பதே இதன் பொருள் : போகட்டும் !

''அகிம்சை'' என்ற கொள்கை நாம் அடிமைகளாக இருந்த போது ஓரளவுக்குச்சரி, ஆனாம் நாம் இப்பொழுது ஒரு குடியரசை நிர்மாணித்து இருக்கிறோம். நமது சர்க்கார் கோடானு கோடி ரூபாய்களைக் கொட்டி ராணுவச் செலவைச் செய்கிறது. போர்ச்சுகலும், எல்லைப் புறங்களில் பாகிஸ்தானும் புரிகிற கொடுமைகளைப் பற்றி, பேசும் போது கூட அகிம்சையைச் சம்பந்தப்படுத்திக் கொள்ளத் தவறுவதுமில்லை.

கொள்கையோ அகிம்சை ! வருமானத்தில் பெரும்பகுதி செலவிடுவதோ ராணுவத்துக்கு ! அதே சமயம் நாகா மலை ஜாதியினர் மீது பாய ராணுவத்தை ஏவி விடுகின்றோம் – நமது அரசியல் எதிர்ப்பாளர்கள், தொழிலாளர்கள், விவசாயிகளைச் சாய்க்கத் துப்பாக்கிகளின் வாய்களைத் திறந்து விட அனுமதிக்கிறோம் ! இது எந்த ரக அகிம்சாவாதம் என்பதை எவராலும் புரிந்து கொள்ள முடியவில்லை.

எந்தக் கொள்கையும், எந்தச் சமயத்திலும் செயலோடு சம்பந்தப்பட வேண்டும். செயலோடு சம்பந்தப்படும் கொள்கையைத்தான் உருவாக்க வேண்டும். பேசுவதற்குக் கொள்கை, செய்வதற்கு வேறு முறை என்றால் அக்கொள்கை வெறும் பிரச்சார அந்தஸ்தோடு நின்றுவிடும். அதற்குச் சாகாத்தன்மையும் ஏற்படாது என்பதைக் கூறிக் கொள்கிறேன்.

யுத்தம் முடிந்த ஆரம்ப காலத்தில் எல்லோருமே அமைதி – சமாதானம் பற்றிப் பேசினார்கள். அதற்காக ஐ.நா. சபையும் உண்டாக்கப்பட்டது. ஆனால் சமாதான சாத்தியத்திற்காக உண்டாக்கப்பட்ட உலகப் பொதுச் சபைக்கு ஐக்கிய நாடுகள் சபை என்று பெயர் தான் வைக்கப்பட்டதேயன்றி, அதன் நோக்கமெல்லாம் ஐக்கியத்தைப் பிளப்பதாகவே இருக்கிறது. இது பேசுகிற சமாதானப் பேச்சு, செயலை நெருங்கவே அனுமதிக்கப்படவில்லை.

ஐ.நா.வின் சமாதானம், அமைதி எல்லாம் பேச்சோடு சரி – அதன் செயல்களெல்லாம் அமைதியை சிதைப்பதிலேயே போய்க் கொண்டிருக்கிறது. எனவே இந்த ஐ.நா. சபை இரண்டாவது சர்வதேசச் சங்கம் என்ற நிலைமைக்கு மேற் போகவில்லை – போகாது.

ஜனநாயகம் வந்து விட்டது – அது சக்திமிக்கது ; அதன் பயனாய் மனிதகுலத்தின் வாழ்க்கைத் தரமும், மனப்பாங்கும் உயர்ந்துவிட்டது. எனவே ஒரு நாட்டை ஒரு நாடு படையெடுக்காது. ஒரு நாட்டிற்குள் ஒரு நாடு பலவந்தமாய்ப் பிரவேசிக்காது – பிரவேசிக்கும் என்ற கனவு கூட இனி எவருக்கும் தோன்றாது என்றெல்லாம் அகில முழுவதும் பிரச்சாரத்திருக்கிறோம்.

ஆனால் நடப்பது என்ன ? ஜனநாயகத்திற்கும், அதன் வழி செல்லும் மனிதப் பாங்கிற்கும் எது ஆகாதோ அது நடக்கிறது. ஒரு நாட்டை ஒரு நாடு படையெடுத்தது. அதை பார்த்துக் கொண்டு ஜனநாயகத்தின் மூத்த அண்ணனான அமெரிக்கா சும்மா இருந்தது,

சூயஸ் சம்பவத்தை குறிப்பிடுகிறேன்.

சூயஸ் சம்பவம் மேலும் தொடராது – ஜனநாயக சக்தி தடுத்துவிடும் என்று நினைத்தோம். ஆனால் அதே சூயஸ் நிகழ்ச்சி லெபனானில் ஏற்பட்டது ! சூயஸ் நிகழ்ச்சிக்கு சும்மா இருந்த நமது ஜனநாயகத்தின் மூத்த அண்ணனான அமெரிக்கா லெபனான் நிகழ்ச்சியின் போது சும்மா கூட இருக்கவில்லை.

சூயஸ் முற்றுகையில் பிரிட்டன் கொட்டிய கொடுமையை விடக் கோரமாகக் கொட்டிற்று – லெபனானில் தனது வலிமை மிக்க ஆறாவது கடற்படையையும், போர்க் கப்பல்களையும் காட்டி, சின்னஞ் சிறு நாடான லெபனானைக் கோரத்தனமாய்ப் பயமுறுத்திற்று அமெரிக்கா.

ஜனநாயகமே ஜனநாயகத்தை எதிர்த்துச் சண்டைக்கு மார்தட்டும் நிலைமையை அமெரிக்காவின் மூலம் கண்ட லெபனான், தான் வலிமையிலும், அளவிலும் மிகமிகச் சிறிதாக இருந்தாலும், ஜனநாயகத்தையும் மக்கள் சக்தியையும் நம்பி அமெரிக்காவின் சவாலை ஏற்று அதைக் களத்தில் சந்திக்கக் கச்சை கட்டிற்று.

லெபனானின் இந்தத் துணிச்சலான எதிர்ச்சவால் அமெரிக்கா மூட்டி விட்ட பிரச்சினையை அடக்கிற்று. நாடு சிறிதாக இருந்தும் சக்தி பெரிதாக இயங்கி களத்திலிறங்கத் தயாராகிவிட்ட லெபனானுக்கு முன்னே அமெரிக்கச் சவால் அதிக நாள் நிற்க மாட்டாமல் ஒய்ந்ததை உலகம் அறியும்.

நமது அகிம்சா முறையில் அகில உலகிலும் ஜனநாயகம் அமைய வேண்டுமென்று நாம் விரும்புகிறோம். ஆனால் நம்மைச் சுற்றி நடப்பது என்ன ? ராணுவ சர்வாதிகாரம் !

பாகிஸ்தானில் மட்டுமல்ல – மேலும் சில நாடுகளிலும் ராணுவ சர்வாதிகாரம் நடைபெறுகிறது. தாய்லாந்து, பர்மாவோடு இதர நாடுகளிலும் ராணுவ ஆட்சி அமுலில் இருக்கிறது. அந்த நாடுகளெல்லாம் இந்தியாவைச் சுற்றியிருக்கும் நாடுகள். ஆனால் பர்மாவையும் தாய்லாந்தையும் பற்றி நாம் எதுவும் குறிப்பிடுவதற்கில்லை. ஏனெனில் பர்மா, காமன்வெல்த் பிணைப்பில் இல்லை. தாய்லாந்து தென் கிழக்காசிய கூட்டணி (சீட்டோ) யோடு இணைத்து கருதப்படும் நாடு ஆனதால் பாகிஸ்தானைப் பற்றி நாம் பிறகு சிந்தித்துக் கொள்ளலாம். ஆனால் இதைப்பற்றி நாம் உடனடியாகச் சிந்தித்தே ஆக வேண்டும். ஏனெனில் அதுவும் நம்மைப்போல் நமது காமென்வெல்த்தில் இணைந்துள்ள நாடு. இந்த நாடு ராணுவ சர்வதிகாரத்தில் சிக்கியிருக்கிறது. அதை மேற்கு நாடுகளும் அனுமதித்துக் கொண்டிருக்கின்றன என்றால் நாம் அதில் அதிக எச்சரிக்கையோடு இருந்தாக வேண்டியதோடு, அதற்கு நாம் மறுப்புத் தெரிவிக்க வேண்டாமா ?

ஜனநாயக வரம்பிற்குட்பட்டது என்பது காமன்வெல்த் கூட்டின் கோட்பாடு. ஆனால் அதில் அங்கம் வசிக்கும் ஒரு நாட்டில் ராணுவ சர்வாதிகாரம் நடைபெறுகிறது. அதை அதற்கு அதி அண்டை நாட்டினரான நாம் அனுமதித்துக் கொண்டிருந்தால், நமது ஜனநாயகத்தை எந்த வகையில் நம்மால் பரிபாலிக்க இயலும் ? நம்மை முரட்டுத் தனமான வழியில் இருக்க வைக்கும் கொடுஞ் சூழ்ச்சி அல்லவா இது ? இதோடு நிற்கவில்லை – நிலைமை மேலும் படருகிறது. பாகிஸ்தானில் அந்நியரின் விமான தளங்கள் மட்டும் நிர்மாணிக்கப்பட்டிருக்கவில்லை – புதுமையான பல பயங்கர ஆயுதங்களைக் குவித்து வைக்கும் கிட்டங்கியும், ராக்கெட் தளங்களும் ஆப்கன் மலைகளுக்கு அருகே கட்டப்பட்டிருக்கின்றன ! இது எல்லாம் எந்த வகை ஜனநாயகம் என்று மேற்கு நாடுகள், நம்மிடம் விவரித்திருக்கின்றவோ அறியேன். இது நிற்க, நமது எல்லைப் புறங்களைக் கவனிப்போம்.

நமது குடியரசுக்கு **11** வது வயது நடைபெறுகிறது. ஆனால் நமது எல்லைகளை இன்னும் அளவிட்டு வரையறை செய்து வேலி

வைத்துக் கொள்ளவில்லை.

ஒரு தனிப்பட்ட சிறு குடும்பத்தினர் கூடப் பாகப்பிரிவினை செய்து கொண்டு விட்டால், அவரவர் பாகத்திற்கான பகுதியை சிறு சுவர் எழுப்புவதன் மூலம் பிரித்துக் கொள்கிறார்கள். சுவர் எழுப்பாது போனாலும் தமது பகுதியைப் பிரித்து காட்டிக் கொள்ள ஒரு கோடாவது கிழித்துக் கொள்ளாமலிருக்க மாட்டார்கள். சொத்து சுகங்களையும் முறைப்படி பிரித்தே தீருவார்கள். ஆனால் ஒரு நாடு இரண்டாகப் பிரிக்கப்பட்டு 12 வருடங்களாகியும் எல்லை நிர்ணயங்கூட இன்னும் சரிவரச் செயல்படவில்லை என்பது அதிசயத்திலும் அதிசயம் ! இந்த அலட்சிய நிலை பல ஆபத்துகளை பலவித முறைகளில் உற்பத்தி செய்து கொண்டே போகிறது.

ஏதேனும் அசம்பாவிதங்கள் நடந்தால், அது பற்றிக் கேள்வி எழும்போது இன்னும் எல்லைக்கோடு கிழித்தாகவில்லை – அதனால் எதுவும் சொல்வதற்கில்லை – அச்சம்பவங்களை எம்.பிக்கள் மிகைப்படுத்திப் பேசுகிறார்கள் என்று எளிதாக சொல்லிவிடுகிறோம்.

நமது அரசியல் நிர்ணயத்தின் 3வது பிரிவுப்படி தவறு என்பது தெரிந்தும், பாகிஸ்தான் பிரதமரும் நமது பிரதமரும் பேச்சு நடத்திப் பகுதிகளை மாற்றிக் கொள்கிறார்கள். இந்தப் பகுதி மாற்ற விவகாரம் அரசியல் நிர்ணயச் சட்டத்தின் 3வது பிரிவுப்படி தவறு என்று கேள்விகள் எழுப்பட்டால், ''இல்லை இல்லை அப்பகுதி விவாதத்திற்குரியதாக இருப்பதால் 3வது சட்டப்பிரிவு அதற்குக் குறுக்கிடாது எனவே அதைப் பற்றி எந்த சர்ச்சையும் வேண்டாம்'' என்று ஒரேயடியாக மொத்தத்தில் பதில் சொல்லப்பட்டு விடுகிறது ! உண்மையில் அப்பகுதி விவாதத்திற்குரியதாக இருந்தால் அதன் பரிகாரத்துக்குச் சட்டமில்லையா ?

தேவரின் கருத்துக்கள் தமிழகத்தில் மட்டுமல்லாது முழுமை இந்தியாவிற்கும் பரவ இது போன்ற பாராளுமன்ற பேச்சுக்கள் உதவின. மேலும் தேவரின் நாடாளுமன்ற உரைகள் தேவருக்கு தேசீயத் தலைவர் என்ற அந்தஸ்தை தந்ததோடு மட்டுமல்லாமல் பன்னாட்டு அரசியல் புலமையையும் வெளிப்படுத்தியது. தேவர் பாராளுமன்றத்தில் ஆற்றிய பணிக்காக இந்திய அரசாங்கம் தேவரின் உருவ தபால் தலையை வெளியிட்டதோடு பாராளுமன்ற வளாகத்தில் தேவரின் திருவுருவச் சிலையையும் அமைத்து பெருமைப் படுத்தியுள்ளது.



**டெலஸ்கோப் கொண்டு விண்ணிலுள்ள கோள்களை நோக்கலாம்.**
**பகுத்தறிவைக் கொண்டு பரம்பொருளை பார்க்கலாம்.**

# பன்னாட்டு அரசியலும், பசும்பொன்னாரின் பார்வையும்

**எஸ். ஜார்ஜ் விருமாண்டி,**
இயக்குநர், கிராம தொண்டு நிறுவனம்,
2/176, பெருங்குடி, மதுரை.

ஆண்டவன் அனைத்தையும் படைத்தான். ஆனால் ஆண்டவன் ஒரு போதும் அடிமைகளையும், அடிமைத் தனத்தையும் படைக்கவில்லை. ஆண்டவன் படைக்காத அடிமைகளையும் அடிமைத் தனத்தையும் படைத்தது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியமே ! ஆகவே, ஆண்டவன் படைக்காத அடிமைகளையும், அடிமைத் தனத்தையும் படைத்த பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை, உலக அரங்கிலிருந்து அப்புறப்படுத்துவது, ஒவ்வொரு மனிதனின் கடமையாகும். ஆகவே, பிரிட்டிஷ் ஆட்சியாளர்களை முதலில் இந்திய மண்ணிலிருந்தும், பிறகு ஆசியா கண்டத்திலிருந்தும், பின் படிப்படியாக உலகத்தை விட்டே அகற்ற வேண்டும் என்றார். அரசியல் மேதை திருவாளர் எஸ். சீனுவாச ஐயங்கார்.

யார் இந்த சீனுவாச ஐயங்கார் ? நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் அவர்களின் அரசியல் குருவான தேசபந்து சித்தரஞ்சன் தாஸ் அவர்களின் நெருங்கிய கூட்டாளி ஐயங்கார். 1926ஆம் ஆண்டில் நடந்த காங்கிரஸ் மகா சபைக்கு தலைமை வகித்தவர். தேசபந்து சித்த ரஞ்சன் தாசைப் போல பிரபலமான வழக்குரைஞர். இத்தனைக்கும் மேலாக, பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் என்ற மாமகனை, அரசியல் உலகுக்கு அடையாளம் காட்டியவர்.

சீனுவாச ஐயங்கார் அவர்களின் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய எதிர்ப்பு கருத்துக்கள் அன்னாரின் சொந்தக் கருத்து மட்டுமல்ல. இக் கருத்துக்கள்யாவும், பார்வர்ட் பிளாக் கட்சியின் அரசியல் கருத்துக்களாகும். பார்வர்ட் பிளாக் கட்சியின், பன்னாட்டு அரசியல் கருத்துக்களை, பார்வர்ட் பிளாக் கட்சியின் அரசியல் கோட்பாடுகளை, பசும்பொன் தேவர் அவர்கள் தனது பேச்சின் மூலமாகவும், கட்டுரைகள் மூலமாகவும் வெளிப்படுத்தியுள்ளார். தேவரின் கருத்துக்கள் துணிச்சலுடன் சொல்லப்பட்டதும், எழுதப்பட்டதுமாகும்.

**தேவரின் ரத்தத்தில் பிரிட்டிஷ் எதிர்ப்பு**

பசும்பொன் தேவர் பிறந்த மண் தென்பாண்டிச் சீமையாகும். இந்திய வரலாற்றில் தென்பாண்டிச் சீமையில் தான் பிரிட்டிஷாரை எதிர்த்து முதன் முதலாகக் கிளர்ச்சி எழுந்தது.

அந்த மண்ணில் பிறந்த பசும்பொன் தேவருக்கு, இயற்கையிலேயே பிரிட்டிஷ் எதிர்ப்பு இருந்ததில் ஒன்றும் வியப்பில்லை. இந்த மண்ணில் பிறந்து, அன்னிய ஆங்கிலேயரை விரட்ட முயன்ற விடுதலை வேங்கைகள் இந்தியா முழுமைக்கும் எடுத்துக் காட்டாக விளங்கினார்கள். ஆனால் பசும்பொன் தேவர் பிரிட்டிஷ் ஆட்சியாளர்களை எதிர்த்து, இந்திய மண்ணில் மட்டுமின்றி, ஆசியாவிலிருந்தே அன்னிய ஆங்கிலேயர்களை விரட்ட திட்டமிட்டவர். அதற்காக, இந்தியாவிற்கு அப்பாலும் சென்று, ஆசிய விடுதலைச் சேனைக்கு அடித்தளமிட்டவர். கொரியப் போர்களத்தில் ஐரோப்பிய வல்லரசுப் படைகளை நேருக்கு நேர் சந்தித்தவர்.

ஆசிய விடுதலைச் சேனைக்கும், ஐ.என்.ஏ. வீரர்களின் எழுச்சிக்கும் அஞ்சியே, ஆங்கிலேயர், ஆகஸ்ட் 15, 1947ம் தேதி அதிகார மாற்றம் என்னும் சுதந்திரத்தை வழங்கினார்கள். இந்த சுதந்திர ஏற்பாட்டிலும் பிரச்சனை வந்து விடக்கூடாது என்பதற்காகவே, காமன்வெல்த் என்னும் கூட்டமைப்பை ஆங்கிலேயர்

உருவாக்கினர். அதே காமன் வெல்த் கூட்டமைப்பில், இந்தியாவையும் இணைத்துக் கொண்டனர். ஆகவே தான் பசும்பொன் தேவரின் பார்வர்ட் பிளாக் ஆகஸ்டு 15 சுதந்திரம் முழுச்சுதந்திரம் அல்ல என்று கூறினார். அதன் அடிப்படையில் தான், இந்தியா, பிரிட்டிஷாரின் காமன்வெல்த் கூட்டமைப்பிலிருந்து விலக வேண்டுமென்று வற்புறுத்தினார். அன்னாரின் ஒவ்வொரு கோரிக்கையிலும் தேசீய நலனும், ஆசிய நலனும் எப்பொழுதும் பொதிந்திருக்கும்.

பாகிஸ்தான் ஆங்கிலோ – அமெரிக்கன் சூழ்ச்சிக்குப் பலியாகி விட்டது. ஆங்கிலோ – அமெரிக்கர்களின் தூண்டுதலால் தான் பாகிஸ்தான் நம்மோடு மோதுகிறது. காமன்வெல்த் கூட்டமைப்பில் உள்ள பாகிஸ்தானுக்கும் – இந்தியாவுக்கும் சமரசம் செய்து வைக்க பிரிட்டிஷ் அரசு தயாராய் இல்லை. ஆனால் பாகிஸ்தானை, இந்தியாவிற்கு எதிராகத் தூண்டிக்கொண்டே இருக்கிறது. பாகிஸ்தான் நம்மோடு மோதினால், அது ஆங்கிலோ – அமெரிக்க சக்திகள் மோதுவதாகவே பொருள். ஆகவே இந்தியாவிற்கும் – பாகிஸ்தானுக்கும் சமரசம் செய்ய முடியாத காமன்வெல்த் உறவு நமக்கு தேவையா ? ஆகவே இந்தியா காமன்வெல்த் கூட்டமைப்பிலிருந்து உடனே விலக வேண்டும் என்கிறார் தேவர். பசும்பொன்னாரின் நியாயமான கேள்விகளுக்கு இதுவரை எவரும் பதில் சொல்லவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இந்திய தேசத்தை, இந்தியா – பாகிஸ்தான் என்று பிரித்ததும், சீனாவின் பார்மோசாவையும், ஹாங்காங்கையும் பிரிட்டன் தனது ஆதிக்கத்தில் வைத்திருப்பதும் – வைத்திருக்க முயல்வதும், அரபு நாடுகளுக்கிடையே மோதல்களை உருவாக்கி வைத்திருப்பதும், இஸ்ரேலுக்கும் அரபு நாடுகளுக்கும் எப்போதும் பதட்டத்தை உருவாக்குவதும் பிரிட்டிஷ் அரசின் வேலை தான். ஆசியாவுக்குள் மோதல்கள் ஏற்பட்டுக் கொண்டிருந்தால், ''ஆசியா ஆசியர்களுக்கே'' என்ற நேதாஜியின் சுதேசிக்குரல் நசுக்கப்பட்டு விடும் என்று பிரிட்டிஷ் வல்லரசு கருதுகிறது. அதை முறியடிப்பது நமது கடமை என்கிறார் தேவர்.

**ஜப்பான் பற்றி பசும்பொன் தேவர்**

பசும்பொன் தேவர் நேசித்த நாடுகளில் முதலிடம் பெறுவது ஜப்பான். புத்த மதம் தோன்றிய காலத்திலிருந்தே, இந்தியாவுக்கும், ஜப்பானுக்கும் மிக நெருக்கமான தொடர்புகள் ஏற்பட்டிருந்தன. காலப் போக்கில் மத ரீதியான உறவுகளுடன் அரசியல் ரீதியான உறவுகளும் இவ்விரு நாடுகளுக்கும் ஏற்பட்டன. முதலாவது உலகப் போரின் காலகட்டத்தில் இந்தியப் புரட்சி வீரர் ராஷ்பிகாரி கோஷ் ஜப்பான் சென்றார். ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் சிறைப்பட்டுக் கிடந்த இந்திய சிப்பாய்களை ஒன்றிணைத்து, ஜப்பானில் இந்திய தேசீய விடுதலை ராணுவம் என்ற விடுதலை இராணுவப் பிரிவை கோஷ் தொடங்கினார். அவர் வழியில் நின்று இரண்டாவது உலகப் போரின் காலகட்டத்தில், நேதாஜி சுபாஷ் அவர்கள் ஜப்பான் சென்று. ராஷ்பிகாரி கோஷ் ஏற்படுத்தியிருந்த இந்திய தேசீய விடுதலை இராணுவத்தின் தலைமைப் பொறுப்பை ஏற்றார்.

இந்நிலையில், நேதாஜி சுபாஷின் விடுதலை முயற்சியைத் தடுக்கும் பொருட்டு, அமெரிக்கா, ஜப்பான் மீது அணுகுண்டு வீசியது. இதனால் ஜப்பான் நேசநாடுகளின் படைகளிடம் சரணகதி அடைந்தது. ஜப்பான் நேச நாடுகளிடம் சரணாகதி அடைந்ததேயொழிய, சமரசம் செய்து கொள்ளவில்லை. ஜப்பான் சரணாகதி அடைந்ததும், நேச நாடுகளிடம் சமரசம் செய்து கொள்ளாததும் வரலாற்று முக்கியத்துவம் பெற்ற நிகழ்ச்சியாகும். ஜப்பானின் தைரியமான இந்த முடிவு ''ஆசியா ஆசியருக்கே'' என்ற கோஷத்தின் வெளிப்பாடாகும். இரண்டாவது உலக யுத்தத்தின் முடிவில் தோற்றுப் போன நாடுகளை, நேச நாடுகள் பங்கு போட்டுக் கொண்டன.

ஒன்று பட்டிருந்த ஜெர்மனியை, கிழக்கு ஜெர்மனி என்றும், மேற்கு ஜெர்மனி என்றும்

பிரித்து, கிழக்கு ஜெர்மனியை ரஷ்யாவில் ஆதிக்கத்திற்கும், மேற்கு ஜெர்மனியை அமெரிக்க – ஆங்கிலோ ஆதிக்கத்தின் கீழும், நேசநாடுகள் கொண்டு வந்தன. ஆனால், ஜப்பானை நேச நாடுகளால் பிரிவு படுத்த முடியவில்லை. மேலும், சீனாவில் அமெரிக்கர்களுக்கு ஒரு சியாங்கே சேக் கிடைத்தது போல, ஜப்பானில் நேச நாடுகளுக்கு ஒரு துரோகியும் கிடைக்கவில்லை. ஏனென்றால், நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் அவர்களின் அரசியல் யுக்தியால், நீண்ட காலமாக பகை நாடுகளாக இருந்த ரஷ்யா, சீனா – ஜப்பான் ஆகிய நாடுகளிடையே ஒரு சமரச ஒப்பந்தம் ரகசியமாகச் செய்து முடிக்கப்பட்டது.

இதன் காரணமாகத்தான் ஜப்பானை, நேசநாடுகளால் பிரிவு படுத்த முடியவில்லை. ரஷ்யா – சீனா – ஜப்பானுக்குமிடையே ஏற்பட்ட ரகசிய ஒப்பந்தம், ஆசிய ஒற்றுமையின் அடுத்த கட்டமாகும். இந்தியாவும் ஜப்பானைப்போல் துணிந்து நின்றிருந்தால், இந்தியாவும் ஜப்பானைப் போல் சகல துறைகளிலும் முன்னேறியிருக்க முடியும். ஆசிய ஒற்றுமை பற்றியும், ஆசிய விடுதலை பற்றியும் பசும்பொன் தேவருக்கு தெளிவான கருத்தும், பார்வர்டு பிளாக் கட்சிக்கு தெளிவான திட்டமும் இருந்தது இதன் மூலம் தெளிவாகிறது.

**சீனா பற்றி பசும்பொன் தேவர்**

ஜப்பானிற்கும், இந்தியாவிற்கும் இருந்த தொடர்புகள் போலவே, சீனாவிற்கும் இந்தியாவிற்கும் உள்ள தொடர்புகளுக்கு நீண்ட நெடிய வரலாறுகள் உண்டு. புத்தமத காலத்தில் இரு நாடுகளுக்கும் இருந்த தொடர்பு, தமிழ்நாட்டு சித்தர்கள் காலத்திலும் தொடர்ந்தது. இன்னும் சீனா, பிரிட்டன் போன்ற வல்லரசுகளை எதிர்த்து, ''தைபிங் புரட்சி'' நடத்திய காலத்தில், இந்தியாவிலிருந்து 1857 புரட்சியில் தப்பிய புரட்சியாளர்கள், சென்று ''தைபிங்'' புரட்சியில் கலந்து கொண்டார்கள் என்பது வரலாற்று உண்மை. அத்துடன் சீனத் தலைவர் ''மாசேதுங்'' நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் அமைத்த ஆசிய விடுதலை சேனையில் பெரும் பங்காற்றினார் என்று பசும்பொன் தேவர் சொல்கிறார்.

இன்னும் சீனாவில் மாசேதுங் தலைமையில் நடந்த விடுதலைப் போராட்டம் வெற்றி பெற்றதற்குக் காரணம் ''ஆசிய விடுதலைச் சேனையே'' என்று ஆணித்தரமாகத் தேவர் கூறுகிறார். சீனாவின் விடுதலையை கம்யூனிஸ்ட் புரட்சி என்று கூறுவது தவறானது என்ற கருத்தையும் தேவர் முன் வைக்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது. இரண்டாவது உலக யுத்தத்தின் போது, கம்யூனிஸ்ட் ரஷ்யா நேச நாடுகளின் அணியில் சேர்ந்த போது, சீனா, ரஷ்ய வழியைப் பின்பற்றவில்லை என்பது கவனிக்க வேண்டியதாகும். நேச நாடுகளின் வற்புறுத்தலால், சீனாவில் மாசேதுங் கட்சியினர், சியாங்கே சேக்கிடம் சமரசம் செய்து கொள்ள வேண்டுமென்று, ரஷ்யா, சீனாவைக் கேட்டுக் கொண்டது. ஆனால் மாசேதுங் ரஷ்யாவின் குரலுக்கு செவி சாய்க்கவில்லை.

சீனாவிற்கும், ஜப்பானியர்களுக்கும் இடையே கசப்பான உறவு நீண்ட காலமாக இருந்தது. சீனாவின் மஞ்சூரியாவை ஜப்பான் கைப்பற்றிய போதும், அதன் பிறகும், இவ்விரு நாடுகளுக்குமிடையே இருந்த பகை உணர்வு தொடர்ந்தது. ஆனால் இரண்டாவது உலகப் போரின் கால கட்டத்தில், சீனாவிற்கும், ஜப்பானிற்கும் இடையே நல்லுறவை நேதாஜி ஏற்படுத்தியதாகத் தேவர் கூறுகிறார். ஆசிய நாடுகளிடையே ஒற்றுமை ஏற்பட வேண்டும் என்ற நோக்கில், சீனா – ஜப்பான் பகை உணர்விற்கு முடிவு கட்டினார் நேதாஜி என்பது தேவரின் கருத்து. இதனால் தான் மஞ்சூரியாவை, சீனாவிற்கு ஜப்பான் விட்டுக் கொடுத்தது என்றும் தேவர் கூறுகிறார். தேவரின் கூற்றில் உண்மை இருக்கிறது என்பதை உலக அரசியலார் நன்கு அறிந்து கொண்டனர்.

**அமெரிக்கா பற்றி பசும்பொன் தேவர்**

அமெரிக்கா வல்லரசு நிலை பெறும் முன்பே,

அதனை பற்றி அறிந்தவர் தேவர். இதற்கு உதாரணமாக கீழ்க்கண்ட செய்தியினை, பசும்பொன் தேவர் கூறுகிறார்.

''அமெரிக்காவில், கிறிஸ்தவர்களாக இருந்த போதிலும் நீக்ரோக்களை, சர்ச்சுக்கள் நுழைய விடுவதில்லை. தென் ஆப்ரிக்காவில் நீக்ரோக்கள் மற்றும் கருப்பின மக்கள் பொது இடங்களில் நிற்க தடை விதிக்கப்படுகிறது. இதையெல்லாம் சீர் செய்ய முடியாத அமெரிக்கா, உலகில் ஜனநாயகத்தை நிலை நாட்டுவோம் என்பது எப்படி சரியாகும்''என்கிறார் தேவர்.

**பாகிஸ்தான் பற்றி பசும்பொன் தேவர்**

இந்திய அரசியல் கட்சிகள் அனைத்தும், பாகிஸ்தான் பிரிவினைக்குத் துணை நின்ற போது, பசும்பொன் தேவரின் பார்வர்ட் பிளாக் மட்டுமே, மத அடிப்படையிலான தேசப்பிரிவினையை வன்மையாகக் கண்டித்தது. ஆசியாவை யுத்தக்களமாக மாற்ற, அமெரிக்க, ஆங்கிலேயர்கள் செய்த சதியின் விளைவாய் உருவானதே ''பாகிஸ்தான்'' என்பதும் பசும்பொன் தேவரின் ஆழமான கருத்து. இதனை தயவு தாட்சண்யமின்றி நேருக்கு நேராக நின்று நேரு சர்க்காரை எதிர்த்தவர் தேவர். அதனால் தான் பசும்பொன் தேவர் 1952ம் ஆண்டு வெளியிட்ட பொதுத் தேர்தல் அறிக்கையில், ''இந்திய – பாகிஸ்தான் மக்களின் பூரண ஒத்துழைப்போடு, பாகிஸ்தானை இந்தியாவோடு சேர்ப்பது தான் பார்வர்டு பிளாக்கின் திட்டம் '' என்று தேவர் அறிவித்துள்ளார்.

மேலும் பாகிஸ்தான் ஒரு போதும் தனித்து இயங்க முடியாது என்றும் தெளிவு படுத்தியுள்ளார். இன்றைய நிலையில் (அதாவது 1953ல்) கிழக்கு பாகிஸ்தானும், மேற்கு பாகிஸ்தானும் மத அடிப்படையில் ஒரே நாடாக மாற்றப்பட்டுவிட்டது. ஆனால் பூகோள ரீதியில் தனித்தனியாகவே இருக்கின்றன. மேலும் கிழக்கு பாகிஸ்தானில் வங்காள முஸ்லிம்களும், மேற்கு பாகிஸ்தானில் உருது முஸ்லிம்களும் பெரும்பான்மையினராய் வாழ்ந்து வருகிறார்கள். இந்நிலையில் மேற்கு பாகிஸ்தானில் உள்ள உருது முஸ்லிம்கள், கிழக்கு வங்காளத்தில் உள்ள வங்காளி முஸ்லிம்களை அடக்கியாள நினைக்கிறார்கள். இதன் விளைவு வரும் காலத்தில் பெரும் மாற்றத்தைக் கொண்டு வரலாம் என்று தேவர் கட்டுரை எழுதியுள்ளார்.

பசும்பொன் தேவர் எதிர்பார்த்தது போல, 1972ம் ஆண்டில், பாகிஸ்தானை விட்டு கிழக்கு வங்காளம் பங்களா தேஷாக உருவெடுத்தது. பாகிஸ்தான் உடையும் என்று தேவர் கருதிய கருத்து எவ்வளவு சரியானதென்று தற்போது நாம் உணர முடியும். பாகிஸ்தானின் உருவாக்கம் இயற்கையானதல்ல. அது முற்றிலும் செயற்கையானதே ! ஆகவே செயற்கையாக உருவாக்கப்படும் நாடு நாளடைவில் அழிந்தே போகும் என்று தேவர் உறுதியாய் சொல்கிறார். மேலும் மத அடிப்படையில் ஒரு நாடு உருவாக்கம் பெற முடியாது என்றும் எடுத்துரைக்கிறார்.

இன்றைக்கு (2007) பாகிஸ்தானில் நடைபெறும் சம்பவங்களை உற்று நோக்கினால், பசும்பொன் தேவரின் பன்னாட்டு அரசியல் பார்வை, எவ்வளவு துல்லியமாக சரியாய் இருக்கிறது என்பதைத் தெளிவாய் புரிய முடியும். இன்றைய இந்திய அரசியலில், பசும்பொன் தேவரைப் போல் நுணுக்கமான அரசியல் பேசுவோர் எவரும் இல்லை. பசும்பொன் தேவரின் பார்வர்டு பிளாக் கட்சியின் இக்கருத்தை பாகிஸ்தானில் உள்ள உருது முஸ்லிம்களும், பக்தூனிஸ்தானியர்களும் ஏற்றுக் கொள்கின்றனர் என்ற செய்தி வரத் தொடங்கியுள்ளது. இது பசும்பொன் தேவரின் முன்னறியும் தன்மைக்கு ஓர் எடுத்துக்காட்டாகும். தேவர் தேசீயவாதியாக மட்டுமல்லாது உலக அரசியலிலும் அதனுடைய செயல்பாடுகளிலும் ஆழ்ந்த அறிவும், தொலை நோக்கும் கொண்டிருந்தார் என்பது மறுக்கமுடியாத உண்மைகளாகும்.



# பசும்பொன் தேவரின் தேசீயச் சிந்தனைகள்

பேராசிரியர். **வே. கோபால்,**
பழனி.

**ப**சும்பொன் தேவர் இந்தியத் திருநாட்டிற்கு தேவையான காலத்தில் சேதுநாடு அளித்த கற்பகக்கனி. தேச விடுதலைப் போர்காலத்திலும் விடுதலைக்குப்பின் சமுதாய மறுமலர்ச்சிக்காகவும், தன் வாழ்நாள் முழுவதையும், தேசத்திற்கு கொடுத்துவிட்டு பற்றற்று துறவியாக வாழ்ந்து, ஞானியாக உயர்ந்து ஊன் உடலை உதிர்த்தபின் தெய்வமாக ஒளி வீசுபவர். அவரது தேசீயச் சிந்தனை கடந்த கால வரலாற்று நிகழ்வுகளை கணித்து, நடப்பினை அறிந்து எதிர்கால இந்தியா எவ்வாறு இருக்க வேண்டும் என்ற அவரது கனவினை காட்டுகிறது. பண்பட்ட, உயர்ந்த, தியாக வாழ்வை மையமாகக் கொண்டு மலர்ந்தது அவரது தேசீயச் சிந்தனைகள்.

**தேசம்**

உயர்ந்து நிற்கும் இமயமும், அவைகளால் இசை பாடும் இந்துமாக் கடலும், வங்கக் கடலும், அரபிக் கடலும் எல்லைகளாகக் கொண்ட எல்லைப் பரப்பு தேசபக்தர்கள் போற்றி வணங்கிய தேசம். இங்கு வாழ்கின்ற 100 கோடி மக்களுக்கும் இந்த நாடு சொந்தம். இனத்தால், மொழியால், சமயத்தால் வேறுபட்ட மக்கள் அனைவரும் சகோதர பாசத்தால் கூடி வாழும் தேசம் இந்திய தேசம் என்பதே தேவர் அவர்களின் உள்ளக்கிடக்கை.

***தேசீயம்***

தேசத்தை நேசித்து தேசத்திற்காக வாழ்வது தேசீயம் எனப்படும். தேச பக்தி என்றும் கூறலாம். ''பாரத நாட்டில் சர்வ சுபங்களுக்கும் மூலாதாரமாகிய தேச பக்தி என்ற நவீன மார்க்கம் தோன்றியது. நல்லோர்களின் சிந்தை எல்லாம் உடனே புளகிதமாயின'' என்ற பாரதி கூறுகின்றார். இந்த புதிய மார்க்கமே – புதிய தர்மமே தேசீயமாகும்.

''தேசீயம் எனது உடல், தெய்வீகம் எனது உயிர்.'' என்பது தேவர் அவர்களின் பொன் மொழி. உடலிருக்கும் வரை தேசத்திற்கு உழைப்பேன். அதன் விளைவாக உயிர் தெய்வமயமாகிவிடும் என்பது இதன் பொருள். ''சிவமாக்கி எனை ஆண்ட'' என்ற மாணிக்க வாசகரின் கூற்றினை இங்கு ஒப்பிட்டுப் பார்க்கலாம். உயிர் சிவமாகும் – தெய்வமாகும் என்பது சைவ சித்தாந்தத் தெளிவு, ''நான் எனக்காக வாழ்கிறவன் அல்ல, எனக்காக எதையும் எதிர்பார்த்து, எதையும் செல்லுவதோ, எழுதுவதோ, பேசுவதோ இல்லை. குறிப்பாக அடியேனுடைய சிந்தனை – சேவை – செயல் எல்லாமுமே மக்கள் சக்தியின் பிரதிமைகளாக தேசீயத்திற்காகவும் தெய்வீகத்திற்காகவுமே யன்றி எனக்காக அல்ல'' என்பதுவும் தேவர் அவர்களின் திருவாக்கு. மக்கள் சக்தியின் பிரதிமையே – மக்கள் சக்தியின் ஒட்டு மொத்த வடிவமே – தேசீயம் என்பது அவரது விளக்கம்.

**இந்தியத் திருநாட்டின் பெருமை**

ஆங்கில அரசு இந்திய நாட்டின் பழம் பெருமையை அறிந்தும் அறியாதது போல் இருந்தது. அவர்களே இந்தியாவை ஆள்வதற்கு தகுதி உடையவர்கள், ஆளப்பிறந்தவர்கள் என்ற எண்ணம் கொண்டவர்களாக இருந்தனர். நமது நாட்டின் பெருமையையும், பண்பாட்டுச் சிறப்பையும் நம்மவர்கள் கூட மறந்தனர். மேலை நாட்டு நாகரிகமே சிறந்த நாகரிகம் என்று கருதியவர்களும் உண்டு. இதனால் தான் பாரதி ''பாருக்குள்ளே நல்ல நாடு – எங்கள் பாரத நாடு'' என்று பாடினார்.

உலகத்தில் உள்ள ஜனசமுதாயத்திற்கே மனித நாகரிகத்தைக் கற்றுக் கொடுத்த நாடு நமது நாடு தான் என்று தேவர் மகான் கூறுகின்றார். ஆங்கிலேயர்களே முதலாவது உலக மகா யுத்தத்தில் பங்கெடுத்துப் போராடிய

வீரர்களிலே சிறந்தவர்கள் கூர்க்க சிப்பாய்கள் தான் என்று பாராட்டினர். அத்தகைய பாராட்டைப் பெற்ற சிப்பாய்களைப் பெற்ற நாடு இது. ஆங்கிலக் கல்வியைத் திறம்படக் கற்று ஆக்ஸ்போர்டு போன்ற கல்லூரிகளில் உள்ள அறிஞர்களெல்லாம் பாராட்டக் கூடிய அளவில் ஆங்கில மொழியில் கவிதை இயற்றி பரிசும், புகழும் பெற்ற ரவீந்திரநாத் தாகூர் போன்ற கலை வல்லுநர்களை ஈன்ற நாடு இது.

ரஷாயன சாஸ்திரத்திலே திறமை பெற்று மனிதர், பிராணிகளுக்கு இருப்பது போல் தாவர வர்க்கத்திற்கும் உயிர் இருக்கிறது என்பதை ஆராய்ச்சி மூலம் உலகிற்கு எடுத்துக்காட்டிய ஜகதீஸ் சந்திர போஸ் போன்ற விற்பன்னர்களைப் பெற்ற தேசம் என்று தொடர்ந்து நாட்டின் பெருமை பேசி பரவசப்படுகிறார். நமது நாடு பழம் பெரும் நாடு, மெய்ஞானம், விஞ்ஞானம் மற்றும் ஆயகலைகள் அனைத்திலும் வல்லுநர்களை பெற்ற நாடு என்று பெருமிதம் கொள்கின்றார். மூட நம்பிக்கைகளும், வெற்று ஆரவாரங்களும், சடங்குகளும், ஆச்சாரங்களும் நிறைந்த தேசம் என்று கூறுவோர் இருந்த காலத்தில் உண்மைத் திறமைகளை கூறி மக்களை விழித்தெழும்படி அழைக்கின்றார்.

**தொண்டாற்றிய தளங்கள்**

ஒரு மகான் அல்லது மாமனிதன் தோன்றும் போதே அவர் பணி புரிய வேண்டிய தளங்களும் அமைந்து விடுகின்றன. எங்கே தொண்டாற்ற வேண்டும் ? எப்படி தொண்டாற்ற வேண்டும் ? என்பதையும் தீர்க்க தரிசனத்துடன் அந்த மகான் புரிந்து கொள்கின்றார். வாழையடி வாழையாக வந்த தியாக மரபுக் கூட்டத்தில் ஒருவராக வந்த பசும்பொன் தேவர் அவர்கள் பணியாற்றிய தளங்களை காண்போம்.

**சிறைச்சாலை தேவரின் தவச்சாலை**

விவரம் தெரிந்த நாள் முதலாய் தேவர் அவர்களைத் தேசம் அழைத்தது. தேச விடுதலைக்காக கொடுக்க முடிந்ததை எல்லாம் கொடு, இழக்க முடிந்ததை எல்லாம் இழந்து விடு என்று தேசம் கேட்டது. பட்டாடையும் பகட்டாக வாழும் சுகபோக வாழ்வையும் துறந்தார். உணவை மறந்தார், சுவை மறந்தார், தூக்கம் மறந்தார், ஓய்வு என்றால் என்ன என்று அறியாது வாழ்ந்தார். மங்கை ஒருத்திக்கு மணமாலை சூட வேண்டும் என்ற ஆசை இன்றி தூய பிரமச்சாரியாக வாழ்ந்தார். இருக்க ஒரு வீடு வேண்டும் என்று தனக்காக ஒரு குடிசை கூட கட்டிக் கொள்ளவில்லை. அவர்கள் முன்னவர்கள் கட்டிய பாரம்பரிய சிறிய வீட்டில் பெரிய மனம் கொண்டவராய், விரிந்த சிந்தனையாளராய் வாழ்ந்தார். தன் வாழ்வை அர்த்தம் உள்ளதாக ஆக்கி கொள்வதற்காக நாட்டிற்கு உழைத்தார். அதன் பலனாய் சிறையில் தவம் கிடந்தார்.

மதுரை நிட்டிங் கம்பெனி தொழிலாளர் போராட்டத்திற்காக போடப்பட்ட ஜாமீன் வழக்கின் அடிப்படையில் விதிக்கப்பட்ட தடையை மீறியதற்காக 18 மாதங்கள் திருச்சி சிறையில் தவம்.

திருச்சி சிறையில் இருந்து விடுதலை செய்யப்பட்டு சிறை வாசலுக்கு வந்ததும் பாதுகாப்புச் சட்டப்படி மீண்டும் சிறையில் தவம். திருச்சி சிறையில் இருந்து வேலூர் சிறைக்கு மாற்றம். வேலூர் சிறையிலிருந்து மாற்றப்பட்டு அலிப்பூர் சிறையில் சில மாதங்கள் தவம். அதன் பின் ராஜமுந்திரியில் சிறை. அமராவதியில் சிறை. இந்த சிறைச் சாலைகள் எல்லாம் என்ன தவம் செய்தனவோ தேவர் என்னும் தவயோகியின் தவச்சிறப்பினை கண்டு களித்திட !

சுபாஷ் வரலாற்றில் தனி பெரும் வீரராகத் திகழ்ந்திடவும், அவரது ஒப்பற்ற தேசப் பற்றினை யாவரும் அறிந்திட செய்திடவும் காலமகள் கருணை காட்டினாள். சுபாஷ் தாய் திருநாட்டினை விட்டு வெளியேறி விட்டார். இந்தச் சூழலில் தேவர், நேதாஜி அமைத்த யுத்தக் குழுவில் ஐந்தில் ஒரு உறுப்பினராக இருந்ததால் மத்திய மாகாணத்தில் உள்ள டாமோ சிறை சாலைக்கு மாற்றப்பட்டார். இந்த சிறையில் பேராசிரியர் என்.ஜி. ரங்கா

மற்றும் வடநாட்டு புரட்சி வீரர் மூவர் என ஐந்தே பேர் தான் அடைக்கப்பட்டனர். சிறை வாழ்வின் பயங்கரத் தன்மையை இதன் மூலம் அறிந்து கொள்ளலாம். இறுதியாக வேலூர் சிறையில் இருந்து நாட்டு விடுதலை கனிந்து வரும் போது விடுதலை செய்யப்பட்டார். பசும்பொன்னில் பிறந்து பாரதம் முழுவதும் கூவித் திரிந்த பூங்குயில் – பாடி வந்த பால்நிலா, ஐந்து ஆண்டுகளுக்கு மேல் சிறைக் கொட்டடியில் தவம் கிடந்து, விடுதலையாகி வந்த போது, வெள்ளமெனக் கூடியிருந்த மக்கள் நெஞ்சங்கள் மகிழ்ச்சியில் துள்ளின.

**சுதந்திர திருநாட்டில் தேவர் தம் திருத்தொண்டு**

1947 ஆகஸ்ட் 15ல் சுதந்திரம் மலர்ந்தது. நமது நாடு மக்களாட்சி நெறியில் நடை போடத் தொடங்கியது. தேவர் அவர்களும் நாட்டிற்கு அந்த நெறியினைப் பின்பற்றியே தொண்டாற்றினார். நல்லதொரு ஜனநாயக நாடாக இந்தியா விளங்க வேண்டுமென்று அவர் ஆசைப்பட்டார். ஜனநாயகத்தின் அங்கங்களாகிய அரசு, தேர்தல், நிருவாகம், சமுதாயம் என்பவைகள் மக்கள் நலனைக் கருதி பழுதற்று, முழுமை பெற்று, செம்மையுடையதாக இருக்க வேண்டும் என்பது அவரது லட்சியமாகும்.

**அரசு**

ஆள்பவர்களின் பண்பு நலனைப் பொருத்து அரசு அமைகிறது. திருக்குறள் குறிப்பிடும் அரசு நிலைபற்றி தேவர் விளக்கும் போது அவரது குறிக்கோளை நாம் அறிய முடிகிறது. ''அரசன் தெய்வீகத்தை மறைத்து மனித ரூபமாய் மக்களுக்கு சேவை செய்கிறான். சேவையின் முடிவில் தான் அடைய வேண்டிய தெய்வீக ஸ்தானத்தை அடைகின்றான். ஆகையால் தான் மன்னன் மக்கட்கு இறை என்று குறள் கூறுகிறது அறத்திற்கும் அந்தணர் நூற்கும் ஆதியாய் நின்றது மன்னவன் கோல் என்றும் குறள் கூறுகிறது'' என்று அரசின் இலக்கணம் பற்றி விளக்குகிறார் பசும்பொன் ஞானி. முடியாட் சியாயினும், குடியாட்சியாயினும், அரசாள்பவர் பற்றற்ற ஞானியாக இருந்து சுயநலம் சிறிதும் இன்றி மக்கள் நலமே கண்ணெனக் கருத வேண்டும் என்பது அவரது சித்தாந்தம். அந்த சித்தாந்தத்தை உடன்பாட்டுவாயிலாகவும், எதிர் மறைவாயிலாகவும், சட்டப்பேரவை, நாடாளுமன்றம், பொதுமேடை உரைகளிலும், பேட்டிகளிலும், கட்டுரைகளிலும் விளக்குகிறார்.

தேவரின் எளிமையான தேர்தல் அணுகுமுறைகள் குறித்து ராய்டர் செய்தி நிருபர் தேவர் அவர்களுக்கு ராய்டர் செய்தி நிறுவனத்தின் வாழ்த்துக்களை தெரிவித்து, ''தேச சரித்திரத்தில் இவ்வளவு அகண்ட ஒரு பகுதியில் தன்னுடைய தொகுதியில் சரியாக சுற்றுப்பயணம் செய்யாமலும், சுற்றுப்பயணம் செய்கின்ற காலத்தில் தனக்கு கீழ் இருக்கின்ற எம்.எல்.ஏக்களுக்கு மட்டும் ஓட்டுக்கேட்டு விட்டு தனக்கு ஓட்டுப்போடும்படி கேட்காமலும் தனது எம்.எல்.ஏ. தொகுதிக்கு போகாமலேயும் ஜனநாயகரீதியாக வெற்றி பெற்ற சரித்திரம் எங்கும் கிடையாது. இது ஜனநாயகத்திற்கு நல்ல எடுத்துக் காட்டு. இது தேசத்திற்கு நல்லது'' என்று வியந்து பாராட்டினார்.

**சமுதாயப்பார்வை**

பல்வேறு வகைப்பட்ட மக்கள் வாழும் இடமே ஒரு தேசம். அனைத்து மக்களையும் ஒன்றாக, ஒரே குலமாக, சமத்துவ, சகோதர நோக்குடன் பார்க்கும் பார்வை சரியான சமுதாயப் பார்வையாகும். தேவர் அவர்களின் சமுதாயப் பார்வை இத்தகைய விரிந்த பார்வையாகவே இருக்கிறது. நாட்டு மக்கள் நன்நெறிக்கு உட்பட்டு நல்வாழ்வு வாழ்ந்திட வேண்டும் என்பதே அவரது குறிக்கோள். நல்வாழ்வு என்பது உறுபசியும், ஓவாப்பிணியும் அற்று, இருக்க வீடும், உடுக்க உடையும் அமைதிச் சூழல் மிக்க, அன்பினை அடிப்படையாகக் கொண்ட, அறவாழ்வுமாகும்.

**மக்கள் போற்றும் தலைவர்**

சீரிய சிந்தனையுடன் வாழ்ந்து வந்த தேவர் அவர்களை மக்கள் பெரிதும் மதித்து போற்றி

வணங்கினர். அவருக்கு ஏற்பட்ட சோதனையை தங்களுக்கு ஏற்பட்ட சோதனையாகவே கருதினர். அவர் அழைப்பிற்கு இணங்கி வாழ்ந்த மக்கள் தாங்கள்பட்ட துன்பங்களை விழுப்புண்களாகக் கருதி மகிழ்ந்தனர். அவர் பேசும் கூட்டங்களில் லட்சக்கணக்கான மக்கள் கூடினர், ஆரவாரித்தனர், பூரித்தனர். தேர்தலில் அவருக்கு செலுத்தும் வாக்கு தெய்வத்திற்கு செலுத்தும் காணிக்கை என்று கருதினர். 1936ல் நடந்த ஜில்லா போர்டு தேர்தலில் உறுப்பினராகவும் 1937லும், 1946லும் சட்ட மன்ற உறுப்பினராகவும், 1952, 1957 தேர்தல்களில் சட்டமன்ற, நாடாளுமன்ற உறுப்பினராகவும் ஒரு சேரத் தேர்ந்தெடுத்தும், 1962 தேர்தலில் நாடாளுமன்ற உறுப்பினராகவும் தேர்ந்தெடுத்து மகிழ்ந்தனர். அவர் உரைக்கு மகுடிமுன் நாகம்போல் கட்டுண்டு அவர் நாவசைத்தால் நாடசையும் என்ற கூற்றினை மெய்யாக்கினார்.

**சான்றோர்கள் அணிந்துரை**

தேசீயம் காக்கும் செம்மல் – திரு.வி.க.

தெய்வீக உடலில் தேசிய புள்ளி கொண்ட எங்கள் சேது நாட்டு வேங்கை – ஸ்ரீமான் எஸ்.சீனிவாச அய்யங்கார். இந்திய விடுதலைப்போருக்காக முதுகுளத்தூர் தந்த முதுகுலப் பெருவீரர். எந்த சூழ்நிலையிலும் நிலை புரளாத தேசீய தீரர் – பேராசிரியர். கல்கி

தேசீயத்தையும் வீரத்தையும் கட்டிக் காப்பதில் பொறுப்புணர்ச்சி மிக்கவர் – பேராசிரியர் என்.ஜி. ரங்கா

''நான் எல்லோருக்கும் பொதுவான தேசீய வாதியாக இல்லாமல் வெறும் வகுப்பு வாதியாக இருந்தால் நான் தேர்தலில் ஜெயித்திருக்க முடியாது'' என்று கூறி, நான் தேசீயவாதிதான் என்று தேவர் கூறும் உறுதி மொழி உண்மையானது தான் என்று பதிவு செய்துள்ளனர், மேற்கூறிய சான்றோர்கள். பல தமிழகத் தலைவர்களும் தேசீயத் தலைவர்களும், அவரது தேசீய வாழ்வினை போற்றிச் சூடிய புகழாரங்கள் ஏராளம், ஏராளம்.



**மரணத்தைத் தவிர வேறு எதையுமே தன்னுடையது என்று மனிதன் உரிமை கொண்டாட முடியாது.**

# தேவரும் இராஜாஜியும்

**த. பாண்டியன்,**
தேவர் நினைவாலயம்,
பசும்பொன், கமுதி.

**தேவர் பற்றி இராஜாஜி**

ஸ்ரீ தேவர் ஒரு புனித மனிதர். பிறருக்காக – தாட்சண்யத்திற்காக – பயனுக்காக – எதையும் அவர் பேசியதில்லை. பேசவும் மாட்டார். அவருடைய உள்ளம் தனித்தன்மை வாய்ந்தது. அந்த உள்ளத்திலிருந்து ஆசைக்கு அடிமைப்பட்ட எந்த கருத்தும் வெளிவந்து நான் கேட்டதில்லை. ஆகவே ஸ்ரீ தேவர் பேச்சு எல்லாமே உள்ளத்திலிருந்து வெளிவருகின்றன. உதடுகளிலிருந்து அல்ல. அவர் உள்ளத்தால் எதிலும் பற்றற்று உண்மையெனப்பட்டதை மறைக்காமல் அப்படியே பேசிவிடுவதால் தேவர் பேச்சு தெய்வப்பேச்சின் ஸ்தானத்தைப் பெற்று விடுகிறது.

**இராஜாஜி பற்றி தேவர்**

இன்று தேசீயம் அழுக்குப்படுத்தப்பட்டு விட்டது. தெய்வீகம் சீரழிக்கப்பட்டு வருகிறது. தேசீயத்தையும், தெய்வீகத்தையும் காக்க தம்மையே அர்ப்பணித்துக்கொண்ட (ஆச்சாரியாரின்) செயல் இந்த நாடு உள்ளவரை போற்றப்பட வேண்டிய பெருங்காரியமாகும். அவர் மிகப்பெரிய அறிஞரும், தியாகியும், நிர்த்தாச்சண்யரும் ஆவார்.

**மகா அறிஞர் தேவர்**

தேவரின் தியாகத்திற்கும், தேசத்திற்காக, அர்ப்பணித்து செயலாற்றிய வீர தீர செயல்களுக்கும், அவரது அருளாற்றலால் கிடைத்த மெய்ஞானத்திற்கும் இந்த தெய்வத் திருநாட்டின் மக்கள் புகழாரங்கள் சூட்டி மகிழ்ந்தனர். அவரவர் கோணத்தில், அவரவர் பார்வையில் தேவரின் தரிசனத்தைக் கண்டறிந்தனர். விளக்கமளித்தனர். அவருள் இருந்த முழு சக்தி வெளிப்பாட்டினை முழுமையாக உணர்ந்து வெளிப்படுத்திய பெருமை மூதறிஞர் இராஜாஜியைச் சாரும்.

தேவரும் இராஜாஜியும் ஈடு இணையற்ற தேசபக்தர்கள். அருள் சுரக்கும் ஞானிகள். விடுதலை வேள்வியில் கலந்து கொண்டவர்கள். பாரத தேசம் அடிமை இருள் நீங்கும் காலம் கனிந்து வரும்போது தோன்றிய தூண்டா மணிவிளக்குகள். தூய்மையின் சின்னமாக அரசியல் வாழ்வில் ஜொலித்தவர்கள். இந்திய தேசத்தின் பண்பாட்டினை, நாகரிகத்தினை, காத்து வளர்த்து உலகிற்கு வழங்க வேண்டும் என்பதில் இருவருக்குமே ஆர்வம் இருந்தது.

மூதறிஞர் இராஜாஜி வியாசர் விருந்து, சக்கரவர்த்தி திருமகள், உபநிசத பலகனி, கண்ணன் காட்டிய வழி போன்ற சிறப்பு மிக்க நூல்களை தமிழன்னைக்கு சூட்டி மகிழ்ந்தார். முத்தமிழின் சங்கமாக நடமாடிய தேவர் அவர்களோ ''சக்தியின் சக்தி'' ''மண்ணும் பொண்ணும்'' தமிழ் மறை குறளின் நெறி, அருள்மறை தந்த வள்ளலார், போன்ற அழியாச் சொல்லோவியங்களை தமிழன்னைக்கு காணிக்கையாக்கினார். ஒவ்வொரு சொற்பொழிவும் தனித்தனி நூலாகும் தன்மை பெற்றது. அதற்கு பல பக்கங்களில் விளக்கம் எழுதலாம் என்ற கருத்தாழம் மிக்கது. அவர் சொல்லில் மெய்ஞ்ஞானமும், விஞ்ஞானமும் நர்த்தனமாடின. சித்தாந்தமும், வேதாந்தமும் சமரசம் பெற்று விளக்கம் பெற்றன. புத்தமத கோட்பாடும், தத்துவமும், செழித்து திளைத்தன. இந்த சொல்லே உரைகல். இதற்குமேல் ஏது உரைகல் ? என்று கூறுமளவிற்கு ஆழமாகவும், நுண்மையாகவும், எளிமையாகவும், பாமரரும் சுவைக்கும் வகையில் சமைக்கப்பட்ட பேச்சாளரும் இனி ஒருமுறை இந்த தமிழகம் கேட்குமா என்று சிந்திக்கத் தோன்றுகின்றது.

#### தேசீயப்பணியில் இருவர்

இருபெரும் மேதைகளை தேசீயப்பணியில் ஈடுபடுத்த காங்கிரஸ் கட்சி மாபெரும் தவம்தான் செய்திருந்தது அன்று. அஞ்சா நெஞ்சுரமும், தேசபக்தியும் கொண்ட தேவர் கட்சிப்பணியோடு மக்கள் வாழ்விற்காகப் போராடும் போராட்டங்களில் பங்கேற்றதோடு தேர்தல் பணியிலும் அரும்பெரும் பங்காற்றினார். 1936 மாவட்ட ஜில்லாத் தேர்தலிலும் 1937 சட்டசபைத் தேர்தலிலும் இருபெரும் தலைவர்கள் காங்கிரஸின் மகத்தான வெற்றிக்கு அரும்பாடுபட்டனர். இருவரும் ஊர் ஊராக, மாவட்டம் மாவட்டமாக சேர்ந்தே சுற்றுப்பயணம் செய்தனர். அன்று இராமநாதபுரம் மாவட்ட சாலைகள் கரடு முரடாக இருந்தன. பேருந்து பயணமும், மகிழுந்து பயணமும் தடைபெறாது நடைபெறாது. கரடு முரடான பாதையில், கரடு முரடான ஆட்சியை அகற்றிட இருவரும் எந்தத் துன்பத்தையும் ஏற்றுக்கொண்டு பயணம் செய்தனர். தேவர் மாட்டு வண்டியை ஓட்டுவார். வண்டியின் உள்ளே இராஜாஜி இருப்பார். தேசீய வண்டி சிறிய கிராமங்களில் புழுதிப் பாதையில் புரட்சிப் பயணத்தை மேற்கொண்டது. இந்த நிகழ்ச்சியை பார்த்தனும், பார்த்தசாரதியும் போல் தேவரும் இராஜாஜியும் செயல்பட்டனர் என்று மக்கள் போற்றினர். அந்த நாள் நினைவினை "அந்த சம்பவங்களை நினைத்தால் ஆர்வமும், ஆனந்தமும் பொங்கும். அதிசய கனவு காண்பது மாதிரி எனக்கு இருக்கிறது" என்று தேவர் இதய நாதம் என்ற புத்தக வெளியீட்டு விழா உரையில் இராஜாஜியை நினைத்து, நினைத்து மகிழ்கின்றார்.

#### பிரிவும் பரிவும்

தேர்தல் முடிவால் ஆட்சியின் அரியாசனத்தில் அமர்ந்து மாகாண பிரதம தந்திரி பதவியை அலங்கரித்தார் இராஜாஜி அவர்கள். தேவரோ மக்கள் பணியாகிய மகேசன் பணியாற்றிடும் பணி மேற்கொண்டார். சட்டத்தைக் காப்பது இராஜாஜியின் பொறுப்பு. மக்கள் உரிமைக்காக சட்டத்தை எதிர்ப்பது தேவரின் கடமை. பொறுப்பும், எதிர்ப்பும் எதிர்முகமாயின. தொழிலாளர் போராட்டத்தில் குதித்தார் தேவர். இராஜாஜி ஆட்சியில் தேவர் கைது செய்யப்படும் சூழ்நிலையும் ஏற்பட்டது. குற்றப்பரம்பரை சட்டத்தை நீக்க உறுதி கொடுத்த காங்கிரஸ் சட்டத்தை நீக்கிடவில்லை. மாகாண பிரதமர் இராஜாஜி வாழாவிருந்தார். கொடிய சட்டத்தை நீக்குவதே தன் வாழ்வாகக் கொண்ட தேவரும், ஏதும் செய்ய முடியாத சட்டத்தின் பிடியில் சிக்கித் தவித்த இராஜாஜியும், காலத்தின் கோலத்தால் எதிர்முகமாயிருந்தனர். எந்த சூழ்நிலையிலும் தேவரின் சக்தியை இராஜாஜி அவர்கள் குறைத்து மதிப்பீடு செய்யவில்லை. ஆலய பிரவேச சட்டத்தை அமுல்படுத்த தேவரால் முடியும் என்ற அவரது கணிப்பு இதற்கு ஒரு சான்றாகும்.

#### காலம் மாறியது

காங்கிரஸ் அமைச்சரவை ராஜினாமா செய்தது. இராஜாஜி வேலூர் சிறையில் தேவர் அவர்களைச் சந்தித்தார். தேவர்வாள் சவுக்கியமா ? என்றார் ராஜாஜி. நீங்களுமா இங்கு! என்று இயன்றார் தேவர். புன்முறுவல்பூத்தார் இராஜாஜி. அன்பில், ஆனந்தத்தில் திளைத்தனர் இருபெரும் தலைவர்கள். வெளியில் எவ்வாறு வேறுபட்டாலும், சிறையில் தேசபக்தர்கள் ஒரு கும்பத்து மக்கள் போல் உணர்ச்சிவசப்பட்டு, உறவுக்கு பாலம் அமைத்து தேசீய உணர்வில் ஒன்றிக் கலக்கும் காட்சிதான் வேலூர் சிறையின் காட்சி,

**1942**–ல் ஆகஸ்ட் புரட்சி, **1945**–ல் தமிழக வரலாற்றின் திருப்புமுனையாக அமைந்த திருப்பரங்குன்றத்தில் நடந்த காங்கிரஸ் ஊழியர் மாநாடு.

அந்த மாநாட்டில் தேவர்தான் தமிழகத்தின் தலைவிதியை முடிவு செய்யும் தனிப்பெறும் தலைவர். வான்மழை பொழிந்தாலும், கோடை இடி இடித்தாலும் உலகே திரண்டு நின்று எதிர்த்தாலும் சொந்தங்கள் வெறுத்தாலும்,

கொள்கையில் வளையாது நிமிர்ந்து நிற்கும் தேவர் அவர்கள் ஒரு முடிவு எடுத்தார். அது சரித்திரத்தில் முக்கிய பதிவாகி விட்டது.

**ஈடில்லா தலைவர்கள் இணைந்த காட்சி**

1932 முதல் 1952 வரை இருபெரும் தலைவர்கள் ஒன்றுபட்டு உழைக்கும் காலம் வரவில்லை. காங்கிரஸ் சீர்திருத்தக் கட்சியின் தோற்றம், ஜனநாயக காங்கிரசின் வளர்ச்சி, சுதந்திரா கட்சியில் ஜனநாயகக் காங்கிரசின் சங்கமம், தேவர் கைது ? விடுதலை, 1962 தேர்தல் என்று பிரிந்து நின்ற தலைவர்கள் இணைந்து நின்று சத்தியக்கொடி ஏந்தி பவனிவந்த காட்சியினைக் கண்டு தமிழ் மகள் பூரித்தாள். அன்னை அங்கயர்கண்ணி ஆசீர்வதித்தாள். மக்கள் போற்றி வணங்கி புளகாங்கிதம் அடைந்தனர். இணைந்த தலைவர்கள் மனம் திறந்து பேசினார்கள். இராஜாஜி அவர்கள் எங்களுக்குள் கொஞ்சம் பேதம் தலைப்பட்டது. ஆனால் குரோத உணர்ச்சி இருவரிடமுமே இல்லை. என்னால் அவர் கொஞ்ச நாள் சிறைவாசமும் அனுபவிக்க நேர்ந்தது. ஆனால் அது பகையால் அல்ல. அன்றைய அரசாங்க சூழ்நிலை அப்படி செய்ய வைத்தது. இதனால் அவர் என்னை பைத்திய செயல் என்று கருதி இருக்கலாம். ஆனால் எனக்கோ, அவருக்கோ அந்தரங்கத்தில் துவேசம் இல்லை என்று கூறினார்.

**தேவர் நோய் தீர்க்க இராஜாஜியின் ஆர்வம்**

*ஊருக்கு உழைத்த மேனி சிறையில் வாடிய* சித்திரைத் திருவுருவம், கட்டுடலாய் காலதேவன் கட்டிவைத்த வைரத்திருமேனி, நோயுற்று வருந்தியதைக் கண்டும், கேட்டும் வருந்தாத தலைவர்கள் இல்லை. அழாத மக்கள் இல்லை. பிரார்த்தனைகள் கோவில்கள் தோறும் நடத்தாத பக்தர்கள் இல்லை. இறைவா எங்கள் தலைவரின் உயிரை, ஆன்மீகத் திருவிளக்கை ஏற்றி வைத்து போற்றிவிடு என்று ஏங்காத ஆன்மீக ஞானிகள் இல்லை. அதேபோன்று இராஜாஜியின் பூப்போன்ற பொன்மனமும் இளகி, உருகித்தவித்தது.

1962–ஆம் ஆண்டு தேர்தல் வருவதற்கு ஆறு மாதங்களுக்கு முன்பே இராஜாஜி அவர்கள் தேவர் உடல் நலம் குறித்து வருந்தி அவருக்கு சிகிச்சை அளித்து குணமடையச் செய்ய பெரிதும் முயன்றார். தேவரை சுவிட்சர்லாந்து அல்லது அமெரிக்காவுக்கு அனுப்பி சிகிச்சை அளிக்கவும், அதற்கு உண்டான செலவுகள் அனைத்தையும் தானே ஏற்றுக்கொள்வதாகக்கூட இராஜாஜி அவர்கள் சொல்லிப்பார்த்தார்கள். ஆயினும் தேவர் அவர்கள் நடக்கின்ற சிகிச்சை தொடரட்டும். ஆண்டவனின் விருப்பத்திற்கு தடை போட்டுவிட முடியாது. எவ்வளவு காலம் தேசத்திற்கும், மக்களுக்கும் தான் சேவை செய்ய ஆண்டவன் விரும்புகின்றானோ அவ்வளவு காலம் எனக்கு சேவை செய்ய ஆண்டவன் அனுமதிப்பான். ஆண்டவன் விருப்பத்திற்கு மாறாக எதுவும் நடைபெற முடியாது என்று கூறி வெளிநாட்டு சிகிச்சை ஏற்பாட்டை மறுத்துவிட்டார்.

**தமுக்கம் மைதானத்தில் தேவரும் இராஜாஜியும்**

சித்திரைத்திருவிழா காட்சிபோல் மக்கள் வெள்ளம் திரண்டு ஆரவாரிக்க லட்சோபலட்சங்கள் கூடித்திரண்டு தமுக்கம் திடலில் இருபெரும் தலைவர்களின் காட்சியைக் கண்டு களித்தனர். மக்கள் எதிர்பார்த்த தேவரும், இராஜாஜியும் சேர்ந்து உரையாற்றிய மாபெரும் பொதுக்கூட்டம், 14.01.1962 ஆம் நாள் தமுக்கம் மைதானத்தில் நடைபெற்றது. இதுதான் தேவர் என்னும் தெய்வத்தின் கடைசி முழக்கமாக அமைந்தது. தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செய்துதேனருவி பாயும் தேவரின் இதயநாதப் பெருக்கு முடிவுக்கு வருவதை உணர்ந்த தமிழ்த்தாயின் முகம் வாடி நொந்தக் காட்சி அது. அந்த தமிழருவி நீர்வற்றி காய்ந்த பின்னர் திலகர் திடலில் இராஜாஜி அவர்கள் இரங்கல் உரையாற்றி மனம் நொந்தார். என்ன செய்வது, காலதேவன் மக்களிடமிருந்து தேவரைப் பிரித்தெடுத்து வானோர்க்கு உயர்ந்த உலகிற்கு அழைத்துச் சென்று விட்டான்.

1957 முதல் 1963 வரை தேவரும், தேவர் திருத்தொண்டர்களும் பட்ட வேதனைகள்

கொஞ்சமல்ல, ஒரு கோடி என்றால் அது மிகையாகுமோ. சோதனைக் காலத்தில் உடனிருந்த பொதுவுடமைக்கட்சித் தலைவர்களையும் குறிப்பாக கே.டி.கே.தங்கமணி அவர்களையும், வாதத்திறமை மிக்க திரு.கல்யாணசுந்தரத்தையும் எப்படி மறக்க முடியாதோ அப்படியே மூதறிஞர் இராஜாஜி உடனிருந்து உதவியதை, உண்மை திறத்தினை ஊரறிய செய்ததையும், சதி வலை பின்னல்களை சுக்கு நூறாக்கிய சக்தியையும், புண்பட்ட மனத்திற்கு மருந்தாய் இருந்ததையும், புயல்காற்று வீசும்போது தென்றலாய் வீசியதையும் மறக்க முடியாது. நெஞ்சை விட்டு அகலாது.

தேவரும் இராஜாஜியும் தெய்வங்களாய் வீற்றிருந்து இந்தியாவைக் காக்கட்டும். அருள்மழை பொழியட்டும்.



**இனத்தோடு ஒத்து வாழாதவன் வாழ்க்கை பிணம் தின்னும் காக்கைக்கு ஒப்பாகும்.**



பர்மாவில் இரண்டாவது பயணத்தின் போது தேவர்



தேவர் திருமகனாருக்கு பர்மா தமிழர்கள் மிங்களாடோன் விமான நிலையத்தில் வரவேற்பு.

# வடலூர் வள்ளலாரும் பசும்பொன் தேவரும்

**கே. ஜீவபாரதி**
1, கிழக்கு சர்க்குலர் சாலை,
சாந்தோம், சென்னை – 600 028.

**1823** அக்டோபர் 5 அன்று தென்னாற்காடு மாவட்டம் மருதூர் கிராமத்தில் ராமைய்யா பிள்ளை – சின்னம்மை தம்பதிக்கு ஓர் குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தைக்கு ''இராமலிங்கம்'' என்று பெற்றோர் பெயரிட்டனர்.

மருதூர் இராமலிங்கம் மறைந்து 34 ஆண்டுகள் முடிந்து, 1908 அக்டோபர் 30 அன்று இராமநாதபுரம் மாவட்டம் பசும்பொன் கிராமத்தில் உக்கிரபாண்டியத் தேவர் – இந்திராணி தம்பதிக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தைக்கு பெற்றோர் ''முத்துராமலிங்கம்'' என்று பெயரிட்டு மகிழ்ந்தனர்.

மருதூரில் இராமலிங்கம் தனக்கென தனிவழி கண்டு, அதன்வழி நடந்து, அளப்பரிய சாதனைகளை நிகழ்ச்சி ''வள்ளலார்'' என்று பெயர் பெற்று, 51ம் வயதில் மறைந்தார். பசும்பொன் முத்துராமலிங்கம் புது வழி கண்டு, அதன்படி துணிந்து நடந்து, வியத்தகு சாதனைகளைப் புரிந்து ''பசும்பொன் தேவர்'' என்று புகழப்பட்டு 55 ஆம் வயதில் மறைந்தார்.

மருதூரில் பிறந்தவர் இராமலிங்கம் ; பசும்பொன்னில் பிறந்தவர் முத்துராமலிங்கம். இருவருடைய பெயரிலும் ''ராமலிங்கம்'' இடம் பெற்றதும், இருவரும் அக்டோபர் மாதத்தில் பிறந்ததும், ஏழு மாதக் குழந்தையாக இருந்த போது மருதூர் இராமலிங்கம் தந்தையை இழந்ததும், ஆறு மாதக் குழந்தையாக வாழ்ந்த போது பசும்பொன் முத்துராமலிங்கம் தாயை இழந்ததும் இருவர் வாழ்விலும் அமைந்த எதிர்பாரா ஒற்றுமையாகும்.

அதே போன்று இருவர் வாழ்விலும் பல்வேறு நிகழ்வுகள் ஒத்திருப்பது அவர்களின் சிறப்பாகும். அவற்றில் ஒரு சிலவற்றை மட்டும் இங்கே ஒப்பு நோக்குவோம்.

**வாதத்தில் புதுமை**

சென்னை ஏழு கிணறு பகுதியில் மருதூர் இராமலிங்கம் குடும்பம் வாழ்ந்தது. அப்போது ஏழு கிணறு பகுதியிலிருந்து திருவெற்றியூருக்கு நடந்தே சென்று, அங்குள்ள தெய்வத்தை வணங்கி வருவது மருதூர் இராமலிங்கத்தின் வழக்கம். திருவொற்றியூர் கோயில் இருக்கும் வீதியில், ஒரு திண்ணையில் இருந்தபடி, ஒரு நிர்வாணச் சாமியார் வழியில் செல்வோரைக் கண்டு, ''அதோ நாய் போகிறது'', ''இதோ கழுதை போகிறது'', ''அதோ பன்றி செல்கிறது'' என்று சொல்வார்.

ஒரு முறை அதே வழியில் சென்ற மருதூர் இராமலிங்கத்தைக் கண்ட அந்த நிர்வாணச் சாமியார், ''இதோ ! மனிதன் வருகிறார் ! '' என்றார். அந்த நிர்வாணச் சாமியார் அருகில் சென்ற மருதூர் இராமலிங்கம்

''அய்யா ! தங்களுடைய தீர்க்கதரிசனத்தால் வருகின்ற மனிதன் மனிதனாக உருவமைப்பு கொண்டிருப்பினும், செயலால், குணத்தால், அவன் மிருகமாக இருப்பதை இனம் கண்டு அவர்களை நாயென்றும், கழுதையென்றும், பன்றியென்றும் அழைக்கிறீர்கள். அதே நேரத்தில் என்னை உணர்ந்து ''மனிதன் வருகிறார் !'' என்று செப்புகின்றீர்கள். இத்தகைய மேன்மைக் குணம் கொண்ட தாங்கள், மாதர்கள் நடமாடும் வீதியில் நிர்வாணமாக இருப்பது அழகல்ல ; அறிவான செயலுமல்ல !'' என்றார். அந்த நிமிடத்திலிருந்து நிர்வாணச் சாமியார் அந்த இடத்தை விட்டு அகன்றார். அதன்பின் திருவெற்றியூர் பகுதியில் அந்த நிர்வாணச் சாமியார் தென்படவே இல்லை.

மதுரை பசுமலை அமெரிக்க மிஷன் உயர் நிலைப் பள்ளியில் பசும்பொன் முத்துராமலிங்கம்

படித்துக் கொண்டிருந்த போது, ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் திருப்பரங்குன்றத்திற்கு நடந்து சென்று முருகனை வணங்குவது வழக்கம். அது போன்ற ஒரு சமயத்தில் திருப்பரங்குன்றத்தை நோக்கி சிறுவன் பசும்பொன் முத்துராமலிங்கம் நடந்து கொண்டிருந்தார்.

சிறிது தூரத்தில் சாலையின் ஓரத்தில் மக்கள் திரண்டிருப்பதைக் கண்டார். அருகில் சென்று பார்த்தார். அங்கே பிரசங்கி ஒருவர், ''ஏ பாவிகளே ! இதோ ! நான் நின்று கொண்டிருப்பதும் கல்தான் . . . அதோ வீதியில் குவிந்து கிடப்பதும் கல்தான் . . . உங்கள் கோயில் களில் இருக்கும் சிலையும் கல்தான் . . . அப்படியிருக்க ஏன் கல்லைத் தெய்வமென்று நினைத்து கண்மூடித்தனமாக வணங்குகிறீர்கள் ?'' என்று பிரச்சாரம் செய்து கொண்டிருந்தார். கூடியிருந்த அனைவரும் அதைக் கேட்டுக் கொண்டிருந்தனர். ஆனால் பசும்பொன் முத்துராமலிங்கம்,

''அய்யா ! உங்கள் தாய் இருக்கிறாரா ?'' என்றார். ''இருக்கிறார்'' என்றார் பிரசங்கி.

''அய்யா ! உங்களுக்குத் திருமணம் ஆகி விட்டதா ? '' என்றார் பசும்பொன் முத்துராமலிங்கம், ''ஆகி விட்டதே !'' என்றார் பிரசங்கி.

''அய்யா ! உங்களுக்கு உடன் பிறந்த சகோதரிகள் உண்டா ?'' என்றார் பசும்பொன் முத்துராமலிங்கம். ''ஒரு தங்கை உண்டு. இதற்கும் என் உரைக்கும் என்ன சம்பந்தம் ?'' என்று பிரசங்கி சலிப்புடன் கேட்டார்.

''சம்பந்தம் இருக்கிறது. உங்கள் தாயும் பெண் தான் ; உங்கள் தாரமும் பெண் தான் ; உங்கள் தங்கையும் பெண் தான். மூவரும் பெண்கள் என்பதால் இந்த மூவரிடமும் ஒன்று போல் நீங்கள்நடந்து கொள்ள இயலுமா ? '' என்றார் பசும்பொன் முத்துராமலிங்கம்.

கூடியிருந்த கூட்டம் பசும்பொன் முத்துராமலிங்கத்தை வியப்புடன் பார்த்தது. பிரசங்கி அதிர்ச்சியுடன் அந்தச் சிறுவனைப் பார்த்தார். மீண்டும்,

''அய்யா ! தாயிடம் நடந்து கொள்வது போன்று தாரத்திடம் நடந்து கொள்ள இயலாது. தாரத்திடம் நடந்து கொள்வது போன்று தங்கையிடம் நடந்து கொள்ள முடியாது. தாய், தாரம், தங்கை மூவரும் பெண்ணாக இருப்பினும் அவர்களுடன் ஓர் ஆண் பழகுவதில் வித்தியாசம் உண்டு ! அது போன்றது தான் நீங்கள் சொல்லிய கல் உதாரணமும், நீங்கள் நிற்பதும் கல்தான் . . . வீதியில் குவிந்து கிடப்பதும் கல்தான் . . . கோயிலில் இருக்கும் விக்ரகமும் கல்தான் . . . ஆனால் அவைகள் இருக்கும் இடங்களைப் பொறுத்து அர்த்தங்களும், அனுஷ்டிக்கும் முறைகளும் வேறுபடும்'' என்றார் பசும்பொன் முத்துராமலிங்கம். திரண்டிருந்த கூட்டம் கைகொட்டி சிரித்தது. பிரசங்கி தலைகவிழ்ந்தபடி அந்த இடத்தை விட்டு அகன்றார்.

**முதல் முழக்கம்**

தனவந்தர் சோமு செட்டியார் வீட்டில் பெரிய புராணம் பற்றி தொடர் சொற்பொழிவு நடத்தி வந்தார் மருதூர் இராமலிங்கத்தின் அண்ணன் சபாபதி. அப்போதெல்லாம் தம்பி இராமலிங்கத்தையும் உடன் அழைத்துச் செல்வார். ஒரு முறை அண்ணன் உடல் நிலை பாதிக்கப்பட்டதால், சோமு செட்டியார் வீட்டிற்கு பெரிய புராணத்தில் இருந்து இரண்டொரு பாடலை பாடிவரும்படி இராமலிங்கத்தை அண்ணன் சபாபதி அனுப்பி வைத்தார்.

சோமு செட்டியார் வீட்டிற்குச் சென்ற சிறுவன் இராமலிங்கம், எவரும் எதிர்பாரா வகையில் இரண்டு மணி நேரம் பெரிய புராணத்தில் புதைந்துள்ள கருத்துக்களை முழங்கினார். அனைவரும் அந்த உரை கேட்டு வியந்தனர். இதுதான் இராமலிங்கத்தின் முதல்

மேடை முழக்கம். ஆம் ! அண்ணனுக்கு உடல் நிலை பாதிக்கப்பட்டதால் தம்பி இராமலிங்கத்திற்கு இந்த வாய்ப்பு வாய்த்தது !

முதுகுளத்தூர் அருகில் உள்ள சாயல்குடி என்ற கிராமத்தில், சேதுராமன் செட்டியார் சுவாமி விவேகானந்தர் பெயரில் ஓர் வாசகசாலை நடத்திக் கொண்டிருந்தார். இந்த வாசகசாலை ஆண்டு விழாவில் விவேகானந்தர் படத்தைத் திறந்து வைத்துப் பேச மதுரை கிருஷ்ணசுவாமி பாரதியை அழைத்து இருந்தார். 1933 ஜுன் 23 அன்று விழா . . . விழாவிற்கு கிருஷ்ணசுவாமி பாரதியால் வர இயலவில்லை. எவரைக் கொண்டு விவேகானந்தர் படத்தை திறக்கச் செய்யலாம் என்று சேதுராமன் செட்டியார் யோசித்தார். அப்போது சாயல்குடிக்கு அருகில் உள்ள எஸ். இலந்தைக்குளம் என்ற கிராமத்திற்கு ஒரு பஞ்சாயத்து நிமித்தமாக பசும்பொன் முத்துராமலிங்கம் வந்திருப்பதை சேதுராமன் செட்டியார் அறிந்தார்.

அங்கு சென்று, தனக்கு ஏற்பட்ட இக்கட்டான சூழலை விளக்கி, சாயல்குடிக்கு பசும்பொன் முத்துராமலிங்கத்தை சேதுராமன் செட்டியார் அழைத்து வந்தார். அதற்கு முன் எந்த மேடையிலும் பேசியிராத பசும்பொன் முத்துராமலிங்கம், விவேகானந்தரின் ஆன்மிக, அரசியல், தத்துவக் கோட்பாடுகள் பற்றி விளக்கி மூன்று மணி நேரம் முழங்கினார். இந்த முழக்கம் அனைவரையும் வியக்க வைத்தது. ஆம் ! கிருஷ்ணசுவாமி பாரதி வர முடியாமல் போனதால் தான் பசும்பொன் தேவரின் முழக்கத்தை தரிசிக்க முடிந்தது.

**தாய்மொழிப் பற்று**

ஒரு முறை சங்கராச்சாரியாரை சந்தித்து வள்ளலார் உரையாடிய போது ஆச்சாரியார், ''இந்திய மொழிகளுக்கு எல்லாம் சமஸ்கிருதமே தாய் மொழி'' என்று கூற, அதற்கு ''சமஸ்கிருதம் தாய் மொழி என்றால், இந்திய மொழிகளுக்கெல்லாம் தமிழ் தந்தை மொழியாகும். 'தமிழ்' என்பது த–அ–ம்–இ–ழ் என்னும் ஐந்து அழகு நிலை உடையது'' என்று வாதிட்டு தமிழின் சிறப்பை வள்ளலார் நிலை நாட்டினார்.

'திருக்குறள்' பற்றி சௌராஸ்ட்ரா பள்ளி மேடையில் பேசுகின்ற வாய்ப்பு பசும்பொன் தேவருக்கு வாய்த்த போது, ''ஆதியிலிருந்து பிறந்த ஒலியை வடிவமாக்கி எழுத்து ரூபம் கொடுக்கப்பட்டது. எழுத்துக்கள் உருவ எழுத்து, கோட்டெழுத்து, கோலெழுத்து, சதுர எழுத்து என நான்கு வகைப்படும். உருவக எழுத்தாக தமிழ் இருந்த காலத்திலேயே சீனம் முதலிய பாஷைகள் பிரிந்தன. கோட்டெழுத்தாக இருந்த காலத்திலே சமஸ்கிருதமும் மற்றமுள்ள பாஷைகளும் பிரிந்தன. வட்ட எழுத்தாயிருந்த காலத்தில் தெலுங்கு, கன்னடம், மலையாளம் போன்ற பாஷைகள் பிரிந்தன. இற்றைத் தமிழெழுத்து சதுர எழுத்தாயிருக்கிறது. இந்த எல்லா வகையான மாறுதல்களையும் பெற்ற ஆதி மொழி தமிழாகும்.''

**வடலூர் வழியில் பசும்பொன்**

இந்திய மண்ணில் எத்தனையோ சாமியார்கள், மத போதகர்கள், யோகிகள் தோன்றியிருக்கின்றனர். இதுவரை தோன்றிய அனைவரிலும் நடையிலும், உடையிலும், சிந்தனையிலும் மாறுபட்டவர் வடலூர் வள்ளலார்.

வெள்ளை ஆடை அதுவும் ஒரே துணியால காலிலிருந்து தொடங்கி, மேனி முழுவதும் மறைத்து, தலையையும் மூடி, மீசை, தலைமுடியை நீக்கி ஓர் புதுப் பொலிவுடன் வாழ்ந்தவர் வள்ளலார்.

உறவினர்களின் வற்புறுத்தலால் சகோதரி மகளை வள்ளலார் திருமணம் செய்து கொண்ட போதும் இல்லறத்தில் ஈடுபடாமல், துறவறத்தை தொடர்ந்து மேற்கொண்டார்.

வசதியான குடும்பத்தில் பிறந்த பசும்பொன் தேவர் குடும்ப வழக்கு சம்பந்தமாக சென்னை சென்று சீனிவாச அய்யங்காரைச் சந்தித்தார்.

இந்தச் சந்திப்பு தான் பசும்பொன் தேவரை தேசப்பற்றாளராக திசை மாற்றியது. அப்போது சென்னையில் நடந்த காங்கிரஸ் மாநாட்டில் கலந்து கொண்ட பசும்பொன் தேவர், நேதாஜியை சந்திக்கும் வாய்ப்பைப் பெற்றார். சென்னை செல்லும் போது சைனா துணியில் சட்டையும், விலை உயர்ந்த வாயில் வேட்டியும் கட்டிச் சென்ற பசும்பொன் தேவர், பசும்பொன்னுக்குத் திரும்பும் போது கதர்வேட்டி கதர் சட்டையில் திரும்பினார்.

வள்ளலார் மீது பற்றுக் கொண்டபின் பசும்பொன் தேவரின் உள், புற வாழ்க்கையிலும் மாற்றம் ஏற்பட்டது. உறவுப் பெண்களைத் திருமணம் செய்ய உறவுகள் வலியுறுத்திய போதும் உடன் படாத பசும்பொன் தேவர், இறுதி வரையிலும் துறவறத்தை மேற்கொண்டு தூய வாழ்க்கையை நடத்தினார். மீசையை எடுத்ததும், மாமிச உணவை தவிர்த்ததும் வள்ளலார் வழியில் பசும்பொன் தேவர் கவனம் பதித்த பின்பு தான்.

மொத்தத்தில் வள்ளலாரின் தாக்கம் பசும்பொன் தேவரை நடையிலும், உடையிலும் தோற்றத்திலும், உணவுப் பழக்கத்திலும் ஓர் புதிய அணுகுமுறையை கைக்கொள்ள வைத்தது.

வடலூரில் முன்னாள் முதல்வர் ஓமந்தூர் ஓ.பி. இராமசாமி ரெட்டியார் தலைமையில் வள்ளலார் பற்றி பசும்பொன் தேவர் பேசச் சென்றார். அப்போது வள்ளலாரின் உறவினர் ஒருவர் வள்ளலாரின் ஒன்பது பாடல்களை வைத்துக் கொண்டு தர மறுப்பது பற்றி பசும்பொன் தேவரிடம் ஓமந்தூரார் முறையிட்டார். ஒரு மணி நேரம் வள்ளலாரின் ஆளுமைப்பற்றி விரிவாகப் பேசிய பசும்பொன் தேவர், இறுதியாக,

''அடிகளாரின் உறவினருக்கு இந்தக் கூட்டத்தின் வாயிலாக சொல்கிறேன். அந்தச் சுவடியை மடத்துக்குத் தந்து மக்களுக்குப் பயன்படும்படி செய்யுங்கள். அல்லது தாங்களே அச்சுவடியை நூலாக வெளியிடுங்கள். இரண்டையும் செய்யாமல் தாங்கள் பிடிவாதமாக இருப்பதால், அடிகளாரின் அந்த ஒன்பது பாடல்களும் உலகத்துக்குத் தெரியாமலேயே போய் விடும் என்று நீங்கள் நினைக்க வேண்டும். இதுவரை உலகத்திற்குத் தெரியாமல் நீங்கள் ஒளித்து வைத்திருக்கும் அந்த ஒன்பது பாடல்களையும் அடியேன் பாடுகிறேன் . . . கேளுங்கள்'' என்று கூறிவிட்டு அந்த ஒன்பது பாடல்களையும் பசும்பொன் தேவர் பாட, அந்தப் பாடல்களை ஒளித்து வைத்திருந்த வள்ளலாரின் உறவினர் மேடைக்கு வந்து, பசும்பொன் தேவர் பாதங்களைத் தொட்டு வணங்கி, அந்த ஒன்பது பாடல்கள் கொண்ட ஏட்டுச் சுவடியை கொடுத்துச் சென்ற அதிசயம் நடந்தது.

ஆம் ! வள்ளலாரைப் போன்று தம்முடைய வாழ்க்கை முறையை அமைத்துக் கொண்ட பசும்பொன் தேவர், வள்ளலாரின் பாடல்களுக்கு விடுதலையும் வாங்கிக் கொடுத்தார் என்பது வரலாறு.

**நீதிமன்றத்தில் . . .**

வள்ளலாரின் புகழை சகித்துக் கொள்ள இயலாத சிலர் வள்ளலாரின் 'அருட்பாவை' விமர்சிக்கத் தொடங்கினர். அதை எதிர்த்து வள்ளலாரின் பற்றாளர்கள் எதிர்வாதம் தொடுத்தனர். வாதம் உச்சத்துக்குச் சென்று வழக்கு தொடுக்கும் நிலையைத் தொட்டது. இலங்கையைச் சார்ந்த ஆறுமுக நாவலர் என்ற தமிழறிஞர் கடலூர் மஞ்சக்குப்பம் நீதிமன்றத்தில் வள்ளலார் மீது வழக்குத் தொடுத்தார்.

விசாரணை அன்று நீதிமன்றத்திற்குள் நுழைந்த வள்ளலாரைக் கண்டு அனைவரும் எழுந்து நின்று வணங்கினர். அதில் வழக்குத் தொடுத்த ஆறுமுக நாவலரும் ஒருவர். இதைக் கவனித்த நீதிபதி,

''பிரதிவாதி பெரியவர் என்று நீர் ஒப்புக் கொள்கிறீர். நீர் எழுந்ததும் அல்லாமல், மற்றவர்களைப் போல் கைகளையும் கூப்பினீர். பின் ஏன் அவர் மீது வழக்குத் தொடுக்கிறீர் ? வழக்கைத் தொடுத்தவர் இப்படி எழுந்திருக்க வேண்டாம். கைகூப்ப வேண்டாம். இது வழக்குத் தொடுப்பவர்களின் செயலாய் இல்லை. உள்ளிருந்து எழுந்த உம் செயல் வாய் சொல்லாத உண்மையைச் சொல்லுகிறது. வீண் விசாரணை

ஏன் ? வழக்கை இத்துடன் தள்ளுபடி செய்கிறோம் ! '' என்று தீர்ப்பு வழங்கினார்.

மதுரையில் இந்திய தேசீய ஜனநாயகக் காங்கிரஸ் மாநாட்டில் பேசிவிட்டு வந்த பசும்பொன் தேவரை, வன்முறையைத் தூண்டும் வகையில் பேசினார் என்று சொல்லி பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் மதுரை வைகை ஆற்றுப்பாலத்தில் வைத்து இரவு பத்து மணிக்கு கைது செய்து, வழக்கு தொடர்ந்தனர்.

புதுக்கோட்டை செசன்ஸ் கோர்ட்டில் நீதிபதி எம். அனந்த நாராயணன் முன்னிலையில் இந்த வழக்கு விசாரணைக்கு வந்தது. பசும்பொன் தேவருக்காக வி. இராஜகோபால் ஆச்சாரியார் ஆஜரானார். அரசு சார்பில் வி.எல். எத்திராஜ் முதலியாரும் எஸ். கிருஷ்ணசாமி ரெட்டியாரும் ஆஜராகினர்.

வழக்கு விசாரணையின் போது பசும்பொன் தேவர் மற்ற கைதிகளைப் போன்றே நிற்க வைக்கப்பட்டார். இதைக் கண்ட அரசு வழக்குரைஞர்கள் எத்திராஜ் முதலியாரும், கிருஷ்ணசாமி ரெட்டியாரும், ''தேவர் தேச பக்தர். நாட்டுக்காக உழைத்தவர். அவர் நின்று கொண்டிருப்பது சரியல்ல ; அவருக்கு நாற்காலி கொடுக்க வேண்டும்'' என்று நீதிபதியிடம் முறையிட்டனர். நாற்காலி பசும்பொன் தேவருக்குப் போடப்பட்டது.

ஆம் ! வள்ளலார் மீது வழக்குத் தொடுத்த ஆறுமுக நாவலரே, வள்ளலாரைக் கண்டதும் வணங்கி நின்றது போல், பசும்பொன் தேவர் மீது வழக்குப் போட்ட தமிழக அரசின் சார்பில் ஆஜரான அரசு வழக்குரைஞர்களே பசும்பொன் தேவருக்கு நாற்காலி வாங்கிக் கொடுத்த அதிசயமும் நடந்தது.

இந்த விசாரணையின் போது பசும்பொன் தேவரின் தோற்றத்தை வர்ணிக்கும் வழக்குரைஞர் கிருஷ்ணசாமி ரெட்டியார், ''எனக்கு தேவர் வள்ளலாராகவே தெரிந்தார்'' என்று குறிப்பிட்டார்.

பொறாமைத் தீயினால் நீதிமன்றத்தில் நிறுத்தப்பட்ட வள்ளலார் அன்றே விடுதலை செய்யப்பட்டார். ஆனால் அரசியல் காழ்ப்புணர்ச்சியால் நீதிமன்றத்தில் நிறுத்தப்பட்ட பசும்பொன் தேவர் மூன்று மாதத்திற்கும் மேல் சிறைவாழ்விற்குப்பின் குற்றவாளி அல்ல என்று விடுதலை செய்யப்பட்டார்.

ஆனால், வள்ளலார் மீதும் பசும்பொன தேவர் மீதும் வழக்குத் தொடுத்தவர்களையும், சூழ்ச்சி வலை பின்னியவர்களையும் வரலாறு புறந்தள்ளவிட்டு, வள்ளலாரும் பசும்பொன் தேவரும் மக்கள் மனத்தில் இன்றும் வாழ்ந்து கொண்டிருப்பதற்கு அவர்களுடைய அப்பழுக்கற்ற வாழ்க்கையே சான்றாகும்.



# தேவரின் ஆன்மீகச் சிந்தனைகள்

பேராசிரியை **செல்வம் கோபால்**
பழனி.

இத்திருநாட்டை உயர்த்தி உன்னதப்படுத்த பிறந்த யோகிகளிலும், ஞானிகளிலும் தேவர் பெருமானும் ஒருவர். தேசீயமும், தெய்வீகமும் தமது இரு கண்களாகப் போற்றியவர் தேவர். தேசீயம் உடலாகவும் தெய்வீகம் ஆன்மாவாகவும் விளக்கம் தந்த தலைவர் அவர். அவரை இந்த தேசம் விடுதலைப் போர் வீரராக, தேசத்தியாகியாக, நல்ல தமிழறிஞராக, புலிக்கொடி ஏந்திய புரட்சிக் கனலாக, வங்கத்தின் தங்கம் நேத்தாஜியின் அரசியல் வாரிசாக, பல்வேறு வகையில் மதிப்பீடு செய்தது. அத்தனை மதிப்பீட்டிற்கும் ஆதரவாக இருந்தது அவரது ஆன்மீக ஞானமும் அனுபூதியும் ஆகும். முக்தி நெறி அறியாத ஜன சமுத்திரத்தின் மத்தியிலும் பக்தி நெறி அறியாத பாமர மக்களின் மத்தியிலும் பிறந்து வளர்ந்து உருவான தேவர் அவர்கள் தீர்க்க தரிசனமிக்க ஆன்மீக ஞானியாக இந்தியா முழுவதும் வலம் வந்தவர். அந்த ஞானம் இவர் எவ்வாறு கைவரப் பெற்றார் என்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**தன்னை அறியும் வாய்ப்பு**

மதுரை உணவு விடுதியில் தன் உருவம் விவேகானந்தர் படத்துடன் ஐக்கியமாவது போலவும், மீனாட்சியம்மன் கோவிலில் முருகனின் திருவுருவச்சிலையோடு தன் உருவம் ஐக்கியமாகிவிடுவது போலவும் தேவர் உணர்ந்த உள் உணர்வுகள், தேவரின் ஆன்மீக வாழ்விற்கு அடித்தளமிட்டன.

தெய்வத் தன்மை பெற்ற மாமனிதர்களுக்கு சில சிறப்பான அனுபவங்கள் வாய்த்து விடுகின்றன. அந்த அனுபவங்களே மறைந்து இயங்கும் தெய்வ சக்தியை உணர்ந்து, தங்களது வாழ்வை குறிக்கோளுடைய வாழ்வாக மாற்றிக் கொள்ளத் தூண்டுகின்றது.

**பக்தியும், பற்றும்**

ஆன்மீக ஞானத்தைப் பெறத் தோன்றிய மகான்களின் வாழ்வில் உலக வாழ்வு நிலையற்றது என்பதை உணர்த்தும் நிகழ்வுகள் நடப்பது இயல்பே. புத்தர் பிரான், பட்டினத்தார், காரைக்கால் அம்மையார் போன்ற பல ஞானியர்கள் வாழ்விலும் இது போன்ற நிகழ்வுகள் நடந்தன. அந்த நிகழ்வுகளே அவர்கள் உயர்நிலை அடைவதற்கு திருப்பு முனையாக அமைந்து விட்டன.

தேவர் குழந்தைப் பருவத்திலே தாயை இழந்தார். பள்ளிப் பருவத்தில் தந்தையாருடன் போராடும் சூழ்நிலை ஏற்பட்டது. தனது மைத்துனர் தங்கவேல் தேவருடனும் உறவினர் துரைச்சிங்கத் தேவருடனும் சென்று தந்தையுடன் மோதும் கட்டாயம் ஏற்பட்டது. வெற்றிவாகை சூடிய இளைஞர் பசும்பொன் திரும்பினார். வீட்டிற்கு வந்த அவர் மனதில் வெறுமை சூழ்கிறது. அந்த சூழல் அவரை ஆழமாக சிந்திக்க வைத்தது. அதனால் பசும்பொன்னார் மௌனக் கடலில் ஆழ்ந்தார். உலகம் தன்மை விட்டு ஒதுங்கும் நிலையில் உன் மத்தம் பிடித்தவர் போல் உட்கார்ந்திருந்தார். அவரது மௌனம், அவரது முகத்தில் பூத்த அமைதி, அவரது கண்ணில் தோன்றிய ஒளி, சூழ இருந்தவரை சும்மாயிருக்க விடவில்லை. தேவர் மகனுக்கு ஏதோ ஆகி விட்டது எனத் துடித்தார்கள். இந்த நிலையை பிரபஞ்ச வெறுப்பு நிலை என்றும் கூறலாம் அல்லது சமாதி நிலை என்றும் கூட குறிப்பிடலாம். இந்த அக அனுபவ நிலையே எது வரினும் தாங்கிக் கொள்ளும் பண்பினையும், பற்றற்று சேவை செய்யும் கர்மயோகக் கலையையும், பின்னாளில் அவருக்கு வழங்கியது.

அவரை அன்புடன் போற்றிப் பாதுகாத்த பாட்டையா திரு. குழந்தைசாமி பிள்ளையவர்கள்

அவரை உற்று நோக்கினார். அடுத்தது காட்டும் பளிங்கு போல் தேவர் திருமகனின் தீவிர முடிவை முகம் தெரிவித்து விட்டது, பேரனின் உள்ளம் பிரபஞ்ச வெறுப்பால் பீடிக்கப்பட்டிருந்ததை பாட்டையா அப்போது கண்டார். அவருக்கு அன்புடன் ஆறுதல் கூறி அவரைத் தொட்டு அவரது உணர்வை மண்ணிற்கு கொண்டு வந்தார். வீர வரலாறுகளையும் காவியங்களையும் படிக்க வைத்து நாட்டுப் பற்றையும் தெய்வீகப் பற்றையும் தூண்டினார். இதன் விளைவாக தேவருக்குள் தேசீயப் பற்றும், தெய்வீக பக்தியும் மட்டுமே ஆழமாகப் பதிந்தது.

**மெய்ப்பொருள் விளக்கம்**

தேவர் பிரான் இளமையிலேயே அனுபூதி பெற்ற நிலையில் இருந்த போதிலும் ஆன்மீக சம்பந்தமான சாஸ்திரங்களையும் – நூல்களையும் கற்றுத் தெளிவு பெறுகிறார். அதன் வாயிலாக மற்றவர்களையும் தெளிவு பெறச் செய்கின்றார். வேதாந்தம், சைவ சித்தாந்தம் போன்ற தத்துவ தரிசனங்களை நன்கு கற்றறிந்துள்ளார். இதிகாசங்கள், புராணங்கள், உபநிடதங்கள், சங்க நூல்கள், திருக்குறள், திருமந்திரம், சிவஞான போதம், சிவஞான சித்தியார், சித்தர்களின் ஞானப் பாடல்கள், குணங்குடி மஸ்தான் பாடல்கள், ரோமர் கண்ட ஏழாயிரம், போகர் பன்னீராயிரம், அகஸ்தியர் நூல்கள் போன்றவைகளிலிருந்து தனது ஆன்மீக சொற்பொழிவுகளில் மேற்கோள் காட்டுகிறார்.

தத்துவ நூல்கள் கூறும் பிரமாணங்கள் – அளவைகள் – மூலமே தனது விளக்கங்களை நிரூபிக்கிறார். காட்சி அளவை (பிரத்தியட்ஷ பிரமாணம்) கருதல் அளவை (அனுமானப் பிரமாணம்) போன்ற அளவைகளைப் பயன்படுத்துகின்றார். இதன் மூலம் அவர் பெற்றிருந்த தத்துவ ஆய்வுகளைக் கண்டறிய முடிகிறது. கற்ற அறிவோடு அவருள் பிரவாகமாகப் பொங்கிய தெய்வப் புலமை – தெய்வீக அறிவால் அறியும் அறிவு – அவருக்கு இருந்ததும் புலப்படுகின்றது. கல்வியாலும், அருளாலும் முற்றறிவு பெற்ற ஞானியாவார். அவருடைய நெடுங்காலக் கண்ணோட்டமும், தீர்க்க தரிசனங்களும், நிலைத்த பொருளை உணரும் தன்மையும், சத்திய வாழ்வில் ஏற்படும் சோதனைகளை அமைதியாக ஏற்றுக் கொள்ளும் பக்குவமும் இதன் அடிப்படையிலேயே அமைந்தன.

**கடவுள் காட்சி**

உரைகாண முடியாத ஒன்றினை, கரைகாண முடியாததின் காட்சியினை, கண்டு களித்திட முடியும் என்பதை எடுத்துக்காட்டுகள் மூலம் வகைப்படுத்தி விளக்கி அனைவரும் புரிந்து கொள்ளும் வண்ணம் செய்கிறார். உலக அறிவுக்கு ஒரு எல்லையுண்டு, எல்லாவற்றையும் பொறி புலன்களைக் கொண்டு அறிந்திட முடியாது. உதாரணமாக ரோஜாவினுடைய நிறம், இதழ், விலை, சொல்லலாம். அதன் வாசனையை முகர்ந்து பார்த்துத் தான் சொல்ல முடியும். எலுமிச்சையின் ருசி புளிப்பு என்பதை சுவைத்துப் பார்த்துத்தான் சொல்ல முடியும். அதுபோல இறை சக்தியை மேலெழுந்த வாரியாகப் பார்க்கவோ, உணரவோ முடியாது. மிக நுணுக்கமாக சிரமப்பட்டு பார்ப்பதற்கு மறைந்து கிடக்கின்ற ஒன்று தான் தெய்வசக்தி. அந்த சக்தியைப் புறக்கண்ணால் பார்க்க முடியாது. அதை அகக் கண்களால் தான் பார்க்க முடியும். அந்த அகக் கண்ணையே ஞானக்கண் என்று கூறுகிறார்கள்.

**ஞானக் கண்**

ஞானக் கண் உண்டா ? அது கற்பனை என்று கருதக் கூடாது. கனவில் காணும் உருவங்களைப் பார்க்கிறோம். நல்ல உருவங்கள் மகிழ்ச்சியையும், அபாயகரமான உருவங்கள் பயத்தையும் ஏற்படுத்துகின்றன. அதைப் பார்ப்பது எந்தக் கண் ? அந்த கண் தான் ஞானக்கண். சாதாரணமாணவர்கள் அந்தக் கண்ணை கனவு நிலையில் (சொப்பண அவஸ்தையில்) அனுபவிக்கிறார்கள். ஞானிகள் நினைவு நிலையில் (ஜாக்ரத்தில்) அனுபவிக்கிறார்கள் என்றும் விளக்குகிறார்.

மனித சரீரம் சாதாரணமாக இருந்த போதிலும் அந்த சரீரத்திற்கு தாயாக நிற்பவள் பராசக்தி. அந்த பராசக்தியின் ரூபம் எப்படி இருக்கிறது என்பதை நெற்றிக் கண்ணை உபயோகித்துப் பார்த்து மகான்கள் கண்டனர். இங்கு நெற்றிக் கண் என்று குறிப்பிடுவது ஞானக் கண்ணேயாகும். இதனால் காணாத கடவுட்காட்சியைக் காண முடியும் என்று வலியுறுத்துகின்றார் தேவர் பிரான். கண்டேன் அவர் திருப்பாதம், கண்டறியாதன கண்டேன் என்ற அப்பரடிகளின் திருவாக்கினை இங்கு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும்.

**வாழ்வியல் பயிற்சி முறைகள்**

சரியான வாழ்வியல் பயிற்சிகள் மூலம் ஒரு தனி மனிதனை பயனுள்ள உயர்ந்த மனிதனாகவும், ஒரு சமுதாயத்தை ஒப்பற்ற தெய்வீக சமுதாயமாகவும், மாற்றிட முடியும் என்பது இந்தியப் பண்பாட்டினை உருவாக்கிய ஞானிகளின் திட்டம். கால மாற்றத்தால் பழமை படைத்துக் கொடுத்த நெறிகளின் உண்மை இயல்புகளை புரிந்து கொள்ளவியலாது போயிற்று. தெய்வீக வாழ்விற்கான பயிற்சி முறைகள் பக்தியோகம், கர்மயோகம், ஞானயோகம் என்று மூன்று வகைப்படும் என்று பொதுவாகக் கூறினாலும் சித்தர்கள் கண்ட அஸ்டாங்க யோகத்தையே அதிகமாக விளக்குகிறார் தேவர் பிரான்.

பக்தி என்பது அன்பு வழிபாடு, இறைவனிடம் அன்பு செலுத்தி அவனுக்காக மட்டுமே வாழும் வாழ்வு. ஆழ்வார்கள், நாயன்மார்கள் அத்தகையவர்களே. பக்தர்களது அன்பு வலையில் அகப்பட்ட இறைவன் அவர்களை யோகியராக்கி, ஞானியர் ஆக்குகின்றான் தனது அருளாற்றலால். யோகக் கலை என்பது தகுந்த குருவின் துணையுடன், தானே முயற்சி செய்து, ஆன்மாவை அறிந்து, முடிவில் இறைவன் தானாகவும், தானே இறைவனாகவும் ஆக்கும் கலையாகும். பக்தியின் வாயிலாகவும், யோகத்தின் வாயிலாகவும், அனுபூதி அடைந்த நிலையில் அறியப்படுவது ஞானம். இத்தன்மை பொருந்திய மக்களும், அரசாள்பவர்களும், அமைந்திடும் சமுதாயம் தெய்வீக சமுதாயம். ஆன்ம நேய ஒருமைப்பாட்டு உணர்வினை உணர்ந்து, பிறர் வாழ வழி வகுத்துக் கொடுத்து, தன் வாழ்வு முழுவதும் சமுதாயத்திற்கு அர்ப்பணித்து, வாழ்பவர்கள் பலரைக் கொண்டு அமையும் சமுதாயம் தெய்வீக சமுதாயம் என்பது அவரது உள்ளக் கிடகை என்பது ஆன்மீக உரைகளை ஆய்வதின் மூலம் உய்த்துணரலாம்.

**யோகக் கலை**

யோகம் என்பது இறைவனுடன் இணைய வைக்கும் நெறி என்று தான் பொருள். யோகம் பல வகைப்படும். யோகாசனங்கள் பயில்வது மட்டும் யோகக் கலையல்ல. அலை பாயும் மனதை பிராணாயாமம் மூலம் நிலையான – சுத்த மனமாக மாற்றி அந்த மனத்தினைக் கொண்டே ஆன்மாவையும், இறைவனையும் அறியும் வண்ணம் செய்வதே யோகக்கலை.

உலகில் பெரும்பாலோர் வீண் வாழ்வு வாழ்ந்து வீணர்களாய் – நோயாளிகளாய் – அறிவீனர்களாய் அழிந்து போகாமலிருப்பதற்காக மகான்கள் யோக முறையைக் கண்டார்கள், சொன்னார்கள். யோகம் எட்டு வகைப்படும். அதைத்தான் அஷ்டாங்க யோகம் என்று சொல்வது, அதிலும் அகம், புறம் சக்தியோகம் அனுஷ்டாளிக்கப்படுகிறது. அவையாவன கடயோகம், கர்மயோகம், தாந்திர யோகம், ராஜயோகம், மந்திரயோகம், பத்தி யோகம், லய யோகம், ஞான யோகம் எனப்படும். இவைகளில் கடம், தாந்திரம், மந்திரம், லயம் இவை புறம். காமம், ராஜம், பக்தி, ஞானம் இவை அகம். ஒன்று வெளியனுபவம், உறுப்பு இவைகளின் இயக்கங்களைக் கொண்டு மனதைக் கட்டுப்படுத்துவது, அழியாத சரீரத்தை அடையப் பாடுபடுவது. மற்றது மனதையே மனதால் லயிக்கச் செய்வது. மனதின் உயிர்ப்பு சக்திகளை, மனதின் அசைவை, மனதின் மாறுதலை, மன நுணுக்கத்தைக் கண்டு கலந்து அனுபவித்து, ஆண்டு, அடக்கி கையாளுவதாகும்.

மனம் அடங்கினால் சகல சித்தியும் ஏற்படும் என்று முறைப்படுத்தி கேட்போர் மனதில் பதிய வைக்கிறார். ஆறாதார அடிப்படையில் அமைந்த குண்டலினி யோகத்தை யோகியரும் வியக்கும் வண்ணம் விளக்குகின்றார்.

**விஞ்ஞானமும் மெய்ஞானமும்**

விஞ்ஞானமும், மெய்ஞானமும் ஒன்றை ஒன்று சார்ந்தவைகளே. முரண்பாடு உடையது அல்ல என்பது அவரது கருத்து. விஞ்ஞானத்தின் கண்டுபிடிப்புகள், மெய்ஞானம் முடிந்த முடிவாக, அறிவித்த தெளிவிற்குத்தான் வரும் என்கிறார். காந்த சக்தியைப் பயன்படுத்தி முட்டையை குஞ்சு பொரிக்கச் செய்யலாம். ஆனால் முட்டையை உருவாக்க விஞ்ஞானத்தால் முடியாது. மழை பெய்வதற்கு விஞ்ஞானம் கூறும் காரணங்கள் உபகாரணங்களே. மூலகாரணம் விஞ்ஞானத்திற்கு அப்பாற்பட்டது என்று தொடர்ந்து எடுத்துக்காட்டுக்களை எடுத்துக்காட்டி விஞ்ஞானம் மெய் ஞானத்தை இல்லாது செய்துவிட முடியாது என்று நிருவுகின்றார்.

**தேவர் வாழ்வில் அற்புத நிகழ்ச்சி**

ஆழ்வார்கள், நாயன்மார்கள், சித்தர்கள் வாழ்வில் ஆண்டவன் அருளால் அற்புத நிகழ்ச்சிகள் நடைபெறுவது இயல்பே. தேவருடைய வாழ்விலும் அப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் நடந்துள்ளன. ஆடு துறையில் தேவர் ஆன்மீக சொற்பொழிவு ஆற்றிக் கொண்டிருந்த போது, கூட்டத்தில் பாம்பு பாம்பு என்ற அலறல் சத்தம் கேட்டது. அப்போது தேவர் அவர்கள், கூட்டத்தில் பாம்பு வருவதைக் கண்டு யாரும் அஞ்ச வேண்டாம். ஆதி சேடனே அடியேனுடைய பேச்சைக் கேட்க வந்திருக்கிறார். அமைதியாக இருங்கள். அந்தப் பாம்பு யாரையும் ஒன்றும் செய்யாது நேராக என் பக்கத்தில் வந்து நின்று எனது பேச்சைக் கொஞ்ச நேரம் கேட்டு விட்டு போய்விடும் என்றார். அவர் கூறியபடி பாம்பு வந்தது. படத்தை விரித்து, சிறிது நேரம் தேவர் பேசியதைக் கேட்டு விட்டு பாம்பு மாயமாய் மறைந்தது. கூடி இருந்த மக்கள் தேவர் மனிதரல்ல, தெய்வம் என்று புகழ்ந்து கூறினர்.

தேவர் பெருமான் பெரும் நிலக்கிழாராகப் பிறந்து, மக்களுக்காகவும், தேசத்துக்காகவும் வாழ்ந்து அந்த வாழ்வின் மத்தியில் இறைவனைத் தேடும் தேடலில் மனிதன் தெய்வமாகலாம் எனும் இந்திய தத்துவத்தை நிரூபித்தவர். காலச்சூழல் அவருக்கு கைகொடுத்திருந்தால் அனுபவப்பூர்மாக சாகாக்கலையை இந்த உலகத்திற்கு உணர்த்தியிருப்பார். அவர் வாழ்வும், அவர் வழங்கிய சொல்லும், அவர் தேசத்திற்கு அர்ப்பணித்த அர்ப்பணிப்பும் இந்த தேசத்தின் கருவூலங்கள் என்பதை மறக்க முடியாது. தான் பெற்ற சிறப்புகள் அனைத்தையும், தான் பெற்ற தெய்வ சக்திகள் அனைத்தையும் இந்த தேச நன்மைக்காகவும், மக்களின் நன்மைக்காகவும் மட்டுமே அர்ப்பணித்த பாங்கு அவரை மகானாக மட்டுமல்ல மக்கள் தெய்வமாக உணர வைத்தது இயல்புதானே.

தூய பிரம்மச்சரியம் என்பதை என்னவென்று உணர்த்தியவர், அதற்குரிய ஆற்றலையும் பெற்றவர். சிறைக்கோட்டத்தை தவக்கோட்டமாக்கி தவவாழ்வை மகிமைப்படுத்தியவர். அதனால் அவரது வாழ்வு தெய்வ வாழ்வாக மணம் வீசியது. ஒளி வீசியது. அந்த தெய்வம் குடியிருக்கும் இடம் தான் பசும்பொன் சமாதிக் கோயில். அவரது அருளாற்றல்இந்த தேசத்திற்கும், மக்களுக்கும் அருட்சக்தியை வழங்குகிறது.



**தானே உருவாகும் தலைமைதான் நிலைக்கும்**
**தன்னைக்காட்டி வரும் தலைமை நிலைக்காது.**

# சிந்தாந்தச் செம்மல் தேவர்

**ச. கணபதி,**
மானாமதுரை.

"அறம், பொருள், இன்பம், வீடு அடைதல் நற்பயனே" என்பது இலக்கண நூற்பா. ஒரு நூல் இம்மை வாழ்விற்குரிய அறம் பொருள் இன்பங்களை மட்டும் உணர்த்தாது மறுமையில் வீடு அடைதற்குரிய நெறியையும் மக்கட்குத் தெரிவிக்க வேண்டும். அது தான் சிறந்த நூல். அப்படிப்பட்ட முதல் நூலை எழுதியதே இறைவன் தான் என்ற பொருள்பட தொல் தமிழ் இலக்கணம் தொகுத்த தொல்காப்பியரே

"வினையின் நீங்கிய விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல் நூல்"

என்கிறார். இங்கு முனைவன் என்பது இறைவனைக் குறிக்கும். இந்த நூல்கள் உணர்த்துவது முப்பொருள் பற்றியே. முப்பொருள் என்பது இறை, உயிர், தளை என்பனவாகும். முப்பொருள் மொழிவதே விழுமிய தமிழ் மொழியின் தனிச்சிறப்பாகும். இந்த முப்பொருள் விரிவாக்கம் தொல்காப்பியர் காலந்தொட்டு தெளிவாக்கப்பட்டு வந்திருப்பதை "வேண்டிய கல்வியின் யாண்டு மூன்றிறவாது" என்னும் வாக்கியங்களாலும், இந்நெறி திருவள்ளுவராலும் பின்பற்றப்பட்டு வந்திருக்கிறது என்பதை

"கற்றதனால் ஆயபயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்"

என்னும் குறள் பாவாலும் உணரப்பாலது. இறை இயல்பை உணர்ந்து தளைகளை நீக்கி உயிரானது இறைவனை அடைய சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் அறநெறிகளில் சிவயோகத்தை அடைதல் வேண்டும் என்று சைவசிந்தாந்த நூல்கள் வற்புறுத்திக் கூறுகின்றன.

பசும்பொன் தேவர் பிறப்பாலேயே ஞானி. பல்கலைக்கழகங்கள் சென்று பட்டம் பெற்றதில்லை. ஆனால் பல்கலைக்கழகங்களில் அழகாக ஆங்கிலத்தில் சரளமாகப் பேசியவர். பசும்பொன் ஞானி எந்த சமயத்தலைவர்களிடமோ மடங்களுக்கோ சென்று சித்தாந்தங்களைக் கற்றதாகத் தெரியவில்லை. ஆனால் ஆசாநிகளம் அனைத்தையும் துகளாக்கி ஆண்டவனின் அருள் பெற்ற அனுபூதிச் செல்வராகத் திகழ்கிறார். மெய்கண்ட சாத்திரங்களின் முதல் நூல் சிவஞான போதம். செம்பொருள் செப்பும் நூல்களில் தலை சிறந்த நூல். இதன் பன்னிரெண்டு பாக்களின் உரை முழுவதையுமே நம் பசும்பொன் ஞானியார் நல்ல தமிழில் நடைமுறைப் பேச்சால் நாட்டு மக்களுக்கு விளக்குவதை கண்ணுற்றுக் காணுங்கால் தேவரே ஒரு சித்தாந்தச் செம்மல் தான் என்பதை எல்லோரும் ஏற்றுக் கொள்வர்.

"மனிதனின் மனோநிலை பல மாறுதல்களுக்கு உள்ளாகிறது. அந்த மாறுதல்கள் நான்கு வகைப்படும். அவைகள் இருள், மருள், தெருள், அருள் என்பவைகளாகும். இதில் முதல் நிலை இருள். ஆணவமலத்தினால் உண்மைநெறி அறியாது, கண் தெரியாது தடுமாறும் நிலை இந்த இருள் நிலையாகும். இதிலிருந்து உலக பந்தம் (கன்மம்) தனு, கரணம், புவனம், யோகம் ஆகிய மாயா காரியங்களிலிருந்து விடுபட வேண்டும் என்ற உள்ளக் கிளர்ச்சியே இரண்டாம் நிலையாகிய மருள் ஆகும்" என்பது தேவர் உரை. இதையே சிவஞானம் போதம்

செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலம் கழிஇ .....

என்கிறது. அதாவது இறைவனின் தாமரை போன்ற திருவடிகளை உயிர் நெருங்கவிடாமல் தடுக்கின்ற மும்மலங்களையும் ஞானநீரால் கழுவ வேண்டும் என்பதும் இதன் பொருளாகும்.

''இரண்டாம் நிலையாகிய மருள் நிலையிலிருந்து பல அனுபவங்களைப் பெற்று பல நோன்புகளை நோற்று அதனால் அடையும் பயன்தான் தெருள்நிலை.

இந்தத் தெருள் நிலையை அடைந்தாலும் இன்னும் பல மெய்த்தவங்கள் புரிந்து அவைகளின் அனுபவங்களைத் தெளிந்த பின்னரே அருள் சுரக்கும்.

அருள் நிலையை அடைந்தோர்க்கு புறக்கண்ணின் பார்வை பற்றிய கவலை ஏற்படுவதில்லை. ஞானக்கண் பெற்று இறைவனின் அருள் வடிவத்தைக் கண்டு ஆனந்தமடைகிறான். இதுவே இறுதி நிலை. அணைந்தோர் நிலை. அருள் நிலை''

என்று நம் பசும்பொன் தேவர் விளக்குகிறார். இதே கருத்துக்களைத் தான் சிவஞானபோதம்

''ஊனக்கண் பாசம் அறியாப் பதியை
ஞானக் கண்ணில் சிந்தை நாடி
ஊராத்துணைத் தேர்த்து என பாசம் ஒருவத் தண்ணிழலாம் பதி .....''

என எடுத்தோதுகிறது. இறைவனை அடையும் படிகளை குமரகுரு சுவாமிகள் சொல்லும் சுலோகங்களை தேவர் கூறும் கருத்துக்களோடு ஒப்பு நோக்கிப் பார்க்க இன்னும் நன்றாக விளங்கும்.

''விரத முதலாய பல மெய்த்தவத்தின் உண்மைச்
சரியை கிரியா யோகம் சார்வித்து – அருள் பெருகு
சாலோகம், சாமீப சாரூபம் புசிப்பித்து''

என்பது சுவாமிகள் திருவாய் மொழி. சாலோகம் என்பது இறைவனைக் காணுதல், சாமீபம் என்பது இறைவனை நெருங்குதல், சாரூபம் என்பது அருள் உருவம் பெறுதல், சாயுச்சியம் இறைவனோடு இரண்டறக் கலத்தல் ஆகும்.

மெய்கண்ட சாத்திரங்களில் மற்றொரு சிறிய நூல். ஆனால் தலை சிறந்த குறட்பா நூல் திருவருட்பயன் ஆகும்.

இதன் 51 – வது குறட்பா

''நீடும் இரு வினைகள் நேராக நேராதல்
கூடும் இறைச்சக்தி கொளல்''

என்று நுதலிற்று. ''சிவபுண்ணியம்'' பெற்றவர்கள் பாவம் புண்ணியம் இரண்டையுமே சமமாகப் பாவிப்பார்கள். அதாவது இருவினையொப்பு அடைந்தவர்கள் நல்வினை தீவினை இரண்டையுமே ஒரு போலக் காண்பார்கள் என்பது இக்குறட்பாவின் கருத்துரையாகும். நம் சிந்தாந்தச் செல்வர் தேவரோ பட்ட தொட்டிகளெல்லாம் வாழும் படிக்காத பாமர மக்களும் புரிந்து கொள்ளும்படி

''அருள்நிலை அடைந்தவர் தெய்வீக நிலையைப் பெறுகிறார்.
அதனால் அவன் சமநோக்குப் பெற்றவனாகிறான்.
அப்பொழுது அவன் பன்றியைக் கண்ட போதும்
பார்ப்பானைக் கண்ட போதும் அவைகளை சமமான பொருளாகவே கருதுகிறான்''.

என்று இருவினை ஒப்பு நிகழ்வதைச் சுருங்கக்கூறி விளங்க வைக்கிறார்.

தேவருடைய ஆன்மீகப் பேச்சுக்கள் மட்டும் மக்களை ஆச்சரியத்தில் ஆழ்த்தவில்லை. சில நேரங்களில் அத்துறையில் தேவர் செயல்களும் ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. சித்தர்கள் போல் சித்துக்கள் செய்த பெருமைக்குரியவர் தேவர்.



**சாதியையும் நிறத்தையும் பார்த்து மனிதனை மனிதன் தாழ்வு படுத்துவது மகா கொடுமை**

# வீரமும் விவேகமும் கொண்ட தலைவர் !

**கம்பம் பெ. செல்வேந்திரன்**
தமிழக அரசின் சிறப்புப் பிரதிநிதி,
(இ) புதுடெல்லி.

சேர நாட்டிலே தந்தம் விளையும் !
கொங்கு நாட்டிலே தங்கம் விளையும் !
சோழ நாட்டிலே சோறு விளையும் !
பாண்டிய நாட்டிலே முத்து விளையும் !

மண் வளம் குறைவு என்றாலும் அங்கு வாழ்ந்த மக்களின் மனவளம் குறைவுபடவில்லை.

வறட்சி கோலோச்சிய சேது நாட்டில் தான் புரட்சிகரமான மனிதர்கள் தோ்ன்றி உள்ளனர்.

வீரத்தின் விளைநிலம் இது !
வீவேகத்தின் நாற்றாங்காலும் இஃதே !

சேது நாட்டின் பெருமைக்கெல்லாம் மகுடம் வைத்தாற்போல கோபுர கலசமாய் குன்றின் மேல் இட்ட விளக்காய் தோன்றியவர் பசும்பொன் தேவர் திருமகனார்.

தேசீயத்தையும், தெய்வீகத்தையும் தன்இரு கண்களாகவே கொண்டவர். வீரமும், விவேகமும் ஓர் உருவாய் பிறந்தவர்.

''தும்பைப்பூக் கதராடை'' ''துவளாத பீடு நடை''
அம்பைப்போல் ஊடுருவி அளந்தறியும் கூர்நோக்கு,
கம்பீரம் நிறை முகத்தில் கனிவான புன்முறுவல்,
செம்பியன் தோற்றம் போல் – செம்மார்ந்த தேவர் பிரான்''
என்று பாவலர் பாராட்டும் பாங்கான தோற்றம் கொண்டவர் பசும்பொன் தேவர்.

வீரத்துறவி விவேகானந்தரின் ஆன்மீக வாரிசு தேவர் திருமகன் !

ஆங்கில ஏகாதிபத்தியத்தை நடுங்க வைத்த அஞ்சா நெஞ்சன் நேதாஜி சுபாஷ் சந்திரபோஸின் அரசியல் வாரிசு தேவர் திருமகன்.

விடுதலை வேள்வித் தீயில் ஆகுதியாக வார்க்கப்பட்டது தேவர் திருமகன் தியாக வாழ்க்கை.

ஜமீன் ஒழிப்புச் சட்டம் வருவதற்கு முன்பாகவே தனக்குச் சொந்தமான 32 1/2 கிராமத்து நிலங்களையும் அவற்றை உழுது பயிரிட்ட ஏழைகளுக்கே குறிப்பாக தாழ்த்தப்பட்ட சகோதரர்களுக்கே சொந்தமாக்கியவர் தேவர் திருமகன்.

சர்வதேச விவகாரங்களில் இவரது கருத்துக்கள் தெளிவாகவும், தீர்க்கமாவும் இருந்தன.

காஷ்மீர் பிரச்சனை, சீனப் படையெடுப்பு, காமன்வெல்த் அமைப்பு போன்றவை குறித்து தேவர் திருமகனின் பாராளுமன்ற உரைகள் சர்வதேச அரசியல் அறிஞர்களின் கவனத்தை கவர்ந்தன.

தேவரின் பேச்சுக்கள் அடிக்கடி டெல்லிப் பத்திரிக்கைகளின் தலைப்புச் செய்திகளாயின, தலையங்கத்துக்கு உரிய விஷயங்கள் ஆயின.

''வீரம் இல்லாத விவேகம் கோழைத்தனம்
விவேகம் இல்லாத வீரம் முரட்டுத்தனம்''
இதுவே தேவரின் கொள்கை.

இந்திய நாட்டில் வடக்கில் திலகருக்கும், தெற்கில் தேவருக்கும் மட்டுமே வாய்ப்பூட்டுச் சட்டம் போடப்பட்டது. பேச்சுரிமை மறுக்கப்பட்டது.

அலிப்பூர் சிறையிலே அன்னிய ஆட்சியில் எந்த நேரமும் சுட்டுக் கொல்லப்படலாம் என்ற நிலையிலே அடைத்து வைக்கப்பட்டாலும் அச்சம் என்பது சிறிதும் இன்றி அமைதி காத்தவர்

பசும்பொன் தேவர்.

''கைரேகை'' சட்டம் என்ற கொடிய அடக்கு முறைக்கு எதிராக மக்களை ஒன்று திரட்டிப் போராடி வென்றவர்.

மதுரை மாவட்ட . பஞ்சாலைத் தொழிலாளர்களின் தலைவராக இருந்து உழைக்கும் வர்க்கத்தினருக்காக உரிமைக் குரல் ஒலித்தவர் தேவர் பிரான்.

''வல்லமை தாராயோ – இந்த மாநிலம் பயனுற வாழ்வதற்கே'' என்று தேசீயமும், தெய்வீகமும் உயர்வு பெற தம் வாழ்நாளெல்லாம் ஓய்வின்றி உழைத்த உன்னதமான மாமனிதராம் தேவர் திருமகனின் நூற்றாண்டு விழா சிறப்போடு கொண்டாடப்பட வாழ்த்துகிறேன்.



**விஞ்ஞானம், மெஞ்ஞானம் இரண்டையும் தெளிவறக் கண்ட மகாஞானிகளில் ஒருவர் திருவள்ளுவநாயனார்**

# ''மனித இனத்திற்கு மாமேதை தேவரின் சிந்தனைகள்''

**எஸ். வேல்ச்சாமி,**
வேளாண் விற்பனைக்குழுத் தலைவர்,
விருதுநகர் மண்டலம்.

மனித இன வளர்ச்சிக்கு குறிப்பாக மனிதனின் மன வளர்ச்சிக்கும் அறிவு வளர்ச்சிக்கும், சமூகப் பொருளாதார முன்னேற்றத்திற்கும் உதவுகின்ற எல்லாச் சிந்தனைகளையுமே நாம் வரவேற்க வேண்டும். அதுவே முற்போக்கு குணமாகும். முற்போக்கு சிந்தனை என்றால் என்ன ? பிற்போக்கு சிந்தனை என்றால் என்ன ? என்ற கேள்விக்கு போகாமல் மனித இனம் இன்றுள்ள நிலையிலிருந்து ஒரு அடி மேலே போக உயர உதவும் எல்லாக் கருத்துக்களுமே முற்போக்கு தன்மைத்தான் என எடுத்துக் கொள்ள வேண்டும். பழைய கருத்துக்களில் புதிய முறையைப் புகுத்தி சிறு மாறுதல்கள் செய்து, சில இடங்களில் பழைய கருத்துகளுக்கு புது அர்த்தம் கொடுத்து, இன்றைய இந்தியாவுக்குத் தேவையான முற்போக்குச் சிந்தனைகளை கொடுத்த பெரியவர்களில் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவரும் ஒருவராவார். தேவரது முற்போக்குச் சிந்தனைகட்கு விஞ்ஞானமோ தொழிற்புரட்சியோ அடிப்படையல்ல.

இந்நாட்டு வரலாறு, பண்பாடு, நாகரீகம், பழக்க வழக்கத்தின் அடிப்படையில் எழுந்த கருத்துக்களே, அவரது சொந்த வாழ்வின் அனுபவங்களும் நாட்டு நடப்பும் அவரது முற்போக்குச் சிந்தனையில் பிரதிபலிக்கின்றன.

மனித நேயம் மிக்க தேவர் நாட்டுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்ற நோக்கத்திற்காகவே துறவறம் மேற்கொண்டார். தேசீயவாதியாக நாட்டு நடப்பையும் நடக்க வேண்டியதைப் பற்றியும் தெளிவாகச் சிந்தித்தார். அதைப்போல் ஆன்மீகவாதியாக பக்தி, ஒழுக்கம் முதலியன பற்றி முழுமையாகச் சிந்தித்தார். ஆகவே அவரது கருத்துக்கள் முழுமை பெற்றவைகளாகவே இருந்தன. ஒழுக்கங்களையும், தெய்வீகக் கருத்துக் களையும் தேவர் கூறுகையில் ஆன்மீக மெய்ஞானியாகவும், அரசியல், பொருளாதார சமுதாயக் கருத்துக்களைக் கூறுகையில் சமூக விஞ்ஞானியாகவும் காட்சி தருகிறார்.

மெய்ஞானமும், விஞ்ஞானமும் முறைப்படி தக்கவிதத்தில் இணைந்தால்தான் மனித இனம் முன்னேறும் என்று கூறுகிறார்.

''மடமையை ஒழித்து அதே நேரத்தில் பழமையின் பெருமையைத் தெரிந்து கொள்ளும் பக்குவ நிலையை அடைய வேண்டும் என்பதே தேவரின் விருப்பம், அதைப் பற்றி முடிவு செய்யுமுன் நன்கு சிந்தித்து முடிவு எடுக்க வேண்டுமென்று கூறுகிறார்''.

''எதைச் சொன்னாலும் அதை அப்படியே நம்புவதும் பெருந்தவறு. தன் அறிவுக்குப் புலப்படும் வரை சொன்னவற்றைச் சிந்தித்துப் பரிசீலனை செய்து முடிவு காண வேண்டும். உண்மையானவை, பொய்யானவை என்பதை நிரூபிக்கப் பரிசீலனை வேண்டும். பரிசீலனைகள் இருந்தால் பதர்கள் (களை) நெல்லென்ற பெயரில் கடைக்கு விற்பனைக்கு வராது எனக்கூறிய தேவர், தமிழனுக்கு நாத்திகம், ஆத்தீகம் இரண்டையும் பற்றிப் பேசும் உரிமை ஆதிகாலம் தொட்டே இருக்கிறது என்றும், எந்தக் கருத்தினையும் திணிக்கும் பழக்கம் என்றும் நம் நாட்டில் இருந்ததில்லை என்றும் கூறுகிறார்.

இன்றைய சீர்திருத்தவாதிகளைக் கூட

தேவர் சாடவில்லை. ஆனால் சமநோக்கோடு பணியாற்ற வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறார்.

''இன்றைய சீர்திருத்தவாதிகளை நாம் வரவேற்கின்றோம். அவர்கள் சமமான நோக்குடன் எல்லா மதங்களிடத்திலுள்ள குறைகளையும் ஆராய்ந்து கூறுவதாகக் காணோம். இஸ்லாம், கிருத்துவம் முதலிய மதங்களைப் பற்றி சீர்திருத்தவாதிகள் குறை கூறக்காணோம். அவைகளை விட்டு விட்டு இந்து மதத்தை ஏக பொதுச் சொத்தாக எடுத்துக் கையாண்டு வருகின்றனர். சீர்திருத்தவாதிகள் இவ்வாறில்லாமல் சமநோக்கோடு தங்களுடைய காரியங்களைச் செய்ய வேண்டும்'' என கேட்டுக் கொண்டார்.

தெய்வீக வாழ்க்கை வாழ்ந்த தேவர் கடவுளின் பெயரால் செய்யப்படும் தீயவைகளைக் கண்டித்துள்ளார். சிலர் பூஜைகள் செய்து கடவுளையே ஏமாற்ற முற்படுகிறார்கள் எனக் கருதி அவர்களையும் எச்சரிக்கிறார்.

''மனிதனுடைய ஆசை மேலோங்கி விட்டால், ஆண்டவனையே ஏமாற்ற முனைந்து விடுகிறார். அதிகக் காணிக்கைகளைச் செலுத்தி நீண்ட நேரத்தை வழிபாட்டில் செலவிட்டால், செலவிட்ட அளவுக்குப் பயன் கிடைக்கும் என்று எதிர்பார்க்கிறான். ஆண்டவனைப் பொறுத்தவரை இது நடவாது. அதிகக் காணிக்கையும் அதிக நேரம் தியானமும் செய்கிறவனுக்கு அதிகப்பலனையும், குறைவாகச் செய்கிறவனுக்கு குறைந்த பயனையும் கொடுக்க ஆண்டவன் ஒரு அரசியல் வியாபாரி அல்ல'' என்று கூறுகிறார்.

ஒழுக்கத்திற்கும், கட்டுப்பாட்டுக்கும் மிக முக்கியத்துவம் கொடுப்பவர் தேவர்.

''ஆசை குறையக் குறைய மன அழுக்கு நீங்கும், அழுக்கற்ற மனம் ஆண்டவனித்தில் லயிக்கும். அதன் மூலம் வம்புச்சேட்டைகள் ஒடுங்கும்'' என்று கூறிய தேவர் கட்டுப்பாட்டை பற்றி கூறும் போதும், ''மிகப்பெரிய புகழார்ந்த தவயோகியையும், நிறையப் படித்த மேதையையும் விட கட்டுப்பாடுள்ளவன் மேலானவன் என்று தன் சிந்தனைகளை வெளிப்படுத்துகிறார்''

**வறுமை ஏழ்மை பற்றிய தேவர் கருத்து**

ஒருவர் உதவியின்றி மற்றவர் வாழ முடியாது என்ற நடைமுறை உண்மையை எல்லோரும் உணர்ந்து செயல்பட்டால் உலகில் பஞ்சமும் பற்றாக்குறையும் பகைமையும் கால் வைக்கவே முடியாது என்றார்.

ஏழைகள் தவிக்கிறார்கள், அதில் பலர் தேவைகளை அதிகப்படுத்திக் கொண்டு தவிப்பை விரிவுபடுத்திக் கொள்கிறார்கள். இது நாகரீகத்தின் பெயரால் ஏற்பட்ட அனாவசியத் தேவைகள். பொதுவாக ஏழைகள் உயர, உயர – வளர தியாக நோக்கோடு எத்தகைய சீர்திருத்தம் கொண்டு வரப்பட்டாலும் எவரும் எதிர்க்க மாட்டார்கள் என்று கூறி அரசை எச்சரித்து ஏழைகளை வறுமைக் கோட்டிலிருந்து உயர்த்த வேண்டும் என்கிறார்.

**கல்வி பற்றி தேவரின் கருத்து**

கீழ் வகுப்புக்களிலெல்லாம் தமிழ் மொழியில் பாட போதனை, மேல் வகுப்புகளில் ஆங்கிலத்திலேயே பாட போதனை என்று ஒரு முறையினால்தான் பல மாணவர்கள் பாதிக்கப்படுகிறார்கள் என்றார்.

சாதாரண மனிதனுக்குக் கல்வி வந்தால் வந்தவுடன் கர்வம் தான் உற்பத்தியாகும். அதுதான், ''வித்தியா கர்வம்'' என்பது. நிறைந்த அறிவு வரும் பொழுது தான் அடக்கம் ஏற்படும். நிறைந்த அறிவு வரும் பொழுது தான் அடக்கம் ஏற்படும். அனுபவம் ஏற்படும். பலர் சொல்வதையும் நிதானப்படுத்த புத்தி வரும். அது தவிர கொஞ்சமாக அறிவு வருகிற காலத்தில் அவன் அப்படிச் சொன்னான், இவன் இப்படிச் சொன்னான் அது எப்படி ? இது எப்படி ? அது

குற்றம், இது குற்றம் என்று பெரியோர்களைக் கூட மிக்க கேவலமாகப் பேசுகிற ஒரு அதர்மபுத்தி தான் சரஸ்வதியின் பெயரால் கிடைக்கும். அதைப் போலத்தான் லட்சுமியும் வந்தவுடன் லோபத்தைத்தான் தருவாள். அந்த வித்யாகர்வத்தால் இயங்குகிற லட்சுமியும், அதற்கப்பால் போகிற ராஜராஜேஸ்வரியும் ஞானத்தின் வடிவமான சக்தியைப் பெறுகிற காலத்தில் தான் சரஸ்வதியும், லட்சுமியும் பணிப்பெண்ணாக மாறுகிறார்கள். அப்பொழுது அப்பெரியோர்களிடத்தில் தான் அவர்கள் நல்ல உலக உபகாரமாக வேலை செய்ய நினைக்கிறார்கள் என்றார்.

**சாதி பற்றிய தேவரின் கருத்து**

''சாதியும், நிறமும் அரசியலுக்கு இல்லை, ஆன்மீகத்திற்குமில்லை, சாதி என்பது பச்சை அநாகரீகம், சாதியையும், நிறத்தையும் பார்ப்பவன் அரசியலுக்கு லாயக்கில்லை. சாதி பார்ப்பவன் தெய்வத்தை வணங்குவதில் பொருளே இல்லை''. ''சாதியையும் நிறத்தையும் பார்த்து மனிதனை மனிதன் தாழ்வு படுத்துவது மகா கொடுமை ! ஆண்டவன் மனித குலத்தைத்தான் படைத்தானேதவிர சாதியையும், நிறத்தையும் அல்ல''.

எனவே, சாதியும் நிறமும் இந்த நாட்டில் இருந்தால் அரசியலும், நாடும், தெய்வத்தன்மையும் கெடும் என்றும், சாதி வேறுபாடு கூடாது இறைவனது படைப்பில் அனைவரும் சமம் என்கிறார்.

**தேசீயம், தெய்வீகம் பற்றிய தேவர் கருத்து**

இந்தியாவில் பல மகான்கள் தோன்றி மதங்களிடையே ஒற்றுமையையும், சகிப்புத் தன்மையையும், வளர்க்கப் பாடுபட்டிருக்கின்றனர். எல்லா மதங்களும், எல்லா மார்க்கங்களும் ஒரே இறைவனையே சென்றடைகின்றன என்று மக்களிடையே எடுத்துக்கூறி வந்திருக்கின்றனர். நம் நாட்டில் பண்பாட்டில் ஆன்மீகம் இரண்டறக் கலந்துள்ளது. ஆன்மீக உணர்வற்ற அரசியல் சமூகப் பொருளாதார வளர்ச்சிகளை இந்நாட்டில் உண்டாக்க முடியாது என உணர்ந்த தேவர் அரசியலுக்கும், ஆன்மீகத்திற்கும் உரிய இடங்களை அளித்தார். அரசியலில் ஒழுக்கமும், நேர்மையும், வேண்டும் என்றும் இதை ஆன்மீக உணர்வுதான் தர முடியும் என கூறி தேசீயம் என்பது ஒழுக்கமுள்ள அரசியல். ஆகவே ஆன்மீக அரசியலின் அடிப்படையில் உருவாவதுதான் தேசீயம் என்கிறார்.

நாடு அடிமைப்பட்டு இருப்பதையும், மக்களிடம் அடிமைப்புத்தி மேலோங்கி இருப்பதையும் கண்டு முதலில் அரசியல் விடுதலை தேவை என்பதால் தான் தேவர் விடுதலைப் போராட்டத்தில் குதித்தார். தீவிர அரசியல்வாதியாகவும் தீவிர ஆன்மீக வாதியாகவும் திகழ்ந்த தேவர் பழைய காலத்தில் மன்னர்களைத் தெய்வத்தோடு ஒப்பிட்டு வணங்கியதை எடுத்துக்கூறி தேசீயத்திற்கும் தெய்வீகத்திற்குமுள்ள தொடர்பினை விளக்குகிறார்.

துறவு என்னும் முடிவான பாகத்திலிருந்து அரசு என்பதற்கு வருவதல்ல இந்து மதம். ஒன்றின் உள்ளே மற்றொரு பொருள் மறைந்து நிற்றல் போல், அரசன் தெய்வீகத்தை மறைத்து மனித ரூபமாய் மக்களுக்குச் சேவை செய்கிறான். சேவையின் முடிவில் தான் அடைய வேண்டிய தெய்வீக நிலையை அடைகிறான். ஆகையால் தான் மன்னர் மக்கட்கு இறை என்று குறள் கூறுகிறது. அறத்திற்கும் அந்தணர் நூற்கும் ஆதியாய் நின்றது மன்னவன் கோல் என்றும் சொல்கிறது என விளக்கியுள்ளார். தெய்வீகம் இன்றி அரசன் இல்லை, அரசு இல்லை, ஆட்சி இல்லை என்பதே தேவரது கருத்து.

கட்சிகளிடையே கருத்து வேறுபாடுகள் இருக்கலாம் அது இயல்பு. ஆனால் தேசத்தைப் பற்றிய விஷயங்களில் ஒவ்வொரு தனி மனிதனுக்கும் பொறுப்புண்டு, என்றார். நாட்டிலுள்ள மக்கள் எல்லோரும் ஒற்றுமையாக கூட்டாக கிடைத்த சுதந்திரத்தை காப்பாற்றிக்

கொண்டு விழிப்போடு இருக்க வேண்டிய ஒரு நேரத்தில் ஒரு சிறு பிரச்சனையைப் பற்றி நாட்டு மக்கள் ஒவ்வொருவரும் வாதப் பிரதிவாதங்களிலும், ரத்தக் கிளர்ச்சியிலும் ஈடுபட்டு தேசத்தின் ஒற்றுமையைச் சின்னா பின்னாப்படுத்தி வெளிநாட்டாரின் ஏச்சுச் சொல்லுக்கு ஆளாகாமல் இருக்க வேண்டியது ரெம்பவும் அவசியமாகும் என்று விளக்கியுள்ளார்.

தேசத்திற்காக ஏதேனும் சொந்த உடமையிலிருந்து கொடுக்க வேண்டுமே என்று நினைத்துக் கொடுத்தவன் தான் அடியேனேயின்றி தேசத்திடமிருந்து செய்த சேவைக்காக ஏதேனும் பலன் பெற்றவனல்ல நான். தேசத்திற்காக எவ்வளவோ உடமைகளைக் கொடுத்திருக்கிறேன். அதோடு நமது உழைப்பால் பெற்ற சுதந்திர சர்க்காரில் பதவி வகிக்க விரும்புகிறவர்களுக்கு வழிவிட்டு அவர்கள் நல்ல முறையில் ஆட்சி செய்ய வேண்டும் என்று விரும்புகிறவன் நான்.

பதவியை நான் நினைத்தவனுமல்ல ; நினைத்திருந்தால் அது என்னைப் பொறுத்தவரை மிக மிக எளிது. தேசத்திடம் பலனை எதிர்பார்க்கும் கூட்டத்தைச் சார்ந்தவனல்ல நான். தேசத்துக்கு இயன்றதைக் கொடுத்து சேவையும் செய்யும் கூட்டத்தைச் சேர்ந்தவன் நான். இதில் என்னை எதிரியாகக் கருதுபவர்கள் கூட மாறுபட முடியாது. எதிரிகள் என்ற எண்ணமும் எனக்கு ஏற்பட்டதில்லை.

நான் எவரையும் எதிரியாகக் கருதுபவனுமல்ல. தேசத்துக்குக் கேடு புரிகிறவர்களைக் கண்டிப்பேன். அதில் நான் எந்தக் காலத்திலும் பின்வாங்கமாட்டேன். தவறுகளைக் கண்டிக்கிற என்னை யாரேனும் எதிரியாகப் பாவித்தால் அதற்கு நான் பொறுப்பல்ல. தேசத்திற்காக உண்மையைச் சொல்லி உழைத்து வருவதின் பலனாய்ச் சிலர் என்னை எதிரியாகக் கருதலாம். ஆனால் அந்த எதிர்ப்பை நான் தேசத்திற்கு எதிர்ப்பு என்று கருதுவேனேயன்றி என் சொந்த எதிரியாக ஒருக்காலும் கருத மாட்டேன். ஏனெனில் நான் பேசுவது, எழுதுவது, சிந்திப்பது, சேவை செய்வது எல்லாமே தேசத்திற்கேயின்றி எனக்காக அல்ல. எனக்காக நான் எதையும் செய்து கொள்வதில்லை என்பதில் திட்டவட்டமாகிவிட்ட எனக்கு சொந்த முறையில் யார் எதிரியாக இருக்க முடியும் ? முடியவே முடியாது. எனவே என்னை எவரும் அவ்ரவர் விருப்பம் போல் எதிரியாகவோ, நண்பனாகவோ கருதிக் கொள்ளட்டும். ஆனால் நான் எவரையும் எந்தச் சூழ்நிலையிலும் எதிரியாகக் கருத மாட்டேன், கருதினால் அது தேசம் சம்பந்தப்பட்ட தானதாகத்தான் இருக்கும் என்று தன்னை நாட்டுடனே ஐக்கியமாக்கி கொள்கிறார்.

அரசியலையும், ஆன்மீகத்தையும் இணைத்த சிலர், தெய்வீகத்தையும், தேசீயத்தையும் பிரிக்க முடியாது என்றும், பிரித்தால் இரண்டுமே கெட்டுவிடும் என்று கூறுகிறார்.

தேசீயமும், தெய்வீகமும் வெவ்வேறல்ல. ஒன்றிலிருந்து ஒன்றைப் பிரிக்கக் கூடாது. பிரித்தால் இரண்டுமே அதனதன் அசல் தன்மையை இழந்து கெடும். தெய்வீகத்தை மறந்தால் தேசத்தில் நீசத்தன்மைதான் பெருகும். நீசத்தன்மை பெருகிய நாட்டில் நல்லவர்கள் மைனாரிட்டி ஆகி விடுவார்கள். நல்லவைகளையும், வல்லவர்களையும் உண்டாக்கி தேசீயத்திற்கு விநியோகிக்கும் சக்தி தான் தெய்வீகம். இந்த தெய்வீக சக்தியை வேண்டாத தேசீயம், தேசீயம் ஆகாது என உணர வேண்டும் என்றார்.

மேலும் வீரமும், பக்தியும் இணைந்தவை என்றும், அவை பிரிக்கப்பட்ட போதுதான் நாடு வீழ்ச்சியுற்றது என்று கூறிய தேவர், வீரத்திற்கு அழகு தன்னடக்கம், அந்தத் தன்னடக்கத்தைத் தருவது பக்தி. பக்தியும் வீரமும் இரண்டற இணைந்து இயங்குகிற நாட்டைத் தீமைகள் தீண்டா. வீரமும் பக்தியும் இணக்க நிலையிலிருந்து இறங்கி, பின்னர் பிளவாகி அந்த பிளவின் இடைவெளியிலிருந்து ஆரம்பமானதுதான், பாரத நாட்டின் வீழ்ச்சி என

கூறி வீரம் தேசீயத்திலும், பக்தி தெய்வீகத்திலும் பிரதிபலிப்பவை. வீரத்திற்கும், பக்திக்கும் தேசீயமும், தெய்வீகமும் அடிப்படை. இவ்விரண்டும் உள்ளவன் தான் தேசீயவாதியாக முடியும். அவன் தான் விடுதலைக்குப் போராடுவான். போராடிப் பெற்ற விடுதலையை அவனால் தான் காக்க முடியும். விடுதலை பெற்ற நாட்டில் அவனால் தான் நாட்டுமக்களுக்குச் சேவை செய்ய முடியும். ஆகவே, தேசீயமும் தெய்வீகமும் ஒன்றையொன்று தழுவியே இருக்க வேண்டும். பிரிக்கப்பட கூடாது என்பது தான் தேவர் கருத்தாகும்.

ஆகவே தான் தேசீயமும், தெய்வீகமும் அரசியலின் இன்றியமையாத இரு இயல்புகள். ஒன்றைப் பிரித்து ஒன்றை இயக்கினால் அரசியலும் கெடும். அரசியலுக்குடைய நாடும் கெடும் என எச்சரித்துள்ளார்.



**உங்களுக்கு மன அனுமதி வேண்டுமானால், பிறர் குற்றங்களை காணதீர்கள்.**

# பசும்பொன் தேவர் வாழ்வில் எனது பங்கு

**கே. சின்னப்ப கவுண்டர்**
முன்னாள் தமிழ்நாடு பார்வர்ட் பிளாக் கட்சித் தலைவர்.

**த**ந்தையர் நாடென்ற பேச்சினிலே – ஒரு சக்தி பிறக்குது மூச்சினிலே – என்ற மகாகவியின் வாக்கு. இந்த இந்திய தேசத்தினில் பிறந்த தேசப்பற்றுள்ள ஒவ்வொருவர் நெஞ்சத்திலும் பொறிக்கப்பட்ட முத்திரையாகும். தலைவர் தேவர் அவர்கள் நாமமும், அவருடைய பேச்சும், செயல் வீச்சும், எளிமையும், பிறரிடம் இனிமையாக பழகும் விதமும் உயர்ந்த பண்பாளருக்குரிய தோரணையும் எங்கள் கண்முன் தோன்றி ஒரு சக்தி எங்கள் மூச்சினில் பிறக்கின்ற விந்தையை எப்படிச் சொல்வது ? தேவர் என்பவர் எங்களைப் பொறுத்த அளவில் மனித தெய்வம். எங்களுடன் வாழ்ந்து, எங்களுடன் நடமாடிய உயர் தெய்வம். துள்ளும் இளமையிலே அவர் நாமத்தையும் அவரின் பேச்சாற்றலையும் கேள்வியுற்றேன். மாவீரர் நேதாஜியின் மாபெரும் சீடர் எனக்கேட்டு அவரைக் காணத்துடித்தேன்.

**முதல் சந்திப்பு**

எனது 19ஆம் வயதில் பழனியில் ''மார்ஷல் நேதாஜி சங்கம்'' ஒன்று அமைத்து என்னைப் போன்ற இளைஞர்கள் தேச சிந்தனையை சிந்தித்து அதனை பரப்பி வந்தோம். அந்த சங்கத்தில் உரையாற்றுவதற்காக தேவர் பெருமானை அழைத்து வருவதற்காக பசும்பொன் சென்றிருந்தோம். அந்த வீட்டின் தோற்றமே என்னை வியக்கவைத்தது. உள்ளே நுழைந்தவுடன் அந்த எளிமைச் சூழலும், இனிமையான வரவேற்பும் என்னை வெகுவாகக் கவர்ந்தது. அவர் நெற்றி நிறைய திருநீரோடு முருகா என்று உச்சரித்துக் கொண்டே எங்களை வரவேற்ற விதம் ஒரு சுத்த துறவியின் இல்லத்தில் இருக்கிறோம் என்ற உணர்வைத் தந்தது. அவரின் பேச்சழகு, அந்தப் பேச்சில் கண்ட கருத்தாழம், அந்தக் கருத்தில் தேசப்பற்றும் தெய்வீகப்பற்றும் பின்னிப்பிணைந்திருக்கும் பாங்கு என் மனதை ஈர்த்தது. இவர் தான் ஆசான், இவரோடு வாழும் வாழ்வுதான் உன்னத வாழ்வு என்று உணர்த்தியது. அதுமுதல் அவரை என் குருவாகவும், தலைவராகவும் எனக்கு நெருங்கிய உறவாகவும் பூமியில் நமக்குக் கிடைத்த பொக்கிஷம் என்றும் போற்றிவந்தேன்.

**பழனியில் தேவர்**

தேவர் அவர்களை பழனிக்கு வருகை தரும்படி அழைத்த போது 1949 ஜனவரி 23ல் நேதாஜி பத்திரிக்கை ஆரம்பிக்கப் போகிறேன். அதன் பின்பு பழனிக்கு வந்த சொற்பொழிவு ஆற்றுகிறேன் என்று உறுதி கூறினார். அதேபோல ஜனவரி கடைசி வாரத்தில் நாள் குறித்து வருகை தந்தார். நாங்கள் சங்கத்தின் உறுப்பினர்கள் அனைவரும் அணிவகுத்து சென்று வரவேற்றோம். அன்று மிகப்பெரிய மைதானமாகிய பழனி நகராட்சி உயர்நிலைப்பள்ளி மைதானத்தில் வெள்ளமென திரண்டிருந்த மக்கள் மத்தியில் உரையாற்றினார். அன்று ஏகாதிபத்தியத்தின் கைகளில் உள்ள நவீன ஆயுதங்கள் பலவற்றின் பெயர்களைச் சொல்லி விளக்கினார். அதுபோல பறக்கும்தட்டு பற்றியும் பேசினார். கூடியிருந்த மக்கள் மிக அமைதியாக அவருடைய பேச்சில் ஈர்க்கப்பட்டனர். பல இடங்களில், பல நேரங்களில் கைதட்டி மக்கள் ஆரவாரித்தனர்.

1953ல் தலைவரோடு நட்பும், உறவும் கொண்ட எங்களது அண்ணன் கண்ணையன் அவர்களது திருமணம் நடைபெற்றது. அத்திருமண விழாவிற்கு வருகை தந்த தலைவர், மிக மதிப்பும், செல்வாக்கும் பெற்றவர்களாகிய

சேனாதிபதிக் கவுண்டர், எம்.எல்.ஏ., எம்.பி. மங்களகவுண்டர், எம்.எல்.ஏ. ஆகியோருடன் கலந்தரையாடி மகிழ்ந்த நிகழ்ச்சி எங்களுக்கு சிறப்புக்கு சிறப்பு செய்தது போல் அமைந்தது.

**நேதாஜியின் சிலை திறப்பு விழா**

நேதாஜியின் சிலை 1954ல் அமைக்க நாங்கள் பாடுபட்டோம். இளமையும், வீரமும், வேகமும் நிறைந்த நேதாஜியின் சிலை வேறெங்கும் காணமுடியாத தோற்றப் பொலிவோடு, பழனியில் காட்சி கொடுத்துக் கொண்டிருக்கிறது. சிலை திறப்பு விழாவில், பாலைய சுவாமிகள் தலைமையேற்க, நகரவைத் தலைவர் மங்களகவுண்டர், ஆயக்குடி ஜமீன்தார், பாலசமுத்திரம் ராஜா, எம்.கே. முகம்மது அப்துல் காதர் ஆகியோர் கலந்து கொண்டனர். சிலை திறப்பு விழாவில் தேவர் அவர்கள் உரையாற்றும்போது, சிகாகோவில் சர்வசமய மாநாட்டில் கலந்து கொண்டு, வெற்றியுடன் திரும்பிய சுவாமி விவேகானந்தரை வரவேற்க மன்னர் பாஸ்கர சேதுபதி சென்றிருந்தார். சுவாமி விவேகானந்தரின் திருவடி சேது மண்ணில் பதிந்த போது வங்கத்தில் அப்போதுதான் பிறந்த குழந்தையின் அழுகுரல் ஒன்று கேட்டது. அந்த குரலுக்கு உரியவர்தான் சுபாஸ்சந்திரபோஸ் என்று வங்கத்திற்கும், தமிழ்நாட்டிற்கும் உள்ள உறவையும், ஆன்மீகத்திற்கும், தேசீயத்திற்கும் உள்ள உறவையும் விளக்கினார். அவர் பேசிய பேச்சு ஆயிரமாயிரமாக கூடியிருந்த மக்களை உருகச் செய்தது. நேதாஜியின் வீரத்தை நினைத்து, நினைத்து பூரிப்பு அடைந்தோம்.

**பழனி மலையில் பக்தர் தேவர்**

முருக பக்திக்கு வடிவம் எது என்று கேட்டால் தேவரின் திருவுருவப்படத்தைக் காட்டி தொழுவேன். அந்த அளவு முருகபக்தி உடையவர் தேவர். பழனிக்கு வரும்போதெல்லாம் மலை மீது சென்று மன்னன் முருகனை வணங்காமல் சென்றது இல்லை. 1955 – 56ஆம் ஆண்டுகளில் மாதந்தோறும் நடக்கும் கிருத்திகை விழாவில் திருமுருககிருபானந்தவாரியார் சொற்பொழிவு ஆற்றுவது வழக்கம். ஒரு கார்த்திகையின் போது தற்செயலாக தேவருடன் நாங்களும் மலைக்குச் சென்றோம். வாரியார் பேச்சில் ஈடுபாடு கொண்ட தேவர், அந்தக் கூட்டத்தில் ஒரு ஓரமாக நின்று அவரது பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தார். கூட்டத்தில் தேவரைப் பார்த்த வாரியார் மிகவும் மகிழ்ந்து, தனது உரையை சுருக்கிக் கொண்டு, இப்போது பசும்பொன் தங்கம் தேவர் அவர்கள் முருகனின் பெருமை பற்றி முழங்குவார் என்று அறிவித்தார்.

இந்த அழைப்பை சற்றும் எதிர்பாராத தேவர் அவர்கள் வாரியாரின் அன்புக்கு கட்டுப்பட்டு முருகனின் பெருமையையும், சடங்குகளின் அடிப்படை அறிவியல் உண்மைகளை, ஆன்மீகத்தின் தத்துவங்களையும், கூடியிருந்த பக்தர்கள் அனைவரும் புரியும் வண்ணம் விளக்கினார். ஒவ்வோர் அபிஷேகத்திலும் உள்ள தத்துவ உண்மைகளை தெளிவுபடுத்தினார். உண்மைகள் புரியாதபோது, சடங்குகள் சம்பிரதாயமாகின்றன. மனித குலம் தெய்வநெறியை அறிந்து, உணர்ந்து வாழ்வதற்காக, மகான்கள் தங்கள் ஞான அனுபவத்திலிருந்து பெற்ற உண்மைகளை சாஸ்திரங்களாக படைத்துக் கொடுத்துள்ளனர். சுத்த பிரம்மச்சாரியின் உடல் சந்தனமணம் வீசும் என்று குறிப்பிட்டார். சொற்பொழிவு முடித்த பின்பு, நாங்களும் பின் தொடர்ந்த பழனி ஆண்டவரை வழிபட்டு தேவருடன் எங்கள் வீடு திரும்பினோம்.

**மங்கள கவுண்டர் வீட்டில் மாமேதை பசும்பொன் தேவர்**

பழனிக்கு வந்தால் பெரும்பாலும் மங்கள கவுண்டர் வீட்டில் தான் தங்குவார். அவர் அங்கு தங்கியிருக்கும்போது தெய்வம் வீட்டில் உலாவருவது போன்று தோன்றும். அவருக்கு தொண்டு செய்யவும், சேவை செய்யவும் நாங்கள் பத்து பேர் காத்துக் கிடக்க அவரோ சப்பதமில்லாமல் அதிகாலையில் எழுந்து, ஷண்முகநதிக்கு சென்று நீராடிவிட்டு, நெற்றி

நிறைய விபூதியோடும், குங்குமத்தோடும் காட்சியளிப்பார். உணவில் அவருக்கு அதிக நாட்டம் கிடையாது. எது கிடைப்பினும், அதை அமிர்தம் போன்று உண்டு முடிப்பார். அதேபோல் உடையிலும் பகட்டு இல்லாமல் மிக எளிமையாக கதராடையே உடுத்துவார். அதையும் தாமே துவைத்துக் கொள்ளும் பாங்கு மேட்டுக்குடி மக்களுக்கு மட்டுமல்ல, இந்திய குடிமகன் ஒவ்வொருவருக்கும் கற்று தந்த நடைமுறை பாடம் எனலாம்.

1950 தேவர் யாரிடமும் சொல்லாமல் இமயமலை சாரலுக்குச் சென்றார். ஒரு வருடம் கழித்து கேரளா வழியாக பழனி வந்து சேர்ந்தார். அப்பொழுது அவரது தோற்றம் பழனி முருகனைப் போலவே முடி வளர்த்து தனது வீர தோற்றத்தை துறந்து ஆன்மீக ஞானியாக முதன் முதலாக மங்களகவுண்டர் வீட்டில் தன்னை வெளிப்படுத்தினார். அந்த தோற்றமும், அந்த முதல் வருகையும் எங்களுக்கு மட்டற்ற மகிழ்ச்சியை தந்தது. தெய்வம் தேடி வந்தது என நினைத்து நானும் பழனி மக்களும் பூரித்து போனோம்.

1957ல் சிறையில் இருந்த காலத்தில், பழனியில் உள்ள முக்கியப் பிரமுகர்கள் அனைவரும் சிறையில் சென்று அவரை தரிசிப்பது வழக்கம். சிறையில் ஒரு தவம் செய்யும் முனிவரைப்போல் காட்சியளித்தார். மௌனமே உரையாடல். அந்த மௌனத்தில் ஆயிரம் அர்த்தங்கள் பொதிந்து கிடந்தன. பழனிப்பிரமுகர் செல்லம் ஐயர் அவர்கள் தேவரிடம் அளவற்ற மரியாதையும், நட்பும் கொண்டிருந்தார்.

பழனி மக்களால் பெரிதும் மதிக்கப்பட்ட எம்.பி. மங்கள கவுண்டர் அவர்களும் தேவர் அவர்களும் கொண்டிருந்த நட்பு ஈடு இணையற்றது. எதிர்பார்பற்றது. ஆழமானது. இருவரும் 1963 ஆம் ஆண்டிலேயே தெய்வ நிலை பெற்றார்கள் என்பது பழனியின் சரித்திரத்தில் குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

அப்பழுக்கற்ற அரசியல் மேதையும், அறிவொளி வீசும் ஆன்மீக ஜோதியும் ஆகிய பசும்பொன் ஐயா அவர்களை நினைத்து நினைத்து வாழ்ந்து கொண்டிருக்கிறேன். மாபெரும் வீரரும், ஒப்பற்ற தியாகியும் இந்திய விடுதலைப் போராட்டத்தில் வீரப்போர் முழக்கமிட்டு படை நடத்திச் சென்ற தனிப்பெரும் தளபதியாகிய நேதாஜி சுபாஷ் அவர்கள் தொடங்கிய அகில இந்திய பார்வர்ட் பிளாக் கட்சியின் தமிழ்நாடு தலைவராக சில ஆண்டுகள் பணிபுரியும் பாக்கியம் பெற்றேன். தேவர் பிறப்பிடத்தை நினைவிடமாக்குவதற்கும், தமிழகத்தில் அவர் பெயரால் மூன்று பெரும் கல்லூரிகள் நிறுவுவதற்கும், மதுரை கோரிபாளையத்தில் செம்மாந்து நிற்கும் செவ்விய சிலை அமைப்பிற்கும், கட்சியை திறம்பட நடத்திச் செல்வதற்கும் தேவர் தந்த தேவர் பி.கே. மூக்கையா தேவர் அவர்களுக்கு இறுதி வரை நானும், கண்ணகி ஆசிரியர் சக்திமோகன் அவர்களும் துணை நின்றோம்.

தேவர் அவர்களின் அருளால் தவவாழ்வை தொடர்கின்றேன். நல்லவை அனைத்திற்கும் தேவர் திருநாமம் துணை நிற்கும்.

ஜெய்ஹிந்த்



**மரணம் வள்ளலார் போன்ற ஞானியரை அணுகுவதில்லை.**

# விடுதலை போரில் தேவர்பிரான்

**பா. செந்தாமரைகண்ணன்,**
பஜனை மடத்தெரு,
அழகன்குளம் (அஞ்சல்), இராமநாதபுரம்.

தங்க நகை
அணியா மங்கை
பாரதத் தாய்
இவர் வந்து தங்க
சிங்க நகை புரிந்தாள்

சங்கத் தமிழ்
கேட்ட நாடு
சிங்கத் தமிழ்
கேட்கச் செய்தவர்

செயற்கை
இடி இவரால்தானே
இங்குள்ள
மேடைகளில்
அரங்கேற்றப் பட்டது.

வரலாற்றால்
வரம் பெற்ற நாடு
வரவு செலவை
வந்தவர்களுக்கு
வழங்கிவிட்ட நேரம்

பாரத போரில்
பார்த்தன் போல
பகவான் தேவர்
வந்தார்.

வினைகள் செய்யும்
கயவர் மீது
கணைகள் பலவும்
போட்டாரே

சலிப்பு மிக்க
மக்களை
விழிப்புத் தோன்றச்
செய்தாரே

மக்கள் படைகள்
மிக்க தலைவராக
தக்க நேரத்தில் வந்தாரே

இவர் பேச்சால்
திரண்டவர்
அன்னியர் மூச்சை
மூர்ச்சிக்கச் செய்தனர்

தூரத்தில் இருந்து
வந்தவர் இவர்
தீரத்தைக் கண்டு
திகைத்தனர்.

தனது வாழ்வை
உருக்கி
தாய் நாட்டை
மங்களமாக்கினார்.

இந்த மறையை
சிறையும் நான்காயிரம்
நாட்கள் படித்தது.

கீதையைத்
தந்தவனும் சிறையில்
பிறந்தான்
கீதையாய் வந்தவனும்
சிறையில்
இருந்தான்.

சூரியனிடம்
இருந்து ஒளி வந்தது
இவர் பேசிய போது
தான் ஒலி வந்தது.

நாற்காலிகளே
சிம்மாசனமாக
இருக்கும் நாட்டில்

இவர் ஏறியபின்தான்
மேடைகளே
சிம்மாசனமானது.

இவர் பேச்சைக்
கேட்டு
முயல்களும்
புயல்களாகப் புறப்பட்டன.

விடை தெரியாமல்
நின்ற தேசம்
இவர் படைகண்டுதான்
நடை பயின்றது.

புண்ணியம் செய்த
பூமிக்கு
கண்ணியம்
பெற்ற மகானாவார்
பசும்பொன் கண்ட
தேவர் திருமகனார்.

**பலர் வாழ சிலர் தியாகம் செய்து கஷ்டப்படுவது புனிதமான அரசியல்.**

# பசும்பொன் தேவரும் . . . நானும்

**எஸ். ஆண்டித்தேவர்,**
அகில இந்திய பார்வர்ட் பிளாக்.

சூரியனே மறையாத பேரரசைப் பெற்றிருந்த பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பிடறியைப் பிடித்து உலுக்கி இந்திய விடுதலையை தரச்செய்த நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் அவர்களின் இணைக்கரமாக இருந்து செயல்பட்டவர் உத்தமத் தலைவர் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவருக்கு நூற்றாண்டு விழா. நினைக்கும் போதே நெஞ்சமெலாம் இனிக்கிறது.

பள்ளிப் பருவத்திலேயே பசும்பொன் தேவர் மீது பற்று கொண்டவன் நான். 1952ல் தேவர் பெரியகுளம் சட்டப் பேரவைத் தொகுதியில் தனது பார்வர்ட் பிளாக் வேட்பாளராக பி.கே. மூக்கையாத் தேவரை நிறுத்தினார். அவரது வெற்றிக்காக பாடுபட்ட அனுபவம் பெற்றவன். உசிலம்பட்டிப் பகுதியில் இருந்து நாங்கள் 8 பேர் கல்லூரிக் கல்வி பயில நெல்லை பாளையம் கோட்டை சென்றோம். ஒரு முறை மணியாட்சி ரயில் நிலையத்தில் பசும்பொன் தேவரை சந்தித்து அவருடன் பேசும் வாய்ப்பைப் பெற்றேன். பேச்சு இளமையின் பயமறியா வேகத்தில் எதிர்வாதமாய் அமைந்து விட்டது. இருப்பினும் தேவர் என் எதிர்வினாக்களுக்கு இதமான பதில்களை இயல்பாகவே சொன்னார். கடுமையானகுற்றச்சாட்டுக்களுக்குக் கூட கனிந்த மனச் சொற்களை வழங்கிய கருணை வள்ளல் தேவர். அந்த இளமையின் குறும்புகளின் உந்துதலால் இமயத் தலைவனின் இதயத்தைக் காயப்படுத்தி விட்டோமோ என்ற நினைப்பில் இன்றும் என் கண்ணில் நீர் ஆறாகப் பெருக்கெடுக்கிறது. அவரின் பெருந்தன்மையை எண்ணியெண்ணிப் பெருமிதம் கொள்கிறது. மணியாட்சியை நினைக்கும் போதெல்லாம் மற்றொரு நினைவும் தொடர்கிறது.

**தியாகத்தைப் போற்றும் தியாக தீபம்**

1957 பொதுத் தேர்தலில் எதிர்கோட்டை சட்டப்பேரவைத் தொகுதியில் போட்டியிட்டவர் முத்துராமானுஜத் தேவர். ''சுப்ரீம் கமாண்டர் நேதாஜி'' என்ற ஆங்கிலப் புத்தகம் எழுதியவர். எங்களோடு இணைந்து பணியாற்றியவர். தேவரின் அணுக்கத் தொண்டர். தேவர் ஒரு முறை சென்னை சட்டமன்ற உறுப்பினர் விடுதியில் இருந்தார். உடன் இருந்த முத்துராமனுஜத் தேவரிடம் பணம் தந்து இரண்டு புடவைகள் வாங்கிவரச் சொல்கிறார். தேவருக்கு தாயார் இறந்து விட்டார். திருமணம் செய்து கொள்ளவில்லை, மனைவியும் இல்லை, யாருக்காக புடவை வாங்கிவரச் சொல்கிறார், என்று எண்ணிபடியே முத்துராமானுஜம் புடவைகள் வாங்கி வருகிறார். இருவரும் வாடகைக்காரில் மயிலாப்பூர் செல்கின்றனர். அங்கு பிரபல மிருதங்க வித்வான் முருக பூபதி வீட்டின் முன்பு கார் நிற்கிறது. காரை விட்டு இறங்கி வீட்டிற்குள் செல்கிறார். ''வாங்கண்ணே'' என்று அங்கிருந்த பெண் வரவேற்கிறார். நலம் விசாரித்த பின்பு ''அம்மாவை அழைத்து வாம்மா'' என்கிறார் தேவர். அவர் சென்றதும் தேவரிடம் இது யார் என்று கேட்கிறார் முத்துராமானுஜம். தங்கை இந்திராணி என்கிறார் தேவர். தந்தை உக்கிரபாண்டித் தேவர் பல பெண்களை மணந்தவர். தேவர் பூர்வீக சொத்துக்களைப் பாதுகாக்க தந்தையை எதிர்த்து வழக்கு மன்றம் சென்றார், என்றாலும் தந்தை மணந்து கொண்ட பெண்களிடமோ, பிள்ளைகளிடமோ கோபமோ பேத உணர்வோ கொண்டதில்லை.

அந்த முறையில் உக்கிரபாண்டித் தேவருக்குப் பிறந்த மகள் இந்திராணியிடமும் சகோதர அன்பு கொண்டிருந்தார். வெளியே

சென்ற இந்திராணி ஒரு அம்மையாருடன் வந்தார். அந்த அம்மையார் எலும்பும் தோலுமாய் கிழிந்த புடவையுடன்காட்சியளித்தார். அம்மையாரைக் கண்டதும் தேவர் எழுந்து வணங்கினார். புடவைகள் இரண்டையும் அவரிடம் கொடுத்தார். பெற்றுக் கொண்ட அம்மையார் முத்துராமலிங்கம் நீ நல்லா இருப்பே என்று வாழ்த்தியபடியே செல்கிறார்.

சென்றதும் தங்கை இந்திராணியிடம் ஊருக்குப் போகும் போது பணம் கேட்டால் கொடுத்துவிடு என்று சொல்லிவிட்டு புறப்படுகின்றனர். காரில் வரும் போது அந்த அம்மா யார் என்று தெரிகிறதா ? என்று தேவர் முத்துராமானுஜத்திடம் கேட்கிறார். தெரியவில்லையே யார் அது என்கிறார் பதிலுக்கு. இவர்தான் மணியாட்சி ரயில் நிலையத்தில் வெள்ளைய கலெக்டர் ஆஷ்துரையை சுட்டுக் கொன்ற வாஞ்சிநாதனின் மனைவி பொன்னம்மாள் என்கிறார் தேவர். அதிர்ந்து போகிறார் முத்துராமானுஜம். இப்படிப்பட்ட தியாகிகளை மறந்தால் இந்த நாடு உருப்படுமா ? என்கிறார். கற்றாரை கற்றாரே மதித்துப் போற்றுவர். அது போல தியாக தீபமான தேவர் நாட்டிற்காக தியாகம் செய்த தியாக சீலர்களை மறக்காதவர், மதித்துப் போற்றுபவர்.

தேவர் திருப்பணியில் நாங்கள்

பசும்பொன் தேவரின் பாதச் சுவடுகளைப் பின்பற்றி பார்வர்ட் பிளாக் தொண்டர்களாக தலைவர்களாக பரிணமித்த நாங்கள் தமிழக அரசியலில் தவிர்க்க முடியாத சக்திகளாக வளர்ந்தோம். ஆட்சி அதிகாரத்தில் நாங்கள் இல்லாது போனாலும் எங்களின் சக்தியை உணர்ந்த ஆட்சியாளர்கள் தேவருக்கு நாங்கள் செய்யப்பணித்த செயல்களை செய்து வந்துள்ளனர். அந்த வகையில் 1978 ஆம் ஆண்டு எம்.ஜி.ஆர். அரசு தேவர் ஜெயந்தி விழாவை அரசு விழாவாக அறிவித்து சிறப்பித்தது. 6ம் வகுப்பு பாடப்புத்தகத்தில் தேவர் வரலாறு இடம் பெற்றது. 1980 ஆம் ஆண்டு அரசு அலுவலகங்களில் தேசியத் தலைவர்கள் வரிசையில் தேவர் உருவப்படம் வைத்திட ஆணை பிறப்பிக்கப்பட்டது.

உசிலம்பட்டி வட்டம் நாட்டாமங்கலம் அய்யம்பட்டியைச் சேர்ந்தவர். அருந்ததியர் இனத்தவர் பாட்டுக்கார மொக்கையன் என்ற புகழ்ப்பட்ட மொக்கையன் பசும்பொன் தேவரால் 1962 பொதுத் தேர்தலில் ஆண்டிபட்டித் தொகுதியில் போட்டியிடச் செய்யப்பட்டவர். குறைந்த வாக்குகளில் வெற்றி வாய்ப்பை இழந்தவர். நான் அகில இந்திய பார்வர்ட் பிளாக் தமிழ் மாநில பொதுச் செயலாளர் பொறுப்பேற்றதும் இராஜபாளையம் சட்டப் பேரவைத் தொகுதியில் சிங்கம் சின்னத்தில் போட்டியிடச் செய்தேன். வெற்றி பெற்ற மொக்கையன் சட்டமன்றத்தில் தனது கன்னிப் பேச்சை தேவர் புகழ் பாடலோடு தொடர்ந்தார். சட்டப்பேரவையில் தேவர் படம் திறக்கக் கோரினார். முதல்வர் எம்.ஜி.ஆர். ஆதி திராவிடர் நலத்துறை அமைச்சர்மாண்புமிகு விஜய சாரதியின் கையால் தேவர் படம் திறக்கச் செய்தார்.

6ஆம் வகுப்பு தமிழ் பாடப் புத்தகத்தில் இடம் பெற்றிருந்த தேவர் வரலாறு நீக்கப்பட்டது. நீக்கிய பாடம் மீண்டும் இடம் பெற்றாக வேண்டும் என்று வலியுறுத்தினோம். பாடப் புத்தகங்கள் அச்சிட்டு மாணவர்களுக்கு வழங்கப்பட்டு விட்டது. அடுத்த ஆண்டு சேர்த்து விடலாம் என்றனர். இந்த ஆண்டே சேர்த்தாக வேண்டும் என்றேன். அதன்படி தேவர் வரலாறு மட்டும் தனியாக அச்சிட்டு வழங்கியது அரசு. தேவர் பெயரால் மாவட்டம், மதுரை காமராஜர் பல்கலைக் கழகத்தில் ரூ. 15 லட்ச நிதியில் ஆய்வு இருக்கை, சென்னையில் தேவருக்கு சிலை. சேமியர்ஸ் சாலைக்கு தேவர் பெயர் 1995 ஆம் ஆண்டில் சட்ட விதிகளையெல்லாம் தூக்கியெறிந்து விட்டு ''தேவர் தபால் தலை'' நாடெங்கும் தேவருக்குச் சிலை என்று நாட்டு மக்களின் நினைவில், நேர் கொண்ட பார்வையில், என்றென்றம் நின்று நிலவுதற்குரிய பணிகளை செய்திருக்கிறோம். இன்றும் இராமநாதபுரம் மாவட்ட ஆட்சியர், செய்தி மக்கள் தொடர்பு அலுவலர், சுற்றுலாத்துறை

அமைச்சகம் என்று பல இலட்சங்களில் திட்டமிடப்பட்டு பணிகள் நடைபெற்று வருகின்றன.

எங்கள் வாழ்வும் எங்கள் வளமும் தேவர் தான். சப்ரகூட மஞ்சத்தில் சாய்ந்திருந்து சல்லாபக் கலை நிகழ்த்தும் கனவுகளில் அல்ல. ஒப்புயர்வற்ற பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்களைப் பற்றிய நினைவுகளில் மட்டுமே வாழ்ந்து கொண்டிருக்கிறோம்.



**மனம் அடங்கினால் சகல சக்தியும் ஏற்படும்.**

# சரித்திர நாயகர் தேவர்

**பி.வி. கதிரவன்,**
மாநில அமைப்புச் செயலாளர்,
அகில இந்திய பார்வர்ட் பிளாக்.

இந்திய வரலாற்றில் எத்தனையோ தலைவர்கள் தோன்றி மறைந்துள்ளனர். மண்ணுலகை விட்டு மறைந்தாலும் மக்கள் மனதில் என்றென்றும் நிலைத்திருக்கும் சரித்திர நாயகர் பசும்பொன் தேவர்.

ஸ்ரீமான் எஸ். சீனிவாச அய்யங்காரின் வழிகாட்டுதலோடு தேவர் காங்கிரஸில் இணைந்தார். வங்கச்சிங்கம் வைரவீரன் நேதாஜி சுபாஸ் சந்திரபோஸ் அவர்களைத் தலைவராக ஏற்றார். சுபாஷ் போஸைத் தொடர்ந்து காங்கிரஸை விட்டு வெளியேறினார். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை இந்திய மண்ணிலிருந்து வேரறுக்கவும், இந்திய விடுதலைக்குப்பின் ஏற்ற தாழ்வற்ற சமுதாயத்தை ஏற்படுத்தி சமத்துவ அரசை நிலைநிறுத்த திட்டமிட்ட நேதாஜி பார்வர்டு பிளாக் இயக்கம் கண்டார். பார்வர்டு பிளாக் ஸ்தாபகத் தலைவர்களில் ஒருவராய்த் திகழ்ந்தார் தேவர்.

ஆங்கிலேய ஆட்சியில் பாரத நாட்டின் விடுதலைக்காக ஆர்ப்பரித்து எழுந்த மக்களை அடக்க முனைந்த அந்நியர்கள் கொடுஞ்சட்டம் போட்டார்கள். குற்றப்பரம்பரை என்றார்கள். கொற்றப் பரம்பரையைக் குற்றம்பரம்பரை என்பதா ? குறி வைத்துப் போராடினார். அம்மக்களுக்கு மறுவாழ்வு பெற்றுத் தந்தார்.

ஆலை அரசர்களின் கோரப்பிடியில் சிக்கித் தவித்தது தொழிலாளி வர்க்கம். தொழிலாளர் துயர் நீக்கக் களத்தில் இறங்கிப் போராடினார். சிறை சென்றார். கூலி உயர்வு, குறித்த நேர வேலை, பெண் தொழிலாளர்களுக்கு பிரசவகால விடுப்புடன் ஊதியம், ஊக்கத் தொகை என்று தொழிலாளர் உரிமை பெற்றிடச் செய்தார்.

நிலங்களெல்லாம் ஜமீன்தார்களின் ஆதிக்கத்தில், அதில் உழைக்கும் விவசாயிக்கு கால் வயிற்றுக் கூழுக்கும் வழியில்லை. விவசாயத் தொழிலாளர் துயர்நீங்க ஜமீன் ஒழிப்புப் போராட்டம் நடத்தி வென்றார். விவசாயி உற்பத்தி செய்யும் பொருளுக்கு உழைப்பின் தன்மை அறியாத வியாபாரியா விலை நிர்ணயம் செய்வது என்றார் தேவர். விவசாயிகளின் உற்பத்திப் பொருளுக்கு விவசாயியே விலை நிர்ணயிக்க வேண்டும் என்றார்.

ஆண்டவனால் படைக்கப்பட்ட மக்களில் ஒரு சிலருக்கு ஆலயத்தின் உள்ளே சென்று வழிபடும் உரிமை மறுக்கப்பட்டு வந்தது. தாழ்த்தப்பட்ட மக்கள், நாடார் இன மக்கள் கோவிலின் உள்ளே சென்று வணங்கிடும் உரிமையை அம்மக்களுக்கு வழங்க முன் நின்றார். தாழ்த்தப்பட்ட மக்களுக்கு உயர்வு தர அவர்களுக்கு விவசாய நிலங்கள் வழங்க வேண்டும். பொருளாதாரத்தில் கல்வியில் உயர்ந்திடும் வாய்ப்பை அரசு வழங்க வேண்டும்என்று சட்டமன்றத்தில், பாராளுமன்றத்தில் குரல் கொடுத்தார். முன்னுதாரணமாகி தாழ்த்தப்பட்ட மக்களுக்குத் தனக்கு சொந்தமான நிலங்களையும் கொடுத்தார்.

சாதி, மத அமைப்புகள் சார்பில் கல்வி நிலையங்கள் அமைக்கக் கூடாது. அரசு தான் அனைத்து மக்களுக்கும் கல்வி வழங்க வேண்டும் என்றார். லஞ்ச ஊழல் நாட்டின் முன்னேற்றத்திற்கு கேடு என்றார். கள்ள நோட்டு கள்ள மார்க்கெட் நாட்டின் பொருளாதாரத்தை அதைக்குழியில் தள்ளும் என்றார். இந்திய ஒரு போதும் ஆங்கில அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் எடுபிடியாக இருக்கக்கூடாது என்றார். கலப்படம் மக்களைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கொல்லும் நஞ்சு என்றார். இப்பாதகம் செய்பவர்களை

அவர்களின் ஆதரவாகச் செயல்பட்ட அதிகார பீடத்தை மக்கள் மன்றத்தில் தோலுரித்துக் காட்டினார்.

அனைத்துத் தரப்பு மக்களின் ஆதரவு பெற்ற தேவர் தேர்தல் களத்தில் தொடர்ந்து வெற்றி வீரராகத் திகழ்ந்தார். நாளொக்கொரு கொள்கை நேரத்திற்கொரு கட்சி என்றிருக்கும் நிலையில் ஒரே கட்சி ஒரே கொள்கை என்ற இலட்சியப் பிடிப்பில் அகில இந்திய பார்வர்ட் பிளாக் தலைவராக இறுதி வரை இருந்தவர். சட்டமன்றத்திற்கும், பாராளுமன்றத்திற்கும் ஒரே சமயத்தில் போட்டியிட்டு இரண்டிலும் வெற்றி பெற்ற சரித்தர சாதனையாளர் பசும்பொன் தேவர்.

சரித்திர நாயகன் பசும்பொன் தேவர் அவர்கள் எந்த இலட்சியத்திற்காக கொள்கைக்காக, கோட்பாட்டிற்காக பாடுபட்டாரோ அந்த இலட்சியம் காக்கப் படை நடத்திய டி.எல். சசிவர்ணத்தேவர், பி.கே. மூக்கையாத்தேவர், ஏ.ஆர். பெருமாள், கே. சின்னப்பக் கவுண்டர், ஏ.அய்யணன் அம்பலம், பி.என். வல்லரசு போன்ற ஆன்றோர்கள் வழியில் எங்களை அர்ப்பணிக்கவும் தயாராகி விட்டோம்.

நன்றி

ஜெய்ஹிந்த் !



**கர்வம் கொள்ளாதே, கடவுளை இழப்பாய்.**
**பொறாமை கொள்ளாதே நண்பனை இழப்பாய்.**
**கோபம் கொள்ளாதே உன்னையே இழந்துவிடுவாய்.**

# அமைதி தவழ்கின்ற மாமனிதர்

**மதுரை ஆதீனத்தின் 292 ஆவது பட்டத்துப் பேரரசர் ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர்**

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்கள் எல்லோருக்கும் சொந்தமானவர். அமைதி தவழும் மாமனிதர். மனிதரில் புனிதர். ஆம். 1940 ஆம் ஆண்டு முதல், அவரது இறுதிக் காலமான 1963 ஆம் ஆண்டு வரை மொத்தம் 23 ஆண்டுக்காலம் மதுரை ஆதீனத்தின் 290, 291வது குருமகா சன்னிதானங்களுடன் நீண்ட, நெருங்கிய தொடர்பு வைத்திருந்தவர்கள். தமது இறுதிக் காலம் வரை, மதுரை ஆதீனத்தின் நிர்வாகப் பணிகளுக்குச் சமயப் பிரசாரப் பணிகளுக்கு உற்ற துணையாக, உறுதுணையாக விளங்கி, மகாசன்னிதானங்களின் மீது ஆழ்ந்த பக்தி செலுத்தியவர்கள். இவற்றையெல்லாம் மனதில் பதித்துக் கொண்டிருந்த மதுரை ஆதீனத்தின் 291 ஆவது குருமகா சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் தேவர் அவர்களுக்கு, ''சன்மார்க்கச் சண்ட மாருதம்'' என்னும் சிறப்பு விருதினை வழங்கிக் கௌரவித்தார்கள். தமது குருநாதர் அவர்களின் வழியொற்றி 292 ஆவது குருமகா சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள், மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் தேவர் அவர்கள் பெயரில் ஓர் அறக்கட்டளை நிறுவியருளியுள்ளார்கள். அதில், ஆண்டு தோறும், குருமகா சன்னிதானம் அவர்கள் பெயரில், தேவர் அவர்களின் சிறப்பு குறித்து, கருத்தரங்குகள் நன்கு நடைபெற்று வருகின்றன.

தேவர் அவர்கள் சிறப்புமிக்க சுதந்திரப் போராட்டத் தலைவர். எளிமை, அடக்கம் உடையவர். நல்ல சிந்தனையாளர். எல்லோரிடத்தும் சகஜமாகப் பழகக் கூடியவர். ஆயிரக்கணக்கான தாழ்த்தப்பட்ட மக்களுக்கு தமது சொந்த விவசாய நிலங்களைத் தானமாக வழங்கியவர். இதன் மூலம் சாதீய வேறுபாட்டைக் களைந்தவர்.

தொகுதிகளுக்குச்சென்று பிரச்சாரம் செய்யாமலேயே சட்டமன்ற, நாடாளுமன்ற உறுப்பினர் ஆனவர். சிறந்த தேசியவாதி, மணிக்கணக்காக வேகத்துடன் பேசக் கூடிய ஆற்றல் பெற்றவர். தமிழ் மொழியில் மாத்திரமல்ல, ஆங்கிலத்திலும் சரளமாக எதுகை, மோனையோடு பேசக் கூடிய திறமை கொண்டவர்.

இறைபக்தி, இறைவழிபாடு மிக்கவர். நேதாஜி சுபாஸ் சந்திர போசுடன் இணைந்து பார்வர்ட் பிளாக் இயக்கத்தை நிலைபெறச் செய்தவர். ''நாட்டுப்பற்று'' என்பது ஒவ்வொரு இந்தியக் குடிமகனுக்கும் கட்டாயம் இருக்க வேண்டும் எனப்பிரச்சாரம் செய்தவர். திருமணம் ஆகாமலேயே, தமது வாழ்நாளைக் கடந்த ஞானி.

மதுரை ஆதீனக்குரு மூலவர் சீர்காழிப் பேரரசர் திருஞானசம்பந்தப் பெருமான் மீது மிகுந்த பற்றுதலும், பக்தியும் கொண்டவர். எல்லா மதங்களின் தத்துவங்களையும் அனைத்து ஞானிகளின் போதனைகளையும் அறிந்தவர். அரசியல்வாதிகள், எப்படி மக்களிடம் நடந்து கொள்ள வேண்டும், அரசாங்கம் எப்படித் தமது ஆட்சியைச் செலுத்த வேண்டும் என்று உபதேசம் செய்த அரசியல் ஞானி.

லஞ்ச, ஊழல் இல்லாத ஆட்சி மாத்திரமே நாட்டு மக்களுக்கு வளத்தையும், நிம்மதியையும் தந்து வாழ வைக்க முடியும் என எடுத்துரைத்தவர். ஆட்சியாளர்களுக்கு எந்த ஒரு தனி மனிதன் மீதோ, எந்த ஒரு அமைப்பின் மீதோ, எந்த ஒரு இயக்கத்தின் மீதோ விரோத குரோதங்கள் இருக்கக் கூடாது என முழங்கியவர். ஆண்டவனைப் போல, கருணையும், இரக்கமும் கொண்டு ஆட்சி செய்ய வேண்டும் என பறைசாற்றியவர்.

ஒரு மாமனிதனுக்கு நூற்றாண்டு விழா, ஒரு ஞானிக்கு நூற்றாண்டு விழா, ஒரு நல்லவருக்கு நூற்றாண்டு விழா சிறப்பாக நடக்கட்டும். தேவர் பெயரில் இயங்கிவரும் அனைத்து இயக்கங்களும் ஒன்று சேர்ந்து ஒரே இயக்கமாக மாறட்டும். ஒரே தலைவனின் கீழ் இயங்கட்டும். ஒரே குடையின் கீழ் வலம் வரட்டும். வன்முறையை அறவே அகற்றி, நல்ல தலைவர்களின் சொல் கேட்டு பண்பாடு, பணிவு, பக்தி கொண்ட இயக்கமாக உருவாகட்டும். தேவரின் நூற்றாண்டு விழாக் காணுகின்ற இப்புனித நாளில் இருந்தாவது இந்த உபதேசத்தைக் கடைப்பிடித்து, வளமான, அமைதியான, நிம்மதியான வாழ்வைப் பெற்றிட விரும்பும், மதுரைஆதீன 292 ஆவது பட்டத்துப் பேரரசர் ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர்.

– திருச்சிற்றம்பலம் –



**அதிகாரத்தை வைத்து தப்பு செய்தவன்,**
**முன்னுக்கு வந்தது கிடையாது, வருவதும் கிடையாது.**



சிங்கப்பூர் சென்று திரும்பிய போது மதுரை வரவேற்பில் தேவர்.



1957 தேர்தல் வெற்றி விழாக் கூட்டத்தில் தேவர்.

# தெய்வப் பிறவி தேவர்

டாக்டர். **எம். நல்லகாமன்,**
இணைப் பேராசிரியர்,
பசும்பொன் தேவர் நினைவுக் கல்லூரி, கமுதி.

**த**மிழக மக்களால் தேவர் மகன், தெய்வீகத் திருமகன், அரசியல் மேதை, ஆன்மீக ஞானி, தக்ஷிண போஸ், தென்னாட்டுத் திலகர் என தம் நெஞ்ச மன்றத்தில் வைத்து நித்தமும் பூஜிக்கப்பெறுபவர் பசும்பொன் தேவர். ஏழை எளிய உழைக்கும் மக்களின் உணர்வோடும் உதிரத்தோடும் இரண்டறக் கலந்து நிற்பது தேவரவர்களின் தியாக வரலாறு.

சரித்திர சாதனைகளை சாதித்துக் காட்டிய பெருமக்கள் இம்மண்ணுலகில் தோன்றும் பொழுது அற்புதங்கள் ஏற்பட்டதாக சொல்லப்பட்டிருக்கிறது. பசும்பொன் தேவர் தோன்றி வாழ்ந்த 1908 முதல் 1963 ஆண்டு முடிய உலக அரங்கிலும், இந்திய அரசியல், பொருளாதார, சமூகத் துறைகளிலும் பெருத்த மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. இம்மாற்றங்களுக்கு வங்கச் சிங்கம் வைரவீரன் நேதாஜியும் தங்கத் தமிழக தெய்வம் தேவரும் பெரிதும் காரணமாக இருந்தனர் என்பதை காலம் கணக்காய் பதிவு செய்து வைத்துள்ளது. தற்செயலாய் ஏற்படும் வாய்ப்புகளை தனக்கு சாதகமாக அமைத்துக் கொண்டு மற்றவர்களை சார்ந்து நின்று பயன்பாட்டை பெற்று விடுவது ஒருவகை. அரசியல் சூழ்நிலைகளை உண்டாக்கி, எதிர்த்தரப்பை கதிகலங்கச் செய்து செயல் வெற்றி கண்டபின்பு தான் எவ்வித பயனையும் அடையாமல் விரும்பியவர்கள் பயன்பெற விட்டுவிட்டு ஒதுங்கி விடுவது மற்றொரு வகை. இவ்வகையில் நின்று சிறப்புக்குரிய செயல்களைச்செய்து வெற்றி பெற்று பதவி என்று வரும் போது மற்றவர்களுக்கு வழிவிட்டு நின்றவர்கள் நேதாஜியும், பசும்பொன் தேவரும் ஆவார்கள்.

### தேவர் பார்வையில் பெண்கள்

பெண்ணின் பெருமை, பெண் விடுதலை என்று நாளும் மேடையில் பேசித்திரியும் பலர் பெண்களை வெறும் போகப் பொருளாகவே கருதுகின்றனர். தேவர் பெண்களை ஆதிபராசக்தியின் அம்சமாகக் கருதி போற்றி வணங்கினார். பெண்கள் சக்தி பெற்று பொருளாதார மேம்பாடு கண்டால் வீடு சிறப்படையும். வீடு உயர்ந்தால் நாடுயரும் என்றார். 1959ல் தனது பாராளுமன்ற உரையில், பெண் கல்வி பெண் பாதுகாப்பு பற்றி விரிவாகக் குறிப்பிட்டுள்ளார். தேவரின் தலைவர் நேதாஜி தனது இந்திய தேசீய ராணுவத்தில் பெண்களையும் சேர்த்தார். அவர்களுக்கு போர்ப் பயிற்சி தந்து துப்பாக்கியேந்தி போரிடச் செய்தார். தான் அமைத்த ''ஆஸாத் ஹிந்த்'' சர்க்காரில் கேப்டன் லட்சுமியை அமைச்சராக்கினார். மகளிர் பட்டாளத்திற்கு ஜான்ஸிராணி ரெஜிமெண்ட் என்று பெயரிட்டார்''. அமெரிக்காவின் சிகாகோ நகர் சர்வமத மாநாட்டில் பேசிய விவேகானந்தர் சகோதர, சகோதரிகளே என்று அழைத்து உலகையே ஈர்த்தார். இதனடிப்படையில் தேவர் பெண்களை தாயாக, பராசக்தியின் வடிவமாகக் கருத வேண்டும் என்றார். அவர்களை அவமதிப்பது போல அமைந்த பர்மியப் பெண்களின் வரவேற்பு தகாதது என்று பர்மா பயணத்தின் போது கூறியுள்ளார். ஆன்மீகவாதிகள் என்ற பெயரில் கபடதாரிகளாக, பெண்களை சுகித்துத்திரியும் போலிச் சாமியார்களைக் கடுமையாக சாடியுள்ளார்.

### தேவரின் பேச்சாற்றல்

தேவரின் மேடைப் பேச்சு தங்குதடையில்லாத தெள்ளிய ஆற்றோட்டம் போலிருக்கும். அரசியல் மேடையில் ஆன்மீகம் கலவாமலும், ஆன்மீக மேடையில் அரசியல் வாடையில்லாமலும் பேசுவார். அரசியல் பேசும் போது ஆவேசமிருக்கும். ஆபாசம் இராது. நிறையப் பழமொழிகளை இடமறிந்து

பயன்படுத்துவார். ஆங்கிலம், தமிழ் இரண்டிலும் தமிழகத்தின் ஈடு இணையற்ற பேச்சாளர். பேச்சில் அவ்வப்போது நகைச்சுவை இழையோடும், வரலாற்றைப் பேசினால் கால வரிசையாகக் குறிப்பிடுவார்.

''தேசத்திற்கு என்ன நன்மை செய்யலாம் என்று எண்ணிக்கொடுப்பவன் தேசீயவாதி. தேசத்திடம் இருந்து எதை எடுத்துக் கொள்ளலாம் என எண்ணுபவன் அரசியல்வாதி'' தேசபக்தனுக்கு தேசமே குறி. தேசீயவாதி அடுத்த தலைமுறையைப் பற்றி சிந்திப்பான். அரசியல்வாதி அடுத்த தேர்தலை எண்ணியே செயல்படுபவான் என்பார்.

''நூறு ஏழை ஒரு பணக்காரனை உருவாக்குகிறான். ஒரு பணக்காரன் ஆயிரம் ஏழைகளை உருவாக்கிவிடுகிறான்'' என்று பொருளாதாரச் சிக்கலைத் தெளிவு படுத்துவார்.

''விவசாயி அவன் உற்பத்தி செய்யும் உற்பத்திப் பொருளுக்கு விவசாயியே விலை நிர்ணயம் செய்யும் உரிமை வேண்டும்'' என்று விவசாயி நலன் பற்றிப் பேசுவார்.

''அடியேனது சேவையினால் நன்மையெல்லாம் மக்களுக்கு, தீமையெல்லாம் அடியேனுக்கு'' என்று மக்கள் தொண்டின் மாண்பை உணர்த்துவார். ''பசி, பட்டினி, இல்லாமை, இன்னல் இவற்றைத் தாங்கிக் கொள்ளும் சக்தியை வளர்த்துக் கொள்ளாதவன் சரியான தலைவனோ, தொண்டனோ அல்லன்'' என்று இலக்கணம் வகுப்பார். மக்களை ஈர்க்கும் மகாசக்தி படைத்த பேச்சாளர் தேவர். நாவசைத்தால் நாடசைந்தது, வாயசைத்தால் வையம் அசைந்தது, எனவேதான் சூரியன் மறையாத பேரரசைப் பெற்றிருந்த பிரிட்டீஷ் ஏகாதிபத்தியம் தேவர் நாவசைவிற்கு அஞ்சியது. வாய்ப்பூட்டுச் சட்டம் போட்டது.

**தேவர் ஆன்மீக ஞானி**

தேவர் பிறப்பாலேயே ஆன்மீக நம்பிக்கை கொண்ட குடும்பத்தைச் சார்ந்தவர். ஆடுதுறை சைதன்ய சுவாமிகளை தனது ஆன்மீக குருவாகப் பெற்றவர். மதுரை ஆதீனம் 291வது குரு மகாசன்னிதானம் அவர்களால் ''சன்மார்க்க சண்ட மாருதம்'' என புகழப்பெற்றார். இமயஜோதி சுவாமி சிவானந்தரால் ''வித்யா பாஸ்கரன் பிரவசன கேசரி'' என பாராட்டப்பெற்றார். காஞ்சி பெரியவர், சிருங்கேரி சாரதா பீடம், திருமுருக கிருபானந்த வாரியார், சுந்தானந்த பாரதியார் போன்றவர்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டவர்.

சுத்த சன்மார்க்க நெறியில் ஈடுபாடு கொண்டவர். வள்ளலார் ஜோதி ராமலிங்கப் பெருமானிடம் தான் கொண்ட ஈடுபாட்டின் காரணமாக தனது தோற்றத்தை மாற்றிக் கொண்டவர். தனது பசும்பொன் இல்லத்தில் உள்ள பூஜை அறை முன்பு ''வள்ளலார் இல்லம்'' என்று பெயர் பலகை பொருத்தியது தான் தேவர் அந்த வீட்டில் செய்த மிகப்பெரிய மாற்றம். ''நைஷ்டீக பிரம்மச்சாரி'' முக்காலமும் உணர்ந்தஞானி. அவரது இறுதிச் சடங்குகூட ஆன்மீக ஞானிகளுக்குரிய முறையிலேயே நடத்தப்பட்டது. இதை நடத்தியவர் வல்லநாடு சாது சிதம்பரம் சுவாமிகள் ஆவார்கள்.

**தேவரை தெய்வமெனப் போற்றும் மக்கள்**

தேவரை தெய்வமாக தமிழ்க் கடவுள் முருகப் பெருமானின் மறுவடிவாய்ப் பார்க்கின்றனர். வடலூர் வள்ளல் ஜோதி ராமலிங்க சுவாமியின் சுந்தர ரூபமாய்க் கருதுகின்றனர். 1911 ஆம் ஆண்டில் வெள்ளையர் அரசு குற்றப்பரம்பரைச் சட்டம் கொண்டு வந்து, அதை 1914ல் மதுரை மாவட்டத்தில் நடைமுறைக்குக் கொண்டு வந்தது. இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டத்தில் வாழ்ந்த மறவர்கள், புதுக்கோட்டை

கள்ளர், வேப்பூர் பறையர், பள்ளர் இனத்தில் ஒரு பிரிவான காலாடி, உள்ளிட்ட சாதியினர் மீது இக்கொடிய சட்டம் பாய்ந்தது. எந்த குற்றச் செயலில் ஈடுபடாதவர்கள் கூட குறிப்பிட்ட சாதியில் பிறந்தமைக்காக தண்டனைக்கு உள்ளாக்கப்பட்டனர். இந்த சட்டத்திற்கு உள்ளானவர்களின் பெற்ற தாய் உயிருக்குப் போராடிக் கொண்டிருந்தாலும், இறந்தே கிடந்தாலும் ஆண்கள் அனைவரும் அந்தி மாலை 6 மணியானதும் அருகில் உள்ள காவல் நிலையத்திற்குச் சென்று அங்கேயே படுத்திருக்க வேண்டும். மறுநாள் காலை விடிந்த பின்பு வீடு வந்து இறுதிச் சடங்கு செய்ய வேண்டும் என்பது நடைமுறையில் இருந்தது.

இந்த கொடிய சட்டத்தை எதிர்த்து மதுரை மாவட்டம் பெருங்காமநல்லூர் மக்கள் களம் இறங்கினர். 3.4.1920ல் பிரிட்டீஷ் போலீஸார் காட்டுமிராண்டித்தனமாக துப்பாக்கியால் சுட்டனர். மாயக்காள் என்ற பெண் உள்பட 17 பேர் கொல்லப்பட்டனர். பல நூறு பேர் காயம் பட்டனர். 750 பேர் சிறைப்பிடிக்கப்பட்டனர். கைது செய்யப்பட்டவர்கள் சுமார் 60 மைல் தூரம் கால்நடையாக இழுத்துச் செல்லப்பட்டனர்.

இந்த சமயத்தில் பசும்பொன் தேவர் பசுமலை பள்ளியில் மாணவர். சக மாணவர்கள் மூலம் கேள்விப்பட்டு நெஞ்சம் குமுறினார். 1934ல் அபிராமத்தில் ரேகைச் சட்ட எதிர்ப்பு மாநாட்டை நடத்தினார். தொடர்ந்து சிவகாசி, உசிலம்பட்டி, கருமாத்தூர் போன்ற இடங்களில் ரேகைச் சட்டத்திற்கு எதிர்ப்பு மாநாடு நடத்தினார். கை ரேகை வைக்காதே, கட்டை விரலை வெட்டிக் கொள் என்று பேசினார். மக்கள் எழுச்சி பெற்றனர். தேவரின் தொடர்ந்த போராட்டத்தால் மக்கள் விடுதலை பெற்றனர். தங்களுக்கு மறுவாழ்வு தந்த தேவரை அம்மக்கள் தெய்வமெனப் போற்றினர்.



**போனால் வராதது இரண்டு - மானமும் மரணமும்.**
**வந்தால் போகாதது இரண்டு- கீர்த்தியும் அவகீர்த்தியும்.**
**போய்விட்டு வருவது இரண்டு- செல்வமும் வறுமையும்.**

# மக்கள் மனங்களில் வாழும் தேவர்

டாக்டர். **வி. சாலமான் செல்வம்,**
சமூகவியல் பேராசிரியர்,
கிளாப்ளின் பல்கலைக்கழகம்,
அமெரிக்கா.

இந்தியாவில் விடுதலை போராட்ட அரசியலில் இறங்கியோர் பலர் நாட்டுக்காக பல எண்ணற்ற தியாகங்களை செய்துள்ளனர். இன்னும் சிலர் நாட்டுக்காக திருமணம், குடும்ப சொத்து உட்பட அனைத்தையும் தியாகம் செய்துள்ளார்கள். அவர்களில் ஒருவர் கடந்த நூற்றாண்டில் வாழ்ந்தவர்.

இந்திய விடுதலைப் போரில் தமிழகத்திலும், காந்தி – நேதாஜி பிளவில் நேதாஜி தலைமையைக் கொண்டு வருவதிலும் பெரும்பங்காற்றியவர் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் என்பதை நாடறியும். ஆனால் பிறந்த ஆறே மாதங்களில் தாயை இழந்து தந்தை குடும்ப சொத்தை விரயம் செய்து வாழும் உல்லாச வாழ்க்கையை எதிர்த்து, இளம் வயதில் செல்வந்த குடும்ப பொறுப்பை ஏற்று, பெரும் சோதனைகளுக்கு மத்தியில் வாழ்ந்த கொண்டிருந்த பொழுது, தேவர் ஏன் தேசீய அரசியலுக்கு வந்தார் என்பதை இன்றைய சமுதாயம் அறியா ! தேவரின் அரசியல் பிரவேசத்தின் பின்னணியை புரிந்து கொள்வதும் அதை வெளி உலகுக்குத் தெரியப்படுத்துவதுமே இக்கட்டுரையின் நோக்கம்.

மனிதனின் உடனடி, நீண்ட கால நடவடிக்கைகளுக்கு அவன் வாழும் சூழ்நிலையே காரணம் என்கிறார்கள் தத்துவஞானிகள். தேவரின் அரசியல் பிரவேசத்திற்கான, வீட்டு, நாட்டு, சூழ்நிலையைக் காண்போம்.

பொதுவாக செல்வந்தர் வீட்டில் பிறந்து வளர்ந்தால் இளமையில் சுகபோகத்தை அனுபவிப்பதிலும், அதன்பின் அச்செல்வத்தைக் கட்டி காப்பதிலும், அதிகரிப்பதிலும் குறியாகவே இருப்பார்கள் என்பது சரித்திரம். இதில் சில விதி விலக்குகள் உண்டு. அதில் ஒன்று பசும்பொன்னில் தோன்றிய விளக்கு, அது மிகவும் பிரசித்தி பெற்ற விளக்கு.

''ஏகாதிபத்தியம் தன் எதிரியை, தானே உருவாக்கும்'' என்பதை பார்க்கிறோம். அதில் காந்தியும், சேகுவாராவும் இரு துருவங்கள். காந்தி கத்தியின்றி வெறும் கரங்களாலும், சேகுவாரா கத்தி முனையிலும் ஏகாதிபத்தியத்தை அடிபணியவைத்து சரித்திரத்தில் மாபெரும் இடத்தை பிடித்தவர்கள். ஆனால் தேவர் இவ்விரு முறைகளையும் உள்ளடக்கி நாவன்மையையே பிரதான ஆயுதமாக வைத்து அனைத்து சுகபோகங்களையும் ஒதுக்கி, வெகு ஜனங்களைத் தனது கேடயமாகக் கொண்டு, வெள்ளைய ஏகாதிபத்தியத்தை சரணடைய வைத்தார். இவருக்கு போட்ட வாய்ப்பூட்டுச் சட்டம் இதற்கு ஓர் எடுத்துக்காட்டு ஆகும்.

தேவரின் வம்சாவழியில் அதிகம் குழந்தைகள் பிறக்கா, ஒன்று அல்லது இரண்டு தான் பிறக்கும். மாற்றான் தாய்களின் பாலிலும், மடிகளிலும், பாட்டிகளின் அரவணைப்பிலும், வளர்ந்த இக்குழந்தை, கல்வி கற்ற இடங்கள் கமுதி, பசுமலை, மதுரை யூ.சி. உயர் நிலைப் பள்ளி, இராமநாதபுரம் ராஜா உயர் நிலைப்பள்ளிகள் ஆகும். பரவுகின்ற பிளேக் நோயால் பேரன் இறந்து விடுவான் என்று பாட்டிமார்களால் பள்ளி இறுதிநிலையிலிருந்தும், தேவரின் பள்ளி படிப்பு தடைப்பட்டது. அத்துடன் படிப்பு முடிந்து விட்டது. பிற்காலத்தில் மாமேதை என்று அழைக்கப்பட இருக்கும் இக்குழந்தை இனி படிக்கப்போவது அனைத்தும், சொந்த முயற்சியாலும், வெளி உலக அரசியல் அனுபவத்தாலுமே. தேவரின் தமிழ்ப்புலமை

நிகழ்கால தமிழ் சரித்திரத்தில் நிகரற்றது, ஆங்கிலப்புலமை ஆங்கில இலக்கியம் கற்றவர்களாலேயே வியந்து பாராட்டப்பட்டது.

தேவர் அரசியலில் குதித்தது ஒரு விபத்து போன்றது, திட்டமிடாதது என்பார்கள் பலர். அதை ஏற்றுக் கொள்ளாதவர்களில் நானும் ஒருவர்.

தமது சொத்துரிமை வழக்கிற்காக 1927 ல் தனது 19 வயதில் தேவர் மகன் என்ற அடை மொழியுடன் சென்னை செல்கிறார். அங்கு சட்ட வல்லுனர் ஸ்ரீமான் சீனிவாச அய்யங்காரின் வேண்டுகோளுக்கு இணங்க அகில இந்திய காங்கிரஸ் கட்சியின் மாநாட்டில் கலந்து கொள்கிறார். அகிம்சை முறையின் தளகர்த்தர் காந்தி, இந்திய சுதந்திர போரில் புரட்சிப் புயலை கிளப்பி கொண்டிருக்கும் ''நேதாஜி'' என்ற பட்டத்தைப் பெற இருக்கும் வங்கம் தந்த சிங்கம் சுபாஸ் சந்திரபோஸ், இருவருக்கும் மத்தியிலுள்ள ஜவஹர்லால் நேருவும் மற்றவர்களும் பங்கேற்றார்கள். தேவர் மகன், நேதாஜிக்கு மாநாட்டில் உதவி செய்ய சந்தித்த போது காந்தம் இரும்பை ஈர்ப்பது போல போஸால் ஈர்க்கப்பட்டு, பட்டாடையை கழட்டி எறிந்து விட்டு கதராடையுடன் சேது நாட்டில் மீண்டும் வந்திறங்குகிறார்.

நடந்த, நடக்கின்ற, நடக்க இருக்கின்ற சம்பவங்கள், சூழ்நிலைகள் தேவர் மகானது மாகாவியமாக பிற்காலத்தில் அமைய போகின்ற வாழ்க்கையைப் பெரிதும் தாக்கம் செய்யும்.

குடும்ப பொறுப்பை ஏற்ற பின் தந்தை உக்கிரபாண்டியத்தேவருக்கு இருந்த சமுதாய கடமை, சமூகத்தின் சிறப்பும் பாராட்டும், மரியாதையும் காலத்தின் கட்டாயத்தால் பெருகியது. நாள், வாரம், மாதம் என்று இடையின்றி வருடம் முழுவதுமாக ஊர், சமுதாய, நாட்டுப் பிரச்சினைகள் மற்றும் அவைகளின் பஞ்சாயத்துகளில் தேவர் மகானின் தலையீடு தேவைப்பட்டதால் சமுதாயப்பணி முழு நேரமாகி விட்டது. இந்தக் காலக் கட்டத்தில் 1933ல் சாயல்குடியில் விவேகானந்த வாசக சாலையின் முதலாண்டு நிறைவு விழாவில் உரையாற்றினார். அந்த உரையில் விவேகானந்தர் இந்திய தேசீயத்திற்காக இளைஞர்களுக்கு விட்ட அறை கூவல் அதற்கு தேவையான தியாகம் தேவர் மகனின் பேச்சின் சாராம்சம்.

அதே சமயத்தில் காங்கிரஸ் மகாசபையின் கொள்கை, கட்டளைப்படி கள்ளுக்கடை மறியல், ஹரிஜன் நல சேவாசங்க நடவடிக்கைகளில் முழு ஈடுபாடு கொண்டிருந்தார். இந்தக் கால கட்டத்தில் தான் பிரிட்டிஷ் அரசு தனது ஆட்சியை நிலை நிறுத்த, அதை எதிர்த்த மக்கள் அனைவரையும் C.T. Act. என்ற குற்ற பரம்பரைச் சட்டத்தின் மூலம் அடக்கு முறையை கொண்டு வந்தது. அதை எல்லா வகையிலும் எதிர்த்தார். அதன் காரணமாக சென்ற இடமில்லாம் கொட்டு குலவையுடனும், தாரை தப்படையுடன் தேவர் மகான் தலைமையை வரவேற்றனர், வணங்கினர், வணங்குகின்றனர்.

சமூக பிரச்சனைகளைத் தீர்ப்பதில், விவேகானந்தர் இளைஞர்களுக்கு விட்ட தெய்வீக தேசீய அறைகூவல், நேதாஜியின் தேசீயத்திற்கான போராட்டம், குற்றப்பரம்பரை ரேகைச் சட்டத்தின் கொடுமையை எதிர்க்க வேண்டிய அவசியம், தீண்டாமை ஒழிப்பு போராட்டம், மதுரையில் தொழிலாளர்களின் வீர போராட்டத்திற்கு தலைமை, இந்திய தேசீயத்தை விடுதலை செய்ய காங்கிரஸ் கட்சிக்கு பேருதவி செய்ய வேண்டிய நிர்பந்தம், ஆகியவைகள் இந்திய அரசியலில் தேவரின் பரிணாம வளர்ச்சி கட்டங்கள் ஆகும்.

இந்த மகத்தான புனித தேசீய சேவைக்கு திருமண, குடும்ப வாழ்க்கை பெரும் தடைகளாக இருக்கும் என கணித்து, அவைகளை ஒதுக்கி, தன் அப்பழுக்கற்ற அரசியல் மூலம் சாகும் வரை அஞ்சாமல் தேசீயப்பணிபுரிந்தவர் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் என்பதை இன்றைய, எதிர்கால இளைஞர் சமுதாயம் அறிந்திட வேண்டும்.



# தேசீயத்தையும் தெய்வீகத்தையும் போற்றிய தேவர்

**பி.டி. குமார்,**
நிறுவனர் மற்றும் தலைவர்,
திராவிட விழிப்புணர்ச்சி கழகம்,
சென்னை.

தேசீயத்தையும், தெய்வீகத்தையும் இரு கண்களாக போற்றி வாழ்ந்து, மண்ணை விட்டு மறைந்தாலும் மக்கள் மனதில் நீங்காது வாழ்ந்து வருகிறார் தெய்வீகத்திருமகன் பசும்பொன் உ. முத்துராமலிங்கத் தேவர்.

அடிமை இந்தியாவின் சுதந்திரக் காற்றை சுவாசித்தேதீருவேன் என்று வீறு கொண்டு எழுந்து ஆங்கிலேயர்களே நடுங்கும் வண்ணம் இந்திய தேசீய ராணுவத்தை அமைத்து இந்திய சுதந்திரத்திற்கு போராடிய நேதாஜி சுபாஷ் சந்திர போஸின் ஒப்பற்ற தளபதியாகவும், நெருங்கிய நண்பராகவும் விளங்கி, நான் அடுத்த பிறவியில் தென்னாட்டு மறவனாக (வீரனாக) பிறக்க விரும்புகிறேன் என்று நேதாஜியே சொல்லி வியக்கும் வண்ணம் இந்திய தேசீய ராணுவத்தில் பெருமளவு தமிழக வீரர்களை சேர்த்து நேதாஜிக்கு பெருமை சேர்த்தவர் பசும்பொன் தேவர் அவர்கள்.

''சொல்லுதல் யார்க்கும் எளிய அறியவம்
சொல்லிய வண்ணம் செயல்''

என்ற திருக்குறளை தன் வாழ்க்கை நெறியாக்கி வெறும் மேடைப் பேச்சாக மட்டுமே இருந்து வந்த சமத்துவப்போக்கை ஜாதி, சமயம் அல்லாத சமத்துவ சமுதாயம் அமையும் எண்ணத்துடன் தாழ்த்தப்பட்ட மக்களை மதுரை மீனாட்சி அம்மன் ஆலயத்திற்குள் அழைத்துச் சென்று இன்றும் தாழ்த்தப்பட்ட மக்கள் போற்றிடும்படியாய் திகழ்ந்தவர் பசும்பொன் தேவர் அவர்கள்.

தொழிலாளர்கள் வாழ்வில் மறுமலர்ச்சி ஏற்படும் வண்ணம் தொழிற்சங்கங்களை அமைத்து தொழிலாளர்களின் அடிப்படை கோரிக்கைகளை நிறைவேற்ற பல்வேறு போராட்டங்களை நடத்தி வெற்றி கண்டு ஒட்டு மொத்த தொழிலாளர்களின் ஒப்பற்ற பிரதிநிதியாக திகழ்ந்தவர் தேவர்.

**தெய்வீகத்திருமகனுக்கு**
**புகழ் சேர்த்த கலைஞர் அரசு**

நாட்டு மக்களின் நல் இதயங்களில் இன்றும் அணையா அறிவொளி தீபமாக ஒளிர்ந்து கொண்டிருக்கும் தெய்வீகத்திருமகன் பசும்பொன் தேவருக்கு வானுயர சிலை கண்டு வான்புகழ் பெருமை சேர்த்தவர் மாண்புமிகு தலைவர் கலைஞர் அவர்கள்.

உலகத்தமிழர்களின் ஒப்பற்ற தலைவராக விளங்கி வரும் கலைஞர் அவர்கள் தனது ஆட்சி பீடத்தில் இருந்த போது கமுதி, உசிலம்பட்டி, சங்கரன்கோவில் பகுதிகளில் பசும்பொன் தேவர் பெயரில் கல்லூரிகளை கண்டு மகிழ்ந்தவர் திராவிட இயக்கத்தின் விடிவெள்ளி டாக்டர் கலைஞர் அவர்கள்.

தெய்வீகத்திருமகனுக்கு மேலும் மேலும் புகழ் சேர்க்கும் விதமாக பசும்பொன் தேவரின் நூற்றாண்டு விழாவையொட்டி தேவரின் நினைவிடத்தில் தேவரின் உண்மை வரலாற்றை அனைவரும் அறியும் விதமாக நினைவிடத்தை விரிவாக்கி புதுமைப் படுத்துதல் மற்றும் பசும்பொன் கிராமத்தில் பல்வேறு வளர்ச்சி திட்டங்களுக்காக கோடிக்கணக்கில் நிதி ஒதுக்கி நூற்றாண்டு விழா பணிகளுக்கு உத்திரவிட்டவர் வாழும் வள்ளுவர் தலைவர் கலைஞர் அவர்கள்.

தேவரின் நூற்றாண்டு விழாவை அரசு பொது விழாவாக அறிவித்து பார் போற்றும் விதமாக நூற்றாண்டு விழா ஏற்பாடுகளை

செதுக்கிக் கொண்டிருக்கும் தலைவர் கலைஞர் அவர்களின் உயரிய சிந்தனையில் உருவெடுத்துள்ள கருத்துக்களுக்கு செயல் வடிவம் கொடுக்கும் வண்ணமாய் தன்னிகரற்ற மாண்புமிகு முதல்வர் கலைஞர் அரசிற்கு முழு ஒத்துழைப்பு அளித்து பசும்பொன்தேவரின் நூற்றாண்டு விழாவை உலக மக்கள் வியக்கும் வண்ணம் சிறப்பாக கொண்டாடி மகிழ்வோம்.

**உறுதி மொழி ஏற்போம்**

''வீரமற்ற விவேகம் கோழைத்தனம்
விவேகமற்ற வீரம் முரட்டுத்தனம்''

என்ற வாக்கிற்கு உருவாய் வாழ்ந்தவர் பசும்பொன் தேவர் அவர்கள். தேவரய்யாவைப் பின்பற்றும் இளைஞர்கள் தேவர் கூறிய பொன்வாக்கினை வாழ்வில் பொதுமறையாக ஏற்று, தான் பிறந்த வீட்டிற்கும், நாட்டிற்கும், சமுதாயத்திற்கும் ஒரு நல்ல வழி காட்டியாக வாழ வேண்டும் என மனித கடவுள் பசும்பொன் தேவரின் இந்த பொன்னான நூற்றாண்டு விழாவில் உறுதி ஏற்று தேவரின் புகழ் இனி வரும் எதிர்கால சந்ததியினரிடமும் நிலைத்து நிற்கும் வண்ணம் வாழ்வோம்.



# தேவருடன் நீங்காத நினைவுகள்

**க. ராஜாத் தேவர்,**
செங்குளம் கிராமம்,
மதுரை மாவட்டம்.

மதுரை மாவட்டம், திருமங்கலம் அருகில் உள்ள செங்குளம் கிராமத்தில் வசித்து வரும் எனக்கு 85 வயது ஆகிறது. என்னுடைய தந்தை கழுவத் தேவர் முதுகுளத்தூரில் காவல் உதவி ஆய்வாளராக பணி புரிந்தவர். அந்த சமயத்தில் எனக்கும் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவருடன் பழகும் வாய்ப்பு கிடைத்தது. இந்த நட்பின் தொடர்ச்சியாக நான் பசும்பொன் முத்துராமலிங்கத்தேவருடன் பல போராட்டங்களில் ஈடுபட்டு 21 முறை சிறை சென்றுள்ளேன். அவருடன் தொடர்ந்து பல ஆண்டுகள் இயக்கப் பணி ஆற்றி உள்ளேன். பசும்பொன் முத்துராமலிங்கத்தேவருடன் இருந்த காலங்களில் அவரிடம் காணப்பட்ட சிறப்பு இயல்புகள் எனது நினைவில் நீங்கா இடத்தை பெற்றுள்ளன.

அரசியல் அழியும், ஆன்மீகம் நிலைக்கும் என்பது அவருடைய இறுதி பிரச்சாரம், பசும்பொன் முத்துராமலிங்கத் தேவருக்கு படிக்க தெரியாது. ஆனால் சட்டமன்றத்திற்கு சென்று கொண்டிருக்கிறார் என்று பலர் இகழ்வாக பேசியதுண்டு. 1945ல் 11 சட்டமன்ற தொகுதிகள் கொண்ட நாடாளுமன்றத் தொகுதியில் காக்கா மார்க் தீப்பெட்டிகள் கம்பெனி முதலாளி சிவகாசி நாடாரை எதிர்த்து போட்டியிட்டு 1 லட்சத்து 50 ஆயிரம் ஓட்டு வித்தியாசத்தில் வெற்றி பெற்றார். தேவர் 10ஆம் வகுப்பு வரை படித்தவர். இவருடைய தாயார் பெயர் இந்திராணி, தந்தையார் பெயர் உக்கிரபாண்டித் தேவர். ஒரே மகனாக இருந்ததால் சொத்துக்காக தேவரை சிறுவயதிலேயே கொலை செய்ய முயற்சி நடைபெற்றது. அவருடைய மைத்துனர் தங்கவேல் தேவர் தான் அவருக்கு பாதுகாப்பாக இருந்தார்.

பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் அவர்கள் பல கலைகளில் தேர்ச்சி பெற்றிருந்தார். கடவுளைப் பற்றி கூறும் போது Nothing but one thing i.e. God. ஒன்றுமில்லாத ஒன்றுக்குள் ஒன்று இருக்கிறது. அதுதான் கடவுள் என்று தேவர் குறிப்பிடுவார். தேவருக்குச் சொந்தமான 32 ஊர்களில் புளிச்சங்குளம் ஒன்று. இந்த ஊரில் ஒவ்வொரு சித்திரை வருடப் பிறப்பிற்கும் தேவர் ஏர் கட்டுவார். அன்றைய தினம் பொங்கல் வைத்து கடவுளிடம் மழை பெய்ய வேண்டும் என்று வணங்குவார். அவருக்கு சொந்தமாக பண்ணையில் 11 ஜோடி மாடுகள் இருந்தன. அதில் ஒரு ஜோடி மாடு வேலை செய்வதில்லை. வேலையாட்களை இம்சித்தது. யாராலும் அடக்க முடியாத அந்த மாடுகளை தன் கையில் வாங்கி மாட்டின் காதின் வலதுபுறம் ஓரத்தில் தன் கையை வைத்தார். மாடு கீழே விழுந்தது. சிறிது நேரம் கழித்து எழுந்த மாடு அடங்கி ஏர் உழுதது. இந்த நிகழ்வு அவர் கற்ற வர்மக் கலைகளின் தேர்ச்சிக்கு எடுத்துக்காட்டாகும்.

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்கள் சட்டமன்ற உறுப்பினராக இருக்கும் போது சென்னையில் உள்ள சட்டமன்ற உறுப்பினர் விடுதியில் தங்குவார். பல சட்டமன்ற உறுப்பினர்கள் ஆடம்பரத்தையும், வசதியையும் அனுபவிப்பார்கள். ஆனால் அவர் உறங்கும் போது துண்டை விரித்து தன் கையை தலைக்கு வைத்து உறங்குவார். ஏன் தலைக்கு தலையணை வைக்காமல் உறங்குகிறீர்கள் என்று கேட்கும் போது தாயின் கருவறையில் நான் எப்படி இருந்தேனோ அப்படியே இருக்க விரும்புகிறேன் என்பார். இது அவரது எளிமையை எடுத்துக்காட்டுகிறது.

ஒரு நாள் பசும்பொன்னில் தேவர் இருக்கையில் அமர்ந்து இருந்தார். அப்பொழுது அவரைப் பார்க்க நான்கு பெண்கள் வந்திருந்தனர்.

ஒருவர் தேவரின் அத்தை மகளும் ஆவார். அவரின் அத்தை மகள் உக்கிரபாண்டியன் மாமாவுக்கு வாரிசு வேண்டாமா ? என்று அழுது கண்ணீர் விட்டார். உடனே தேவர் எல்லாப் பெண்களையும் என் தாய் இந்திராணியைப் போல் தான் பார்க்கிறேன், என்ன செய்வது என்று கூறி அனுப்பி வைத்தார். இது அவரின் பிரம்மச்சாரியத்தைப் பறைசாற்றுகிறது. சுவாமி விவேகானந்தர் போதனைகள் மீது மிகவும் பற்றுக் கொண்டிருந்தார்.

பணத்தை கையால் தொடுவதில்லை என்றும், தனக்கு சொந்தமான 32 கிராம வருவாயையும் ஏழை, எளிய மக்களுக்கு, வழங்கி வந்தார். இது அவருடைய ஈகை குணத்திற்கு எடுத்துக்காட்டாகும். தேவர் பிறந்து ஆறு மாதமாக இருக்கும் போது அவரின் தாயார் இந்திராணி அம்மையார் இறந்து விட்டார். அப்பொழுது முதல் அவருக்கு ஒரு இஸ்லாமியத் தாய் பால் ஊட்டி வளர்த்தார். அந்தத் தாய்க்கு தேவர் 12 மூடை நெல்லும் ஆண்டுக்கு 6 சேலைகளும் வழங்கினார். தேவர் அரிசி கழுவிய தண்ணீரை 1 படி காலையில் குடிப்பார். மதியம் சாப்பாடு, இரவு பால் பழம் போன்றவற்றை அருந்துவார். அவர் சாப்பிடும் போது குறைந்தது 50 பேருக்கு உணவு பரிமாறினால் தான் அவர் அமர்ந்து உண்பார்.

ஒரு சமயம் நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் சகோதரர் சைலீஷ் சந்திரபோஸ் கோயம்புத்தூரில் ஜி.டி. நாயுடுவின் செகரட்டரியாக பணி புரிந்தார். அவரும் அவரது துணைவியாரும் ரயிலில் வந்தனர். அவர்களை வரவேற்க தேவருடன் ரயில் நிலையம் சென்றேன். அவர்கள் வந்தவுடன் தேவரின் காலை தொட்டு வணங்கி வங்காள மொழியில் பேசினார். தேவருக்கு வங்காள மொழி தெரியும் என்பது எங்களால் அப்போது தான் அறிய முடிந்தது. தேவர் 11 மொழிகளில் பேசும் திறமையும், யோகாசனம் போன்றவற்றில் அதிக ஈடுபாடும் கொண்டு இருந்தார்.

ஒரு சமயம் நாடாளுமன்றத் தேர்தலில் தேவர் போட்டியிடும் போது அவரை எதிர்த்து கம்பம் கருத்த ராவுத்தர் மகன் குலாம் முகம்மது போட்டியிட்டார். முஸ்லீம் சமூகம் நிறைந்த அந்த பகுதியில் தேவர் அவர்களுக்கு வெற்றி பெறுவதற்கு வாய்ப்பு குறைவு என்று நாங்கள் அஞ்சினோம். ஆனால் தேவர் சிறிதும் அஞ்சாமல் நம்பிக்கையுடன் வாக்கு சேகரித்தார். அந்த தேர்தலில் வெற்றியும் பெற்றார். மத நல்லிணக்கமாக அவர் திகழ்ந்ததற்கு ஒரு சான்றாகவும் இந்நிகழ்வு இருந்தது. இது போன்று தேவருடனான எத்தனையோ நீங்காத நினைவுகள் எனது நினைவலையில் அவ்வப்போது வந்து செல்கின்றன.



**ஆண்டவன் மனித குலத்தைதான் படைத்தாரே தவிர ஜாதியையும் நிறத்தையும் அல்ல.**



மூதறிஞர் இராஜாஜி மற்றும் சா. கணேசன் அவர்களுடன் தேவர்.



தேவர் திருமகனார் பிறந்த இல்லம்.

# தெய்வீகத் திருமகன் பசும்பொன் தேவர் கண்டதும் – கேட்டதும்

**எஸ். தங்கவேல்**
கோவிலாங்குளம், கமுதி.

**1951–52**ல் கமுதி போர்டு உயர்நிலைப் பள்ளியில், முதல் படிவம் (6 ஆம் வகுப்பு) சேர்க்கப்பட்டு தினம் பசும்பொன்னிலிருந்து சென்று படிக்கலானேன். என்னுடன் பள்ளியில் சேர்ந்து தேவரவர்கள் வீட்டில் உணவு உண்டு படிக்கும் மாணவர்களில் நானும் ஒருவன். வடகிழக்கு மூலையில் ஒரு கல்கட்டி கிணறு கட்டப்பட்டு திலாபோட்டு தண்ணீர் இரைத்து தொட்டி நிரப்பி அனைவரும் குளிப்போம். தேவரவர்களும் அங்கே குளிப்பார். கிணற்றை சுற்றிலும் கீரை பாத்திகள், முருங்கை மரங்கள், தென்னை மரங்கள். கிணற்று தண்ணீர் உப்பு நிறைந்தது. அதனால் தேவரவர்கள் அக்கிணற்றில் பெரிய நெல்லி மரக்கட்டையை போட்டு உப்பு தண்ணீர் நல்ல தண்ணியாக மாறும் என்ற தமிழ் விஞ்ஞானப்படி செய்திருந்தார். நாளாக அந்த உப்பு தண்ணீரும் பயன்படுத்தும் தண்ணீராக மாறியது.

இராமநாதபுரம் மாவட்டத்திலேயே, கமுதி, திருப்புவனம், இராமநாதபுரம் ஆகியஊர்களில் மட்டும்தான் உயர்நிலைப் பள்ளி அப்பொழுது இருந்தது. தேவர் அவர்கள் படிக்கும் போது கமுதியில் உயர்நிலைப்பள்ளி இல்லை. ஆகவே தேவரவர்கள் மதுரை பசுமலையில் சேர்க்கப்பட்டார்கள். கமுதி உயர் நிலைப்பள்ளியில் ஏழை மாணவர் உணவு விடுதி ஒன்று உண்டு. அதில் 20 பேருக்கு மேல் சேர்க்க மாட்டார்கள். சுற்று வட்டார கிராமத்து மாணவர்களின் பெற்றோர்கள் தேவரவர்களிடம் உணவு விடுதியில் இடம் கிடைக்கவில்லை. என் குழந்தைகள் படிக்க வேண்டும் என்று முறையிடுவார்கள். உடனே வீட்டில் இருந்த நிர்வாகிகளுக்கு உத்திரவிட்டு இடம் கிடைக்காத அனைவரும் தேவரவர்கள் வீட்டில் தங்கி உணவு உண்டு படியுங்கள் என்று ஜாதி வித்தியாசம் இல்லாமல் அனைத்து மாணவர்களும் தங்கி படிக்கலானார்கள்.

இசையை ஒலி பெருக்கி மூலம் ஒலி பரப்புவது அந்த காலத்தில் அரிதாக இருந்தது. கமுதியில் ஒலி பரப்பும் இசையை மாலை வேலைகளில் கீரைப்பாத்தி தோட்டத்தில் இருந்து கேட்பார். தியாகராசபாகவதர் பாடிய தெய்வீக இசையை பிரியமுடன் கேட்பார். சிற்றின்ப பாடல்கள் தேவரவர்களுக்கு பிடிக்காது.

**வருங்காலத்தை உணர்த்திய உயர்நிலைப் பள்ளி நிகழ்ச்சி**

கமுதி பள்ளி மாணவர் ஆண்டு விழாவிற்கு தேவர் அவர்களை அழைத்து வரும்படி தலைமை ஆசிரியர் கடிதம் எழுதி என்னிடம் கொடுத்து அனுப்பினார். நான் தேவரவர்களிடம் கடிதத்தை சமர்ப்பித்து வரும்படி வேண்டினேன். வருவதாக கூறி விழாவிற்கு வந்தார். அப்பொழுது கமுதியில் இருந்த உயர்நிலைப் பள்ளி கோட்டைமேட்டில் இருந்தது. விழா நடந்த காலம் ஐப்பசி மாதம். தலைமை ஆசிரியர் பிராமண வகுப்பை சேர்ந்தவர், சென்னை வாசி, பருவகால அமைப்பு தெரியாமல்தான் இருந்திருக்க வேண்டும். பள்ளியின் நடுவே வெட்ட வெளியில் மாணவர்கள் அமர்ந்து இருந்தோம். விழா மேடை பள்ளி தாழ்வாரத்தில் தேவரவர்கள் பேச ஆரம்பித்தார். ஐப்பசி மாதம் வெயில் சுள் என்று அடித்தது. மேகங்கள் இல்லை. மழை பருவங்கள் தெரிந்த தேவரவர்கள் சிறிது நேரத்தில் மழை வரும், மாணவர்கள் நனைவார்கள் என்றார். தலைமை ஆசிரியர் நல்ல வெயில் அடிக்கிறது, மேகங்கள் இல்லை மழை வராது என்றார். தேவரவர்கள் பேச ஆரம்பித்தார். மேகங்கள்சிலிர்த்து கூடின, காகங்கள் அதை உணர்ந்து கரைந்தன. மழை கொட்டியது. நான்

சொன்னேனே கேட்டீர்களா என்றுகேட்டு விட்டு, வகுப்பறைகளில் கூட்டம் நடத்தி மாணவர்களுக்கு அறிவுரை பகர்ந்தார். கால நிலை உணரும் வான சாஸ்திரராக திகழ்ந்தார் என்பதற்கு இரு ஒரு எடுத்துக்காட்டு. வருங்காலத்தை கூறும் அவதானியாக திகழ்ந்தார். பிற்காலங்களில் முன்னர் அவர் சொன்னவை அனைத்தும் நடந்து வருவதை நாம் பார்த்து வருகிறோம்.

உதாரணமாக, கச்ச நிலத்துக்கும், கசவாலிப் பயல்களுக்கும் காலம் வரும். கடல் திடலாகும் – திடல் கடலாகும். பெருநெல்லிக்காயும், பெரியோர் வார்த்தையும் முன்னே புளிக்கும், பின்னே இனிக்கும். மேய்கிற மாட்டை நக்குகிற மாடு கெடுக்கும். நீ பேசுவது யானைக்கு கோவணம் கட்டுவது போல் இருக்கிறது. மங்கை சூதகமானால் கங்கையில் மூழ்கலாம் – கங்கையே சூதகமனால் எங்கே மூழ்குவது ? கள்ள ரூபாய் நோட்டு அச்சடிப்பதென்பது முறையோ, எண்ணமோ யாரும் அறியாதிருக்கும் போதே, கள்ள கரன்சி நோட்டு அடிக்கிறார்கள் என்றார். இவைகள் பின்னர் நடந்தது, நாம் அறிவோம்.

**ஒற்றரின் ஒற்று**

1953 – 54ல் தேவரவர்கள் வீட்டில் தங்கி படித்து வரும் நாளில் இந்திய தேசீய இராணுவம் என்ற ஒரு ராணுவ படையை நேதாஜி அமைத்து ஆங்கிலேயர்களை இந்திய நாட்டிலிருந்து போரிட்டு விரட்ட, பர்மா எல்லையிலிருந்து இந்திய எல்லைக்குள் ராணுவ படையுடன் நுழைந்தார். அந்தப்படை ஐ.என்.ஏ. என்று அழைக்கப்பட்டது நாம் அறிவோம். அந்தப் படையில் ஒரு அதிகாரியாக இருந்தவன் என்று தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டு டி.டி.கே. கர்த்தா என்று தனது பெயரை சொல்லி தேவரவர்கள் வீட்டில் தங்கினார். தேவரவர்களும் அவரை வரவேற்று, வீட்டில் தங்க வைத்து, எல்லா வசதிகளையும் செய்து கொடுத்து அவர் படிக்க ஆங்கில நாளேடுகள் வாங்கி வசதி செய்திருந்தார். அவ்வப்பொழுது இருவரும் நேதாஜி பற்றி பேசிக் கொள்வார்கள்.

மாணவர்களாகிய எங்களுடனும் நன்றாக பழகி, நாங்களும் அவரும் சேர்ந்து தேவரவர்கள் வீட்டின் வடபுறம் வேம்பு மரத்தின் கீழே பட்டியக்கல் கொண்ட மேடைகள் அமைப்போம். தேவரவர்கள் அவ்விடத்தில் தங்கி பஞ்சாயத்துக்கள் பேசுவார்.

ஓராண்டிற்கு பின்பு ஐ.என்.ஏ. என்று வந்த டி.டி.கே. கர்த்தா மத்திய அரசு அனுப்பிய ஒற்றர் என்றும், தேவரவர்கள் செயல், பேச்சு அனைத்தும் அவ்வப்பொழுது ஒற்று அனுப்பியவர் என்றும் தெரிந்து தேவரவர்களிடம் கேட்ட பொழுது தேவரவர்கள் டி.டி.கே. கர்த்தா வந்து என்ன தெரிந்து கொண்டார். என் வீட்டு குளுமையையும், நெல் மரசனையும் தான் பார்த்தார். என் நிலை பற்றி அறிந்திருக்க முடியாது என்று கூறிவிட்டார். தற்கால விஞ்ஞானம் கம்பிகள் மூலம் தொடர்பு கொள்ளத்தான் கண்டு பிடித்துள்ளது. இயற்கை அன்னைகம்பி இல்லாமல் பேசும் திறனை அக்கால தமிழர்களுக்கு கொடுத்துள்ளது என்று அடிக்கடி கூறுவார்.

**உணவில் கட்டுப்பாடு**

தேவரவர்கள் வீடு நான்கு பக்கமும் கல் கட்டடம். தென் வடபாகம் நெல், வரகு போடும் அறைகள் களஞ்சியமாக பயன்பட்டது. வடகிழக்கு மூலையில், தேவரவர்கள் பூசை அறை. புலித்தோல் ஆசனம், ராமகிருஷ்ண பரமஹம்சர், சுவாமி விவேகானந்தர், வள்ளலார் படங்கள் அலங்கரிக்கும், அந்த அறைக்கு வள்ளலார் இல்லம் என்றே பெயரிட்டிருந்தார். யோகாசனம், தியானம், பின் ஓய்வு எல்லாம் அந்த அறையில் தான். காலை ஊருக்கு தென்புறம் வயல் வெளியில் நிமிர்ந்த வேக நடையில் சென்று,, காலைகடன், பின் ரெகுநாத காவேரி ஓடையில் குளித்து, அப்போதெல்லாம் தண்ணீர் ஓடிக் கொண்டே இருக்கும். மீன்கள் துள்ளி விளையாடும்.

ஓடுகிற நீரில் சூரிய உதயத்துக்கு முன்பு குளித்தால் நோய்கள் எளிதில் அணுகுவதில்லை

என்று தேவரவர்கள் கூறுவார்கள். காலை உணவு அரிசி கலைந்த கழனி தண்ணீரில், பசுவின் வெண்ணெய் கலந்து சூடாக்கி உண்பார் தேவரவர்கள். உடல் சூட்டை தணிக்கும் மாமருந்தாகவே அதை கருதினார். இது தவிர பிற உணவு வகைகளை உண்டதே இல்லை.

காலையிலிருந்து மதிய வேளை வரை பல விவகாரங்கள், பல ஊர் பெரியவர்களிடம் பஞ்சாயத்து, நீதி போதனைகள் பேசுவார். மடப்பள்ளியாளர் வந்து ஐயா மதிய உணவு சாப்பிடுங்கள் நேரமாகி விட்டது என்று பல தடவை கூறிய பின்பு தான், உணவு அருந்த யத்தனிப்பார். வந்திருந்த அனைவரையும் சாப்பிட அழைத்து வரிசையில் மற்றவர்களுடன் அமர்ந்து உணவு உண்பார். அவருக்கென்று தனி உணவு கிடையாது. மடப்பள்ளியார் உணவு தயாரிப்போ உப்பு, புளிப்பு, காரம், ருசி, ஒன்றுக்கொன்று முரண்பட்டு ருசி அற்றதாகவே இருக்கும், எதுவும் குறை கூறமாட்டார். உடன் உணவருந்துபவர்கள் சாதத்தில் கல் கிடக்கிறதே என்று கூறினாலும், இதெல்லாம் சகஜம் எடுத்து போட்டு விட்டு சாப்பிடுங்கள் என்பார். உணவின் ருசிக்கு அடிமையாகி விடக்கூடாது என்பதே அவருடைய குறிக்கோள். இளமையில் புலால் உணவு உண்டாரோ இல்லையோ தெரியாது. பிற்காலங்களில் காய்கறி உணவைத்தான் உண்டார்.

தேர்தல் நேரத்தில் எம் ஊருக்கு வருகை தர இருந்தார். நாங்கள் சென்று உணவு தயாரிக்கிறோம் என்று கூறினோம். அதெல்லாம் வேண்டாம், பொரிகடலையும், தேங்காய் சில்லையும் சேர்த்து பொட்டலங்களாக போட்டு வைத்து குடிக்க மோர் வைத்திருங்கள் என்று கூறிவிட்டார். அதன்படி செய்தோம். காரில் பிரயாணம் செய்யும் போதே அதை சாப்பிட்டு விட்டு தேர்தல் பிரச்சாரம் செய்தார். என்னே அவரது எளிமை, உணவில் கட்டுப்பாடு.

**இன பேதம் அற்ற நிலை**

பசும்பொன் பண்ணை நிலங்களின் வருவாய் பராமரிப்பு கணக்காளர்களாக பசும்பொன்னில் நல்லகுட்டி தேவரும், புளிச்சிகுளம் கிராமத்தில் சின்னத்தம்பி, நாகநாதன் ஆகியோரும், பசும்பொன்னில் பண்ணை ஏவலர் வீரன் என்ற ஆதிதிராவிடரும் ஆவார். கணக்கர் கீழராமநதியை சேர்ந்த பாலசுப்பிரமணியபிள்ளை பண்ணை நிலங்களின் வருவாயை தேவரவர்கள் கேட்டறிவார். சில விடுதல்கள் இருந்தால் ஏதாவது ஒரு கணக்கை எழுதி கொடுங்கள் என்று பெருந்தன்மையுடன் சொல்வார்.

அரசின் நில உடமை உச்சவரம்பு சட்டத்திற்காக பசும்பொன், புளிச்சிகுளம் நிலங்களை தன் உறவினர் என்று சொல்பவருக்குக் கூட இல்லாமல் வீரன் – வீரன் மக்கள் என்ற ஆதிதிராவிட உழைப்பாளிகளுக்கு எழுதி வைத்தார். இன்றும் பசும்பொன்னில் உள்ள ஆதிதிராவிட மக்கள் அவரது நிலங்களை உழுது வாரம் கொடுத்து வருகிறார்கள். பசும்பொன் ஆதிதிராவிட மக்களும் நன்றி விசுவாசமாக இருந்து வருகிறார்கள். கோட்டைமேட்டில் உள்ள அவரது நிலங்கள் பின்னர் கல்லூரி கட்டிடம் கட்ட பயன்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. இனபேதமற்ற முன்னோர்கள் வழிவந்து இனபேதமற்ற மக்களிடையே வாழ்ந்து, இன்றும் அதை உலகுக்கு அறிவுறுத்தி வரும் ஒரு காட்சி தான் பசும்பொன் ஊராட்சி தலைவி ஒரு ஆதிதிராவிட பெண்மணி நிர்வாகத்தில் இருந்து செயல்பட்டு வருவது என்பது உலகறிந்த உண்மை.

**பக்தியில் பண்பாடு**

தேவரவர்கள் வீட்டில் தென்மேற்கு மூலையில் தெய்வப்படங்கள் போடப்பட்டு காலை மாலை நேரங்களில் வழிபாடுகள் நடக்கும். மாதளபுரம் கிராமத்திலிருந்து ஒரு சாது பூசாரி தொழில் செய்ய வந்தார். தேவரவர்கள் ஊரில் இருக்கும் பொழுது மாலை இரவு நேரங்களில் வழிபடுவது வழக்கம். நாங்களும் தேவரவர்களும் வரிசையில் நின்று வழிபடுவோம். ஒரு நாள் பூக்கொணரும் பூசாரி

வர நேரமாகி விட்டது. தாமதமாக வந்தார். மாதளப்புரம் பெரியசாமி பூக்கொண்டுவந்த பண்டாரத்தை வசைபாடினார். உடனே தேவரவர்களுக்குகோபம் வந்தது. பூசாரியைக் கடிந்தார். அனைவரும் மவுனம். பின் வழிபாடு நடந்தது. விபூதி கொடுத்தார்கள். நாங்கள் (மாணவர்கள்) விபூதியை நெற்றியில் பூச தலையை குனிந்து விபூதி கீழே விழ பூசினோம். தேவரவர்கள் எங்களை திருத்தி நெற்றியை நிமிர்ந்து மேல் நோக்கி முகம் பார்த்து திருநீறு பூச வேண்டும். திருநீறு தவறிக் கீழே விழுந்தாலும் இரண்டு தோள் பட்டைகளிலும் விழ வேண்டும் என்று எங்களுக்கு சொல்லிக் காண்பித்தார். இன்றும் எங்கள் நெஞ்சில் பதிந்து, மனக்கண் முன் அக்காட்சி நிழலாடுகிறது. திருநீறு அணிவதன் மூலம் உடல் நலம் பேணப்படுகிறது என்பதை விளக்கினார்.

**அருள் மௌனத்தில்**
**குறிஞானத்தின் வெளிப்பாடு**

அஞ்ஞானம், மெஞ்ஞானம், விஞ்ஞானம், அதோடு சேர்ந்து அருள் ஞானம், குறிஞானம், குறிஞானத்துக்கு எடுத்துக்காட்டு தேவரவர்கள் வீட்டில் நடந்தது. அதன் விபரம் பசும்பொன் கிராமத்திற்கும் ஏனாதி என்ற கிராமத்திற்கும் திருமண உறவுகள் ஏற்பட்டு தொடர்புடைய உறவினர்கள் வாழ்ந்து வந்தார்கள். ஏனாதி கிராமத்தில் ஒருவர் தோன்றி இளமையில் அருள் ஞானம் பெற்று குறிஞானம் சொல்லி மறவர் நாட்டு மக்களிடம் மிகவும் பேர்பெற்று வாழ்ந்து வந்தார். தேவர் அவர்களுக்கு சாமியாடுதல், குறி சொல்லுதல், உடுக்கடித்து கோடாங்கி குறி சொல்லுதல் பிடிக்காது. பிழைப்புக்காக தொழில் செய்கிறார்கள் என்றே நம்புவார். பசும்பொன்னில் தேவர் திருமகன் இருந்த காலம். ஏனாதி அனுமார் சாமியை குறி பார்ப்பதற்கு பசும்பொன்னுக்கு அழைத்து வந்தார்கள். அழைத்து வந்தவர் பசும்பொன்னில் குறிபார்த்து முடித்தார். ஏனாதி அனுமார் சாமிக்கு தேவரை பார்க்கவேண்டுமென்று ஆசை. தேவருக்கும் அவரைப் பார்க்க வேண்டுமென்று ஆவல். ஊரார் வந்து அனுமார்சாமி வந்திருப்பதையும் குறி சொல்வதில் வல்லமை உடையவர் என்று கூறி தேவர் வீட்டிற்கு அழைத்து வருகிறோம் என்றார்கள். தேவர் அவர்களும் சரி என்று கூறி சோதனை செய்ய வேண்டுமென்று தனது பட்டறையில் கிடந்த நெல்லை ஒரு கைப்பிடி அள்ளி தனது மடியில் வைத்து மறைத்துக் கொண்டார். ஏனாதி அனுமார்சாமி வந்தார். இருவரும் ஒருவரை ஒருவர் வணங்கிக் கொண்டார்கள்.

ஏனாதி அனுமார்சாமிக்கு அருள் வர வேண்டுமென்றால் சிறிது பொரிகடலை, ஒரு தேங்காய் முன் வைத்து இராமாயணத்தில் ஏதாவது ஒரு கவியை வாசிப்பார்கள். உடனே அருள் பெற்று குறி சொல்வார். இதேபோன்று தேவரவர்கள் வீட்டிலும் நடந்தது. சாமி அருள் பெற்றார். சாமி வாக்குப்படி ''அடே முத்துராமலிங்கம் உன் மடியில் உள்ள நெல்லை எண்ணி சொல்லவா உன் களஞ்சியத்தில் உள்ள நெல் மணிகளை எண்ணிச் சொல்லவா ? என்று கேட்டிருக்கிறார்'' கூடி இருந்த அனைவரும் தேவர் திருமகன் உட்பட மெய் சிலிர்த்தனர். தேவரவர்களும் ஏனாதி அனுமர்சாமியை உண்மையான சாமி என்று போற்றியிருக்கிறார்.

**தமிழக முதல்வர் கலைஞரும் –**
**தேவரவர்களும் முதல் சந்திப்பு**

2000 மாவது ஆண்டு நவம்பர் மாதம் முதல் நாள் சென்னையில் தேவரவர்களின் 93ஆம் ஆண்டு பிறந்த தின விழாவை தேவரவர்கள் படத்திறப்பு விழாவாக மாண்புமிகு மறைந்த முன்னாள் அமைச்சர் பசும்பொன் தா. கிருட்டிணன், எச்.வி. ஹண்டே, எஸ்.ஜெகத்ரட்சகன், கே.வி.தங்கபாலு, வீ.இராமகிருஷ்ணன், ஏ.எம். ராசா போன்றவர்கள் ஏற்பாட்டில் சென்னையில் நடைபெற்றது. அப்பொழுது டாக்டர் கலைஞர் அவர்கள் தேவரவர்கள் ஒரு சாதிக்கோ, ஒரு குறிப்பிட்ட சமுதாயத்திற்கோ மாத்திரம் தலைவரல்ல அவர் ஒரு தேசீய தலைவர் என்று புகழாரம் சூட்டினார். மதுரை மாநகரில் ஒரு பெரிய சிலை அமைத்து கலைஞர் தலைமையில் குடியரசுத் தலைவர் வி.வி.கிரியை வைத்து சிலை திறப்பு விழா

நடத்தியதையும், முதன் முதலாக தேவர் திருமகன் பெயரில் மூன்று கல்லூரிகளை உண்டாக்கியது குறித்தும், தேவர் திருமகன் கொள்கை, லட்சியம், தேசீய சேவையை பெரிதும் பாராட்டிவிட்டு டாக்டர் கலைஞர் அவர்கள் தேவர் அவர்களின் முதல் சந்திப்பு பற்றி அன்று பேசிய பேச்சை முரசொலி பதிப்பில் உள்ளதை இரண்டு பெரிய மாமேதைகளின் சந்திப்பும் பேச்சும் சரித்திர வரலாறு படிப்போர் உள்ளத்தை பரவசமூட்டி நெகிழ்ச்சி செய்யும் ஓர் அரிய வரலாறு என்று கூறி தொடர்கிறேன்.

**கலைஞர் பேசுகிறார்**

''தேவர் அவர்கள் காங்கிரஸ் பேரியக்கத்தை வளர்த்தார், நேதாஜியுடன் சேர்ந்து ஆங்கிலேயர்களை எதிர்க்க ஆயுதம் கொண்டு போராடிய நேதாஜிக்கு உறுதுணையாக இருந்தார்''. ஆனால் தேவர் திருமகன் என்றாலே ஒரு அச்ச உணர்வை மக்களிடத்திலே அந்தக் காலத்தில் பரப்பப்பட்டது. ஏ அப்பா அவர் பெரிய முரடர் அவரிடம் நெருங்கக் கூடாது. அவர் எதையும் செய்வார் என்றெல்லாம் பேசப்பட்ட காலம் ஒன்று உண்டு எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. ஒரு நாள் மதுரை செல்வதாக எழும்பூர் புகை வண்டி நிலையத்தில் நான் நின்றிருந்தேன். என்னுடன் அருமை நண்பர்கள் தென்னரசு போன்றவர்கள் நின்றிருந்தார்கள். நான் செல்கின்ற ரயிலில் கோசமிட்டுக் கொண்டு வந்து ஒருவரை ஏற்றி விட்டார்கள், யாரென்று விசாரித்தேன். அவர் தான் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் என்று சொன்னார்கள். அது வரையில் நான் அவரைப்பற்றி கேள்விப்பட்டிருக்கிறேன் நேரில் பார்த்ததில்லை, உரையாடியதில்லை. அதற்குப்பிறகு அவரோடு உரையாடுகின்ற பழகுகின்ற வாய்ப்புக்கள் பல வந்தன என்றாலும் அது தான் முதல் முறை. பிறகு அதே ரயிலில் அவர் பயணம் செய்கின்ற அதே பெட்டியில் தான் நீங்களும் செல்ல இடம் போடப்பட்டிருக்கிறது என்று சொன்னார்கள். என்னுடன் இருந்த தென்னரசு ஏ யப்பா அந்தப் பெட்டியலா போகிறீர்கள், தேவர் அதிலே போகிறாரே? என்றார். பரவாயில்லை என்று சொல்லிவிட்டு நான் அந்தப்பெட்டியில் ஏறிக்கொண்டேன்.

**மென்மையான அவரின் கருத்துக்கள் என்னை கவர்ந்தன**

அப்போது தேவரவர்கள் கீழேயுள்ள இருக்கையிலே படுக்காமல் மேலே உள்ள இருக்கையில் ஏறி படுத்துக் கொண்டார். ரெயில் நகர்ந்தது. தென்னரசு சொன்ன பயம் எனக்கு மனத்திலே இருந்தது. தென்னரசு பயமுறுத்தி இருக்கிறாரே என்ன செய்வாரோ என்று நினைத்துக் கொண்டிருந்தேன். அதற்கேற்றார்போல் ரயில் நகர்ந்து கொஞ்ச நேரத்திற்கெல்லாம் தேவர் மேலிருக்கையில் இருந்து கீழே குதித்தார். குதித்தவுடன் என் நெஞ்சு திடுக்கென்றது. கீழே உட்கார்ந்தார். அவரும் என்னைப் பற்றி கேள்விப்பட்டிருக்கின்ற காரணத்தால் என்னையும் அவருக்குத் தெரியும் என்பதால் கீழே அமர்ந்ததும் என்ன தம்பி எந்த ஊருக்கென்று கேட்டார். மதுரை ரெயிலில் தான் போகிறோம், மதுரைக்குத்தான் போகிறோம் என்பது அவருக்கு தெரிந்திருந்தாலும் கூட என்னிடம் பேச்சுக் கொடுக்க வேண்டும் என்பதற்காக கேட்டார்.

மதுரைக்குத்தான் என்றேன் கொஞ்சம் அச்சம் தவிர்ந்தது. அதற்கு பிறகு நீண்ட நேரம் நாங்கள் இருவரும் உரையாடிக் கொண்டே சென்றோம். பிறகுதான் நான் எண்ணிக் கொண்டேன். இந்த மல்லிகைப் பூவை இந்த ரோஜா மலரை இதுவரை நம்மிடத்திலே முள் என்று சில பேர் நாட்டிலே வர்ணித்திருக்கி றார்களே என்று அப்போதுதான் நினைத்துக் கொண்டேன். அவ்வளவு மென்மையான மிருதுவான அந்த ஆன்மீகக் கருத்துக்களுக்கு வலுவூட்டுகின்ற வகையிலேயே, அவர் என்னோடு ஆற்றிய அந்த உரையாடலும் தேசீயத்தைப்பற்றி அவர் பேசிய பேச்சுக்களும் என்னை அந்த அளவிற்கு கவர்ந்தன, என்று அவரது முதல் சந்திப்பு நிகழ்ச்சியை கூறினார் தேவரவர்கள் ஆதிதிராவிட மக்களுக்கு மதுரையில் மீனாட்சி அம்மன் ஆலயத்தில் ஆலயப் பிரவேசம் செய்யும் நிகழ்ச்சியில்

முன் நின்று நடத்தியதையும் இந்த விழாவை நாம் அரசியலுக்கு பயன்படுத்திக் கொள்ளவில்லை என்றும், இது ஒரு பண்பாட்டு விழா என்றும், இது ஒரு அரசியல் நிகழ்ச்சி அல்ல என்றும், அரசியலிலிருந்து ஆர்தெழுந்த சிங்கமாக உலவிய ஒரு பெருமகனுடைய நினைவை போற்றுகின்ற விழா இந்த விழா என்றும், தேவரவர்களின் புகழ் வாழ்க என்று தனதுரையை எடுத்துரைத்து வரலாறு மக்களுக்கு தெரிய வேண்டுமென்று இந்த நிகழ்ச்சியை இங்கே தொகுத்துள்ளேன்.



**காமங்கடந்த இல்லறமும் காட்டினுள் புகுந்த துறவறமும் வித்தியாசப்பட்டதல்ல.**

# சுதந்திர இந்தியாவில் தேவர்

ஏனாதி. **கா. கோவிந்தசாமி,**
வழக்கறிஞர் கௌரவத் தலைவர்,
ஆப்பநாடு மறவர் சங்கம்,
முதுகுளத்தூர்.

**1945** ஆம் ஆண்டு இரண்டாவது உலகப் போர் முடிந்தது. இந்தியாவுக்கு சுதந்திரம் வழங்கும் காலம் நெருங்கிக் கொண்டிருந்தது. இந்த நிலையில் மருது சகோதரர்கள் பிறந்த ஊராகிய நரிக்குடி முக்குளம் என்ற ஊரிலிருந்து 3 கிலோ மீட்டர் தொலைவில் இருக்கும் சுமார் 650 ஏக்கர் பரப்பளவில் அமைந்திருக்கும் புளிச்சிகுளம் என்ற தேவருக்கு மட்டும் பாத்தியப்பட்ட கிராமத்தில் தெய்வீகத் திருமகன் தேவர் 1946 ஆம் ஆண்டு முதல் 1948 ஆம் ஆண்டு வரை தங்கியிருந்தார். அந்த சமயத்தில் அவர் அரசியல் பற்றி ஒரு வார்த்தை கூடபேசவில்லை. 1947 ஆம் ஆண்டு ஆகஸ்ட் திங்கள் 15 ஆம் நாள் இந்தியா சுதந்திரம் பெற்ற போது அது சம்பந்தமாகக் கூட ஏதும் பேசாமல் மௌனம் காத்தார்.

1948 ஆம் ஆண்டு காங்கிரஸில் இருந்து பார்வர்டு பிளாக் கட்சி விலகி தனி இயக்கமாக இயங்கத் தொடங்கியதும் தேவர் பார்வர்டு பிளாக் கட்சியின் வளர்ச்சிக்காக தன்னை அர்ப்பணித்துக் கொண்டார். அந்த ஆண்டில் நடந்த ஜில்லா போர்டு (மாவட்ட நிர்வாக அமைப்பு) தேர்தலில் காங்கிரஸை எதிர்த்து கமுதி, சாயல்குடி ஆகிய ஜில்லா போர்டு தொகுதிகளில் முறையே குருவன் செட்டியார் மற்றும் சேதுராமன் செட்டியாரை நிறுத்தி வெற்றி பெறச் செய்தார். இந்த வெற்றி தான் தேவர் மீது காங்கிரஸ் கட்சி வெறுப்படையச் செய்த முதல் நிகழ்ச்சி. பின்னாளில் தேவர் அவர்களின் தேர்தல் வெற்றிகள் காங்கிரஸ் கட்சியை வெறுப்பின் உச்சிக்கே கொண்டு சென்றன.

வங்கத்து சிங்கம் நேதாஜியின் பிறந்த நாள் ஜனவரி 23. 1948 ஆம் ஆண்டு ஜனவரி 23ல் தேவர் அவர்களை ஆசிரியராகக் கொண்டு நேதாஜி என்ற வாரப் பத்திரிக்கை தொடங்கப்பட்டது. அதில் தேவர் அவர்கள் காங்கிரஸ் கட்சியின் தவறான போக்குகளை சுட்டிக் காட்டி நாட்டு மக்களின் நலன்களுக்காகத்தான் அரசியல் கட்சிகள், அரசியல் கட்சிகளின் நலன்களுக்கு மக்கள் அல்ல என்பதை, தனது எழுத்தாற்றல் மூலம் எடுத்தியம்பிக் கொண்டிருந்தார்.

1949 ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் நேதாஜியின் அண்ணன் சரத் சந்திர போஸின் அழைப்பின் பேரில் கல்கத்தா சென்ற தேவர் அங்கிருந்து இந்திய புலனாய்வுத் துறைக்கும் தெரியாமல் இந்திய எல்லையைக் கடந்து சீனா சென்றார். ஏறத்தாழ ஓராண்டு காலம் தேவர் எங்கே இருக்கின்றார் என்ற விபரம் ஏதும் தெரியாமல் இருந்த நிலையில் மதுரை தமுக்கம் மைதானத்தில் 1951 ஆம் ஆண்டு ஜனவரி 23 ஆம் தேதி நேதாஜி பிறந்த நாள் விழாவில் கலந்து கொண்ட தேவர் ''வடகொரியா, தென்கொரியா சண்டையில் வடகொரியா போர் முனையில் நின்று அந்த யுத்தத்தை நேரிடையாகவே பார்த்து விட்டு வந்து உங்கள் முன் நிற்கிறேன்'' என்று ஆரம்பித்து உலக அரசியல் பற்றி சுமார் 3 மணி நேரம் உரையாற்றினார்.

அந்த விழா மேடையில் தான் தேவர் அவர்களின் உருவ மாற்றத்தையும் மக்கள் கண்டார்கள். அதாவது முகத்தில் பளிச்சென்று விளங்கிக் கொண்டிருந்த மீசை முழுவதுமாக எடுக்கப்பட்டிருந்தது. எப்போதும் கிராப் வெட்டிய தலைமுடியுடன் காணப்படும் தேவர் பாகவதர்கள் போல் தோளில் தலைமுடி புரளும் வண்ணம் தலைமுடியையும் வளர்த்திருந்தார். அவர் இந்திய எல்லையைக் கடந்து செல்கையில் ஏற்படுத்திய மாற்றத்தை இறுதி வரை கடைப்பிடிக்க

எண்ணினாரோ என்னவோ ஆனால் இறுதி வரை காரணத்தை எங்கும் அவர் எடுத்துரைக்க வில்லை.

1952ல் பொதுத் தேர்தல் வந்தது. அன்றைக்கு சென்னை மாகாணமானது தமிழகம், ஆந்திரத்தில் சில மாவட்டங்கள், கேரளத்தில் சில மாவட்டங்கள், கர்நாடகத்தில் சில மாவட்டங்கள் சேர்த்து 375 சட்ட மன்றத் தொகுதிகளை உள்ளடக்கி இருந்தது.

அன்றைக்கு திராவிட முன்னேற்றக் கழகம் பிறந்து மூன்று ஆண்டுகள் தான் ஆகி இருந்ததாலும், தேர்தலில் நிற்பதில்லை என்ற கொள்கை வைத்திருந்ததாலும், தி.மு.க. நேரடியாகத் தேர்தலில் போட்டியிடவில்லை. அந்த தேர்தலில் பெரியார் ஈ.வெ.ரா. அவர்களும் காங்கிரஸை எதிர்த்து முழு மூச்சாக வேலை செய்தார். தேவரும் பெரியாரும் ஒரே மேடையில் பல கூட்டங்களில் பேசியுள்ளார்கள். அப்போது பெரியார் ''தேவகுமாரன் பேசுவார்'' என்றே குறிப்பிட்டுள்ளார்.

முதுகுளத்தூர் இரட்டை மெம்பர் தொகுதி (பொதுவும் ரிசர்வும் சேர்ந்தது) அருப்புக்கோட்டை சட்ட மன்ற தொகுதி, கடம்பூர் சட்டமன்ற தொகுதி, கோவில்பட்டி சட்டமன்ற தொகுதி ஆகியவற்றை உள்ளடக்கிய அருப்புக்கோட்டை நாடாளுமன்ற தொகுதியிலும், முதுகுளத்தூர் சட்டமன்றத் தொகுதியிலும் தேவர் போட்டியிட்டு இரண்டிலும் அமோக வெற்றி பெற்றார்.

1952 தேர்தலின் போது தான் தேவர் அவர்களிடம் பி.கே. மூக்கையாத் தேவர் அறிமுகப்படுத்தப்பட்டு பெரியகுளம் சட்டமன்றத் தொகுதியில் பார்வர்டு பிளாக் வேட்பாளராக நிறுத்தப்பட்டார். அப்போது பணபலமும், ஆட்பலமும் செல்வாக்கும் பெற்றிருந்த தேனி என்.ஆர். தியாகராஜன் காங்கிரஸ் வேட்பாளராக பெரியகுளம் தொகுதியில் போட்டியிட்டார். தேவர் அவர்களின் மின்னல் வேக சுற்றுப்பயணமும், ஆற்றல் மிக்க பேச்சும் பி.கே. மூக்கையாத் தேவரை வெற்றி பெறச் செய்தது.

1952ல் பாராளுமன்றம், சட்டமன்றம் ஆகிய இரண்டிலும் வெற்றி பெற்ற தேவர், சட்டமன்ற உறுப்பினராக பணியாற்றிட எண்ணி பாராளுமன்ற உறுப்பினர் பதவியை ராஜினாமா செய்தார். அதனால் அருப்புக்கோட்டை பாராளுமன்றத் தொகுதிக்கு இடைத்தேர்தல் நடைபெற்றது. காங்கிரஸ் சார்பில் நிறுத்தப்பட்ட மறவர் இனத்தைச் சேர்ந்த திருமதி. ராஜாத்தி அம்மாளுக்கு எதிராக செட்டியார் இனத்தைச் சேர்ந்த எம்.டி. இராமசாமியை தேவர் நிறுத்தி வெற்றி பெறச் செய்தார். இதன் மூலம் தேவர் சாதிகளைக் கடந்து தேசநலன் ஒன்றையே குறிக்கோளாக கொண்டு வாழ்ந்தார் என்பது நன்கு புலனாகும்.

1955 ஆம் ஆண்டு திருநெல்வேலி மாவட்டம், வடக்கன்குளத்தில் ஆன்மீக ஞானி ஆறுமுக நாவலர் ஏற்பாடு செய்திருந்த விநாயகர் கோவில் கும்பாபிஷேக விழாவில் அங்கு வாழும் கிறிஸ்தவர்களால் கலகம் ஏற்படக்கூடிய சூழ்நிலை உருவானது. இதனை கேள்விப்பட்ட தேவர் அந்த கும்பாபிஷேக விழாவில் கலந்து கொண்டார். தேவரின் வருகையையொட்டி அங்கு இந்து பெருமக்கள் ஆயிரக்கணக்கில் கூடி விட்டார்கள். அசம்பாவிதம் ஏதுமின்றி விழா அமைதியாக முடிந்தது. அந்த விழாவில் தேவர் யானை மீது பவனி வந்தார். அந்த விழாவின் இறுதியில் தேவர் ''சர்வ மதங்களும் இறைவன் என்ற வீட்டுக்கு போகும் வேறு வேறு பாதைகள் தான். எல்லா மதத்தவருக்கும் தங்கள் மதத் தத்துவங்களைப் பேசவும், பரப்பவும் உரிமை உண்டு. ஆனால் எந்த மதத்தின் நிகழ்ச்சியை யாவது அடுத்த மதத்தவர் தடுத்து நிறுத்தி விடலாம் என்று நினைத்தால் அது தவறான விளைவுகளை ஏற்படுத்திவிடும்'' என்று பேசியபேச்சு எல்லா மதத்தின் மீதும் தேவர் வைத்திருந்த பற்றுதலை வெளிப்படுத்தியது.

1956 ஆம் ஆண்டில் மதுரை மீனாட்சி அம்மன் ஆலயத்தில் ராஜாஜி அவர்கள் எழுதிய வியாசர் விருந்து என்ற நூல் வெளியிட்டு விழா நடந்த போது தேவர் அதில் கலந்து கொண்டார். தேவர் பேச எழுந்த போது ராஜாஜி அவர்கள் வியாசர் விருந்து புத்தகத்தின் மீது கையை

வைத்து அது பற்றி மட்டும் பேசும்படி சைகை காட்டினார். அதனை புரிந்து கொண்ட தேவர் ''அடியேன் எப்போதுமே எடுத்துக் கொண்ட பொருள் மீது எல்லை தாண்டாமல் பேசுகிற பழக்கம் உள்ளவன்'' என்று கூறி தனது உரையை ஆரம்பித்தார்.

''காஞ்சனத்தின் மூலம் அழிந்தவன் – துரியோதனன்
காமத்தின் மூலம் அழிந்தவன் இராவணன்''

என்பதை பொருளை மையமாக வைத்து மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை ஆகிய மூன்றும் தான் மனிதனின் அழிவுக்கு காரணம் ; மண்ணாசையையும், பொன்னாசையும் சேர்ந்தது காஞ்சனம் ; பெண் ஆசை காமம். காஞ்சன ஆசை தான் துரியோதனனை அழித்தது. அதுவே மகாபாரதம். காமம் இராவணனை அழித்தது. அதுவே இராமாயணம். வியாசமுனிவர் எழுதிய மகாபாரத்தை நாம் யாவரும் அறியும் வண்ணம் இராஜாஜி அவர்கள் மிக நேர்த்தியாக வியாசர் விருந்தினை நமக்கு தந்திருக்கின்றார் என்று நீண்ட சொற்பெருக்காற்றினார். இராஜாஜி உட்பட அனைவரும் தேவரின் ஆன்மீக ஞானத்தை வியந்து பாராட்டினார்கள்.

1957 ல் இரண்டாவது பொதுத்தேர்தல் வந்தது. அருப்புக்கோட்டை பாராளுமன்றத் தொகுதியானது 10 சட்டமன்ற தொகுதிகளைக் கொண்ட இரட்டைமெம்பர் ஸ்ரீவில்லிபுத்தூர் பாராளுமன்றத் தொகுதியாக மாற்றப்பட்டது. 1952 ஐ போலவே முதுகுளத்தூர் சட்டமன்றத் தொகுதியிலும், ஸ்ரீவில்லிபுத்தூர் பாராளுமன்றத் தொகுதியிலும் போட்டியிட்ட தேவர் அவர்கள் பெருவாரியான வாக்கு வித்தியாசத்தில் இரண்டிலும் வெற்றி பெற்றார். இந்தத் தடவை பாராளுமன்ற உறுப்பினர் பதவியை வைத்துக் கொண்டு சட்டமன்ற உறுப்பினர் பதவியை ராஜினாமா செய்தார். முதுகுளத்தூர் சட்டமன்ற இடைத்தேர்தலில் பார்வர்டு பிளாக் கட்சி சார்பில் டி.எல். சசிவர்ணத் தேவரை நிறுத்தி வெற்றி பெறச் செய்தார் தேவர்.

சட்டமன்றத் தேர்தலில் 50 தொகுதிகளில் போட்டியிட்ட தி.மு.க. 15 தொகுதிகளிலும் 80 தொகுதியில் போட்டியிட்ட தேவர் ஆதரவு பெற்ற காங்கிரஸ் சீர்திருத்தக்கட்சி 25 தொகுதிகளிலும் வெற்றி பெற்றன. இந்த தேர்தலில் தேவர் தி.மு.க.வை ஆதரிக்காவிட்டாலும் எதிர்த்து வேலை செய்யவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

1957 ல் நடைபெற்ற முதுகுளத்தூர் கலவரத்தில் இமானுவேல் பரமக்குடியில் கொலை செய்யப்பட்டது தொடர்பாக தேவர் மீது குற்றம் சாட்டப்பட்டது. 1959 ஜனவரி 7ஆம் நாள் நீதிபதி அனந்தநாராயணன் ''தேவர் மீதுள்ள குற்றச்சாட்டு நிரூபிக்கப்படவில்லை, இமானுவேல் கொலைக்கும், தேவருக்கும் தொடர்பு இருக்கிறது என்று நிரூபிப்பதற்குக்கூட சாட்சியம் இல்லை'' என்று கூறி தேவரை விடுதலை செய்தார்.

1957 செப்டம்பர் 28 ஆம் நாள் காங்கிரஸ் சீர்திருத்த கட்சியை இந்திய தேசீய ஜனநாயக் காங்கிரஸ் கட்சியாக உருவாக்கம் செய்ய மதுரை தமுக்கம் மைதானத்தில் மாபெரும் மாநாடு நடைபெற்றது. அதில் தேவர் பேசிய பேச்சு சரித்திர முக்கியத்துவம் வாய்ந்தது. காங்கிரஸிற்காக தான் உழைத்தது, காங்கிரஸை விட்டு ஏன் பிரிய நேரிட்டது ? தென் தமிழ்நாட்டில் தனக்கு வளர்ந்து வரும் செல்வாக்கினை குறைக்க அன்றைய அரசு ஒரு தலைப்பட்சமாக நடந்து வரும் விதம், இந்திய தேசீய ஜனநாயகக் காங்கிரஸ் ஏன் வளர்ச்சி பெற வேண்டும் ? என்பதோடு உலக அரசியல் பற்றியும் நீண்ட உரை ஆற்றினார்.

மாநாட்டை திறந்து வைத்து பேசி முடித்து இரவு 10.00 மணிக்கு தனது இருப்பிடம் நோக்கி திரும்பிக் கொண்டிருந்த தேவர் அவர்கள் மதுரை கோரிப்பாளையத்தில் இன்று தேவர் சிலை கம்பீரமாக தோற்றமளிக்கும் இடத்தைத்தாண்டி வந்த போது கைது செய்யப்பட்டார். எதற்காக கைது என்று கேட்டதற்கு காவல் துறையினர் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் கைது செய்வதாகக் கூறினார்கள். தேவர் அவர்கள் மறுப்பு ஏதும்

கூறாமல் ''மக்கள் அமைதி காக்க வேண்டும்'' என்று மட்டும் கூறிவிட்டு போலீஸ் வேனில் ஏறினார்.

பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டதற்கான குற்றச்சாட்டு எழுத்து மூலமாக தேவருக்கு வழங்கப்பட்டது. அந்த குற்றச்சாட்டுகளுக்கு தேவர் எழுத்து மூலமான தகுந்த பதிலை ஆதாரங்களுடன் சென்னை அரசாங்கம் நியமித்த அட்வைசரி போர்டுக்கு அனுப்பி வைத்தார். அதனை மேற்படி போர்டு மறுக்கவும் இல்லை அங்கீகரிக்கவும் இல்லை.

1959 ஆம் ஆண்டு பிப்ரவரி 17 ஆம் தேதி பாராளுமன்றத்தில் ஆங்கிலத்தில் இந்திய வெளிநாட்டுக் கொள்கையில் உள்ள குறைபாடுகள், காமன்வெல்த்தில் இந்தியா தொடர்பு வைத்திருப்பதால் இந்தியாவுக்கு ஏற்பட்டு வரும் இன்னல்கள், காஷ்மீர் விவகாரம், பாகிஸ்தானின் அத்துமீறல்கள் மற்றும் சர்வதேச அரசியல் பற்றி தமக்கு ஒதுக்கப்பட்ட 15 நிமிடங்களோடு மேலும் 5 நிமிடங்கள் அனுமதி பெற்று அனைவரும் வியக்கத்தக்க வகையில் உரையாற்றினார். தேவர் பேசி முடித்ததும் எதிர்க்கட்சி பாராளுமன்ற உறுப்பினர்களோடு காங்கிரஸ் பாராளுமன்ற உறுப்பினர்கள் சிலரும் சேர்ந்து பாராட்டி கை குலுக்கியதிலிருந்து அவரது கருத்துக்கள் எந்த அளவுக்கு பாராளுமன்றத்தில் எதிரொலித்தது என்பது நன்கு விளங்கும்.

1959 ஆம் ஆண்டு மார்ச் 26ல் மதுரை நகராட்சி தேர்தல் நடந்தது. அந்த தேர்தலில் தேவரின் ஆசியுடன் தொடங்கப்பட்ட ஜனநாயகக் காங்கிரஸ் கட்சி தி.மு.க. மற்றும் கம்யூனிஸ்ட் கட்சி ஆகியவை கூட்டணி அமைத்து காங்கிரஸ் கட்சியை எதிர்த்து போட்டியிட்டு காங்கிரஸ் கட்சியிடமிருந்த நகராட்சியை கைப்பற்றின. தேவசகாயம் என்பவர் நகர சபை தலைவரானார். தேவர் அவர்களின் சகாயத்தில் நகராட்சி தலைவரான தேவசகாயத்தை ''தேவர்சகாயம்'' என்று மக்கள் பாராட்டினார்கள்.

அருப்புக்கோட்டை தொகுதி பார்வர்டு பிளாக் கட்சி சட்டமன்ற உறுப்பினராக இருந்த எம்.டி. இராமசாமி செட்டியார் திடீரென காலமானதால் அந்த தொகுதிக்கு இடைத் தேர்தல் வந்தது. தேவர் அவர்கள் சௌடி சுந்தரபாரதி என்ற தேவாங்கர் இனத்தைச் சேர்ந்தவரை பார்வர்டு பிளாக் கட்சி வேட்பாளராக நிறுத்தி வெற்றிபெறச் செய்தார்.

1959 ஆம் ஆண்டில் இருந்து தேவர் அவர்களின் உடல் நலம் குன்ற ஆரம்பித்தது. மதுரையிலிருந்த தேவர் திருச்சி சென்று அங்கு பழம்பெரும் தேசபக்தர் பி. இரத்தின வேல் தேவர் இல்லத்தில் மேல் மாடியில் தங்கி ஒய்வும் சிகிச்சையும் பெற்று வந்தார்.

1962ல் பொதுத் தேர்தல் வந்தது. 14.01.1962ல் தேவரும் ராஜாஜியும் மதுரை தமுக்கம் மைதானத்தில் ஒரே மேடையில் தோன்றினார்கள். ''நீண்ட நாட்களாகி விட்டன. அடியேன் மனித தெய்வங்களாகிய உங்களின் ஒருமிப்பு சக்தியில் நின்று பேசி'' என்று தனது உரையை ஆரம்பித்த தேவரின் பேச்சில் அன்று உதிர்ந்த முத்துக்கள் சில பின்வருமாறு.

''பதவியை நான் நினைத்தவனுமல்ல. நினைத்திருந்தால் அது என்னைப் பொறுத்தளவில் மிக எளிது''

''தேசத்திடம் பலனை எதிர்பார்க்கும் கூட்டத்தைச் சேர்ந்தவனல்ல நான். தேசத்திற்கு இயன்றவரை கொடுத்து சேவை செய்யும் கூட்டத்தைச் சேர்ந்தவன்நான்''.

''நான் எவரையும் எதிரியாகக் கருதுபவனுமல்ல. தவறுகளை கண்டிக்கிற என்னையாரேனும் எதிரியாகப் பாவித்தால் அதற்கு நான் பொறுப்பல்ல''

''நான் பேசுவது, எழுதுவது சிந்திப்பது சேவை செய்வது எல்லாமே தேசத்திற்கேயன்றி எனக்காக அல்ல''.

''நியாயத்திற்காக எதிர் நீச்சலடிப்பதால் காங்கிரஸ்காரர்களின் எதிர்ப்புக்கு நான் ஆளாகி இருக்கிறேன்''.

''18 ஆயிரம் ஓட்டுக்களை மட்டும் கொண்ட என் வகுப்பினர் வாழும் தொகுதியில் ஒரு லட்சம் ஓட்டுக்களை வாங்கும் நான் வகுப்பு வாதியாக எப்படி இருக்க முடியும் ? ''

''தம்மிடம் உள்ள வகுப்பு வாதத்தை மறைக்க பிறரை வகுப்புவாதிகள் என்று கூறி ஏமாற்றுவோரை மக்கள் தெரிந்து கொள்ளாமல் இல்லை''.

''எதிர்கட்சி என்பது ஜனநாயகத்தின் இரு கண்களில் ஒன்று. இரு கண்களும் சமசக்தியோடு செயல்பட்டாலன்றி ஜனநாயகம் வலிமையோடு நடக்க முடியாது''.

''உங்கள் தலைவிதியை ஐந்து வருடங்களுக்கு ஒப்புவிக்கும் ஒரு கடமை அல்லவா ஓட்டுப் போடுவது. காசுக்காக காத்திருக்காமல் அவரவர் வசதி, சக்திக்கு தக்கவாறு சொந்தப்பணத்திலிருந்து இரண்டோ மூன்றோ எடுத்துப்போய் செலவிட்டு ஓட்டுப் போடுங்கள். அதுதான் நல்ல மக்களுக்கு அடையாளம்''.

மேற்கண்டவாறு மணிக்கணக்கில் தனது பேச்சாற்றலால் மக்களின் உள்ளங்களை தன்பால் ஈர்த்த தேவர் அவர்களின் கடைசி பேச்சும் அதுவே. ஆம் அதன் பின்னர் அந்த மனிதருள் மாணிக்கம் விண்ணகம் செல்லும் வரை எங்கும் உரையாற்றவில்லை.

1962 ஆம் ஆண்டு நடந்த பொதுத் தேர்தலிலும் அருப்புக்கோட்டை பாராளுமன்றத் தொகுதியில் போட்டியிட்டு தொகுதிக்கு ஒரு நாள் கூட செல்லாமல் பெருவாரியான ஓட்டு வித்தியாசத்தில் தேவர் வெற்றி பெற்றார். தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் 6 மாதத்திற்குள் பதவிப் பிரமாணம் எடுத்துக் கொள்ள வேண்டும். தவறினால் அவர்தம் உறுப்பினர் பதவி பறிபோய் விடும். நோயின் உபாதையால் அவதிப்பட்டுக் கொண்டிருந்த தேவர் அவர்கள் குறிப்பிட்ட அந்த காலத்திற்குள் பதவிப்பிரமாணம் எடுத்துக் கொள்ள டில்லி செல்ல இயலவில்லை. இருப்பினும் பாராளுமன்றம் அவருக்கு மட்டும் அவர் எப்போது வேண்டுமானாலும் வந்து பதவிப்பிரமாணம் எடுத்துக் கொள்ளலாம் என்று விதிமுறையையே தளர்த்தியது.

1963 அக்டோபர் திங்கள் 29 ஆம் நாள் அதிகாலையில் மதுரை திருநகர் இல்லத்தில் அவரது உடலை விட்டு அவர்தம் ஆன்மா இந்த மண்ணுலகைவிட்டு விண்ணுலகத்திற்கு பறந்து சென்றது. அவரது மறைவுச் செய்தி கேட்ட அனைத்து கட்சியினரும் தங்களது கட்சிக் கொடிகளை அரைக்கம்பத்தில் பறக்க விட்டனர். பத்திரிக்கைகள் அனைத்தும் இரங்கல் செய்திகள் வெளியிட்டன. தேவர் உடல் பசும்பொன்னிற்கு கொண்டுவரப்பட்டது. லட்சோபலட்சம் மக்களும், அரசியல் தலைவர்களும் ஆன்மீகப் பெரியோர்களும் அவருக்கு இறுதி அஞ்சலி செலுத்தினார்கள். மறுநாள் மாலையில் யோகிகள் அடக்கம் செய்யும் முறையில் தெய்வத்தோடு தெய்வமாக ஐக்கியமாகி விட்ட தேவர் உடல் அடக்கம் செய்யப்பட்டது.

ஆண்டு தோறும் ஆன்மீகப் பெரியவர்களும், அரசியல் வல்லுனர்களும் பசும்பொன்னில் தேவர் நினைவாலயத்தில் நடைபெறும் குரு பூஜை விழாவில் கலந்து கொண்டு சிறப்பிக்கின்றனர். அதோடு லட்சக்கணக்கான மக்கள் தங்களின் குலதெய்வக் கோவில்களுக்குச் சென்று வழிபடுவதைப்போல் மொட்டையடித்து, முளைப்பாரி சுமந்து திருநீரு பூசி வழி படுகின்றனர். நினைவிடத்தில் புண்ணிய நீர் எடுத்து வந்து தமது இல்லங்களிலும் வயல் வெளிகளிலும் தெளித்து ஆராதனை செய்கின்றனர். இத்தகைய வழிபாட்டு முறைகள் தேவரின் திருவாக்காம் தேசீயமும், தெய்வீகமும் அவரது இரு கண்கள் என்பதை இந்த உலகம் உள்ள அளவும் பறைசாற்றிக் கொண்டிருக்கும்.

வாழிய தேவர் புகழ்.



**தவயோகியையும், நிறையப் படித்த மேதையையும் விட கட்டுப்பாடுள்ளவன் மேலானவன்.**



தேவர் மறைவு இரங்கல் கூட்டத்தில் அறிஞர் அண்ணா.





மதுரை கோரிப்பாளையத்தில் 5.1.74 அன்று அன்றைய மேதகு குடியரசுத் தலைவர் திரு. வி.வி. கிரி அவர்கள், மாண்மிகு தமிழ்நாடு முதலமைச்சர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் தலைமையில் திறந்து வைத்தார்.

## Pasumpon Muthuramalinga Thevar, The South Indian Netaji

**Debabrata Biswas, M.P.**
General Secretary, AIFB.

Thevar is a community title of Maravars of Tamilnadu. This community is historically a warrior community of the south India. But if we say Thevar, it means Pasumpon Muthuramalinga Thevar. Such is the popularity of the legendary hero Muthuramalinga Thevar. An ardent follower of Netaji Subhas Chandra Bose and one of the main founders of All India Forward Bloc, Thevar is still living in the minds of millions of people. Now Thevar is not merely a title, it is a feeling, a sentiment and a matter of proud. Throughout Tamilnadu in every Kilo Meter, we can find the statue of Thevar. People of Tamilnadu are worshipping him as a god. In fact he was a saint and a versatile social reformer.

Muthuramalinga Thevar was born to Ukkirapandiya Thevar and Indrani Deviyar on 30th October 1908 in a small village of Pasumpon near Kamuthi in Ramanathapuram District of Tamilnadu. His mother died when he was only six months old. After that, he was brought up by a Muslim lady. His father had obtained a vast area of about thirty - two villages from the Raja of Ramnad. Though born in a very wealthy family who could afford to live in luxury, he preferred to lead a simple life.

After he finished his primary education in the elementary school at Kamuthi run by American missionaries, Thevar was admitted to the Madurai American Mission High School. Even though his school education was just ten years he learned English and Tamil literature. He also learned all most all martial arts of contemporary period.

Pasumpon Muthuramalinga Thevar participated in the activities of the Congress party early in his teens. In 1928 he had participated in the Conference of Indian National Congress party held in Chennai under the chairmanship of Dr. Ansari, as a delegate from Ramanathapuram District. He was active in swadeshi movement and the movements against untouchability. He vociferously demanded the abolition of Zamindari System. He was in the forefront of the movement for the entry of Harijans into temples. Madurai Meenakshi Mandir was not open to the Harijans. Thevar started a movement and finally succeeded in taking the Harijans into the famous Temple.

His association with Netaji started in 1928 when he met him during the

Indian National Congress Session at Chennai. He was very much impressed by the personality and speeches of Netaji. Netaji also noticed the young man from the south. His attachment to Netaji continued to grow over the years. When Netaji formed All India Forward Bloc, Thevar was the orgainser of his party in Tamilnadu. As Thevar was a man of the masses and leader in his own right, he had organised the All India Forward Bloc throughout Tamilnadu. Thevar had the capacity like Netaji to enthrall the audience for hours together with his fiery oration.

He was very critical of the Anglo - American Axis and adhered to an unflinching advocacy of revolutionary methods to achieve freedom and militant uprising against the suppression let loose by the British. Since he was a vocal leader of the freedom struggle and an associate of Netaji Subhas Chandra Bose, he was arrested in 1939. On 22 June 1942, The Forward Bloc was banned and Thevar was once again arrested.

Thevar, along with his followers was released from the Vellore prison on 5th September 1945. He was vehemently critical of the British rule in India and he was not for any sort of compromise with the British rulers. In all, Thevar spent nearly 4000 days in jail during the freedom struggle. Being an anti-imperialist, he was not in favour of India maintaining any connection with the Commonwealth. In 1948, Thevar became the president of the state unit of the All India Forward Bloc. In May 1955, he was elected as the Vice President of the Party.

Pasumpon Muthuramalinga Thevar was first elected to the Madras Legislative Assembly in 1937. He was re-elected to the Legislative Assembly in 1946 unopposed. In the General Elections held in the year 1952 Thevar contested simultaneously in the Mudukulathur Assembly Constituency and also from the Aruppukottai Parliamentary Constituency and won both seats with sizeable majority of votes. In 1957 he contested and from Mudukulathur Assembly Constituency and Srivilliputhur Parliamentary Constituency. In 1962, he contested only in Aruppukottai Parliamentary Constituency and as usual won with a sizable majority of votes without visiting the Constituency. He as in Jail during the election campaign.

He had the broad-mindedness to sponsor many others and shape them as future leaders of the country. K.Kamaraj who became the Chief Minister of Tamilnadu and after the President of the Indian National Congress was one among such leaders who was initiated into politics by Thevar. Thevar was of the view that politics without divinity is a body without soul. He believed in clean politics, coupled with a spirit of self - sacrifice. He said 'Politics certainly needs brain . . . But shoulder and head must combine. Without shoulder if the head is proceed, there will be quixotic programmes, which

will end in disaster. To work in politics, a man must have broad shoulders ; a good heart and he must be in a position even to lay down his life at any place and in any moment. Then only he will have some peace. By mere intrigue, a man will not succeed and the country that follows him also will go wrong with him'.

Pasumpon Muthuramalinga Thevar, a nationalist to the core, was a democrat in every sense of the term. While participating in a debate in the Madras Legislative Assembly, he made his idea about democracy very clear by saying that' as far as my knowledge of democracy goes, if anything untoward happens in the Legislature, the proper course is to appeal to the electorate outside and get their verdict". Thevar considered that Subhasism was the only way out for the problems faced by India. He defined Subhasism thus: "Uncompromising revolution until the achievement of full blooded socialism to suit the Indian national system, culture and civilization is Subhasism".

Thevar was a Trade Union leader too. He founded and led the Pasumalai Mahalakshmi Mills Workers Union and the Meenakshi Mills Textile Workers Union and wielded great influence among the labourers. He was closely associated with V.V. Giri, himself an eminent labour leader. Thevar whole heartedly fought for the cause of the labourers and the workers. In 1938 - 39, he participated in the labour agitation as the leader of the Mahalakshmi Mill Workers. In 1945, Thevar founded the TVS Workers Union at Madurai and was its first President.

Pasumpon Muthuramalinga Thevar never believed that Netahji died in the Plane Crash. He did not cooperate with the Sha Nawaz Committee because the members of the Committee failed to answer some of his questions.

Pasumpon Muthuramalinga Thevar died on 30th October 1963. Incidentally his birthday and death day are same. On 30th October every year lakhs of people throng Pasumpon Village to pay homage to Thevar. The people of Tamilnadu are observing 30th October as 'Guru Puja Day'. The current generation should learn lessons from the life of Thevar and should work for the reconstruction of our motherland as envisaged by Netaji and Muthuramalinga Thevar. It would be the real tribute to this great freedom fighter and ardent nationalist.



# ஒடுக்கப்பட்ட மக்களின் காவலர் – பசும்பொன் தேவர்

**எஸ்.ஆர். தேவர்**
நிறுவனத் தலைவர்,
தமிழ்நாடு தேவர் இளைஞர் பேரவை.

**ஆதிதிராவிடர்கள் எனது சகோதரர்கள் – தேவர்**

ஆதிதிராவிட மக்களின் ஆலய பிரவேசத்தை இன்னொரு சுதந்திர போராட்டமாகவே அன்றைய ஆங்கிலேய அரசு பார்த்தது. ஆலயப் பிரவேசம் செய்யும் ஆதி திராவிடர்களுக்கு பாதுகாப்பு கொடுக்காமலும் இந்த விஷயத்தில் அக்கறை காட்டாமலும் ஆலய பிரவேச எதிரானவர்களுக்கு மறைமுகமாக ஆதரவு கொடுத்தது.

அன்று மதுரை மாவட்ட ஆதிதிராவிட சேவா சங்கத் தலைவர் வக்கீல் வைத்யனாத ஐயர் மதுரை மீனாட்சி அம்மன் கோவிலில் ஆதிதிராவிடர்கள் பிரவேசம் செய்து சாமி கும்பிட அனைத்து ஏற்பாடுகளும் செய்தார். இது சம்மந்தமாக மதுரை எட்வர்டுஹாலில் ஒரு ஆலோசனை மாநாடு நடத்தினார். இதில் மூதறிஞர் இராஜாஜி, எம்.என்.சுப்புராமன் மற்றும் பல காந்தியவாதிகள் கலந்து கொண்டனர். ஆலய பிரவேசம் செய்யும் ஆதிதிராவிடர்களுக்கும் அவர்களுக்கு துணையாகச் செல்லும் மற்ற மக்களுக்கும், தலைவர்களுக்கும் அரசு தகுந்த பாதுகாப்பு தரவேண்டும் என பேசிய அனைவரும் கருத்து தெரிவித்தனர். கடைசியாக பேசிய இராஜாஜி அவர்கள் ஆதிதிராவிடர்களுக்கு பாதுகாப்பு தரவேண்டியதும் அது சமபந்தமாக உத்தரவாதங்கள் தருவதும் அதை நிறைவேற்றி தர வேண்டியதும் பசும்பொன் தேவரால் மட்டுமே முடியும் எனப்பேசி பொறுப்பை பசும்பொன் தெய்வத்திடம் ஒப்படைத்தனர். என் சகோதரர்கள் ஆதிதிராவிடர்கள் இவர்களை கோவிலுக்குள் அழைத்துச் செல்வது எனது பொறுப்பு என்று கூறி தாமே முன்னின்று நடத்தி... தென் மாவட்ட மக்களை பெருந்திரளாக திரட்டி மதுரை மீனாட்சி அம்மன் கோவிலுக்குள் ஆதிதிராவிட மக்களோடு ஆலயப் பிரவேசம் செய்து சாமியை வழிபட்டனர்.

தேவரின் சொல்லுக்கு கட்டுப்பட்ட மக்கள் ஒரு ராணுவம் போல கட்டுப்பாட்டுடன் நடந்து கொண்டதை கண்ட எதிர்ப்பாளர்கள் அதற்குப்பின் தங்கள் எதிர்ப்பை காட்டவில்லை . . . இந்த ஒரு சம்பவமே பசும்பொன் ஐயா அவர்கள் ஆதிதிராவிட மக்கள் மேல் எவ்வளவு மதிப்பும், பாசமும் வைத்திருந்தார் என்பதைக் காட்டுகிறது. இந்து மதக் கோட்பாடுகளை நன்கு உணர்ந்த தேவர் அவர்கள் மக்கள் அனைவருமே சமமானவர்கள் இறைவனின் திருவுருவங்கள் என்றார். மக்களை மனித தெய்வங்களே என்று தான் அழைத்தார். சாதி, மதமற்ற உலகத்தை கண வேண்டும் என்பதே அவரது நோக்கம், உதாரணமாக அன்னத்தை ஊட்டும் வலக்கரம் உயர்வு என்றும், இடக்கரம் தாழ்வான நிலை கொண்டது என்ற கருத்தோடு இதுவரை யாரும் இடக்கரத்தை ஒதுக்கவில்லை.

இறைவனை வணங்க இருகரமும் வேண்டும் என்றார். மனிதர்களில் உயர்வு, தாழ்வு என்ற நிலையே கூடாது என்று வற்புறுத்திய தேசீயத்தலைவர் தான் பசும்பொன்முத்து இராமலிங்கத்தேவர். தாழ்த்தப்பட்டவர்களும், ஆதிதிராவிட மக்களும் வாழ்க்கையில் பொருளாதார முன்னேற்றமடைய கல்வி முக்கியம் எனக்கருதி . . . குலக்கல்வி முறைக்கு கடும் எதிர்ப்பு தெரிவித்து வெற்றி கண்டார். வெறும் பேச்சளவில் இல்லாமல் தனது சொந்த பொறுப்பில் பல ஆதிதிராவிடச் சிறுவர்களுக்கு கல்வி கற்பிக்க ஏற்பாடுகள் செய்தும் தனது சொத்தின் பெரும் பகுதியை ஆதிதிராவிட மக்களுக்கு தன் மரண சாசனத்தில் எழுதி

வைத்து அவர்கள் வாழ்க்கையில் நலம் காண பெரும் பங்காற்றினார். அன்றே தேவர் அவர்கள் சமபந்தி முறையை நடைமுறைப்படுத்தினார். இவ்வாறு தாழ்த்தப்பட்ட மக்களுக்கும், ஆதிதிராவிட மக்களுக்கும் பெரும் பங்காற்றிய தேசீயப் பெருந்தலைவர் ஐயா தேவர் அவர்களை இன்றளவும் மக்கள் மறக்காமல் வழிபட்டு வருகின்றனர்.

**தேவரும் கைரேகைச் சட்டமும்**

இந்திய துணைக் கண்டத்திலேயே வெள்ளையர் ஆதிக்கத்தை ஆரம்பம் முதலே எதிர்த்து வந்தவர்கள் குறிப்பிட்ட சில சாதியினர்தான். அவர்கள் சம்பல் பள்ளத்தாக்கு மறவர்கள், கோதாவரி மலைத்தொடர் குலமா என்ற வீரர்கள், கேரளாவைச் சேர்ந்த பனியன், எர்நாடான், துருவநாடு குறும்பர், ஆந்திரலம்பாடி, குறவர், தெற்கே மறவர், கள்ளர், அகமுடையவர்கள் இவர்கள் சண்டை செய்பவர்கள் என்று கூறி இவர்களுக்கு குற்றப் பரம்பரை என வெள்ளையர்கள் பெயர் சூட்டி இவர்களை அடக்க கடுமையான சட்டங்களை விதித்தார்கள். அதில் ஒன்று தான் கைரேகைப் பதிவுச் சட்டம். தென் மாவட்டங்களைச் சேர்ந்த கள்ளர், மறவர் இனத்தைச் சேர்ந்த ஆண்கள் தினமும் போலீஸ் ஸ்டேசனில் கையெழுத்து இட வேண்டும்.

இரவு ஊர்ச் சாவடி எனப்படும் ஒரு பொது இடத்தில் போலீஸ் காவலில் தங்க வேண்டும். தங்களது கைரேகைகளை கட்டாயமாக பதிவு செய்யவேண்டும் என கடுமையான சட்டங்களை போட்டனர். இதை எதிர்க்க தேவர் முடிவு செய்து தேசீயத்தலைவர்கள் ப.ஜீவானந்தம், பி.ராமமூர்த்தி, டாக்டர் வரதராஜீனு, ம.பொ.சிவஞானம் இவர்களை அழைத்து கலந்து பேசி கூட்டுப் போராட்டம் நடத்தினார். சுதந்திரப் போராட்டம் உச்சக்கட்டத்தில் இருந்த இந்த நேரத்தில் பாண்டிய மண்டலத்தில் தேவர் நடத்தும் போராட்டம் பெரியதாக நடந்துவிடாமல் தடுக்க அப்போதைய அரசு முடிவு செய்தது. கைரேகை சட்டத்தை நீக்கக்கூடாது என முடிவு செய்த அரசு அப்போதைய கருமாத்தூர் மஞ்சு விரட்டில் கவர்னரை கலந்து கொள்ளச் செய்து மாடிபிடிக்கும் வீர விளையாட்டை மனிதாபிமானம் அற்ற செயல் என்று காட்டி இந்த மக்களை அடக்க நாங்கள் போட்ட சட்டம் சரியானதே என்று காட்ட முடிவு செய்தது.

இதை முன் கூட்டியே அறிந்த தேவர் அவர்கள் வாய்மொழி உத்தரவாக மாடுபிடிக்கும் திருவிழாவில் யாரும் கலந்து கொள்ள வேண்டாம் என ரகசிய உத்தரவு போட்டார். இந்த உத்தரவை மீறி மஞ்சுவிரட்டு திருவிழாவில் ஒருவர் கூட பங்கேற்கவில்லை. இதை அறிந்த கவர்னர் தேவரின் உத்தரவிற்கு இவ்வளவு சக்தியா என வியந்து . . . கைரேகை சட்டத்தை ரத்து செய்தார். வருங்கால சந்ததியினர் குற்றப் பரம்பரை என்னும் அவச்சொல்லில் இருந்து மீட்டு முக்குலத்து சமுதாய மக்களை காப்பாற்றிய தெய்வப் பெருந்தலைவர், தேசீயத்தலைவர் பசும்பொன் ஐயா முத்து ராமலிங்கத்தேவர் அவர்கள் இன்றல்ல என்றென்றும் நம்முடன் வாழ்ந்து கொண்டிருப்பார் . . . இதை அன்றே உணர்ந்த தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் தேவரைப் பற்றி தேவர் அவர்கள் தமிழ்ச்சமுதாயத்தின் போர்க்குண உருவம். அவரது பேச்சுக்களும், செயல்களும் நாட்டின் விடுதலைக்கான போர்த் தளவாடங்கள். இவர் பெயரை உச்சரிக்கும்போதெல்லாம் அங்கு கூடியிருக்கும் மக்கள் தேவர் வாழ்க வாழ்கவென ஆவேசங்கொண்டு முழங்குவது உணர்ச்சிப் பிழம்பாய் இருக்கிறது என்று சொல்லியிருக்கின்றார். அழியாய் புகழ் பெற்ற தேவரின் நூற்றாண்டு விழா . . . தலைவர் கலைஞரின் ஆட்சியில் வருவது அவருக்கு கிடைத்த மாபெரும் பெருமை.



**ஆக்கம் சார்ந்த அறிவும், மனப்பண்பும் கொண்டவர்கள்தான் மகான்களாகிறார்கள்.**

# சமரச சன்மார்க்க நெறி பரப்பியவர் – பசும்பொன் தேவர்

**நா. மகாலிங்கம்**
சக்தி குரூப் நிறுவனங்கள்.

வணக்கத்திற்குரிய பசும்பொன் தேவர் திருமகனார், காங்கிரஸ் கட்சியில் விடுதலைக்குப் போராடிய மதுரை அய்யா மற்றும் தமிழ்நாட்டு காங்கிரஸ் தலைவர்களோடு இணைந்து செயலாற்றி வந்த சுதந்திரப் போராட்ட வீரர்.

ஆன்மிகத்திலும் அதிக ஈடுபாடுள்ளவர். அவருக்குத் தேசபக்தியும், தெய்வபக்தியும் இரு கண்களாக விளங்கின.

முருக பக்தியில் மூழ்கிப் போனவர். அருள்மிகு திருமுருகனைப் பற்றிய அவருடைய சொற்பொழிவுகள் தத்துவார்த்த விளக்கம் நிறைந்தவை. அதே போல, வள்ளற்பெருமான் மீது அளவற்ற ஈடுபாடு கொண்டவர்.

தமிழ்ப் பண்பாடு என்பதை சைவ சமய அடித்தளத்தின் மீது கட்டப்பட்ட கோபுரமாகவே கருதியவர்.

தேச விடுதலையை அவர் ஒரு வேள்வியாகவே கருதினார். காந்திஜியின் அகிம்சை வழி, சத்தியாக்கிரகப் போராட்டம் அவருக்குப் போதுமானதாக இல்லை.

அதனால், நேதாஜியினுடைய வீரமிக்க சொற்பொழிவைக் கேட்டு ஆயுதம் தாங்கிய போராட்டத்திற்கு ஆதரவளித்தார். அதன் காரணமாக, அவர் காங்கிரஸ் கட்சியை விட்டு பார்வர்டு பிளாக் முன்னணியில் சேர்ந்தார்.

நேதாஜியின் நம்பிக்கைக்குரியவராக விளங்கிய பசும்பொன் தேவர், தமிழ்நாட்டுத் தலைவராக விளங்கினார். ஆங்கிலத்திலும், தமிழிலும் சிறந்த புலமை உடையவர்.

அவர் 1952 தமிழக சட்டசபைத் தேர்தலில் வெற்றி பெற்று உறுப்பினராக இருந்த போது, நானும் தமிழ்நாடு சட்டசபையில் உறுப்பினராக இருந்துள்ளேன் என்பதை இப்போது பெருமிதமாக நினைத்துப் பார்க்கிறேன்.

இத்தகைய திறமையும், புலமையும்மிக்க தலைவர் தனது வசிப்பிடத்தை மதுரை மாவட்டத்தின் சொந்த கிராமத்திலிருந்து தலைநகர் சென்னைக்கு மாற்றி அமைத்திருப்பாரேயானால், மிகப் பெரிய மாறுதலை அவருடைய வாழ்க்கை சந்தித்திருக்கும்.

தேவர் பெருமகனாருக்குத் தமிழக அரசு நூற்றாண்டு விழாக் கொண்டாட இருப்பது பாராட்டுக்குரியது. அதனை முன்னிட்டுச் சிறப்பு மலர் வெளியிடுவதும் போற்றுதலுக்குரியது.

வீரமிக்க இப்பெருமகனாரின் நினைவுகளைப் போற்றுவோமாக !



**எல்லாம் நிறைந்த செல்வனையும், எல்லாம் தெரிந்த மேதையையும், ஏராளமாகப் படித்த அறிவாளியையும்விட சொந்தக் கட்டுப்பாடுடையவன் மேலானவர்.**

## அருள் பெற்ற மாமனிதர் – தேவர்

**நல்லி குப்புசாமி செட்டி**
சென்னை.

கல்வியோடும் கலையோடும் ஆன்மிகம் சேரும். அது அரசியலுடன் சேருமா என்று வியந்து கேட்டவர்களுக்கு ஆன்மிகத்தையும் அரசியலையும் தம் இரண்டு கண்களாகக் கொண்டு வாழ்ந்து வந்த பெருந்தகை பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்கள் மிகச் சரியான எடுத்துக்காட்டு.

சிறந்த பக்திமான், பகைவர்களுக்கும் மரியாதை கொடுத்தவர். எதிலும் உறுதியாக நின்றவர். அவரை நீதிமன்றத்தில் விசாரிக்க நேர்ந்த நீதிபதி கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்கள் ஒருமுறை என்னிடம் உரையாடிக் கொண்டிருந்த பொழுது அவரது பணிவையும், துணிவையும், நேர்மையையும் பாராட்டிச் சொன்னார். இன்னொரு முத்துராமலிங்கத் தேவரை இனி நாம் பார்க்க முடியாது என்றும் கூறினார். அதைவிடப் பெரிய பாராட்டினை நான் கொடுக்க முடியுமா ?

எனவே தேவரவர்களின் ஆன்மாவை வணங்கி மாண்டமை நீதிபதி அவர்களின் பாராட்டுரையைப் பதிவு செய்கிறேன். அதற்குமேல் நான் சொல்ல என்ன இருக்கிறது ?

தேவர் அவர்களுக்கு அஞ்சலியாக அருமையாக ஒரு மலரைத் தயாரிக்கும் பணி சிறப்பாக அமைய வாழ்த்துகிறேன்.

தோன்றாத் துணையாக, தேவர் அவர்கள் நம்மை வழிநடத்திச் செல்வாராக . . .



**மக்களுக்கு நல்லதைச் செய், அதை உடனே செய், அதற்காக வேலி தாண்டி விடாதே.**

# பசும்பொன் தேவர் என்ற மகா நாமம் . . . !

டாக்டர் **ந. சேதுராமன்**
நிறுவனர் தலைவர்,
மீனாட்சி மிஷன் மருத்துவமனை மற்றும் ஆராய்ச்சி மையம்.

மந்திர சக்தியால் மக்களைக் கட்டிப் போட்டுள்ள மகா நாமம். மகுடிக்குக் கட்டுப்படும் நாகம் போல் மாற்றாரையும் வசீகரிக்கும் மகா சக்தியின் மறு வடிவம். தென்பாண்டி மண்டலத்தின் சிறப்புக்கள் அளவிட முடியாதது.

**தமிழுக்குச் சங்கம்**
**தாலிக்கு வேலி**
**கல்விக்குக் கூடம்**
**கடவுளுக்குக் கோவில்**
**உயிருக்குள் மானம்**
**உதிரத்தில் வீரம்**

இந்த வரிசையில் மற்றும் ஒரு மகா சிறப்பு இந்த மண்ணுக்கு உண்டென்றால் இத்தனை குணம் கொண்ட மக்களின் ஒட்டு மொத்த வடிவமாக பசும்பொன் முத்துராமலிங்கம் என்ற ஒரு புனிதன் உதித்ததுதான்.

**வீரமற்ற விவேகம் கோழைத்தனம்**
**விவேகமற்ற வீரம் முட்டாள் தனம்** – என்ற கொள்கையோடு ''தேசீயமும் தெய்வீகமும்'' என் இரு கண்கள் என்ற லட்சியத்தோடு தேசீய நீரோட்டத்தின் உந்து சக்தியாகத் தேவர் திகழ்ந்தார்.

இயல்பிலேயே இடது சாரி சிந்தனைகளோடு அரும்பிய பசும்பொன் தேவர் தன் இளமைக் காலத்திலேயே புரட்சிப் பொறியாக விளங்கினார்.

**மகாலட்சுமி மில் தொழிலாளர்கள் போராட்டம்**
**நிட்டிங் கம்பெனித் தொழிலாளர்கள் போராட்டம்**
**விவசாயக் கூலித் தொழிலாளர்கள் போராட்டம்**
போன்ற மக்கள் போராட்டத்தின் தளபதியாக அந்தப் போரை முன் நடத்திச் சென்றவர். சட்டமன்றத்திலும், பாராளுமன்றத்திலும் தன் நீண்ட நெடிய உரையால் தலைவர்களைக் கவர்ந்தவர். எல்லாத் தலைவர்களின் அன்புக்குப் பாத்திரமானவர்.

விடுதலைக்கான போரில் சிறைக்கு அஞ்சா சிங்கமாக திகழ்ந்தவர். தம் வாழ்நாட்களில் பாதிக்குமேல் சிறையிலேயே கழித்தவர். நேதாஜியின் வலக்கரமாகத் திகழ்ந்தவர். நேர்மையின் பிறப்பிடமாகத் திகழ்ந்தவர்.

சைவ சித்தாந்த ஞானியாகவும் தவறுகள் நெருங்காத சந்நியாசியாகவும் வாழ்ந்து ஜனனம் கொண்ட நாளிலேயே அமர நிலை அடைந்த ஆன்றோர் பசும்பொன் தேவர். தமிழக வரலாறு மற்றும் இந்திய தேசீய வரலாற்றின் முதற்பக்கங்களாக எப்போதும் மக்கள் மனதில் முன்னிற்பவர்.

அன்னாரின் நூற்றாண்டு விழாவை முன்னிட்டு அரசே மலர் வெளியிடுவது பெருமைப்படத்தக்க ஒன்று.

இந்த அரிய முயற்சியில் ஈடுபட்டுவரும் தமிழக அரசை நெஞ்சார வாழ்த்துவதில் வாழ்த்திப் போற்றுவதில் அடியேன் எப்போதும் முன்னிற்பேன். அரும்பெரும் தகவல்களோடு வெளிவரும் பசும்பொன் தேவரின் நூற்றாண்டு விழா மலர் சிறப்பாக வெளிவர விழா அற்புதமாக அரங்கேற என் இதய வாழ்த்தை இயம்பி மகிழ்கிறேன்.



**டெலஸ்கோப் கொண்டு விண்ணிலுள்ள கோள்களை நோக்கலாம்.**
**பகுத்தறிவைக்கொண்டு பரம்பொருளை பார்க்கலாம்.**

# தேசீய லட்சியவாதி – தேவர்

**கோவை காமாட்சிபுரி ஆதீனம்**
**ஞானகுரு சாக்தஸ்ரீ சிவலிங்கேஸ்வர சுவாமிகள்**
(தமிழக இந்து துறவியர் பேரவை, மாநில இணைச் செயலாளர்)

வீரத்திருமகன் தேவர் ஐயா
தீரச் செயல்கள் பல செய்துயர்ந்தார்
நாட்டு விடுதலை பெற்றிடவே நயம்பட
உழைத்தவர் நம்தேவர் ஐயா
வாட்டும் சாதிக் கொடுமைகளை
ஓட்டும் உத்தமர் தேவர் ஐயா
மனித நேயமாய் மலர்ந்திட்டார்
புனிதச் செயல்கள் பல செய்தார்
தனிமனித உரிமைகளை தடையில்லாமல்
பெறச் செய்தார். உயர்
பேச்சின்ஒலியை வீசிமிக கொடுமைகளை
தாட்சிணியம் இன்றி எதிர்த்திடுவார்
விவேகமற்ற வீரத்தை மிக
கோழைத்தனம் என்றுரைத்தார்
அனைத்து சதியும் கோவிலுனுள்
நுழையும் உரிமை பெற்றுத் தந்தார்
பசும்பொன் கண்ட நமது சிங்கம்
பாங்கினில் ஓங்கிய வீரசிங்கம்
மண்ணில் மின்னும் வைரமாக
வாழ்ந்து காட்டிய வள்ளல் ஐயா
அரசியல் வாழ்வை அழகுபெற
அணியாய் காட்டிய தேவர் ஐயா
தெய்வீகத்தால் தேசத்தை திறம்பட
நடத்திட வேண்டும் என்றார்
தேசீய லட்சியவாதியாக இவர்
திறந்த மனதை அறிவீர்கள்
துறவு நெறியாய் வாழ்ந்த இவர்
தூய்மை வாழ்வு வென்றதுபார்
ஒரு நூற்றாண்டு கடந்தாலும்
தேவர் இலட்சியம் புயல்போல் மக்களிடம்
இன்றும் ஒளியாய் வீசுதுபார்
இளைய தலைமுறை வாழ்வதற்கு
தேவரின் வாழ்வே வழிகாட்டி
தமிழக அரசு தேவருக்கு
நூற்றாண்டு விழாவை செய்துமிக
மாற்றங்களால் நம்நாட்டை
செழிப்புடன்வளர்க்க இந் நூற்றாண்டு
தேவர் நூற்றாண்டாக
செய்து நல்வழி காட்டிட்டார்
வாழ்க தமிழக அரசு புகழ்
நூற்றாண்டு விழாவின் நினைவாக
நினைவுச் சின்னங்கள் நிறை மலரும்
செய்திடும் தமிழக அரசுக்கு
வந்தனம், வந்தனம் நல்ஆசி
மலர் குழுவில் இணைந்த அன்பர்
மங்களம் பெற்று வாழ்ந்திடுவார்.

**இல்லறமும், துறவறமும் வெவ்வேறல்ல. அது அவரவர் மனப்போக்கிற்கும், பிராணத்துவ தர்மத்திற்கும் தக்கவாறு உருவாக்கப்பட்டதாகும்.**

# அனைத்தும் நிறைவாகட்டும்

**சுவாமி தயானந்த சரஸ்வதி**

ஸ்ரீ பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் நூற்றாண்டு விழா மலர் வெளியிடுவது அறிந்து மிகவும் சந்தோஷம். ஸ்ரீ தேவர் அவர்கள் ஒரு அருள்பெற்ற, அருளக்கூடிய பெரிய தெய்வீக மனிதர். அவரைப் போற்றி புகழ்வதில் பெருமை அடைகிறேன்.

விழா நன்றாக நடக்கவும், விழா மலர் சிறப்பாக அமையவும் ஆண்டவனைப் பிரார்த்திக்கிறேன்.



**ஆசாபாசங்களுக்கு இடங்கொடாத அறிஞர்கள் மகான்களாகவே இயங்குவார்கள். மனித குலத்திற்கு விளம்பரமின்றியே பயனும் படுவார்கள்.**

# தேவர் மறைவின் போது மறையாப் புகழ் சூடிய பத்திரிக்கைகளின் தொகுப்பு

**என். துரைசிங்கம்,**
தொகுப்பாளர்.

பசும்பொன் மண்ணில் பிறந்து, திருநகர் மண்ணில் தன் இறுதி மூச்சை நிறுத்திக் கொண்ட தெய்வீக திருமகன் தேவர் மறைந்தபின் பத்திரிக்கைகள் சூடிய புகழாரங்களை இக்கட்டுரையில் தொகுத்தளிப்பதால் பெருமை கொள்கிறேன்.

**தினமணி**

ஸ்ரீ தேவர் மறைந்த செய்தி காட்டுத் தீ போல் நகரில் பரவி விட்டது. கடைசி முறையாக அவரைக் காண ஏராளமான மக்கள் ஒரு மணி நேரத்திற்குள் திருநகர் வீட்டு முன் கூடிவிட்டார்கள். மதுரை வழியாக பசும்பொன்னுக்கு சடலம் கொண்டு செல்லப்பட்ட வழி நெடுக, திரண்டு வந்த ஜனக் கூட்டத்தை சமாளிக்க முடியாமல் போலீசார் திண்டாடிப் போய்விட்டனர். ஸ்ரீ தேவரின் சீடர்களும், அபிமானிகளும் சடலத்தின் மீது ஏராளமான மலர் மாலைகளைச் சாத்தினார்கள்.

**தினத்தந்தி**

டெல்லி பாராளுமன்ற மெம்பரும், பார்வர்டு பிளாக் தலைவருமான முத்துராமலிங்க தேவர் நேற்று காலை மதுரையில் மரணமடைந்தார். முத்துராமலிங்கத் தேவருக்கு 56 வயது ஆகிறது. இன்று (அக்டோபர் 30) தான் அவருடைய பிறந்தநாள். தீவிர முருகபக்தரான முத்துராமலிங்கத் தேவர் கடைசி வரை திருமணம் செய்து கொள்ளாமல் பிரம்மச்சாரியாக வாழ்ந்து வந்தார். அவர் மிகச்சிறந்த பேச்சாளர் என்றும் குறிக்கப்பட்டுள்ளது.

**ஜனசக்தி**

திரு. தேவர் அவர்களின் வாழ்க்கை வரலாற்றினை எண்ணுங்கால், மகிமை பொருந்திய தேசவிடுதலைப் போராட்டத்தின் உக்ர நிகழ்ச்சிகள் நிறைவுக்கு வருகின்றன எனத் தொடங்கி தமிழ்நாடு முழுவதும் சுற்றுப்பயணம் செய்து தேனினுமினிய செந்தமிழில், தமிழ் மரபின் வீரத்தோடு சுதந்திர ஆவேசமிக்க சொற்பொழிவுகளால் தமிழ் மக்களைத் தட்டியெழுப்பிய போர் வீரர் தேவர் என்றால் மிகையாகாது . . . . .

. . . . . சுதந்திரப் போராட்டத்திலும் தொழிலாளி வர்க்கப் போராட்டத்திலும் மட்டுமின்றி அக்காலத்தில் கள்ளர் மகா ஜனங்களை வதைத்து வந்த குற்றப் பரம்பரைச் சட்டத்தை (சி.டி.ஆக்ட்) எதிர்த்து, தேவரும், ஜீவா, ராமமூர்த்தி முதலிய தலைவர்களும் பெரும் இயக்கம் நடத்தி வெற்றி பெற்றனர்.

. . . . . உடல் நலக்குறைவால் மருத்துமனையில் அனுமதிக்கப்பட்டு சிகிச்சை பெற்று வந்தும் கூட அவரைக் காப்பாற்ற இயலவில்லை. அவரது மறைவினால் துயருற்றுக் கிடக்கும் அவரது உறவினர்களுக்கும், இதரர்களுக்கும் எமது ஆழ்ந்த அனுதாபங்கள்.

**திராவிடன்**

''விடுதலைப் போராட்டத்தின் முன்னணி தளபதிகளில் ஒருவரும், சிறந்த பேச்சாளரும், தென்பாண்டி நாட்டின் ஒப்புயர்வற்ற தலைவராகத் திகழ்ந்தவரும், தமிழக முன்னேற்றக் கட்சி

தலைவரும், பாராளுமன்ற உறுப்பினருமான திரு. பசும்பொன் முத்துராமலிங்கம் (தேவர்) அவர்கள் 29.10.1963 அன்று காலை மதுரையிலுள்ள அவரது இல்லத்தில் இயற்கையெய்தியமைக் குறித்து வருந்துகிறோம்''

திரு. முத்துராமலிங்கனார் அவர்கள் மறைவு ஈடு செய்ய முடியாத ஒரு நட்டமாகும். இந்தியாவின் விடுதலைப் போராட்டத்திலும், தொழிற்சங்க இயக்கங்களிலும் ஈடுபாடு கொண்டு அயராது பாடுபட்ட முத்துராமலிங்கனாரின் வரலாறு சிறப்புடையதாகும் என குறிப்பிட்டுள்ளார்.

## The Hindu

Mr. U. Muthu Ramalinga Thevar, M.P. Deputy Chairman, All India Forward Block, passed away at his residence in Thirunagar, five miles from here in the early hours of today. He was 55. Born on October 30, 1908 Mr. Muthu Ramalinga Thevar joined the freedom struggle in 1927 and courted imprisonment, he spent a total term five years in jail for defying British rule.

Since 1937 Mr. Thevar had been an M.L.A., and for the past ten years he was a member of the Loksabha . . .

. . . Owing to differences of opinion with the congress he left the party soon after independence and founded the Tamil Nadu Forward Block in 1948 he give his active support to organize the erstwhile Indian National Democratic Congress (forward by then congress dissidents) in 1957 following which, he was arrested under the preventive detention Act . . .

He was a great admirer to Netaji and was one of those who firmly believe that Netaji was still alive some where in Manchuria. He was Orator, and highly religious.

## The Indian Express

. . . . . In accordance with the express, wish of Mr. Thevar the body was moved to his native village for burial which will take place on Wednesday morning.

Mr. Thevar known throughout Tamil Nadu for his forceful Political utterances and powerful exposition of Hindu philosophy in Tamil he was bachelor.

## U.M. Thevar laid to rest

The body of Mr. U.M. Thevar M.P. and Forward Block leader was buried at Pasumpon his home village in Mudukulathur Taluk shortly after midday today.

According to information received here a number of DMK leader including Messieurs C.N. Annadurai, M.G. Ramachandran and S. Muthu were present at the burial.

**21.11.1963** ஆம் ஆண்டு வெளியான ''குமுதம்'' வார இதழில் பசும்பொன் தேவரின் மறைவு குறித்த தலையங்கச் செய்தி ''தீயிட்ட பசும்பொன் எதிர்ப்புக் கோட்டை'' பரபரப்பிற்கு ஒருவரான பசும்பொன் தீயிலிடப்பட்டுவிட்டது. வடக்கே ஒரு நேதாஜி என்றால் தெற்கே அவரது நினைவை இடையறாது நினைவூட்டி வந்தவர். திரு. முத்துராமலிங்கத் தேவர். தேவர் குலமக்கள் அவரிடம் கொண்டிருந்த பக்தியை மிஞ்சியது ஒன்று உண்டு. அது தேவருக்கு நேதாஜியிடம் இருந்த பக்தி .....

தமிழ்நாட்டின் சிறந்த பேச்சாளர்களில் ஒருவரெனக் கருதப்பட்டாலும் தேவருக்கும், மற்றவர்களுக்கும் வித்தியாசம் உண்டு. மைக்கை பிடித்ததும் மற்றவர்களுக்கு வருவது சொல், தேவருக்கு வருவது துணிச்சல்.

மூத்த அரசியல்வாதியான முத்துராமலிங்கத் தேவர் ஆன்மீகத்திற்கும் தன் வாழ்வில் முக்கிய இடமளித்திருந்தார். கடைசி வரை அவர் மணக்கவில்லை, ஆனால் மனத்தால் சமயப்பற்றுள்ளவராக. 10.11.1963 அன்று ''ஆனந்த விகடன்'' வார இதழில் அதன் ஆசிரியர் திரு. எஸ்.எஸ். வாசன் பசும்பொன் தேவர் இறப்பு குறித்து எழுதிய இரங்கல் தலையங்கம்.

தெய்வ நிந்தனை செய்பவர்களைக் கண்டவுடன் எரிபத்த நாயனாருக்கு அக்காலத்தில் ஏற்பட்ட கோபத்தையும் அவர் துடித்த துடிப்பையும் ஒருங்கே கொண்டு நம் காலத்தில் வாழ்ந்த தேசபக்தர் பசும்பொன் உ. முத்துராமலிங்கத் தேவர், தெய்வ நிந்தனை செய்பவர்களை ஓட ஓட விரட்டுவார். அவர் . . . . .

. . . . . ''முத்துராமலிங்கச் சிங்கமே ! பத்தரை மாற்று சொக்கத்தங்கமே'' என்ற பாடலை சுதந்திரப் போராட்டத்தின் போது, மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி ஆகிய மூன்று மாவட்டங்களிலுள்ள மக்கள் எல்லோரும் முழங்கி வந்தார்கள். சுதந்திரப் போரிலே அவர் ஈடுபட்டுப் போராடி பன்முறை சிறை சென்றார். வெள்ளைக்காரனுக்கு ஒரு திகிலாகவே விளங்கினார் . . . . .

ஐயா இறந்தாரோ, தேவர் மறைந்தாரோ என்று மதுரை முதல் இராமேஸ்வரம் வரை உள்ள மக்கள் கதறி அழும் சோகக்குரல் நாடெங்கும் கேட்கிறது. அவருக்கு கருத்து வேறுபாடு கொண்ட அரசியல் தலைவர்களும் கூட அவரைப் போற்றுகின்றார்கள். மாசு, மருவற்று விளங்கிய மறவர் குல மாணிக்கம் மறைந்ததற்கு விகடன் தன் வருத்தத்தை தெரிவித்துக் கொள்ளுகிறான்.

''நேதாஜியின் இந்திய தேசீய ராணுவத்தில் பணியாற்றிய வரும், பத்திரிக்கையாளருமான திரு. சக்திமோகன் தன்னுடைய ''கண்ணகி'' **1963** நவம்பர் மாத இதழில் பசும்பொன் தேவரின் மறைவு குறித்து ''சத்தியம் சாய்ந்தது'' என்ற தலைப்பில் எழுதிய தலையங்கத்தில்.

**சத்தியம் சாய்ந்தது !**

அதிகாலை 5 மணி !
ஒரு பையன்
கலங்கிய கண்களுடன் ஓடோடி வந்தான்
எனது வீட்டு வாயிலில் நின்று கொண்டு
''அண்ணா'' என்றான்
படுக்கையில் கிடந்த நான் பரபரப்போடு எழுந்து
''என்ன'' என்றேன்
''தலைவருக்கு ரொம்ப சீரியஸ்ஸாக இருக்காம் உங்களை உடனே வரச்சொன்னார்கள்'' என்றான் . . . . .
. . . . . சைக்கிளை எடுத்துக் கொண்டு பறந்தேன் என்றாலும்
உடம்பு படபடப்பு அடங்கவில்லை
வந்த வேகத்தோடேயே சைக்கிளை
தள்ளிவிட்டு மாடிப்படியில் ஏறினேன் . . . . .
மாடியின் தலைவாயிலில் கால் வைத்தேன்.
''பிரதர் ! நம்மை யெல்லாம் அகதிகளாக்கி விட்டு
நமது அண்ணா போய்விட்டார் !
என்று சசி அண்ணன் அலற
சின்னக்கருப்பத்தேவர் கதறிப்புலம்ப
மூக்கையாத்தேவர் உள்ளம் நொடித்து, உடல் சோர்ந்து
ஒடிந்து விழ . . . . . அப்பப்பா
துயரத்தின் விசுவரூபத்தை அன்றுதான் நேரடியாகக்
கண்டேன் – அனுபவித்தேன் . . . . . அப்புறம்
ஒருதாய், ஐந்தாறு சகோதரிகள்
''ஐயாவே, கள்ள நாட்டைக்காத்த கர்த்தாவே
எங்களை அனாதைகளாக்கி விட்டாயே . . . என்று அலறிக்
கொண்டே ஓடிவந்து விழுந்துபுரண்டதன் மூலம் . . . அங்கு
ஒரு சில விநாடிகள் நிலவிய அமைதியை குலைந்தது.

பிரபல பத்திரிக்கையாளரும், தேசீய வாதியுமான திரு. என்.ஜி. ரங்கா, ''கல்கி'' வார இதழில் 10.11.1963 அன்று ''தேவர் குல திலகம்'' என்ற தலைப்பில் எழுதிய தலையங்கத்தில்,

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவரின் அகால மரணத்தினால் நமது நாடு சிறந்த தேசபக்தர் ஒருவரை இழந்துவிட்டது. அவருடைய சமூகப்பணி ஒப்புவமை இல்லாதது. தமிழில் அவருடைய பேச்சுவன்மை நானிலம் அறிந்தது . . . . .

. . . . . வேலூர் சிறையிலும், மத்தியப் பிரதேசத்தில் உள்ள டாமோ ஜெயிலிலும், வருஷக்கணக்கில் ஒன்றாகவே அடைபட்டுக் கிடந்தோம். அந்தக் காலத்திலிருந்தே கீதையில் கண்ணன் காட்டியவழியை அப்படியே பின்பற்றியவர் தேவர். புத்தர் உபதேசங்களையும் ராமலிங்க சுவாமிகளின் அருட்பாவையும் அடிக்கடி படித்து மகிழ்வார்.

. . . . . ''நேதாஜியின் டில்லி'' யில் காணப்பட்ட ஆடம்பரங்களும், நவ நாகரீகங்களும், தேவரைத் துளியும் கவரவில்லை. ஒரு சந்நியாசியைப் போலவேதான் அவர் வாழ்க்கை நடத்தி வந்தார். பத்மாஸனத்தில் அமைதியாக அமர்ந்து, கூட்டம் கூட்டமாக வடக்குச் சாலையிலிருந்த தமது ஜாகைக்கு வந்த குழந்தைகளையும், சிறுவர்களையும் கையமர்த்தி ஆசிர்வதித்து அனுப்புவதை நான் பார்த்திருக்கிறேன். அவர் நிரபராதியாக இருந்தும், துரதிர்ஷ்டவசமாகக் காங்கிரஸ் ஆட்சியின் கொடுமையினால் எதிர்பாராதவிதத்தில் சிறைப்பட்டுத் தவிக்க வேண்டியிருந்தது . . . . .

. . . . . தமிழ்ப் பண்புக்கும் கலாசாரத்துக்கும் உறைவிடமான மதுரையம்பதிக்குப் பல தலைவர்கள் பலவிதங்களில் சேவை செய்துள்ளார்கள். அவருடைய ஸ்வர்க்காஹோணம் அவருடைய நண்பனான எனக்குப் பெரிய நஷ்டம், சுதந்திரக்கட்சிக்கு அவருடைய மறைவு மகத்தான நஷ்டம்.

தென் கிழக்கு ஆசிய நாடுகள் முழுவதிலும் பரவியுள்ள லட்சக்கணக்கான அவருடைய சிஷ்யர்களுக்கு என்னுடைய மனமார்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

**திராவிடன்**

**ஆசிரியர் என்.வு. நடராசன்**

இந்திய விடுதலைப் போராட்டத்திலும், தொழிற்சங்க இயக்கங்களிலும் ஈடுபாடு கொண்டு அயராது பாடுபட்ட திரு. முத்துராமலிங்கனாரின் புகழ் வரலாற்று சிறப்புடையதாகும் என புகழாரம் சூட்டியுள்ளது.

பத்திரிக்கைகள் காலத்தின் கண்ணாடிகளாக விளங்குகின்றன. இன்று நம் கண் முன் பார்க்க கூடிய தேவரின் திருவுருவம் மறைந்திருந்தாலும், இந்தக் காலக் கண்ணாடிகளின் மூலம் திருவுருவத்தையும் அதற்குள் புதைந்திருந்த தியாக வாழ்வையும் உணர்ந்து கொள்ள உதவியுள்ளன.





மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் கலைஞர் மு. கருணாநிதி அவர்களால்
1974ல் அமைக்கப்பட்ட தேவர் திருமகனாரின் மணிமண்டபம்.

# மறைந்தும் வாழும் மனிதக் கடவுள் பசும்பொன் தேவர்

**தன. திராவிடமணி**
செய்தியாளர், கமுதி.

தமிழக அரசியலில் முக்கிய தலைவர்களில் ஒருவரான, பசும்பொன் தேவர், அகில இந்திய அளவில் பிரபலமாய்த்திகழ்ந்தார். அகில இந்திய பார்வர்டு பிளாக் கட்சி தலைவர் பதவி வகித்து, சிங்கமென கர்ஜித்து, அனல் பறக்கும் குரல் ஒலித்து, அரசியல் தனித்தன்மை வகித்து, காந்திஜி, நேதாஜி, பட்டேல், திலகர், நேரு, ராஜாஜி, காமராஜர் போன்ற தலைவர்களில் ஒருவராய் திகழ்ந்து, முக்குலத்தோர் மக்களால் போற்றி பேசப்பட்ட, மதிக்கப்பட்ட ''மாமனிதர்'' ஆக பசும்பொன் தேவர் உலா வந்தார்.

பசும்பொன் தேவரின் வாழ்நாட்கள் சரித்திரம் படைத்தன. அத்தகைய மகிமை, பசும்பொன் தேவர் மறைவிற்குப் பின்பும் நீடிக்கிறது. ஆம். பெண்ணாசை, பொன்னாசை, மண்ணாசை துறந்து, முழு பிரம்மச்சரியம் கடைப்பிடித்து, அரசியல் வாழ்வுடன், ஆன்மீக வாழ்வையும் இணைத்து வாழ்ந்தது மட்டுமில்லாமல் பக்தியும், தியானமும், பூஜை வழிபாடும் மிகுந்த ''துறவி'' ஆகவும் பசும்பொன் தேவர் வாழ்ந்தார்.

இத்தகைய அபூர்வத்தன்மைகள்தான் முக்குலத்தோர் மக்கள் மத்தியில் அன்றும், இன்றும், என்றும் நினைவிற்கொள்ளச் செய்துள்ளன. பசும்பொன் தேவர் மறைவிற்குப் பின்பு, அவரை ''கடவுள்'' ஆக ஏற்கச் செய்துள்ளன. 1963 ஆம் ஆண்டு, அக்டோபர், 30ந் தேதி உடல் அளவிலும், உயிர் அளவிலும் பசும்பொன் தேவர் இறந்தாரே தவிர, வேறு எந்த வகையிலும் இறக்கவே இல்லை, மறையவே இல்லை.

முக்குலத்தோர் சமுதாயத்தினர் போற்றி வணங்கி வரும் ''மனிதக்கடவுள்'' தான் பசும்பொன் தேவர் என்பதை ஆண்டு தோறும் நடைபெற்று வரும் பசும்பொன் தேவர் குரு பூஜை நிரூபித்து வருகிறது. எனக்கு வயது 58. நான் கடந்த 1969 ஆம் ஆண்டில் செய்தியாளர் ஆனேன். அன்றைய இருந்து கடந்த 38 ஆண்டுகளாக பசும்பொன் தேவர் குருபூஜையின் மகிமையையும், சிறப்பையும் பற்றி செய்திகள் பிரசுரிக்கச் செய்து வரும் பாக்கியம் பெற்றுள்ளேன்.

எனது வாழ்நாளில் பசும்பொன் தேவரை நேரில் நான் பார்க்கும் வாய்ப்பு, எனக்கு கிட்டவே இல்லை. அதன் விளைவோ, என்னவோ ? எனது வாழ்நாளில் பசும்பொன் தேவருக்கு புகழ் சேர்க்கும் வகையில் குருபூஜை சிறப்பு செய்திகளை கடந்த 38 ஆண்டுகளாக ஆக பிரசுரிக்கச் செய்யும் பெரும் அதிர்ஷ்டத்தை பசும்பொன் தேவர் வழங்கி உள்ளார் என்றே கருதுகிறேன், நம்புகிறேன். ஒரே சமயம் 7 நாளிதழ்களில் இச்செய்திகளைப் பிரசுரிக்கச் செய்யும் வாய்ப்பு கிடைத்ததை எண்ணி, எண்ணி மகிழ்கிறேன்.

ஆரம்ப கால கட்டத்தில் குருபூஜை சமயம் பசும்பொன்னில் முக்குலத்தோர் சமுதாயத்தினர் சில ஆயிரம் பேரைக்கண்டேன். பின்னர் ஆண்டுகள் செல்லச் செல்ல பல ஆயிரம் பேரைக் காண்பதில் பூரிப்பு அடைகிறேன். புள காங்கிதம் கொள்கிறேன். நிச்சயம், எதிர் காலத்தில் பல லட்சம் பேர் பசும்பொன்னில் குருபூஜை சமயம் கூடுவார்கள் என்பதில் சந்தேகமே இல்லை. இதை எந்த சக்தியும் தடுத்து விடவே முடியாது.

பசும்பொன்னில் தேவரின் திருவுடல் அடக்கம் செய்யப்பட்ட இடம், ''பசும்பொன் தேவர் சமாதி'' என்று ஆரம்ப கால கட்டத்தில் சொல்லப்பட்டு வந்தது. பின்னர் இச்சொல் ''பசும்பொன் தேவர் நினைவிடம்'' என்று மாறியது.

அதன்பின் ''பசும்பொன் தேவர் நினைவாலயம்'' என்றும், தற்போது ''பசும்பொன் தேவர் திருக்கோவில்'' என்றும் அழைக்கப்பட்டு வருகிறது.

இவற்றையெல்லாம் நிரூபிக்கும் வகையில் ஆண்டு தோறும் குருபூஜை சமயம் மட்டுமில்லாமல் எந்த சமயமும் பசும்பொன் தேவர் திருக்கோவிலுக்கு வரும் தேவரின மக்களும், தேவர் பக்தர்களும் பக்திப் பரவசமாய் வணங்குகிறார்கள். தேங்காய் உடைத்தும், ஊதுபத்தி, சாம்பிராணியுடன், சூடம் தீப ஆராதனை செய்து வழிபடுகிறார்கள். பொங்கல் படைக்கிறார்கள். மொட்டை போட்டுக் கொண்டும், பால்குடம், முளைப்பாரி கொண்டு வந்தும், அக்கினி சட்டி, காவடி எடுத்து வந்தும் நேர்த்திக்கடன் செலுத்துகிறார்கள். தேர்ப்பவனியும் நடைபெறுகிறது.

ஒரு பிரசித்த பெற்ற கோவிலில் திருவிழா, உற்சவங்கள் எப்படியெல்லாம் நடைபெறுமோ? அவையெல்லாம் பசும்பொன் தேவர் திருக்கோவிலில் நடைபெறுகின்றன என்றால் அதுமிகையாகாது. இந்திய அரசியல் தலைவர்களில் ஏன் ? உலக அரசியல் தலைவர்களிலேயே பசும்பொன் தேவர் ஒருவர் தான் ''மனிதக்கடவுள்'' ஆக பெரும் பிறவிப்பயன் பெற்று, முக்குலத்தோர் மக்களுக்கு அருள்புரிந்து வருகிறார்.

பசும்பொன் தேவர் திருக்கோவிலுக்கு முக்குலத்தோர் மக்கள் மட்டுமின்றி, தேவர் பக்தர்கள் மட்டுமின்றி, அனைத்து அரசியல் கட்சித் தலைவர்களும், தொண்டர்களும் போட்டி போட்டுக் கொண்டு வந்து வணங்குவதும் சிறப்பு அம்சம் ஆகும். இவர்கள் அனைவருமே பசும்பொன் தேவர் திருக்கோவிலுக்குச் சென்று வணங்குவதை பெரும் கடமையாகவும், பெருமையாகவும் கருதுகிறார்கள்.

இப்படியொரு உயர்வான தெய்வீக அம்சம் உலகில் பசும்பொன் தேவர் ஒருவருக்கு மட்டுமே உள்ளது என்பதையாரும் மறுக்க முடியாது. எனவே மனிதராய்ப்பிறந்து, வளர்ந்து, வாழ்ந்து, மறைந்து, ''மனிதக் கடவுள்'' ஆக நிலைத்துள்ள பசும்பொன் தேவர் புகழ் காலத்தால் அழியாதது. யாராலும் அழிக்க முடியாதது. இந்த உலகம் உள்ள வரை நிலைத்திருப்பது என்பது உண்மை, உண்மை.





முத்துராமலிங்கத் தேவர் சமாதிக்கு ராஜீவ்காந்தி அஞ்சலி செலுத்துகிறார்.

## பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் நூற்றாண்டு விழாக்குழு

தலைவர் :

திரு. **இரா. கிர்லோஷ்குமார்** இ.ஆ.ப. அவர்கள்,
மாவட்ட ஆட்சித் தலைவர், இராமநாதபுரம்.

**உறுப்பினர்கள் (அரசு அலுவலர்கள்) :**

திருமதி. பூஜா குல்கர்ணி, இ.ஆ.ப.,
கூடுதல் ஆட்சியர் (வளர்ச்சி),
இராமநாதபுரம்.

திரு. அ. தமிழ்மணி,
மாவட்ட வருவாய் அலுவலர், இராமநாதபுரம்.

மரு. லலிதாராஜகுமாரி
இணை இயக்குநர் (சுகாதாரம்),
இராமநாதபுரம்.

திரு. த. சரவணன்,
மக்கள் தொடர்பு அலுவலர்,
இராமநாதபுரம்.

திரு. ஆர். பாஸ்கரன்,
கோட்டப் பொறியாளர்,
நெடுஞ்சாலைத்துறை, இராமநாதபுரம்.

திரு. எஸ். வெங்கடராமானுஜம்,
செயற்பொறியாளர்,
தமிழ்நாடு மின்சார வாரியம், பரமக்குடி.

திரு. வெ. பழனிவேல்சாமி,
முதன்மை கல்வி அலுவலர்,
இராமநாதபுரம்.

திரு. பே. இராமன்,
மாவட்ட ஆதிதிராவிடர் நல அலுவலர்,
இராமநாதபுரம்.

மரு. எம். செல்லத்துரை,
துணை இயக்குநர் (சுகாதாரம்),
பரமக்குடி.

திருமதி. என். குருதேவி,
வட்டாட்சியர், கமுதி.

திரு. இரா. திருஞானம், இ.கா.ப.,
காவல் கண்காணிப்பாளர்,
இராமநாதபுரம்.

திரு. ஏ.என். நாரேந்திரன் நாயர், இ.கா.ப.,
உதவி காவல் துறை கண்காணிப்பாளர், கமுதி.

திரு. பி. இராமலிங்கம்,
வருவாய் கோட்டாட்சியர், (உறுப்பினர் – செயலர்)
பரமக்குடி.

திரு. இரா. பாஸ்கரன்,
செயற்பொறியாளர்,
பொதுப்பணித்துறை (கட்டடம்), இராமநாதபுரம்.

திரு. எம். சந்திரன்,
வட்டார போக்குவரத்து அலுவலர்,
இராமநாதபுரம்.

திரு. க. சந்திரசேகரன்,
உதவி இயக்குநர் (பேரூராட்சிகள்),
சிவகங்கை.

திரு. க. சுப்பையா,
மாவட்ட பிற்பட்டோர் மற்றும் சிறுபாண்மையினர்
நல அலுவலர், இராமநாதபுரம்.

திரு. கே. முனியாண்டி,
கோட்ட மேலாளர்,
தமிழ்நாடு அரசு போக்குவரத்து கழகம், இராமநாதபுரம்.

திரு. ஜா. பிரான்சிஸ் வாஸ்,
கோட்டத் தீயணைப்பு அலுவலர்,
இராமநாதபுரம்.

திரு. எஸ்.வி. லிங்கம்,
வட்டார வளர்ச்சி அலுவலர், கமுதி.

## பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் நூற்றாண்டு விழாக்குழு

**உறுப்பினர்கள் (அரசு அலுவலர் அல்லாதவர்கள்) :**

திருமதி. எம்.எஸ்.கே. பவானிஇராஜேந்திரன்,
பாராளுமன்ற உறுப்பினர், இராமநாதபுரம்.

திரு. கே. முருகவேல்,
சட்டமன்ற உறுப்பினர், முதுகுளத்தூர்.

திரு. பி.கே. கிருஷ்ணன்,
ஒன்றியப் பெருந்தலைவர்,
கமுதி.

திரு. எம்.எஸ். நிறைகுளத்தான்,
முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர்,
பேரையூர், கமுதி.

திரு. கே. முத்துவேல்,
முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்,
கமுதி.

திரு. எஸ். இராஜபாண்டியன்,
மாவட்ட ஊராட்சிக்குழு உறுப்பினர்,
கமுதி.

திருமதி. த. காந்தி மீனாள் நடராஜத் தேவர்,
தலைவர், பசும்பொன் முத்துராமலிங்கத்
தேவர் அறக்கட்டளை, பசும்பொன்.

திரு. வி. போஸ்,
ஒன்றியக்குழு உறுப்பினர், இராமசாமிபட்டி.

திருமதி. என். செல்வராணி,
ஊராட்சி மன்றத் தலைவர்,
பசும்பொன் ஊராட்சி.

திரு. கே. மலைச்சாமி,
மாநிலங்களவை உறுப்பினர்.

திரு. ஆ. ரவிச்சந்திரராமவன்னி,
மாவட்டஊராட்சித் தலைவர், இராமநாதபுரம்.

திரு. எஸ். காதர்பாட்சா (எ) வெள்ளைச்சாமி,
முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்,
கமுதி.

திரு. தனிக்கோடித் தேவர்,
முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்,
கமுதி.

திரு. கே. பதினெட்டாம்படியான்,
முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்,
முதுகுளத்தூர்.

திருமதி. ரா. ரேணுகாதேவி,
ஒன்றியக்குழு உறுப்பினர்,
கமுதி.

திரு. பி.எஸ். கணேஷ்குமார்,
பேரூராட்சித் தலைவர்,
அபிராமம்.

திரு. வாசுதேவன்,
ஒன்றியக்குழு உறுப்பினர், சடையனேந்தல்.

திரு. ஆர். தவசியாண்டித்தேவர்,
ஊராட்சி மன்றத் தலைவர்,
பம்மனேந்தல், கமுதி.

# பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் நூற்றாண்டு விழாக்குழு

**உறுப்பினர்கள் (அரசு அலுவலர் அல்லாதவர்கள்) :**

திரு. எஸ்.பி. காளிமுத்து,
முன்னாள் ஒன்றியப் பெருந்தலைவர்,
கமுதி.

திரு. எம். இராமையாத் தேவர்,
மாவட்டத் தலைவர், பார்வர்டு பிளாக்,
கமுதி.

திரு. வி.கே. இராமசாமி தேவர்,
திராவிடர் விழிப்புணர்ச்சி கழகம்,
கமுதி.

திரு. எஸ். பொன்னுச்சாமி,
மாவட்ட காங்கிரஸ் துணைத் தலைவர்,
பெருநாழி, கமுதி வட்டம்.

திரு. செந்தூர் பாண்டியன்,
தி.மு.க. இளைஞர் அணி, கமுதி.

திரு. எம். பூவலிங்கம்,
முன்னாள் மாவட்ட காங்கிரஸ் த லைவர்,
முதுகுளத்தூர்.

திரு. கதிர்வேல்,
ம.தி.மு.க. ஒன்றியச் செயலாளர்,
கமுதி.

திரு. முனியசாமி,
ம.தி.மு.க., கமுதி.

திரு. ச. போஸ்,
மேலராமநதி கிராமம்,
காவடிப்பட்டி(அஞ்சல்),
கமுதி வட்டம்.

திரு. கா.கோவிந்தசாமி,
கௌரவத் தலைவர், ஆப்பநாடுமறவர் சங்கம்,
முதுகுளத்தூர்.

திரு. மு. தளபதி ராஜ்குமார்,
மாவட்டச் செயலாளர்,
மாவட்ட ஆதிதிராவிட நலக்குழு உறுப்பினர், கமுதி.

திரு. எம். இராஜேஸ்வரன்,
முன்னாள்மாவட்ட ஊராட்சி உறுப்பினர்,
பார்வர்ட் பிளாக் மாநில செயலாளர், கமுதி.

திரு. போஸ்,
கம்யூனிஸ்ட் ஒன்றியத் தலைவர்,
கமுதி.

திரு. கருப்பையா,
பசும்பொன், கமுதி.

திரு. இராமமூர்த்தி,
பசும்பொன்,
கமுதி.

திரு. பூமித் தேவர்,
மாவட்டத் தலைவர், திராவிட விழிப்புணர்ச்சி
கழகம், கமுதி.

திரு. கே. முத்துத்தேவர்,
மாரந்தை, கடலாடி தாலுகா.

திருமதி. போ. இந்துராணி,
மேலராமநதி கிராமம்,
காவடிப்பட்டி,
கமுதி வட்டம்.

# பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் நூற்றாண்டு விழா மலர் வெளியீட்டுக்குழு

தலைவர் :

திரு. **இரா. கிர்லோஷ்குமார்** இ.ஆ.ப. அவர்கள்,
மாவட்ட ஆட்சித் தலைவர், இராமநாதபுரம்.

**உறுப்பினர்கள் :**

திருமதி. எம்.எஸ்.கே.பவானி இராஜேந்திரன்,
பாராளுமன்ற உறுப்பினர், இராமநாதபுரம்.

திரு. கே. முருகவேல்,
சட்டமன்ற உறுப்பினர், முதுகுளத்தூர்.

திருமதி. பூஜா குல்கர்ணி இ.ஆ.ப.,
கூடுதல் ஆட்சியர் (வளர்ச்சி), இராமநாதபுரம்.

திரு. இரா. திருஞானம், இ.கா.ப.,
காவல் துறை கண்காணிப்பாளர், இராமநாதபுரம்.

திரு. அ. தமிழ்மணி,
மாவட்ட வருவாய் அலுவலர்,
இராமநாதபுரம்.

திரு. த. சரவணன்,
செய்தி மக்கள் தொடர்பு அலுவலர்,
இராமநாதபுரம். (உறுப்பினர் – செயலர்)

திரு. காதர்பாட்சா (எ) வெள்ளைச்சாமி,
முன்னாள் சட்டமன்ற உறுப்பினர், கமுதி.

திரு. பி. இராமலிங்கம்,
வருவாய் கோட்டாட்சியர், பரமக்குடி.

திரு. வெ. பழனிவேல்சாமி,
முதன்மை கல்வி அலுவலர், இராமநாதபுரம்.

திரு. எம்.எஸ்.நிறைகுளத்தான்,
முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர், பேரையூர், கமுதி.

சாத்தஸ்ரீ சிவலிங்கேஸ்வர சுவாமிகள்,
கோவை காமாட்சிபுர ஆதீனம்,
காமாட்சிபுரம், கோவை.

ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக
பரமாச்சாரியார், மதுரை ஆதீனகர்த்தர்,
மதுரை – 1.

திரு. அல்லாபக்ஸ்,
செய்தியாளர்,
தினத்தந்தி, இராமநாதபுரம்.

திருமதி. த. காந்திமீனாள் நடராஜத்தேவர்,
தலைவர், பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர்
அறக்கட்டளை, பசும்பொன், கமுதி.

திரு. க. கோவிந்தசாமி,
வழக்கறிஞர், முதுகுளத்தூர்,
இராமநாதபுரம் மாவட்டம்.

பேராசிரியர். வே. கோபால்,
செய்தில் இல்லம், லெட்சுமிபுரம்,
பழனி, திண்டுக்கல் மாவட்டம்.

# பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் நூற்றாண்டு விழா மலர் வெளியீட்டுக்குழு

**உறுப்பினர்கள் :**

திரு. வி.எஸ். நவமணி,
23(12),சத்தியமூர்த்தி 1வதுதெரு,
மீனாம்பாள்புரம், மதுரை – 1.

முனைவர். அ. அழகுமலை,
அரசியல் அறிவியல் துறை, பசும்பொன்
உ. முத்துராமலிங்கத் தேவர் நினைவுக் கல்லூரி, கமுதி.

பேராசிரியர். கே. செல்வராஜ்,
பசும்பொன் உ. முத்துராமலிங்கத் தேவர்
நினைவுக் கல்லூரி, கமுதி.

திரு. எஸ். சம்பத்,
கண்ணகி பதிப்பகம்,
மாடல் ஹவுஸ், 4–வது குறுக்குத்தெரு,
அண்ணா நகர், மதுரை – 20.

முனைவர். கே.வி. ஜெயராஜ்,
பேராசிரியர், இயக்குநர், தேவர் ஆய்வு மையம்,
மதுரை காமராஜர் பல்கலைக்கழகம், மதுரை.

முனைவர் கே. இராமநாதன்,
பசும்பொன் உ. முத்துராமலிங்கத் தேவர்
நினைவுக் கல்லூரி, கமுதி.

திரு. எஸ். இராஜபாண்டியன்,
மாவட்ட ஊராட்சி உறுப்பினர்,
பார்வர்டு பிளாக் மாநில பொதுச்செயலாளர்,
(வல்லரசு பிரிவு)
பெருநாழி, இராமநாதபுரம்.

திரு. நீ. இராமகிருஷ்ணன்,
முதுகலை வணிகவியல் ஆசிரியர்,
11/96ஏ, விவேகானந்தர் சாலை,
பரமக்குடி.

## பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் நூற்றாண்டு விழா மலர் வெளியீட்டு பொறுப்புக்குழு

தலைவர் :

திரு. **இரா. கிர்லோஷ்குமார்** இ.ஆ.ப. அவர்கள்,
மாவட்ட ஆட்சித் தலைவர், இராமநாதபுரம்.

துணைத் தலைவர் :
திரு. **க. கோவிந்தசாமி,**
வழக்கறிஞர், முதுகுளத்தூர்,
இராமநாதபுரம் மாவட்டம்.

உறுப்பினர் – செயலர் :
திரு. **த. சரவணன்,**
செய்தி மக்கள் தொடர்பு அலுவலர்,
இராமநாதபுரம்.

**உறுப்பினர்கள் :**

பேராசிரியர். **வே. கோபால்,**
செந்தில் இல்லம்,
லெட்சுமிபுரம், பழனி,
திண்டுக்கல் மாவட்டம்.

முனைவர். **அ. அழகுமலை,**
அரசியல் அறிவியல் துறை, பசும்பொன்
உ. முத்துராமலிங்கத் தேவர் நினைவு கல்லூரி,
கமுதி.

பேராசிரியர். **கே. செல்வராஜ்,**
பசும்பொன் உ. முத்துராமலிங்கத் தேவர்
நினைவுக் கல்லூரி, கமுதி.

திரு. **எம்.எஸ். அல்லாபக்ஸ்,**
செய்தியாளர்,
தினத்தந்தி, இராமநாதபுரம்.











செல்வச் செழிப்பான
குடும்பத்தில் பிறந்தும்
நாட்டின் விடுதலைக்காக
தன்னையே
அர்ப்பணித்துக்கொண்ட
தியாக தீபம்!
பசும்பொன் தேவர் திருமகனாரின்
நாட்டுப்பற்றை
நாமும் பின்பற்றுவோம் !

வாழ்க தேவர் திருமகனாரின்
புகழ் !



**சுப. தங்கவேலன்**

குடிசை மாற்று மற்றும்
இடவசதிக் கட்டுப்பாட்டுத் துறை அமைச்சர்

சொன்னதைச் செய்வோம் !
செய்வதைச் சொல்லுவோம் !

தேசீயம் எனது உயிர் !
தெய்வீகம் எனது உடல் !



## தெய்வீகத் தலைவர்
## பசும்பொன்
## உ. முத்துராமலிங்கத்
## தேவர் புகழ் சிறக்க

மதுரை கோரிப்பாளையத்தில் தேவர்
சிலை திறந்தவரும் கலைஞரே !
கமுதி, உசிலம்பட்டி, மேலநீலிதநல்லூரில்
தேவர் பெயரால் அரசு கல்லூரிகளை
அமைத்தவரும் கலைஞரே !
தேவரின மக்களை
மிகவும் பிற்படுத்தப்பட்டோர்
பட்டியலில் சேர்த்தவரும் கலைஞரே !
1974ல் பசும்பொன்னில் தேவர் மணி மண்டபம்
அமைத்தவரும் கலைஞரே !
தேவரின் நூற்றாண்டு விழாவை
சிறக்க வைப்பதும் கலைஞரே !
நூற்றாண்டு விழாவையொட்டி
கோடிக்கணக்கான ரூபாய் செலவில்
பல்வேறு பணிகளை பசும்பொன்னில்
மேற்கொள்பவரும் கலைஞரே !

தெய்வீகத் திருமகனார் புகழும், கலைஞர் புகழும் என்றும் இவ்வுலகில் அழியா இடம் பெறும்.



பணிவுடன்,

**கே. முருகவேல்,** பி.ஏ.,
சட்டமன்ற உறுப்பினர்,
முதுகுளத்தூர் தொகுதி.
தி.மு.கழக தலைமை பொதுக்குழு உறுப்பினர்,
இராமநாதபுரம் மாவட்டம்.











தேசீய வாதியாக,

ஆன்மீக வாதியாக,

உள்ளத்தில் வீரமும்,

பேச்சில் விவேகமும்,

நடத்தையில் ஒழுக்கமும்,

எல்லாவற்றிற்கும் மேலாக,

மிகச்சிறந்த மனித நேயமும்,

மாண்பும் உள்ள மனிதராக வாழ்ந்து,

இன்றளவும் அனைத்துப் பிரிவினராலும்

போற்றிப் புகழப்படும்

தெய்வீகத் திருமகனாக வாழ்ந்த தேவர் திருமகனாரின் நூற்றாண்டு விழா
சிறக்க வாழ்த்தும் . . . . .





**ஆர்.ஜி. ரெத்தினம்**
தி.மு.க. நகர் செயலாளர்,
இராமநாதபுரம்.

திரைப்பட நடிகர்
**முகவை கே. குமார் (எ)**
**J.K. ரித்தீஷ்**
நகர் தி.மு.க., இராமநாதபுரம்.






தன்னலங்கருதாத தியாக செம்மலே
தென்னாட்டு மறவர் குலத்தவர் போற்றும்
தியாகச்சுடரே !
தெய்வீகமும் தேசீயமும் காத்திட்ட
பார் புகழும் தெய்வீகத் தலைவரே !
இவ்வுலகம் உள்ளவரை
உன் புகழ் நிலைத்திருக்கும் . . .

நூற்றாண்டு விழா சிறக்க
வாழ்த்தும் . . .



**எம்.எஸ்.கே. பவானி இராஜேந்திரன்**
நாடாளுமன்ற உறுப்பினர்,
இராமநாதபுரம்.







பசும்பொன் தேவர் புகழ் காலத்தால் அழியாதது.
யாராலும் அழிக்க முடியாதது.
இந்த உலகம் உள்ள வரை நிலைத்திருப்பது
என்பது உண்மை, உண்மை.



நூற்றாண்டு விழா
சிறக்க வாழ்த்தும் . . .

பெருநாழி **எஸ். வேல்ச்சாமி**
வேளாண் விற்பனைக்குழுத் தலைவர்,
விருதுநகர் மண்டலம்
மற்றும் மாவட்ட பொருளாளர், தி.மு.கழகம்,
இராமநாதபுரம்.

சுடர்விட்டு பிரகாசித்த சுத்தத் தங்கம் !
தெய்வீகத் திருமகனாரின் புகழ் பரவ பாடுபடுவோம் !!



நூற்றாண்டு விழா சிறக்க வாழ்த்தும் .....

**S.R.தேவர்**

நிறுவனத் தலைவர்

**தமிழ்நாடு தேவர் இளைஞர் பேரவை**











தேவர் குரு பூஜைக்கு வருகை தரும்
அமைச்சர் பெருமக்களையும்,
கோடானு கோடி பக்தர்களையும்
வருக ! வருக ! வருக !
என வரவேற்கும்





**எஸ். வெள்ளப்பாண்டியன்**
அரசு ஒப்பந்தக்காரர்,
கயத்தார்,
தூத்துக்குடி மாவட்டம்.

**எம். பேச்சிபாண்டியன்**
சேர்மன்,
சிறப்பு நிலை பேரூராட்சி
தாழை நகர தி.மு.க. செயலாளர்,
தாழை தி.மு.க. பொதுக்குழு உறுப்பினர்,
திருநெல்வேலி.




## PENNA ELECTRICITY LIMITED

**Power Plant** : Therrukukattoor Village, Valantharavai - 623 536.
Ramnad District, Tamil Nadu. Phone : 04567 - 253790 / 792
Fax : 04567 - 253791 E-mail : pennarmd@rediffmail.com



தேசீயமும், தெய்வீகமும்
தேவர் திருமகானின் இரு கண்கள்
என்பதை இந்த உலகம் உள்ள அளவும்
பறைசாற்றிக் கொண்டிருக்கும் . . . . .

தேவர் திருமகனாரின் நூற்றாண்டு விழா
சிறக்க நல்வாழ்த்துக்களை
தெரிவித்துக் கொள்கிறோம்.




**Nalli**®

*Since 1928*

First and the Finest...

## நல்லி சின்னசாமி செட்டி

பனகல் பார்க், தி.நகர், சென்னை-17.

தொ. பே. : 24344115 / 42604567.

*Fax : (044) 24343062*

*Email : inquiry@nalli.com*

*Website : www.nalli.com*



அன்பே, கொடையே 'பசும்பொன்' சமயம் !
உருவத்தால், உள்ளத்தால் 'முத்து' இமயம் !
பாரதம், ஆன்மீகம் 'ராமலிங்க'(ர்) அகமயம் !
தேவரிடம் சேர்ந்த 'தேவர்' முகவரி !
ஆண்டு பல நூறானாலும் – பாரத
உள்ளத்தில் அழியாக் கல்வெட்டு வரி !
''வாழ்க பசும்பொன்
முத்துராமலிங்கத் தேவர் புகழ்''

**இவண்,**
**இராமநாதபுர மாவட்டத் திரையரங்கு**
**உரிமையாளர்கள் சங்கம்,**
**இராமநாதபுரம்.**

*With Best Compliments From*

## Operational Energy Group India Pvt. Ltd.

Operations & Maintenance of Power Plants in

- Diesel Engines,
- Coal Fired,
- Gas Turbine
- Hydroelectric,
- Biomass,
- Wind Energy




## South Ganga Waters Technologies Pvt. Ltd.

(Specialist in Sea Water Desalination Plant)

**Water Supply to Power Plants & Minerals**

**Head Office :**
Gokul Arcade, East Tower A, 5th Floor,
No.2 & 2A, Sardar Patel Road,
Adyar, Chennai- 600 020.





# S.R. & CO.,
ENGINEERING CONTRACTORS

Admn. Off. : No. 1, S.P.K. Complex, 2nd Street, Anandapuri Nagar, Aruppukottai - 626 101. Ph. 04566 - 228708
Regd. Off. : Keelamudimannarkottai, Kamuthi (T.k.) Ramnad (D.t) - 623 603. Cell : 98421 78000, 98421 27770



# Jai Venkateswara Spinners (P) Ltd.,

Admn. Off. : SPK Complex, Ananthapuri Nagar, Madurai Road, Aruppukottai - 626 101. ☎ 228708
Regd. Off. : 8-A, North Gate, S.S. Colony, Madurai - 625 010.



*With Best Compliments*

*From*



Managing Partners :

N. SEYYADURAI
No. 2, 2nd Street, Anandapuri Nagar
Aruppukottai - 626 101
Ph : 223112, Cell : 98421 27780

R. RAMAKRISHNAN
1-18-11C, Velmurugan Colony
Aruppukottai - 626 101
Ph : 221354, Cell : 98421 04566



கட்சித்தலைவராக,
ஆன்மீகவாதியாக, போராளியாக,
சமூக சீர்த்திருத்தவாதியாக
பாரதத்தாய் பெற்றடுத்த தவப்புதல்வர்
தெய்வீகத் திருமகன்
தேவர் அவர்களின் நூற்றாண்டு விழா
சிறக்க வாழ்த்தும் . . .



**M. இராமையாத்தேவர்,**
இன்ஜினியரிங் காண்ட்ராக்டர்,
அகில இந்திய பார்வர்ட் பிளாக்
இராமநாதபுரம் மாவட்டத் தலைவர்,
சேதுபதி நகர், கோட்டைமேடு, கமுதி.



பிடர்சிலிர்க்க
முழங்கிய
தமிழ்ச்சிங்கம்
பசும்பொன்
முத்துராமலிங்கர்
தன்னவிலேயே
ஒரு
தமிழ்ச்சங்கம்

பார் புகழும் தெய்வீகத் தலைவர்
தேவர் அவர்களின் நூற்றாண்டு விழா
சிறக்க வாழ்த்தும் . . .



**K. முத்துவேல்,**
முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்,
தலைவர், அகில இந்திய பார்வர்டு பிளாக்,
தமிழ்நாடு பிரிவு.



''பேசுவது, எழுதுவது சிந்திப்பது சேவை செய்வது எல்லாமே தேசத்திற்கேயன்றி எனக்காக அல்ல'' என்று முழக்கமிட்ட பசும்பொன் திருமகனாரின் நூற்றாண்டு விழா சிறக்க

வாழ்த்தும் . . .

**கப்பலூர் ராம கரிய மாணிக்கம் அம்பலம் நினைவு**
**கப்பலூர் நாட்டு மக்கள் நலச்சங்கம்,**
**கப்பலூர்.**

## தெய்வீகமும் தேசீயமும்

.............தேசீயமும், தெய்வீகமும் வெவ்வேறல்ல. ஒன்றிலிருந்து ஒன்றைப் பிரிக்கக்கூடாது. பிரித்தால் இரண்டுமே அதனதன் அசல் தன்மையை இழந்து கெடும். தெய்வீகமற்ற தேசத்தில் நீசத்தன்மைதான் பெருகும். நீசத்தன்மை பெருகிய தேசத்தில் நல்லவர்கள் மைனாரிட்டி ஆகிவிடுவார்கள், நல்லவைகளையும், நல்லவர்களையும் உண்டாக்கி, தேசீயத்திற்கு விநியோகிக்குமூ சக்திதான் தெய்வீகம். இந்த தெய்வீக சக்தியை வேண்டாத தேசீயம் தேசீயமாகாது. உணர்க !

– பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர்

## ஆண்டவன் ஜாதியைப் படைக்கவில்லை

ஜாதியையும், நிறத்தையும் பார்த்து மனிதனை மனிதன் தாழ்வுபடுத்துவது மகா கொடுமை. ஆண்டவன் மனிதகுலத்தைத்தான் படைத்தாரே தவிர ஜாதியையும், நிறத்தையும் அல்ல ! எல்லாச் சாதியைச் சேர்ந்த எல்லா மக்களுக்குமே ஆண்டவன் தான் தகப்பன். மனிதனாகப் பிறந்து விட்டால், வயதில்தான் வித்தியாசம் – ஜாதியில் அல்ல. அனல் நிறம் கொண்ட சிவபிரானையும் அட்டக்கரி நிறம் கொண்ட கண்ணனையும் நாம் நிற வித்தியாசம் பார்த்து வணங்குவதில்லை. தத்துவரீதியாக ஏற்பட்ட நிற வித்தியாசத்துக்காக நாம் சிவனை வணங்கி, கண்ணனை அலட்சியப்படுத்துவதில்லை. கடவுளர்களும், ஜாதிவித்தியாசம் பார்ப்பதில்லை. மனிதர்கள் ஜாதிவித்தியாசம் பார்க்கக்கூடாது என்பதற்காகவேதான் அரன்மகன் குமரனையும் குறமகள் வள்ளியையும் தம்பதிகளாக்கிக் காட்டுகிறது நமது வேதம். ஜாதி என்பது பச்சை அநாகரீகம். ஜாதியையும், நிறத்தையும் பார்ப்பவன் அரசியலுக்கும் லாயக்கில்லை. ஆன்மீகத்துக்கும் லாயக்கில்லை. ஜாதி பார்ப்பவன் தெய்வத்தை வணங்குவதில் பொருளே இல்லை. ஜாதிக்காக எதையும் செய்பவன் அரசியலில் புகுந்தால் அரசியல் கெடும். ஜாதியும், நிறமும் அரசியலுக்குமில்லை – ஆன்மீகத்துக்கும் இல்லை.

**– பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர்**


பள்ளி பருவத்தில் தேவர்.


இளைஞராக தேவர் (1933)


அரசியல் குரு சீனிவாச ஐயங்காருடன் தேவர்.


மூதறிஞர் இராஜாஜி மற்றும் சா. கணேசன் அவர்களுடன் தேவர்.




சுபாஷ் சந்திர போஸுடன் தேவர் திருமகனார் 5.9.1939


தியான நிலையில் தேவர்.


தேர்தல் பிரச்சாரத்தில் தேவர்.


மதுரை கோரிப்பாளையத்தில் 5.1.74 அன்று அன்றைய மேதகு குடியரசுத் தலைவர் திரு. வி.வி. கிரி அவர்கள், மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் தலைமையில் திறந்து வைத்தார்.